உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்.

# கந்தபுராணம்.

சுப்பிரமணியசுவாமி வரப்பிரசாதியாயும

குமரகோட்டத்தருச்சகராயும் காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருந்த

**கச்சியப்பசிவாசாரியசுவாமிகள்**

அருளிச்செய்தது.

இஃது

யாழ்ப்பாணத்து நல்லூர்

**ஆறுமுகநாவலரவர்களால்**

பலபிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து,

மேற்படியூர

**சதாசிவப்பிள்ளையால்**

சென்னபட்டணம

**வித்தியாநுபாலனயந்திரசாலையில்**

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

மூன்றாம பதிப்பு.

விளம்பிஸு கார்த்திகைமீ

உ

கணபதி துணை.

# சிவபுராணபடனவிதி.



நால்வகையோனிகளுள் ஒருயோனிவாய்ப்பட்டுப் பிறப்பவை யாவை அவையெல்லாம் பசுக்கள், அப்படிப் பிறத்தலில்லாதது யாது அது பதிப்பொருள் என்னும் இதுவொன்றே எளிதில் அவ்விரண்டுக்கும் தம்முள் வேற்றுமை அறியும்வண்ணம் நிற்பது. ஆதலால், வேதம் புராணம் இதிகாசம் முதலிய நூல்களிலே மற்றைத் தேவர்களெல்லாம் அப்படிப் பிறந்திறத்தல் சொல்லப்படுதலாலும், சிவபெருமானுக்கு அது உண்டென்பது எங்காயினும சொல்லப்படாமையாலும், அநாதிமுத்த சித்துருவாகிய முழுமுதற்கடவுள் சிவபெருமானே என்பது தெள்ளிதிற் றுணியப்படும்.

சிவஞானசித்தியார்.

யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யு
மாதலா லிவையி லாதா னறிந்தருள் செய்வ னன்றே.

அருணகிரியந்தாதி.

எல்லார் பிறப்பு மிறப்புமியற் பாவலர்தஞ்
சொல்லாற் றெளிந்தேநஞ் சோணேச—ரில்லிற்
பிறந்தகதை யுங்கேளேம பேருலகில் வாழ்ந்திறந்
திறந்தகதை யுங்கேட்டி லேம்.

உ. இப்படித் துணியப்படும் முன்னைப்பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளாகிய சிவபெருமானை வேதசிவாகமவிதிப்படி மெய்யன்போடு வழிபடுவோர் சைவசமயிகள் என்றும், சிவனடியார்கள் என்றும் சொல்லப்படுவர்கள். இச்சைவர்கள் பலசமயத்தாருக்கும் பொதுவகையால் வேண்டப்படும் இலக்கணங்களை முன்னே வழுவாது தழுவிக்கொண்டே பின்பு தங்களுக்குச் சிறப்புவகையால் வேண்டப்படும் இலக்கணங்களை உடையர்களாய் ஒழுகல்வேண்டும்.

ந. பொதுவிலக்கணங்களாவன கொல்லாமை, புலாலுண்ணாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, பிறர்மனை நயவாமை, வரைவின்மகளிர் நயவாமை, இரக்கம், வாய்மை, பொறை, அடக்கம், கொடை, தாய் தந்தை முதலிய பெரியோரை வழிபடுதல் முதலிய நன்மைகளாம். இந்நன்மைகளில்லாத கிரியை ஞானங்கள் சிறிதும் பயன்படாவாம்.

பட்டணத்துப்பிள்ளையார் பாடல்.

கொல்லாமற் கொன்றதைத் தின்னாமற் குத்திரங் கோள்களவு
கல்லாமற் கைதவ ரோடிணங் காமற் கனவினும்பொய்
சொல்லாமற் சொற்களைக் கேளாமற் றோகையர் மாயையிலே
செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே.

சிவஞானதீபம்.

கொலையாதி நெறியகன்ற ஞானந் தானே
கூறரிய மேலான ஞான மாகுங்
கொலையாதி யகன்றொழுகுந் தவங்க டாமே
குற்றமிலா நற்றவமென றுரைக்கு நூலுங்
கொலையாதி யகற்றியநல் லறங்க டாமே
குவலயத்தி லொப்பரிய வறங்க ளாகுங்
கொலையாதி யகன்றுபெறுஞ் செல்வந் தானே
கூறினுயிர்க் கிதமான வாழ்வ தாமே.

எவ்வுயிரும் பராபரன்சந் நிதிய தாகு
மிலங்குமுயி ருடலனைத்து மீசன் கோயி
லெவ்வுயிரு மெம்முயிர்போ லென்று நோக்கி
யிரங்காது கொன்றருந்து மிழிவி னோரை
வவ்வியமன் றூதருந் தண்டஞ்செய்து
வல்லிரும்பை யுருக்கியவர் வாயில் வார்த்து
வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்தி மாறா
வேதனைசெய் திடுவரென வோது நூலே.

பதிபசுபாசவிளக்கம்.

அம்மா வெனவலற வாருயிரைக் கொன்றருந்தி
யிம்மா னுடரெல்லா மின்புற் றிருக்கின்றா
ரம்மா வெனுஞ்சத்தங் கேட்டகன்ற மாதவர்க்கும்
பொய்ம்மா நிரயமென்றாற் புசித்தவர்க்கென் சொல்லுவதே.

கங்கையிற் படிந்திட் டாலுங் கடவுளைப் பூசித் தாலு
மங்குல்போற் கோடி தானம் வள்ளலாய் வழங்கி னாலுஞ்
சங்கையி லாத ஞான தத்துவ முணர்ந்திட் டாலும
பொங்குறு புலால்பு சிப்போன் போய்நர கடைவ னன்றே.

கொலையிலா னுதவு மன்னங் கூறிற்பே ரமுத மாகுங்
கொலையுளா னுதவு மன்னங் கூறிற்பேர் விடம தாகும்
புலையர்த மனையி லுண்போன் புலையனு மாறு போலக்
கொலைஞர்த மனையி லுண்போன் கொலைஞனே யாவ னன்றே.

கலையெலா முணர்ந்தா னேனுங் கரிசறத் தெளிந்தா னேனு
மலையென வுயர்ந்தா னேனு மனமய லகன்றா னேனு
முலகெலாம் புகழப் பல்லோர்க் குதவிய கையனேனு
மிலகிய விரக்க மின்றே லெழுநர கடைவ னன்றே.

கூர்மபுராணம்.

கள்விலை பகர்வோர் கள்ளினை நுகர்ந்தோர் கள்ளருந் துதற்குடன் படுவோர்
கள்ளருந் துநரை மகிழுநர் நரகிற் கற்பகா லங்கிடந் தழுந்தி
யெள்ளுறுந் தீய மலப்புழு வாக மலத்தினை நுகர்ந்துபின் னிறந்து
விள்ளருங் கொடிய ரௌரவ நரகின் மீட்டுமீட் டெழுந்துநாள் கழிப்பார்.

திருவிளையாடற்புராணம்.

காமமே கொலைகட் கெல்லாங் காரணங் கண்ணோ டாத
காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சுங்
காமமே கள்ளுண் டற்குங் காரண மாத லாலே
காமமே நரக பூமி காணியாக் கொடுப்ப தென்றான்.

ச. சிறப்பிலக்கணங்கள் புறத்திலக்கணம், உடலிலக்கணம், அகத்திலக்கணம் என மூவகைப்படும். அவற்றுள், புறத்திலக்கணம் பத்து; உடலிலக்கணம் பத்து; அகத்திலக்கணம் மூன்று. ஆகச்சிவனடியாரிலக்கணம் இருபத்து மூன்று.

உபதேசகாண்டம்.

செய்ய மேனிச் சிவனடி யார்க்கய
லெய்தக் காணு மிலக்கணம் பத்துள
மெய்யி லெய்து மிலக்கண மெய்மைசா
லையி ரண்டகத் துள்ளன மூன்றரோ.

அலக்க ணீக்கு மரனடி யார்க்கென
விலக்க ணங்க ளிருபத்து மூன்றுள
பலப்ப டுத்து முதற்படு பத்தையும்
புலப்ப டுத்தி நுமக்குப் புகலுவாம்.

ரு. புறத்திலக்கணம் பத்தாவன விபூதி உருத்திராக்ஷம் என்னுஞ் சிவசின்னங்களைத் தரித்தல், குருவை வழிபடல், சிவபெருமானைத் தோத்திரஞ்செய்தல், சிவநாமங்களை உச்சரித்தல், சிவபெருமானைப் பூசை செய்தல், சிவதருமங்களைச் செய்தல், சிவபுராணங்களைக் கேட்டல், சிவாலயதரிசனஞ்செய்தல், சிவனடியாரிடத்தன்றிப் பிறரிடத்துப் போசனம்பண்ணாமை, சிவனடியார்களுக்குக் கொடுத்தல் என்பவைகளாம்.

உபதேசகாண்டம்.

வாசப் பூதி யுருத்திர மாமணி
பூசிப் பூணல் குரவரைப் பூசித்த
லாசைப் பாட்டி னரனைப் புகழுத
லீசற் குள்ளன நாம மியம்புதல்.

எந்தை யீச னருச்சனை யோம்புத
றந்தி ரச்சிவ தன்மம் புரிகுதன்
முந்தை யோன்கதை கேட்டன் முறைமையாற்
புந்தி கூர்ந்தர னாலயம் போற்றுதல்.

ஒத்த பத்த ரிடத்தல தோரிடந்
துய்த்த வித்தலத் தொண்டரிற் றொண்டராய்ச்
சித்த மன்புற வீதன்முன் செப்பிய
பத்து மீங்கிவை காணப் படுதிரால்.

சு. உடலிலக்கணம் பத்தாவன சிவபெருமானுடைய பெருமையைச் சிந்திக்குந்தோறும் பேசுந்தோறும் கண்டம் விம்முதல், நாக்குத்துடித்தல், உதடு துடித்தல், சரீரநடுங்குதல், உரோமஞ் சிலிர்த்தல், குறுவேர்வை கொள்ளல், நாக்குத் தழுதழுத்தல், ஆனந்தக்கண்ணீர் சொரிதல், வாய்விட்டழுதல், பரவசமாய்த் தன்னை அயர்த்தல் என்பவைகளாம்.

உபதேசகாண்டம்.

தொண்டர் மெய்யிற் றுலங்கு மிலக்கண
முண்டொர் பத்தென் றுரைத்த துரைக்குதுங்
குண்டை யூர்தி சிவத்தியல் கூறுங்காற்
கண்ட முற்றொரு விம்மிதங் காட்டுதல்.

ஏத்து மெந்தை யியற்கை யுணர்தொறு
நாத்து டித்தெழும் பாமை நகைப்புறம்
பூத்த முத்தந் துடித்தல்வி பூதிகொண்
டார்த்த வீந்ததன் னங்கங் குலுங்குதல்.

மயிர்ப்பு றம்புள கித்தல் வரன்முறை
வியர்த்த றன்வச மன்றி விளம்புநாப்
பெயர்த்தி டாமையா னந்தப் பெருங்கணீ
ரயற்ப டுத்துதல் வாய்விட் டழுதலே.

பரவ சத்தின னாகிப் படர்சடை
யரனு ளப்படத் தன்னை யயர்க்குதல்
விரவு பத்தும் விடுத்துரைத் தோமிவை
வரமு னித்தலை வீர்மனக் கொள்விரால்.

எ. அகத்திலக்கணம் மூன்றாவன பஞ்சாக்ஷரத்தை மானதமாகச் செபித்தல், மாதனபூசை, சிவபெருமானைத் தன்னோடு பிரிவறக் காண்டல் என்பவைகளாம்.

உபதேசகாண்டம்.

உளத்தி லக்கண மூன்றென் றுரைத்தன
மளக்கி னஞ்செழுத் தன்ன லகப்பட
வளர்க்கு மானத பூசனை மைக்கடுக்
களத்த னைத்தனை யொன்றெனக் காண்குதல்.

௮. இவ்விருபத்து மூன்றிலக்கணங்களுள் ஒன்றாகிய சிவபுராணங் கேட்டல் தான் ஓரிலக்கணமாய் நிற்றலன்றித் தன்னையும் தன்னையொழிந்த சிறப்பிலக்கணங்களையும் மற்றைப் பொதுவிலக்கணங்களையும் வருவித்தற்குக் கருவியாயும் நிற்றலுடையது. யாதினாலெனின், விபூதி ருத்திராக்ஷதாரணம் முதலிய புண்ணியங்களையும் அவற்றின் பயனாகிய இன்பத்தையும் கொலை முதலிய பாவங்களையும் அவற்றின் பயனாகிய துன்பத்தையும் அறிவிப்பது சிவபுராணமாகலினென்க. ஆதலால், சைவசமயிகள் யாவரும் சிவபுராணங்கேட்டல்வேண்டுமென்பது துணிவு.

௯. புராணங்கள் பதினெட்டு. அவையாவன பிரமபுராணம், பதுமபுராணம், வைணவபுராணம், சைவபுராணம, பாகவதபுராணம், பவிடியபுராணம், நாரதீயபுராணம், மார்க்கண்டேயபுராணம், ஆக்கினேயபுராணம், பிரமகைவர்த்தபுராணம், இலிங்கபுராணம், வராகபுராணம், காந்தபுராணம், வாமனபுராணம், மற்சபுராணம், கூர்மபுராணம், காருடபுராணம், பிரமாண்டபுராணம் என்பனவாம். இப்பதினெட்டும் நாலிலக்ஷத்தெண்ணாயிரங்கிரந்தமுடையன.

௧0. அவற்றுள், சைவபுராணம், பவிடியபுராணம், மார்க்கண்டேயபுராணம், இலிங்கபுராணம், காந்தபுராணம், வராகபுராணம், வாமனபுராணம், மற்சபுராணம், கூர்மபுராணம், பிரமாண்டபுராணம் என்னும் பத்துஞ் சிவபுராணங்கள். இவற்றுள், சைவபுராணம் இருபத்துநாலாயிரங் கிரந்தமும், பவிடியபுராணம் முப்பத்தோராயிரங்கிரந்தமும், மார்க்கண்டேயபுராணம் முப்பத்திராயிரங்கிரந்தமும், இலிங்கபுராணம், பதினோராயிரங்கிரந்தமும், காந்தபுராணம் இலக்ஷங்கிரந்தமும், வராகபுராணம் இருபத்துநாலாயிரங்கிரந்தமும்,வாமனபுராணம் பதினாலாயிரங்கிரந்தமும், மற்சபுராணம் பதினாலாயிரங்கிரந்தமும்,கூர்மபுராணம் ஆறாயிரங்கிரந்தமும், பிரமாண்டபுராணம் பன்னீராயிரங்கிரந்தமுமுடையன. ஆகச் சிவபுராணம் பத்துக்குங் கிரந்தம் இரணடிலக்ஷத் தறுபத்தெண்ணாயிரம்.

௧௧. காருடபுராணம், நாரதீயபுராணம், வைணவபுராணம், பாகவதபுராணம என்னுநான்கும் விட்டுணுபுராணங்கள். இவற்றுள், காருடபுராணம் ஆறாயிரங்கிரந்தமும், நாரதீயபுராணம் இருபத்தையாயிரங்கிரந்தமும, வைணவபுராணம் ஆறாயிரங்கிரந்தமும், பாகவதபுராணம் பதினெண்ணாயிரங்கிரந்தமுமுடையன. ஆக விட்டுணுபுராண நான்கிற்குங் கிரந்தம் ஐம்பத்தையாயிரம்.

௧௨. பிரமபுராணம் பதுமபுராணம் என்னுமிரண்டும் பிரமபுராணங்கள். இவற்றுள், பிரமபுராணம் பதினாயிரங்கிரந்தமும், பதுமபுராணம் ஐம்பத்தையாயிரங்கிரந்தமுமுடையன. ஆகப் பிரமபுராணம் இரண்டிற்குங் கிரந்தம் அறுபத்தையாயிரம்.

௧௩. ஆக்கினேயம் அக்கினிபுராணம். இது எண்ணாயிரங்கிரந்தமுடையது.

௧௪. பிரமகைவர்த்தம் சூரியபுராணம். இது பன்னீராயிரங்கிரந்தமுடையது.

௧௫. சிவபுராணம் பத்தும் சாத்துவிகங்களாம். சத்துவகுணம் வெண்ணிறமுடையதும் சுகத்துக்கும் ஞானத்துக்கும் இடமுமாம். யோகிகளுக்கு ஞானம் உபதேசிக்குஞ்சிவபெருமான் தெளிபளிங்குவடிவினராய் எங்குமுறங்காது பிராமணுதிபதியாயிருப்பர்.

௧௬. விட்டுணுபுராணநான்கும் தாமசங்களாம். தமோகுணம் கருநிறமுடையதும் உதாசீனரூபமும் கூடகிருத்தியசமர்த்தமுமாம். நித்திரை, சோம்பு, பிரமாதம், வஞ்சனம் முதலியவைகள் தாமசங்கள். விட்டுணு கரியரும் சேஷசயனஞ்செய்வோரும் பத்தரை மோகிப்பவருமாயிருப்பர்.

௧௭. பிரமபுராணம் இரண்டும் இராசசங்களாம். இரசோகுணம் சிவந்தநிறமுடையதும் துக்கத்துக்கிடமும் சஞ்சலரூபமுமாம். பிரமாச் செந்நிறமுடையராய்ச் சஞ்சலரூபியாயிருப்பர்.

௧௮. அக்கினிபுராணமும சூரியபுராணமும் திரிகுணயுத்தமாம். அக்கினியுஞ்சூரியனும் முக்குணவடிவினராயிருப்பர்.

௧௯. ஆதலால், இப்பதினெட்டினுள்ளுஞ் சிவபுராணங்கள் பத்துமே உயர்ந்தனவாம். ஆகையாற் சிவனடியார்கள் சிவபுராணங்களையே விதிப்படி மெய்யன்போடு கேட்கக்கடவர்கள்.

உபதேசகாண்டம்.

நடத்து மூவறு சரிதையுண் முக்கணன் சரிதைநா யகமென்றே
யெடுத்து ரைப்பது சுருதிமற் றுகம மிப்படி யெடுத்தோதுங்
கடுக்க ளத்தனுக் கன்புடைத் தாகிய புராணகா தையை யன்றோன்
றெடுத்த சோதிமா மயமெனப் பகர்வர்நற் றெண்டரிற் றலைநின்றோர்.

வேட்டு திற்சிவ பதவியே வேட்டுற விரும்பிக்
கேட்டு திற்சிவ புராணமே கேட்டுற வினைகொண்
டாட்டு மன்பதை யீறுகண் டந்தகன் றூதர்
வீட்டு முன்னரே சிவத்தினில் விருப்புற வேண்டும்.

௨௰. சிவபுராணம் படித்துப் பொருள் சொல்லுதற்கு உரிய இடங்களாவன தேவாலயம், திருமடம், நதிக்கரை, குளக்கரை, திருநந்தனவனம், யாகசாலை முதலிய சுத்தஸ்தானங்களாம்.

உபதேசகாண்டம்.

புண்ணி யச்சிவ புராணமோ திப்பொருள் விரிப்பி
னண்ண லாலய நதிக்கரை குளக்கரை யன்றேன்
மண்ணு றுந்திரு மடமெனு மித்தலை மருவிக்
கண்ணு தற்பர னைத்தொழு தோதுறக் கடவார்.

பிரமோத்தரகாண்டம்.

மூவ ராதி முழுதல கத்துள
தேவர் வாழுஞ் சினகர முன்னருந்
தூவு தண்ணற வுண்டு சுரும்பிமிர்
பூவர் சோலைப் புனித விடத்திலும்.
தீதி லாத செழுநதி தீரத்துங்
கோதி லார்கள் குழீஇய விடத்தினும்
வேத வேதியர் வேள்வித் தலையினு
மாத மாதவ ரம்மனை முற்றத்தும்.
மற்றும் வேறுள புண்ணிய மல்குசீ
ருற்ற தெவவிட மவவிடத தோதுவர்
பற்றி நாளும் பரமன் றிருக்கதை
முற்று மோதி முழுதுணர் கேள்வியார.

உக. சிறியோர்கள் களிக்குமிடத்திலும, சூதாடுமிடத்திலும், பெண்கள் உண்டாட்டுச் செய்யுமிடத்திலும், அறிவில்லாதவர்கள் இருக்குமிடத்திலும் புராணம் படிக்கலாகாது.

பிரமோத்தரகாணடம

சிறியா ரிக்களி செய்யு மிடததினு
மறுவி லாளாசூ தாடு மரஙகினு
முறவில் வஞ்சிய ருணடாட் டிடததினும
பொறியி லாளர் பொருந்து மிடத்தினும.
கம்ப மால்கரி நல்கினுங் கண்ணக
ஞிம்பர் நாடு முழுவது மீயினுஞ்
செமபொன மாரி பொழியினுஞ் செஞ்சடை
நம்பன் காதை நயந்து நவிற்றிடார.

உஉ. திருக்கோயிலிலே சிவபுராணமண்டபஞ்செய்வித்து, அதிலே சிவபுராணபுததகத்தைப் பீடத்தின்மீது வைத்து, நாடோறும் விதிப்படி பூசை செய்துகொண்டுவரின், அது கோடிசிவலிங்கப பிரதிட்டைக்குச் சமமாகும.

உபதேசகாணடம.

எந்தை கோயிலுட் டிருமுறை மண்டப மெடுத்துத
தந்த பீடிகைத தலத்தினிற் றிருமுறை தந்து
சிந்தை யன்பினோ டாஙகதற் கருச்சனை செய்தா
லுந்து மேற்றினன் பிரதிட்டை கோடியொப் புறுமால்.

உங. சிவபுராணம் படித்துப் பொருள் சொல்லுதற்கு அதிகாரிகளாவார் அந்தணா அரசர் வணிகர் வேளாளர் என்னும நான்குவருணத்துட்பட்டவராய், உடற்குற்றங்களில்லாதவராய், நல்லொழுக்கமுடையவராய், நிகண்டு கற்று இலக்கியவாராய்ச்சிசெய்து இலக்கணநூலிற்பயின்றவராய், நீதிநூல்களையும் சைவநூல்களையும் ஓதியுணர்ந்தவராய், சந்தியாவந்தனம் சிவபூசை முதலிய நித்தியகருமங்களைத் தவறாமல் விதிப்படி சிரத்தையோடு செய்பவராயுள்ளவர்.

உபதேசகாண்டம்.

பெருகுநூற் புராண மோதிப் பிரித்துரைத் திடுவோ னன்கு
வருணத்தி லொருவ னாகிப் பொறையொடு மரபி னோங்கி
முருகவே ளடிக்கீழ்த் தொண்டு முயன்றவ னாகி யம்பொற்
றிருவொடுந் தனய ரோடுங் கிளையொடுஞ் சிறக்க வேண்டும்.

சிவஞானதீபம்.

நிலையுறுதி யாசார மொழுக்கஞ் சீல
நிறையறிவு கருணைதவ நெறிநி லாமற்
கொலைகளவு கட்காம முதலா வுள்ள
கொடும்பவமே தவமாகக் கொள்ளுந் தீயோ
ருலைவிலருஞ் சிவனருணூ லோத லாகா
தோதினுமங் கவருரைகொள் ளொணாது நீலம்
புலையர்மரு விடுந்தெருவிற் பொல்லாக் கும்பி
பொருந்தியிடுங் குழியதனுட் பூத்த தாமே.

உச. சிவபுராணஞ் சுபதினத்திற் சுபமுகூர்த்தத்தில் ஆரம்பித்தல் வேண்டும். ஆரம்பிக்குந்தினத்திலும், முடிக்குந்தினத்திலும், திருக்கல்யாணமுதலிய சுபசரித்திரங்கள் படிக்குந்தினங்களிலும், சிவபுராணமண்டபத்தைக் கோமயத்தினாலே திருமெழுக்கிட்டுக் கமுகுகளையும் வாழைகளையும் கரும்புகளையும் நாட்டி மேற்கட்டி கட்டி, கொய்யப்பட்ட பட்டுக்களையும் பூமாலைகளையுந்தூக்கி அலங்கரித்தல்வேண்டும். சிவபுராணபோதகர் நாடோறும் ஸ்நானஞ்செய்து தோய்த்துலர்ந்த வஸ்திரமிரண்டு தரித்துச் சந்தியாவந்தனமுஞ் சிவபூசையும் முடித்துக்கொண்டு, சிவபுராணபுத்தகத்தைப் பீடத்தின்மீது வைத்துச் சந்தனம் புட்பம் தூபம் தீபம் முதலியவற்றினாலே பூசை செய்து நமஸ்காரம்பண்ணி, ஆசனத்திருந்துகொண்டு புராணம் போதித்தல்வேண்டும். அவர் அங்கே யாரையும் அஞ்சலி செய்தலாகாது.

உபதேசகாண்டம்.

மங்கல தினத்திற் றேவ ராலயங் குரவர் வாயில்
பொங்குநீர் நதியின் பாங்கர் புண்ணிய தலங்கண் மன்றந்
தங்குகோ மயத்தா னீவித் தண்மலர்த் தொடைய னாற்றி
யங்கண்மாக் கரும்பு வாழை தீபமிட் டமையச் செய்து.

பட்டுடை கொய்து நாற்றிப் பசுங்கமு கமைத்துப் பின்ன
ரிட்டபொற் பீடந்தன்னிற் புத்தக மினிதி னேற்றி
மட்டுவார் தூபஞ் சாந்த மலரினா லருச்சித் தாங்க
ணட்டவர் கிளைஞ ரோடுங் கேட்பது நன்மைத் தாமால்.

பிரமோத்தரகாண்டம்.

ஓங்கு சீர்த்திருக் காதை யுரைக்குநர்
தாங்கு பீடிகை யின்றித் தரையிரா
ராங்கண் யாரையு மஞ்சலி செய்திடார்
தீங்கி னேருறை சிற்றவை சேர்ந்திடார்.

௨௫. சிவபுராணங்கேட்போர் நாடோறும் ஸ்நானஞ்செய்து தோய்த்துலர்ந்த வஸ்திரந்தரித்து நித்தியகருமமுடித்துக்கொண்டு புத்தகபூசை முற்றியவுடனே சிவபுராண போதகரைக் கிழக்குமுகமாக ஆசனத்திருத்திச் சிவபெருமானாகப் பாவித்துச் சந்தனம் புஷ்பம முதலியவைகளினாலே பூசித்து நமஸ்காரஞ்செய்து, சுற்றத்தார்களோடும் சிநேகிதர்களோடும், சித்திரப்பாவைபோல அசைவற மௌனமாக இருந்து, மெய்யன்போடு கேட்டுக்கொண்டு மீட்டும் நமஸ்காரஞ்செய்தல்வேண்டும்.

உபதேசகாண்டம.

ஏசறு புராண காதை படித்தெடுத் திசைப்போர்க் கென்ன
வாசன மளித்துப் பூவாற் சாந்தத்தா லவாக்கு வேண்டும்
பூசனை யியற்றி யன்னோர் பூருவ நோக்கி வைக
மாசறு சரிதை கேட்போ னிருப்பது வடக்கு நோக்கி.

பிரமோத்தரகாண்டம்.

நாய கன்கதை நாடொறுங் கேட்குநர்
தூய நீரினிற் றோய்ந்துவெண் ணீறணிந்
தேய நித்த கரும மியற்றிப்பின்
காய வைம்புல னுங்கருத் தொன்றியே.

வல்ல தேசிக னுக்கு மணித்தவி
சொல்லை நல்கி யுறுபொரு ளீந்துநன்
கல்ல வாணி ளைத்த லடங்கிவன்
புல்ல ரானவ ரைப்புறம் போக்கியே.

பதறி யோடொல்கு பாவகத் தோடுரு
வொதத நற்றவி சேற லொழித்துநூல்
வித்த கற்குக்கீழ் மென்றவி சொன்றியே
சித்தம் வேறறக் கேட்பது செவவிதால்.

சிவதருமோத்தரம்.

புத்த கத்தினைப் பூசை புரிகிலா
சித்தங் கூர்தரத் தேசிகன் றன்னையு
மத்த கைப்பல நீங்குவ தன்றியுங்
கொத்தை சோங்கிர யக்குழி கூடுவார்.

ஆத லாற்புதத காதி யருச்சனை
காத லாற்செய்க காமுறு வார்பலம்
வேத ஞாந கக்குழி வேண்டிலா
ரேதெ னுந்தம சத்திக் கிசையவே.

சைவசமயநெறி.

படிக்கும் பொழுது பணிகுர வன்றாண்
முடிக்கும் பொழுது முயன்று.

௨௬. நாடோறும் புராணந் தொடங்கும்போதும் முடிக்கும்போதும் காப்புச்சொல்லல்வேண்டும். காப்புக்கு முன்னும பின்னும் "திருச்சிற்

றம்பலம்" என்று உச்சரித்தல்வேண்டும்: காப்புச் சொல்லும்பொழுது யாவருங்கும்பிட்டுக்கொண்டிருத்தல்வேண்டும்.

உஎ. புராணம் வாசிப்பவர் சபையார் யாவருங் கேட்கும்பொருட்டுத் தெளிவு பெற வாசித்தல்வேண்டும். வாசிக்குங்காலத்துக்கும் எடுத்துக்கொண்ட விஷயத்தினது குணத்துக்கும் ஏற்ற இராகத்தில் வாசித்தல்வேண்டும். எச்சுதியில் எவ்விராகத்தில் வாசிக்கப்படுகின்றதோ அச்சுதியில் அவ்விராகத்திற்றானே பொருள் சொல்லப்படல்வேண்டும். இலக்கணப்பிழையிலலாமலும், வெளிப்படையாகவும், இன்றியமையாவிடங்களில் விரிவாகவும் பொருள் சொல்லல்வேண்டும்.

உஅ. சிவபுராணபோதகரைச் சிவபெருமானாகப் பாவியாது மனுஷராகப் பாவிப்போரும், சிவபுராணம் படிக்குஞ்சபையிலே உயர்ந்த ஆசனத்திருப்போரும், காலை நீட்டிக்கொண்டிருப்போரும், சயனிப்போரும், நித்திரை செய்வோரும், வெற்றிலை பாக்குண்போரும், உடம்புபோர்த்துக்கொள்வோரும், பிறவார்த்தைகளைப் பேசுவோரும்,குதர்க்கஞ் செய்வோரும், பொறாமையினாலே பிறிது பொருளைக் கற்பிப்போரும, அன்பின்றிக் கேட்போரும, சிரிப்போரும, இடையில எழுந்து பிறிது கருமத்திலே செல்வோரும, புராணத்தைப் பொய்யென்போரும் நெடுங்காலம் நரகங்களிலே கிடந்து துன்பம் அநுபவித்துப் பின்பு இழிவாகிய பிறப்புக்களிலே பிறந்து வருந்துவாகள்.

உபதேசகாண்டம்.

அறந்த ருஞ்சிவ புராணமோ துறுமவை யகத்துப்
பிறங்கு வெள்ளிலை நுகர்பவா பிறமொழி பகர்வா
ருறங்கு கின்றவா நீட்டுறுங் காலின ருவற்றைத்
திறம்பு பொய்மையென் றுரைப்பவர் களிபடச் சிரிப்போர்.

இழுதை மாக்கணமற் றீங்கிவ ாிறுதியிற் றென்பாற்
செழுக நீடிய நெடுங்குழிச் செலற்கரு நிரயத்
திழிவ ராங்கது விழுங்கிமீண் டெதிரெடுத் துமிழ
வழுவி மற்றது விழுங்குற வருந்துவர் நெடுநாள்.

பிரமோத்தரகாணடம.

எக்கு லத்தவ னாயினு மீர்ஞ்சடை
முக்க ணன்கதை யோது முதல்வனை
மக்க ளுள்ளிவ னும்மக னென்பவர்
கக்கு வாய்புழுக் கான்றிடு நோயகொளவார்.

ஆன்ற காதையின் மேல்விருப் பற்றவா
தோன்று முற்கதை பொய்யென்று சொல்பவர்
மூன்று கோடி நரகத்தின் மூழ்கியே
நான்ற நாவுடை நாய்ப்பிறப் பெய்துவார்.

அன்றிக் கேட்கு மிடத்தழுக் காற்றினாற்
கன்றி வேறோர் பொருளினைக் கற்பிப்பா
ரொன்ற லாத துரைத்தெதிர் வாதிப்பார்
பன்றி யாயித்தப் பாரி லுதிப்பரே.

அன்பி னிற்கதை கேட்ப தலாற்பிறர்
வன்பி னெய்தி மனம்வைத் துக் கேட்பவர்
துன்ப மெய்து சுடலையி லோங்கிய
வின்ப மில்கனி யெட்டிய தாகுவார்.
கூறு மாக்கதை கூட்டிமு ஞப்பனே
வேறு தங்கரு மத்து விரைந்துபோஞ்
சீறு சிந்தையர் செல்வத்தைத் துய்க்குங்கா
லீறு செல்லா திடையி விழுப்பரே.
மஞ்ச மேறியும் வெள்ளிலை மாந்தியு
நஞ்ச முண்டவர் நற்கதை கேட்குந
ரஞ்சி யோவென் றரற்றிக் கழுநுனைத்
தஞ்ச மாகக் கிடந்து தவிப்பரே.
கயிலை யண்ணல் கதையை நிகழ்த்துழித்
துயில்பு ரிந்திடுந் தொல்வினைப் பாதகர்
வெயில்க ரந்தடு வெங்கொடிக் கஞ்சியே
யயின்முட் காட்டுறை கூகைய தாகுவார்.
படர்ந்த வேணிப் பரமன் றிருக்கதை
கிடந்த சேக்கையிற் கேட்கு மறிவிலோர்
மிடைந்த மால்வரை யுச்சி விடர்புகுந்
தடைந்த மாசுண மாகிப் பிறப்பரே.
ஈசன் காதைசொல் வானன்றி யின்னுமோர்
தேசி கன்பிற னுண்டென்று செப்புமோ
காசு தீர்க்குங் கதைவிளக் கங்கொடு
மாசின் மாக்கண் மனவிரு ணீக்கலால்.

உக. சிவபுராணத்தை முதற்றொடங்கி முடிவு வரையும் இடைவிடாது நியமமாகக் கேட்டல்வேண்டும். தினந்தோறும் ஒவ்வொருசிவபத்தருக்கு அன்னங்கொடுத்தல்வேண்டும். புராணம் ஆரம்பித்த காலத்தினும், திருக்கல்யாணமுதலிய சுபசரித்திரங்கள் படித்த காலங்களினும்,காண்டங்கள் முடிந்த காலங்களினும்,புராணமுடிந்த காலத்தினும்,சிவனடியார்களுக்கும் பிராமணர்களுக்கும் இயன்றமட்டும் அன்னதானஞ்செய்து,புராணபோதகருக்குப் பூசை பண்ணி வஸ்திரம் ஆபரணம் முதலியவை கொடுத்தல்வேண்டும். புராணமுடிந்தபின், புராணத்திருமுறையையும் போதகரையும் மங்கலவாத்தியங்கள் ஒலிக்க வீதிவலஞ்செய்வித்தல்வேண்டும்.

உபதேசகாண்டம்.

ஆதிதொட் டீறு காறுமூடக்குரு தருளிற் கேட்க
வோதிய புராணத் தெம்மா னுமையினை மணக்கு நாளிற்
காதுவேற் குமரற் கம்பொற் கதிர்முடி கவிக்கு நாளிற்
றீதறு தெய்வ யானை திருமணஞ் சிறக்கு நாளின்.
மறையவர்க் கினிய வெண்டும் போசன மரபி னீந்து
நிறைதமிழ்ப் புராண காதை நிகழ்த்தினோர்ப் பணிந்து போற்றி
யுறுகதிர்ப் பசும்பொ னுடை பொலங்கல னுவந்து நல்கி
மறைகம ழலரிற் சாந்தி னருச்சனை நடத்தல்வேண்டும்.

கூ0. சிரத்தையோடு சிவபுராணபுத்தகத்தை எழுதிச் சிவனடியார்களுக்குக் கொடுத்தவரும், எழுதித் தம்வீட்டில் வைத்துப் பூசைசெய்தவரும், சிவபுராணத்தை வாசித்தவரும், அதற்குப் பொருள்சொன்னவரும், அதனைக் கேட்டவரும் சிவபதத்தையடைவர்.

உபதேசகாண்டம்.

எழுதி யோர்க்குணை ரெம்முறைச் சரிதைகேட் டிருப்பவ ரிரக்கங்கூர்ந்
தழுதல் விம்முத லுத்தடு மாறுத வணிமயிர்ப் புளகெய்தித்
தொழுத லெய்தினோர் பெறுகுவ தியாமலாற் சொலற்கரி தெவர்க்கேனும்
பழுதி லுண்மறை நுணுக்கமு மின்னணம் பகர்வது பல்லூழி.

கள்ளு யிர்த்தபூங் கொன்றையா னருட்சிவ காதை
யெள்ளில் சிந்தையால் விதிமுறை யினிதுகேட் டுவந்து
வெள்ள வார்சடை யெம்பிரான் றிருவருள் விளைவித
தெள்ள ருங்கதி புகுந்தவர்க் கிலக்கமா ரிசைப்பார்.

ஓது நாவினுங் கேட்பவர் செவிப்புலத் துள்ளுந்
தீதில் சிந்தையோர் சிரத்தினுந் திருவரு ளிரங்கி
மாது பாகனுற் றுறைகுவன் மாதவத் துறையீ
ராத லாற்கதி யடைந்தன கேட்டவை யனைத்தும்.

எழுதி யன்பருக் கீந்தவர் திருமுறை யெழுதித்
தொழுது தம்மனைத் தொகுப்பவர் பெருநலந் துய்த்தீண்
டொழுகு காலம்வீற் றுறவொரு கற்பமோ ரெழுத்திற்
கழிவி லாப்பெருங் கயிலையுற் றருங்கதி யடைவார்.

திருச்சிற்றம்பலம்.

---

இஃது சகலவேதாந்தங்களின் சாரத்தையும் உள்ளடக்கினதாய் ஐம்பதுகண்டங்களாற் புனையப்பட்டதாய் ஒரிலக்கங்கிரந்தமுடைத்தாயிருக்குங் காந்தபுராணமானது சனற்குமாரசங்கிதை, சூதசங்கிதை, பிரமசங்கிதை, விட்டுணுசங்கிதை, சங்கரசங்கிதை, சூரசங்கிதை என ஆறுசங்கிதையுடையது. அவற்றுள், சனற்குமாரசங்கிதை ஐம்பத்தையாயிரங்கிரந்தமும், சூதசங்கிதை ஆறாயிரங்கிரந்தமும், பிரமசங்கிதை மூவாயிரங்கிரந்தமும், விட்டுணுசங்கிதை ஐயாயிரங்கிரந்தமும், சங்கரசங்கிதை முப்பதினாயிரங்கிரந்தமும், சூரசங்கிதை ஆயிரங்கிரந்தமுமுடையன. முப்பதினாயிரகிரந்தமுடைய சங்கரசங்கிதை பன்னிரண்டுகண்டமுடையது. அவற்றுள் முற்பட்டது சிவரகசியகண்டம். அது பதின்மூவாயிரங்கிரந்தமுடையதாய், சம்பவகாண்டம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம், யுத்தகாண்டம், தேவகாண்டம், தக்ஷகாண்டம், உபதேசகாண்டம் என ஏழுகாண்டங்களையுடையதாயிருக்கும். அவற்றுள், முதலாறுகாண்டத்தையும், கச்சியப்பசிவாசாரியசுவாமிகள் கந்தபுராணமெனப் பெயரிட்டுத் தமிழில் அருளிச்செய்தனர். ஏழாவதாகிய உபதேசகாண்டத்தைக் கோனேரியப்பமுதலியார் தமிழில் அருளிச்செய்தனர்.

---

கச்சியப்பசிவாசாரியசுவாமிகள்

# சரித்திரச்சுருக்கம்.

தொண்டைமண்டலத்திற் சிறந்து விளங்காநின்ற காஞ்சீபுரத்தின் கண்ணே, ஆதிசைவர் குலத்திலே, கல்வியறிவொழுக்கங்களினாலுஞ் சிவபத்தி சிவஞானங்களினாலுஞ் சிறப்புற்றோங்கிய காளத்தியப்பசிவாசாரியர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் காஞ்சீபுரத்துள்ள குமரகோட்டத்தருச்சகருள் ஒருவர். அவர் நெடுங்காலம் புத்திரனில்லாமையாற் பெருங்கவலை கொண்டு, புத்திரபாக்கியத்தின்பொருட்டுக் குமரகோட்டத்தின்கண் எழுந்தருளிய பெருங்கருணைக்கடலாகிய சுப்பிரமணியக்கடவுளை விதிப்படி சிரத்தையோடும் உபாசித்துக்கொண்டு வந்தார். வரும்பொழுது, அக்கடவுளது திருவருளினாலே, தமிழ்நாட்டார்கள் சுப்பிரமணியபத்தி பெற்றுய்யும்பொருட்டு, அச்சிவாசாரியருக்கு அவருடைய கற்பினிற்சிறந்த பத்தினியாரது அருமைத்திருவயிற்றின் ஒருசற்புத்திரர் திருவவதாரஞ்செய்தார்.

அப்புத்திரருக்குக் கச்சியப்பர் என நாமகரணஞ்செய்யப்பட்டது. அவர் ஐந்தாம்வயசிலே, வித்தியாரம்பஞ்செயப்பெற்று, சம்ஸ்கிருதம் தமிழ் என்னும் இரண்டுபாஷைகளையுங் கற்பாராயினார். அன்பு அருள் வாய்மை பொறை அடக்கம் முதலிய நற்குணங்களெல்லாம் அவரோடுடன் பிறந்து அவரோடுடன் வளர்ந்தன. அவர் ஏழாம் வயசிலே உபநயனஞ்செயப்பெற்று, வேதாத்தியயனஞ்செய்வாராயினார். சிலகாலத்துள்ளே சம்ஸ்கிருதத்தில் வேத வேதாங்கங்களையும் தமிழில் இலக்கணவிலக்கியங்களையுங் கற்று வல்லராயினார்.

அவர் சிலகாலமாயபின் சமயதீக்ஷை பெற்று, தமிழ்வேதமாகிய தேவாரதிருவாசகங்களை ஓதுவாராயினார். அதன்பின் விசேஷதீக்ஷை பெற்றுச் சைவாகமங்களிற் கிரியாகாண்டங்களைக் கற்றறிந்துகொண்டார். அதன்பின் நிருவாணதீக்ஷையும் ஆசாரியாபிஷேகமும்பெற்று, சைவாகமத்தின் ஞானகாண்டங்களை ஓதி, அவற்றின் பொருளையும் தேவார திருவாசகங்களின் பொருளையுங்கேட்டு, அப்பொருள் வேதத்தின் ஞானகாண்டங்களாகிய உபநிடதங்களின் பொருளோடு அபேதமாயிருக்கக் கண்டு, அதனைச் சிந்தித்துத் தெளிந்துகொண்டார்.

அவ்வியல்புடையராய் விளக்கமுற்ற கச்சியப்பசிவாசாரியர் குமரகோட்டத்துச் சுப்பிரமணியக்கடவுளை மெய்யன்போடு பூசை செய்துகொண்டுவந்தார். ஒருநாட் சுப்பிரமணியக்கடவுள் கச்சியப்பசிவாசாரி

யருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "அன்பனே, நீ காந்தபுராணத் தாறுசங்கிதைகளுட் சங்கரசங்கிதையின் முதற்கண்டமாகிய சிவரகசிய கண்டத்திலுள்ள நமது சரித்திரத்தைக் கந்தபுராணம் எனப் பெயரிட்டுத் தமிழிலே பெருங்காப்பியமாகப் பாடக்கடவாய்" என்று ஆஞ்ஞாபித்து, "திகட சக்கரச் செம்முக மைந்துளான்" என்று அடியெடுத்துக் கொடுத்து மறைந்தருளினர். உடனே கச்சியப்பசிவாசாரியர் விழித்தெழுந்து, அழலிடைப்பட்ட மெழுகுபோல நெஞ்சநெக்குருக, உரோமஞ்சிலிர்ப்ப, உரை தடுமாற, கரையற்ற இன்பக்கடலின் அழுந்தி, "ஒன்றுக்கும் பற்ருத புழுத்த நாயினுங்கடையனாகிய தமியேனையும் ஒருபொருட்படுத்து வந்தருளிச்செய்த எமபெருமானாகிய சுப்பிரமணியக்கடவுளது பெருங்கருணைத்திறம் இருந்த படி என்னே என்னே" என்று ஆனந்தக் கூத்தாடினர்.

மற்றைத்தினத்திலே கச்சியப்பசிவாசாரியர் நித்தியகருமமுடித்துக் கொண்டு, சுப்பிரமணியபூசை செய்தபின், புராணம் பாட ஆரம்பித்தருளினர். நாடோறும் நூறு செய்யுள் பாடி, அவை எழுதப்பட்ட ஏட்டையும், எழுத்தாணியையும், இராத்திரி காலபூசை முற்றியபின் குமர கோட்டத்தடிகளுடைய திருவடிக்கீழ் வைத்துவிட்டுத் திருக்கதவந் திருக்காப்பிட்டுக்கொண்டு தமது திருமாளிகைக்குப் போவார், பிற்றைநாட் காலையிலே நித்தியகருமமுடித்துக்கொண்டு, பூசையின்பொருட்டுத் திருக்கோயிலினுள்ளே புகுந்து, ஏட்டை எடுத்துப் பார்த்து, அதிற்சிலவிடங்களிலே திருத்தப்பட்டிருத்தல் கண்டு, அதனைச் சிரமேற்கொண்டு ஆனந்தபரவசராய்ச் சிறிது பொழுது நின்று பின் பூசைசெய்வார்.

இவ்வாறே கச்சியப்பசிவாசாரியர் கந்தபுராணம் பாடி முடித்தபின், அதனைக் குமரகோட்டத்தில் அரங்கேற்றும்பொருட்டுச் சுபதினமுஞ் சுபமுகூர்த்தமும் நிச்சயித்துக்கொண்டு, எங்குமுள்ள சிவனடியார்களெல்லாருக்கும் பத்திரம் விடுத்தருளினர். ஏவலாளர்கள் திருக்கோயிலையும் திருவீதிகளையும் மிக அலங்கரித்தார்கள். சுட்டப்பட்ட சுபதினத்திலே, திருநெறித்தமிழாகிய தேவார திருவாசகங்களில் வல்ல பெரியோர்களும், சிவாகமவிற்பன்னர்களும், வேதவேதாங்கபண்டிதர்களும், தமிழ்ப் புலவர்களும், இராசாக்களும், பிரபுக்களும், பிறருமாகிய எல்லாரும் வந்து கூடினர்கள்.

கச்சியப்பசிவாசாரியர் குமரகோட்டத்தடிகளைப் பூசை செய்து, அவர் சந்நிதானத்திலே மெழுகிப் பீடமிட்டு, அதின்மேற் பட்டை விரித்து, புஷ்பங்களைத் தூவித் தூபங்கொடுத்து ஆசனங்கற்பித்து, கந்தபுராணத் திருமுறையை அதன்மேல் வைத்து அருச்சித்து வணங்கித்துதித்தார். பின்பு இருந்து கொண்டு, "திகட சக்கரச் செம்முக மைந்துளான்" என்னும் முதற்செய்யுளை ஒருமுறை வாசித்து, "திகழ் தசக்கரச்செம் முகம் ஐந்து உளான்" என்றெடுத்து, "விளங்காநின்ற பத்துத்திருக்கைக

ளும் செவ்விய ஐந்து திருமுகங்களுமுள்ள சிவபெருமானுடைய'' என்று பொருளருளிச்செய்தார். உடனே அங்கிருந்த தமிழ்ப்புலவர்களுள் ஒருவர் "சுவாமிகாள், திகழ் தசம் திகடசம் எனப் புணர்தற்கு விதி தொல்காப்பியமுதலிய இலக்கணநூல்களுள் ஒன்றிலாயினும் இல்லையே'' என்றார். அதற்குக் கச்சியப்பசிவாசாரியர் "தாங்கள் கூறியதொக்கும்; ஆயின் இம்முதலடி என்வாக்கன்று; சங்கப்புலவராகிய சுப்பிரமணியக்கடவுளது திருவாக்கு; அவரே எனக்கு இவ்வடியெடுத்துத் தந்தருளினர்'' என்றார். அது கேட்ட அப்புலவர் புன்முறுவல் செய்து, "சுப்பிரமணியக்கடவுள் சுவாமிகளுக்கு இவ்வடியெடுத்துத் தந்தருளியது சத்தியமாயின் ஆகுக. ஆயினும் அது இரகசியம். அதனை நாங்கள் அங்கீகரிப்பதெங்ஙனம்? அக்கடவுள் சுவாமிகளுக்குத் தோன்றியதுபோல எங்களுக்குந் தோன்றி 'இவ்வடி நாமே எடுத்துக்கொடுத்தருளினோம்' என்று திருவாய் மலர்ந்தருளின் அங்கீகரிப்பேம; அன்றேல, இதற்கு யாதானுமோரிலக்கணநூலில் விதி காட்டின் அங்கீகரிப்பேம; அலலாக்கால, அரங்கேற்றவொட்டேம்'' என்றார். கச்சியப்பசிவாசாரியர் "இவ்விரண்டினுள் ஒன்று நாளைச்செயப்படும்'' என்றருளிச்செய்து சபையாரைப் போக்கிவிட்டு, அற்றைத்தினத்திலே திருவமுது செய்யாது, இராத்திரிகாலபூசை முற்றியபின் திருக்கதவந் திருக்காபபிட்டுக்கொணடு சந்நிதியிலே தரையிலே சயனித்தருளினர். அப்பொழுது சுப்பிரமணியக்கடவுள் கச்சியப்பசிவாசாரியருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "அன்பனே, சோழதேசத்தில வீரசோழியம் என்று ஓரிலக்கணநூலிருக்கினறது; திகழ்தசம் திகடசம் எனப் புணர்தற்கு விதி அநநூலிற் சந்திபடலத்திற் பதினெட்டாஞ்செய்யுளிலிருக்கின்றது; சோழதேசத்துப் புலவனொருவன் அந்நூலை நாளைக்கு இவ்விடத்திற்கொண்டுவந்து அவ்விதியை எலலாருக்குங்காட்டுவன்'' என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினர்

மற்றைநாட் சபையாரெல்லாருங் கூடியிருநதபொழுது, கச்சியப்பசிவாசாரியர் தமக்கு முருகக்கடவுள் சொப்பனத்தில அருளிச்செய்தமையை அவர்களுக்குச் சொல்லியருளினர். உடனே ஒரு புலவர் ஒருபுத்தகங்கையிற்கொண்டு அங்கேவந்தனர். அவரை அங்குள்ளோாகள் நோக்கி, "நீர் யாவர்? உமது கையிற்புத்தகம யாது?'' என்று வினவினர்கள். அதற்கு அப்புலவர் "நாம் சோழதேசத்துள்ளேம்; இப்புத்தகம் வீரசோழியம்'' என்றார். அப்பொழுது முன்னைநாளின் ஆக்ஷேபித்த புலவர் விரைந்து சென்று, அப்புத்தகத்தை வாங்கிச் சந்திபடலத்திற் பதினெட்டாஞ்செய்யுளை வாசித்துத் திகடசக்கரம என்னும் புணர்ச்சிக்கு விதி அதிலிருத்தலை உணர்ந்து விம்மிதமும் மகிழ்ச்சியுமுற்றனா. மற்றைத்தமிழ்ப்புலவர்களும் ஒருவர் பின் ஒருவராக அதனை வாங்கிப் பாாத்து விம்மிதமும் மகிழ்ச்சியுமுற்றார்கள். இறுதியிலே சோழதேசத்துப் புலவர் அப்புத்தகத்தைக் கச்சியப்பசிவாசாரியர் கையிற்கொடுத்து, சபையாரெல்லாரையும் நோக்கி, "ஆக்ஷேபம் ஒழிந்ததா ஒழிந்ததா!'' என்று சொல்

விவிட்டு மறைந்தருளினா. உடனே கச்சியப்பசிவாசாரியர் தமையாண்டருளிய அறுமுகக்கடவுளது பெருங்கருணைத்திறத்தை நினைந்து நினைந்து, சரீரம விதிர்ப்புற, மயிர்க்காரோறும திவலை உண்டாக, என்பெல்லாம் நெக்கு நெக்குருக, மதகிடைப் புறப்படுஞ்சலம்போல ஆனந்தபாஷ்பம் பொழியப் பரானந்தபூரவசராய் எழுந்தருளியிருந்தார். அப்பொழுது சபையார் எல்லாரும் "இங்ஙனம எழுநதருளிவந்த புலவர் குமாரக்கடவுளே" என்று துணிந்து ஆச்சரியமடைந்து, வெயிலிடைப்பட்ட வெண்ணெய்போல மனங்கசிந்துருக உரோமஞ்சிலிர்ப்பக் குறுவேர்வை கொள்ள ஆனந்தவருவி சொரிய ஆனந்தக்கூத்தாடிக் கச்சியப்பசிவாசாரியருடைய பெருமையை நன்குணர்ந்து, அவர் திருவடிகளில் அடியற்ற மரம் போல் விழுந்து நமஸ்கரித்து, அவரைத் தோத்திரஞ்செய்தார்கள். ஆக்ஷேபஞ்செய்த புலவர் கச்சியபபசிவாசாரியரைப் பலதரமும் நமஸ்கரித்து, "எமமெபருமானே, புழுத்த நாயினுங்கடையேனாகிய தமியேன் சுவாமிகளுடைய மகிமையைச் சிறிதும் அறியாது ஆக்ஷேபித்த பெருங் குற்றத்தைப் பொறுத்து அடியேன்மீது திருவருள் சுரந்தருளுக" என்று அதிவிநயத்தோடு பிரார்த்தித்து, மீட்டும அடியற்ற மரம்போல் வீழ்ந்து கிடந்தார் கச்சியபபசிவாசாரியா எழுநது, அப்புலவருடைய இரண்டு கைகளையும தமமுடைய அருமைத்திருக்கைகளினாலே பற்றியெடுத்து இறுகத் தழுவி. "ஐயமீர, தஙகள் ஆக்ஷேபத்தினாலன்றோ இச்சபையாரெலலாருக்கும திருவருளினுண்மை வெளிப்பட்டது. இதன்பொருட்டுத் தங்களுக்குச் செயறபாலதாகிய கைமமாறு யாது! அறியேம அறியேம்" என று பாராட்டியருளினா.

அதனபின சபையாரெலலாரும நமஸ்கரித்து, "சுவாமிகாள், இனிப் புராணத்தைத் தடையின்றி அரங்கேற்ற ஆரமபித்தருளுக" என்று விண்ணப்பஞ்செய்தாாகள் அங்ஙனமே கச்சியப்பசிவாசாரியர் அரங்கேற்று வாராயினர். காஞ்சித்திருநகரத்துள்ள ஆதிசைவாகள் முதலானவர்களுக்கும் கந்தபுராணங்கேட்க வந்த எண்ணிறந்த அடியார்களுக்கும் போசனமுதலியவைகளெலலாம் தொண்டைநாட்டுள்ள இருபத்துநான்கு கோட்டத்து வேளாளப்பிரபுக்களுடைய செலவினாலே நடந்தன. எல்லாரும் நியமமாக வந்து பேராசையோடு கேட்கக் கச்சியப்பசிவாசாரியர் தினந்தோறும் புராணம வாசித்துப் பொருள் சொல்லி ஒருவருஷத்திலே முடித்தருளினா.

புராணமுற்றுப்பெற்றவுடனே கச்சியப்பசிவாசாரியர் புராணத்திருமுறையை விதிபபடி அருச்சனை செய்து நமஸ்கரித்தாா. அப்பொழுது அங்குள்ள எத்திறத்தாாகளும அன்பினோடு விமமிவிமமித் தண்டாகாரமாக விழுந்து, கச்சியப்பசிவாசாரியரை நமஸ்கரித்தெழுந்து இரண்டு கைகளுஞ் சிரசின்மேலேறிக் குவிய நின்று, துதித்தார்கள். கச்சியப்பசிவாசாரியர் கந்தபுராணத்திருமுறையோடுந் தந்தச்சிவிகையில் எழுந்தருளி, இருபத்துநான்குகோட்டததுமுள்ள வேளாளபபிரபுக்களுள்ளே சிலர்

சிவிகை தாங்க, சிலர் வெண்சாமரம் வீச, சிலர் குடை கொடி பிடிக்க, நானாவித மங்கலவாத்தியவொலியினாலே திக்குகளெல்லாஞ்செவிடுபட, பிராமணர்கள் வேதகோஷஞ்செய்ய, சிவனடியார்கள் சரவணபவ சரவணபவ என்று சொல்லும் பேரொலி தழைக்க, திருநகரவாசிகள் திருவீதிகடோறுஞ் சுத்திசெய்து வாழைகள் நாட்டித் தோரணங்கள் நிரைத்துப் பூமாலைகள் தூக்கிப் பூரணகும்பங்கள் வைத்துப் பொரி தூவித் திருவிளக்கேற்றி அறுகெடுக்க, தமது அருமைத் திருமேனியிலே தரிக்கப்பட்ட திரிபுண்டரத்தின் அழகையும், உருத்திராக்ஷமாலைகளின் அழகையும், சின்முத்திரையையும், திருக்கண்களினின்று பொழியும் பரமானந்த வாரியையும, அடியார்கள் கண்டு மனநெக்கு நெக்குருக வணங்கித் துதித்து ஆனந்தக்கூத்தாட, திருவீதிவலஞ்செய்து, குமரகோட்டச்சந்நிதியை அடைந்து, சிவிகையினின்றும் இறங்கித் திருமுறையைத் திருக்கோயிலினுள்ளே கொண்டுபோய்த் திருமுன்னே வைத்தருளினார். உடனே எல்லாரும் கச்சியப்பசிவாசாரியரை, அவர் "அமையும் அமையும்" என்ற வழியும் தவிராது, ஆராமையினாலே பலகாலும் நமஸ்கரித்து, "பரமகருணாநிதியாகிய எம்பெருமான் தமிழ்நாட்டாரெல்லாரும் பிழைக்கும்பொருட்டுத் திருவாய்மலர்ந்தருளிய இப்புராணமாகிய திவ்வியாமிர்தத்தை அடியேங்கள் எஞ்செவிவாய் மடுத்து உய்ந்தனம உய்ந்தனம" என்று விண்ணப்பஞ்செய்து இன்பமுற்றார்கள்.

தமிழ்நாடெங்குமுள்ள சிவனடியார்களெல்லாரும், இக்கந்தபுராணத்தை மிகப்பாராட்டி, சிரத்தையோடு எழுதுவோரும், வாசிப்போரும், பொருள் சொல்வோரும், கேட்போருமாய், இதன் சொற்சுவை பொருட்சுவைகளை அநுபவித்துப் பேரானந்தப்பெருஞ்செல்வம் அடைந்தார்கள்.

பெருங்கருணைப் பிழம்பாகிய கச்சியப்பசிவாசாரியர் பின்னருஞ் சிலகாலம குமரகோட்டத்தடிகளைப் பூசை பண்ணிக்கொண்டும் ஞானநிட்டை செய்துகொணடும இருநது, அகணடாகார நித்த வியாபகசச்சிதானந்தப்பிழம்பாய் நின்ற சிவத்தோடும இரணடறக் கலந்தனா.

இக்கநதபுராணத்தை விதிபபடி மெய்யன்போடு நியமமாகக் கேட்டவர்கள், நோய்நீக்கம, செலவம, புததிரபாககியம, சத்துருஜயம், இராசவசியம் முதலிய பயன்களைத தாநதாம வேண்டியவாறே பெறுவர்கள். இது நெடுங்காலம பலராலும அநுபவத்தினால் நிச்சயித்துணரப்பட்ட விஷயம். இது சததியம் சத்தியம, முக்காலுஞ் சத்தியம.

வேலுமயிலுந்துணை.

---

அபியுக்தர் வாக்கு.

உச்சித மாஞ்சிவ வேதியன் காளத்தி யோங்குமைந்தன்
கச்சியப் பன்செய்த கந்த புராணக் கலைக்கடலின்
மெச்சிய கல்வி மதியும்வெண் டாமரை மேவுமின்னு
மிச்செவி நாவினுக் கின்பா மமுது மெழுந்தனவே.

---

வேதமொடு வேதாங்கம் பயின்று வல்லோன்
விரிந்தசிவா கமமுணர்ந்து மேன்மை பூண்டோன்
போதகிறை சிவமறையோன் காஞ்சி வாழும்
புனிதமிகு கச்சியப்ப குரவ னானோன்
வாதமுறு புலவர்சூழா மகிழ்ந்து போற்ற
மதிமலிமா டம்புடைசூழ் குமர கோட்டத்
தேதமறு சகாத்தமெழு நூற்றின் மேலா
யிலகுகந்த புராணமரங் கேற்றி னானே.

---

திருக்கைலாசபரம்பரைத் தருமபுரஞானசம்பந்ததேசிகராதீனத்துச்

சம்பந்தசரணாலயசுவாமிகள் அருளிச்செய்த

கந்தபுராணச்சுருக்கம்.

போதமுறு சூதமுனி புகன்ற காந்தப்
புகழ்க்கடலிற் படிந்ததன்கட் பொருள தான
மேதகுவண் புனலருந்தி வைய முய்ய
வெய்யதுயர்ப் பிறவியெனும் வெம்மை தீரத்
தாதவிழ்பூம் பொழிற்காஞ்சிக் குவட்டிலேறிச்
சலதியமு தினைநிகர்செந் தமிழ தான
காதன்மழை பொழிந்தவருட் கொண்டலான
கச்சியப்ப னிருபாத முச்சி வைப்பாம்.

---

சைவாசாரியராகிய படிக்காசுப்புலவர் செய்த

தொண்டைமண்டலசதகம்.

அந்தப் புரமு மறுநான்கு கோட்டகத் தாருமொன்றாய்க்
கந்தப் புராணம் பதினா யிரஞ்சொன்ன கச்சியப்பர்
தந்தப்பல் லக்குச் சிவிகையுந் தாங்கியச் சந்நிதிக்கே
வந்தப் புராண மரங்கேற்றி னார்தொண்டை மண்டலமே.

---

# காண்டவகராதி.



# படலவகராதி.

ஆ படலம் - ககூ இ திருவிருத்தம் - ச,அக0.

☞ தேவாரம் பெற்ற சிவஸ்தலங்களுள்ளே திருக்கோணமலை திருக்கேதீச்சரம் என்னும் இரண்டையும் திருப்புகழ் பெற்ற சுப்பிரமணியஸ்தலங்களுள்ளே கதிர்காமம் என்னும் ஒன்றையும் உடைத்தாகிய ஈழதேசமெங்குமுள்ள சிவாலயம் விக்கினேசுராலயம் சுப்பிரமணியாலயம் என்னும் திருக்கோயில்களெல்லாவற்றினும் இக்கந்தபுராணம் பண்டைக்காலந்தொடங்கி வருஷந்தோறுந் தவறாது வாசித்துப் பொருள் சொல்லப்பட்டுவருகின்றது. அங்கங்குள்ள ஆண் பெண் என்னும் இருபாலாரும் வாசிப்போரையும் பொருள் சொல்வோரையும் வழிபட்டு இதனை நியமமாகக் கேட்டுக்கொண்டுவருகின்றார்கள். இத்தேசங்களிலுள்ள திருக்கோயிலதிகாரிகளும் மடாதிபதிகளும் தங்கள் தங்கள் திருக்கோயில்களினும் மடங்களினும் இக்கந்தபுராணத்தை வருஷந்தோறும் வாசித்துப் பொருள் சொல்லும்படி செய்வார்களாயின், இங்குள்ள சைவசமயிகளும் இதனை நியமமாகக் கேட்டுய்வார்களே.

## பிழை திருத்தம்.

| பக்கம். | செய்யுள். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கரு | ஙச | உ | சிறை | சிறைப் |
| உகூ | ,, | ஙரு | வீரட்டகாசம், | வீராட்டகாசம், |
| ருக | எஎ | க | மவுணர்க் | மவுணற் |
| கூகூ | கக | ச | மோலோன் | மேலோன |
| கங0 | ஙரு | ங | துங்கி | துங்க |
| ககூரு | ச | க | வலநதி | வரநதி |
| உருச | ங | ச | வணித்தலம் | வடித்தலம் |
| உருக | கக | ச | செய்து | செய்ய |
| உகூ0 | ,, | கக | கொள்டபலம். | கொள்படலம். |
| உஎஉ | கச | க | யுன்னிற் | யுன்னுற் |
| உஎங | உங | உ | முன்னுவுரு | முன்னுமுரு |
| உஅரு | சஉ | உ | றப்பினன் | தப்பினன் |
| ஙஉஎ | கூஉ | உ | டிளிக்குதும் | டளிக்குதும் |
| ச00 | க0 | உ | விடுகின்றார் | விடுக்கின்றார் |
| சஉக | ஙஅ | க | மிலக்கு | மிலங்கு |

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கந்தபுராணம்.

## விநாயகர் காப்பு.

திகடசக்கரச் * செம்முகமைந்துளான்
சகடசக்கரத்தாமரைநாயக
னகடசக்கரவின்மணியாவுறை
விகடசக்கரன் ○ மெய்ப்பதம்போற்றுவாம்.

உச்சியின்மகுடமின்னவொளிர்தர நுதலினோடை
வச்சிரமருப்பினொற்றைமணிகொளகிம்புரிவயங்க
மெய்ச்செவிக்கவரிதூங்கவேழமாமுகங்கொண்டுற்ற
கச்சியின்விகடசக்ரகணபதிக்கன்புசெய்வாம். (உ)

* திகழ் தசக்கரம் திகடசக்கரமெனப் புணர்ந்தமைக்கு விதி:—வீரசோழியத்துச் சந்திபடலத்திற் பதினெட்டாஞ்செய்யுள் "நான்கொடு மூன்றொன்ப தாமுயிரின்பின்பு நவ்வருமே—லேனற ணகாரம தாம்பதி னைந்தொரு டெண்ணிரண்டாய்த—தோன்று முடற்பின் றகாரம வரினிரண் டுமொருகா—லானறவைந் தாமுட லாமுன்பி லொற்றுக் கழிவுமுண்டே."

○ தக்கன்யாகம் அழிந்தபொழுது விட்டுணு விடுத்த சக்கரத்தை வீரபத்திரக்கடவுள் பூண்ட வெண்டலையொன்று கௌவியது. விட்டுணுவின்பொருட்டு அச்சக்கரத்தைப் பெறக் கருதி, அவருடைய சேனாதிபதியாகிய விடுவசேனன் காஞ்சீபுரத்திற்சென்று, சிவலிங்கந்தாபித்துப் பூசை செய்தான். வீரபத்திரக் கடவுள் அங்கெழுந்தருளியபொழுது விடுவசேனன் அச்சக்கரத்தைத் தரும்படி பிரார்த்திக்க, அவர் "சக்கரம் நமது கையிலில்லை; கபாலம் கௌவியதாயின் எவ்விதத்தாலாயினும் அதுவே தரப் பெற்றுக்கொள்" என்றார். விடுவசேனன் காலிரண்டையும் கையிரண்டையும் வளைத்து வாயையும் நாசியையும் கண்களையும் சுரித்து அசைத்துப் பற்கடோன்ற விகடக்கூத்தாடினான். அதனைக் கண்டோரெல்லாரும் நகைக்க, வெண்டலையும் நகைத்தது. நகைத்தலும், சக்கரம் அதனவாயினின்றும் பூமியில் விழ, விநாயகக்கடவுள் அதனை விரைந்து கவர்ந்துகொண்டு ஒன்றுமறியாதார்போன்றிருந்தனர். விடுவசேனன் அது கண்டு, அவர் திருமுன்னும் விகடக்கூத்தாடி வேண்ட, அவர் அச்சக்கரத்தை அவன்கைக் கொடுத்தருளினர். இக்காரணத்தால் அவ்விநாயகக்கடவுளுக்கு விகடசக்கரவிநாயகர் என்னுந் திருநாமம் உண்டாயிற்று.

# கந்தபுராணம்.

## சுப்பிரமணியர் காப்பு.

மூவிருமுகங்கள்போற்றிமுகம்பொழிகருணைபோற்றி
யேவருந்துதிக்கநின்றவிராறுதோள்போற்றிகாஞ்சி
மாவடிவைகுஞ்செவ்வேண்மலரடிபோற்றியன்னான்
சேவலுமயிலும்போற்றிதிருக்கைவேல்போற்றிபோற்றி. (௩)

## நூற்பயன்.

இந்திராகிப்பார்மேலின்பமுற்றினிதுமேவிச்
சிந்தையினினைந்தமுற்றிச்சிவகதியதனிற்சேர்வ
ரந்தமிலவுணர்தங்களுடல்கெடமுனிந்தசெவ்வேற்
கந்தவேள்புராணந்தன்னைக்காதலித்தோதுவோரே. (௪)

## வாழ்த்து.

வான்முகில்வழாதுபெய்கமலிவளஞ்சுரக்கமன்னன்
கோன்முறையரசுசெய்ககுறைவிலாதுயிர்கள்வாழ்க
நான்மறையறங்களோங்கநற்றவம்வேள்விமல்க
மேன்மைகொள்சைவநீதிவிளங்குகவுலகமெல்லாம். (௫)

---

# கடவுள் வாழ்த்து.

## சிவபெருமான்.

திருவந்ததொல்லைப்புவனத்தொடுதேவர்போற்றிப்
பெருவந்தனைசெய்தறிதற்கரும்பெற்றியெய்தி
யருவந்தனையுமுருவத்தையுமன்றிநின்றா
னொருவன்றனதுபதந்தன்னையுளத்துள்வைப்பாம். (௧)

ஊனாகியூனுள்ளுயிராயுயிர்தோறுமாகி
வானாகியானபொருளாய்மதியாகிவெய்யோன
றானாகியாண்பெண்ணுருவாகிச்சராசரங்க
ளானான்சிவன்மற்றவனீள்கழற்கன்புசெய்வாம. (௨)

## வேறு.

பிறப்பதுமிறப்பதும்பெயருஞ்செய்கையு
மறப்பதுநினைப்பதும்வடிவம்யாவையுந்
துறப்பதுமின்மையும்பிறவுஞ்சூழ்கலாச்
சிறப்புடையரனடிசென்னிசேர்த்துவாம் (௩)

பூமலர்மிசைவருபுனிதனாதியோர்
தாமுணர்வரியதோர்தலைமையெய்தியே
மாமறைமுதற்கொருவடிவமாகியோன்
காமருசெய்யபூங்கழல்கள்போற்றுவாம். (௪)

பங்கயன்முகுந்தனும்பரமென்றுன்னியே
தங்களிலிருவருஞ்சமர்செய்தாற்றுழி
யங்கவர்வெருவரவங்கியாயெழு
புங்கவன்மலரடிபோற்றிசெய்குவாம. (௫)

காண்பவன்முதலியதிறமுங் * காட்டுவான்
மாண்புடையோனுமாய்வலிகொள்வான்றொடர்
பூண்பதின்றாய்நயம்புணர்க்கும்புங்கவன்
சேண்பொலிதிருநடச்செயலையேத்துவாம். (சு)

சிவசத்தி.

செறிதருமுயிர்தொறுந்திகழ்ந்துமன்னிய
மறுவறுமரீணிடமரபின்மேவியே
யறுவகைநெறிகளும்பிறவுமாக்கிய
விறைவிதன்மலரடியிறைஞ்சியேத்துவாம். (எ)

விநாயகக்கடவுள்.

மண்ணுலகத்தினிற்பிறவிமாசற
வெண்ணியபொருளெலாமெளிதின்முற்றுறக்
கண்ணுதலுடையதோர்களிற்றுமாமுகப்
பண்ணவன்மலரடிபணிந்துபோற்றுவாம். (அ)

வைரவக்கடவுள்.

பரமனைமதித்திடாப்பங்கயாசன
னொருதலைகிள்ளியேயொழிந்தவானவா
குருதியுமகந்தையுங்கொண்டுதணடமுன்
புரிதருவடுகனைப்போற்றிசெய்குவாம். (கூ)

வெஞ்சினப்பரியழன்மீதுபோர்த்திடு
மஞ்சனப்புகையெனவாலமாமெனச்
செஞ்சுடர்ப்படிவமேற்செறிததமாமணிக்
கஞ்சுகக்கடவுள † பொறகழல்களேத்துவாம். (கo)

வீரபத்திரக்கடவுள்.

அடைந்தவியுணடிடுமமராயவரு
முடிந்திடவெருவியேமுனிவாவேதிய
ருடைந்திடமாமகமொடியததக்கனைத்
தடிந்திடுசேவகன்சரணமபோற்றுவாம். (கக)

சுபபிரமணியக்கடவுள்.

இருப்பரங்குறைததிடுமெஃகவேலுடைப்
பொருப்பரஙகுணாவுறபபுதல்விதனமிலைச
விருப்பரங்கமரிடை ‡ விளஙகக்காட்டிய
திருப்பரங்குன்றமாசேயைப்போற்றுவாம். (கஉ)

சூரலைவாயிடைத்தொலைததுமார்புகீண்
டீரலைவாயிடுமெஃகமேந்தியே
வேரலைவாய்தருவெள்ளிவெற்பொரீஇச்
சீரலைவாய்வருசேயைப்போற்றுவாம். (கங)

* காண்பவன் முதலிய திறமென்றது காண்பான், காட்சி, காட்சிப்பொருள் என்னுமூன்றையும்.

† வைரவக்கடவுள் வாமனருபங்கொண்டு தருக்குற்ற விட்டுணுவினுடைய நிறத்தையுடைய தோலை உரித்துச் சட்டையாக்கித் தரித்தவரென்றறிக.

‡ அரங்கல் - அழிதல்.

காவினன்குடியுறக்காமர்பொன்னகர்
மேவினன்குடிவரவினியச்சூர்முதல்
பூவினன்குடிலையம்பொருட்குமாலுற
வாவினன்குடிவருமமலற்போற்றுவாம். (௧௪)

நீரகத்தேதனைநினையுமன்பினோர்
பேரகத்தலமரும்பிறவிநீத்திடுந்
தாரகத்துருவமாந்தலைமையெய்திய
வேரகத்தறுமுகனடிகளேத்துவாம். (௧௫)

ஒன்றுதொறாடலையொருவியாவிமெய்
துன்றுதொறாடலைத்தொடங்கியவகை
மன்று * தொறாடியவள்ளல்காமுறக்
குன்றுதொறாடியகுமரற்போற்றுவாம். (௧௬)

எழுதிரைப்புனத்திறைவிமுன்புதன்
கிழமுதிரிளநலங்கிடைப்பமுன்னவன்
மழமுதிர்களிறெனவருதல்வேண்டிய
பழமுதிர்சோலையம்பகவற்போற்றுவாம். (௧௭)

ஈறுசேர்பொழுதினுமிறுதியின்றியே
மாறிலாதிருந்திடும்வளங்கொள்காஞ்சியிற்
கூறுசீர்புனைதருகுமரகோட்டம்வா
ழாறுமாமுகப்பிரானடிகள்போற்றுவாம். (௧௮)

திருநந்திதேவர்.

ஐயிருபுராணநூலமலற்கோதியுஞ்
செய்யபன்மறைகளுந்தெரிந்துமாயையான்
மெய்யறருள்புகல்வியாதனீட்டிய
கையடைநந்திதன் † கழல்கள்போற்றுவாம். (௧௯)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்டைவல்வினையினாற்பாயுடுத்துழல்
குண்டரைவென்றுமுன்கூடல்வைகியே
வெண்டிருநீற்றொளிவிளங்கச்செய்திடு
தண்டமிழ்விரகன்மெய்த்தாள்கள்போற்றுவாம். (௨0)

திருநாவுக்கரசுநாயனார்.

பொய்யுரைநூல்சிலபுகலுந்தியமண்
கையர்கள்பிணித்துமுன்கடலகத்திடு
வெய்யகற்றோணியாய்மிதப்பமேற்படு
துய்யசொல்லரசர்தாடொழுதுபோற்றுவாம். (௨௧)

---

* பஞ்சசபைகளாவன திருவாலங்காட்டில் இரத்தினசபையும், தில்லையிற் கனகசபையும், மதுரையின் வெள்ளிச்சபையும், திருநெல்வேலியிற்றாமிரசபையும், திருக்குற்றாலத்திற் சித்திரசபையுமாம்.

† வியாசமுனிவர் காசியிலே விசுவநாதர் சந்நிதியில் இரண்டுகைகளையும் உயர்த்தி நின்று விட்டுணுவே பரப்பிரமம் என்று சொல்லியபொழுது திருநந்திதேவர் கோபங்கொண்டு அக்கைகள் எடுத்தவண்ணமே அசைவற நிற்கும்படி சபித்தருளினார்.

சுந்தரமூர்த்திநாயனார்.

வறந்திடுபொய்கைமுன்னிரம்பமற்றவ
னுறைந்திடுமுதலைவந்துதிப்பவன்னதா
லிறந்திடுமகன்வளர்ந்தெய்தப்பாடலொன்
றறைந்திடுசுந்தரனடிகள்போற்றுவாம். (உஉ)

மாணிக்கவாசகசுவாமிகள்.

கந்தமொடுயிர்படுங்கணபங்கம் * மெனச்
சிந்தைகொள்சாக்கியர்தியங்கமூகராய்
முந்தொருமூகையைமொழிவித்தெந்தைபால்
வந்திடுமடிகளைவணக்கஞ்செய்குவாம். (உ௩)

திருத்தொண்டர்கள்.

அண்டருநான்முகத்தயனும்யாவருங்
கண்டிடவரியதோர்காட்சிக்கண்ணவா
யெண்டருசிவனடியெய்திவாழ்திருத்
தொண்டர்தம்பதமலர்தொழுதுபோற்றுவாம். (உ௪)

சரசுவதி.

தாவறுமுலகெலாந்தந்தநான்முகத்
தேவுதன்றுணைவியாய்ச்செறிந்தபல்லுயிர்
நாவுதொறிருந்திடுநலங்கொள்வாணிதன்
பூவடிமுடிமிசைப்புனைந்துபோற்றுவாம். (உ௫)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩0.

# அவையடக்கம்.

இறைநிலமெழுதுமுனிவளையபாலகன
முறை † வரைவேனெனமுயல்வதொக்குமா
லறுமுகமுடையவோரமலன்மாக்கதை
சிறியதோரறிவினேன்செப்பநின்றதே. (௧)

வேறு.

ஆனசொற்றமிழ்வல்லவறிஞர்முன்
யானுமிக்கதைகூறுதற்கெண்ணுதல்
வானகத்தெழும்வான்கதிரோன்புடை
மீனிமைப்பவிரும்பியபோலுமால். (உ)

முன்சொல்கின்றமுனிவடநூறெரீஇத்
தென்சொலாற்சிறியேனுரைசெய்தலான்
மென்சொலேனும்வெளிற்றுரையேனும்வீண்
புன்சொலேனுமிகழார்புலமையோர். (௩)

* உயிர் கந்தமொடு கணபங்கம் படும் - ஆன்மாப் பஞ்சகந்தங்களுடன் க்ஷணந்தோறும் தோன்றியழியும். எ-று. பஞ்சகந்தங்களாவன உருவம், ஞானம், வேதனை, குறி, வாசனை என்பனவாம். கந்தமென்பது சமூகமென்னும் பொருட்டு.

† முறை - புத்தகம்.

# கந்தபுராணம்.

சிந்துமென்புரம்பிறைதாங்கினோன்
மைந்தனுந்தவின்மற்றவன்றனுமென்
சந்தமில்லுரையுந்தரிப்பானெனக்
கந்தனுக்குரைத்தேனிக்கதையினை. (௪)

வெற்றெனத்தொடுத்தீர்த்துவெளிற்றுரை
முற்றுமாகமொழிந்தவென்பாடலிற
குற்றநாடினர்கூறுபதொல்லைநூல்
கற்றுணர்ந்தகலைஞரல்லோர்களே. (௫)

குற்றமேதெரிவார்குறுமாமுனி
சொற்றபாவினுமோர்குறைசொல்வராற்
கற்றிலாவென்கவிவழுவாயினு
முற்றுநாடிவல்லோருய்த்துரைக்கவே. (௬)

வேறு.

குறைபலமாமதிகொளினுமன்னதா
னுறுபயனேகியேயுலகம்போற்றல்போற்
சிறியவெனவெளிறுரைசிறப்பின்றாயினு
மறுமுகனகதையிதென்றறிஞர்கொள்வரே. (௭)

காதலனருள்பெறுநந்திதந்திடக்
கோதிலாதுணாசனற்குமரனகூறிட
வாதராயணமுனிவகுப்பவோர்ந்துணா
சூதனோதியதுமூவாறுதொல்கதை. (௮)

சொல்லியபுராணமாந்தொகையுளீசனை
யல்லவாகாதைகளேனையாசெய்கையு
னல்லனவிரிதிருநவைகணமாற்றிடு
மில்லதுமுகமனுலெடுத்துக்கூறுமே. (௯)

பிறையணிசடைமுடிப்பிரான்றனகாதைக
ளிறையுமோாமறுவிலயாவுமேன்மையே
மறைபலசான்றுளவாய்மையேயவை
யறிஞர்களுடியேயவற்றைக்காண்கவே. (௧௦)

புவியினரேனையாபுராணந்தேரினுஞ்
சிவகதையுணாகிலரென்னிற்றீருமோ
வவாமயலரசனையடைகிடாரெனி
லெவரெவராக்கழமினிதுபோலு * மால். (௧௧)

மங்கையோர்பங்குடையானநாயகற்
கிங்குளபலபுராணத்துளெஃகவேற்
புங்கவன்சீர்புகழ்புராணமொன்றுள
தங்கதிலொருசிலவடைவிற்கூறுகேன். (௧௨)

பூதமயி னூர்பரன்புராணத்துற்றிடாக்
கதையிலையன்னதுகணிதமின்றரோ
வதுமுழுதறையவெற்கமைதற்பாலதோ
துறியுறுபுலமைசேர்சூதற்கல்லதே. (௧௩)

---

* போலும் - ஒப்பில்போலி.

காந்தமாகியபெருங்கடலுட்கந்தவேள்
போந்திடுநிமித்தமும்புனிதன்கண்ணிடை
யேந்தல்வந்தவுணர்கள்யாருமவ்வழி
மாய்ந்திடவட்டார்த்ததுமற்றுங்கூறுகேன். (கச)

ஏதிலாக்கற்பமெண்ணிலசென்றன
வாதலாலிக்கதையுமனந்தமாம்
பேதமாகுமப்பேதத்தினுள்விரித்
தோதுகாந்தத்தினுண்மையைக்கூறுகேன். (கரு)

முன்புகுதன்மொழிவடநூற்கதை
பின்பியான்றமிழ்ப்பெற்றியிற்செப்புகே
னென்பயனெனினின்றமிழ்த்தேசிகர்
நன்புலத்தவைகாட்டுநயப்பினால். (கசு)

தோற்றமீறின்றித்தோற்றியசூர்ப்பகைக்
கேற்றகாதைக்கெவன்பெயரென்றிடி
னாற்றுமைம்புலத்தாறுசெனமேலையோர்
போற்றுகந்தபுராணமதென்பதே. (கஎ)

பகுதிகொண்டிடுபாக்களினத்தினுண்
மிகுதிகொண்டவிருத்தத்தொகைகளாற்
றொகுதிகொண்டிடுசூரனைசாய்த்தவன்
றகுதிகொண்டதனிக்கதைசாற்றுகேன். (கஅ)

செந்தமிழ்க்குவரம்பெனச்செப்பிய
முந்துகாஞ்சியின்முற்றுணர்மேலவர்
கந்தனெந்தைகதையினைநான்முறை
தந்திடென்னைத்தமியனியம்புகேன. (ககூ)

வெம்புசூர்முதலவீட்டியவேற்படை
நம்பிகாதையைநற்றமிழ்ப்பாடலா
லும்பர்போற்றவுமையுடனமேவிய
கம்பர்காஞ்சியிற்கட்டுரைத்தேனியான. (உ0)

அவையடக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨0.

# ஆற்றுப்படலம்.

செக்கரஞ்சடைமுடிச்சிவனுக்கன்பராய்த்
தக்கவரறிஞர்கடவத்தர்செல்வராய்த்
தொக்கவர்யாரும்வாழ்தொண்டைநாட்டினின்
மிக்கதோரணியியலதுவிளம்புகேன். (க)

சுந்தரமாயவன்றுயிலுமாழிபோ
லிந்திரனூர்முகிலியாவுமேவியே
யந்தமில்கடற்புனலருந்தியார்த்தெழீஇ
வந்தனவுவரியின்வண்ணமென்னவே. (உ)

பார்த்தெனதுலகடும்பரிதியென்றனும்
போர்த்தொழில்புரிகெனப்பொங்குசீற்றத்தால்
வேர்த்தெனப்பனித்துவெள்ளெயிறுவிள்ளநக்
கார்த்தெனவேதடித்தசனிகான்றவே. (௩)

சுந்தரவயிரவத்தோன்றன்மீமிசை
கந்தகேளிற்றுரிகலைஇயகாட்சிபோன்
முந்துறுகுன்முகின்முழுதுமுற்றற
நந்தியம்பெருவரைமீதுநண்ணிய. (௪)

வேறு.

வாரை * கான்றநித்திலமெனவாவிகண்மயங்கச்
சீரைகான்றிடுதந்திரிகரம்பெனச்செறிந்த
தாரைகான்றவோரிருதுவினொல்லையுந்தண்பால்
வீரைகான்றிடுதன்மையதாமெனமேகம். (௫)

பூட்டுகார்முகந்தன்னொடுந்தோன்றியபுயல்வா
யூட்டுதண்புனனந்தியங்கிரிமிசையுகுத்தல்
வேட்டுவக்குலத்திண்ணனார்மஞ்சனம்விமலற்
காட்டுகின்றதோர்தனிச்செயல்போன்றுளதன்றே. (௬)

கல்லெனும்பேரிசைப்புனன்மழைபொழிதலாற்கானத்
தொல்லும்பேரழல்யாவையுமிமைப்பினிலொளித்த
வெல்லுந்தீஞ்சலமருவுமிக்காருக்குவியன்பார்
செல்லுங்காலையிலங்கண்வீற்றிருப்பரோதீயோர். (௭)

தேக்குதெண்டிரைப்புணரிநீர்வெம்மையைச்சிந்தி
யாக்கிவாலொளியுலகில்விட்டேகலாலடைந்தோர்
நீக்கரும்வினைமாற்றிநன்னெறியிடைச்செலுதநிப்
போக்கின்மேயினதேசிகர்ப்பொருவினபுயல்கள். (௮)

கழிந்தபற்றுடைவசிட்டனதிருக்கையாக்கவினார்
மொழிந்தநந்தியமபெருவரைமொய்த்தகுன்முகில்கள்
பொழிந்தசீத்தீம்பொற்புறுசாடியிற்பொங்கி
வழிந்தபாலெனதிசைதொறுமிழிந்தனமன்னோ. (௯)

சீலமேதகுபகீரதன்வேண்டலுஞ்சிவன்றன்
கோலவார்சடைக்கங்கையம்புனலினைக்குன்றின்
மேலைநாள்விடவந்தெனநந்திவீழ்விரிநீர்
பாலியாறெனும்பெயர்கொடுநடந்ததுபடிமேல். (௧௦)

வாலிதாகியகுணத்தினன்வசிட்டனென்றுரைக்குஞ்
சீலமாமுனிபடைத்ததோராதேனுவின்றீம்பால்
சாலநீடியேதொல்லைநாட்படர்ந்திடுதன்மைப்
பாலிமாநதிப்பெருமையான்பகர்வதற்கெளிதோ. (௧௧)

எய்யும்வெஞ்சிலைப்புளினரையெயிற்றியர்தொகையைக்
கையரிக்கொடுவாரியேசிறுகுடிகலக்கித்
துய்யசந்தகில்பறித்துடன்போந்ததுதொன்னாள்
வெய்யசூர்ப்படைவான்சிறைகவர்ந்துமீண்டதுபோல். (௧௨)

---

* வாரை - நீட்டல்விகாரம்.

காகபந்தரிற்கருமுகிற்காளிமங் * கருது
மாககீள்கரியானையுஞ்சூழ்வொடும்வாரிப்
பேர்கண்மேயினமேற்றிசைப்புணரியுண்டமையா
மேகராசிகள்குணகடன்மீதுசெல்வனபோல். (௧௩)

குவட்டொல்கரிக்குருகுதேரரிபுலிக்குலையுண்
வெட்டியுந்திடுதிரைப்புன்மதூகநல்லுழிஞ்சில்
கவட்டிஞெமைசாய்த்தாறலைகள்வரூர்கலக்கித்
தெவிட்டிவந்ததுவாலையுட்கொண்டிடுசெருக்கால். (௧௪)

காலைவெம்பகல்கதிரவன்குடதிசைக்கரக்கு
மாலையாமம்வைகறையெலாஞ்செந்தழல்வடிவாய்
வேலையும்பருகியவெழும்வெம்மைபோய்விளிந்து
பாலைகாண்கிலாவாரியின்பெருமையார்பகர்வார். (௧௫)

குல்லைமாலதிகொன்றைகாயாமலர்க்குருந்து
முல்லைசாடியேயானிரைமுழுவதுமலைத்து
மெல்லமற்றவைநீந்தலுங்கரைக்கண்விட்டுளதாற்
றொல்லைமாநதியான்வழித்தோன்றியதொடர்பால். (௧௬)

சுனையுடைப்பலவாசினிபூகமாந்துடவை
யுளைமலர்ச்சினைமருதமோடொழிந்தனபிறவுங்
களைதலுற்றுமாட்டெறிந்ததுகண்ணகன்குடிஞை
யளவின்மிக்குறுபாணிபெற்றதற்கவையரிதோ. (௧௭)

இலைவிரித்துவெண்சோறுகால்கைதையுமெழுதுங்
கலைவிரித்திடுபெண்ணையுங்களைந்திடுங்களைபோ
யலைவிரித்திடுகடல்புகவொழுகுமாறனந்தன்
றலைவிரித்துழியுடனெளித்தன்னதோர்தகைத்தால். (௧௮)

கொங்குலாமலர்க்கொன்றைகூவிளைகுராவுழிஞை
பொங்குமாசுணந்தாதகிபாடலம்புன்னை
துங்கமார்திருத்தலைமிசைக்கொண்டுறுந்தொடர்பா
லெங்கணாயகன்றன்னையுமொத்ததவிருநீர். (௧௯)

கொலைகொள்வேன்மறவீரர்தமிருக்கையிற்குறுகாச்
சிலையும்வாளொடுதண்டமுந்திகிரிவான்படையு
நிலவுசங்கமுங்கொண்டுசென்றடல்புரிநீரா
லுலகமேழையுமுற்பகலயின்றமாலொக்கும். (௨௦)

தேன்குலாவியமலர்மிசைப்பொலிதருசெயலா
னான்கவாமுகந்தொறுமறையிசையொடுநுணுகிக்
கான்குலாவியகலைமரைமகன்றிகழ்கவினால்
வான்குலாமுலகளிப்பவணிகர்க்குமால்வாரி. (௨௧)

மீதுபோந்திரிசங்கைவிண்ணிடையின்மீனாடும்
போதலாயுறவீசலாற்சலமிரும்புலனாற்
றீதின்மாக்களைச்செறுத்தலாலளித்திடுஞ்செயலாற்
காதிகாதலனிகர்க்குமாற்கன்னிமாதீர்த்தம். (௨௨)

* காளிமம் - கருமை.

தெழிந்தமால்கரியினங்கடமெயிற்றிலூற்றிதையக்
கிழித்தபேரிருள்சோரிந்தகேண்மிரியுளவெல்லாம்
கொழித்துவந்துறவினைதரும்பாவியின்கொள்கை
கழித்தநீர்க்கங்கையமுனையைக்கலந்தெனத்தோன்றும். (உ௩)

சங்கமூர்த்திடத்திரையெழுநதியுறுந்தகைமை
யங்கம்வெமபினையணிக்கதிரல்லிசியமூலோ
யிங்குவாதினைத்தேருதியெனக்காமெடுத்தே
பொங்கும்வாய்விடாவிரவியைவிளிப்பதுபோலும். (உ௪)

வேதமேமுதல்யாவையுமுணர்கினுமேலா
மாதிவானவன்கறைமிடற்றிறையெனவறியாப்
பேதைமாக்கடமுணர்வெனவலைந்துபேர்கின்ற
சிதநீரெலாந்தெளிதலின்றாய்துசிறிதும். (உ௫)

செம்பொன்மால்வரையல்லனகிரிகளுந்திசையு
மும்பர்வானமுந்தரணியுந்துள்ஙகவநதுறலா
லெம்பிரான்முனமவருகெனநதிகளோடெழுந்த
கம்பைமாநதியொத்ததுகரைபொருபாலி. (உ௬)

உதிருகினறசிற்றுண்டிகொண்டொலிபுனற்சடைமேன்
மதுரைநாயகன்மண்சுமந்திட்டமாநதியின்
முதிருமுத்தமிழ்விரகனதேடனமொய்ம்மீ
னெதிராபுகுந்திடப்போவதுபாலியாமியாறு. (உ௭)

வேறு.

மாசறததுளங்குதுப்புமரகததிடைவந்தென்னப்
பாசடைநவெட்பூததபஙகயததடாகமயாவுந்
தேசடைததரஙகநீததசசெலவினுறசிஸ்தந்தமனனே
பேசிடிற்சிறுமையெல்லாமபெருமையாலடஙகுமன்றே. (உ௮)

வளவயனமருதவைபபினவாவியஙகமலமயாவுங்
கிளையொடும்பறித துவாரிகேழுறபபொலிந்ததோற்றம்
விளைதருபகையிறரேலாவெவவழற்சிறுமைநோக்கிக்
களைதலைப்புரிந்துபற்றிப்பெயர்நதெனக்காட்டிற்றன்றே. (உ௯)

திரைகடனீத்தங்கொண்மூவினதடுதொடுசேண்போய்நோக்கித்
தரையிடையிழிந்துசெனறுதனபொருள்கொடுபோந்தென்னப்
பரதவரளவர்வாரிப்படுத்தமீனுப்பின்குப்பை
யிருபுடையலைததுவெளவியேகியதெறிநீாபபாலி. (௩௦)

பாரிடையினையபண்பிற்படர்ந்திடுபாலியந்தத
தாருயிரனைததுந்தத்தமருவினைக்கமைத்தநீராற்
சேருறுகதிகளென்னமாபினிற்றிறமேயென்னத
தாருவின்கிளைகளென்னத்தனிததனிபிரிந்ததன்றே. (௩௧)

காவினர்மன்றநீத்தங்கவிரிதழ்க்கலசக்கொங்கைச்
சேயினர்கரியவுண்கட்டிருநுதன்மிழற்றுந்தீஞ்சொன்
மேவினர்பரவையல்குன்மெல்லியலறன்மென்கூந்தன்
மாவினர்கணிகைமாதர்மனமெனப்போயிற்றுமால். (௩௨)

பாம்பணிபுகுவதேபோற்பாய்தருபர்வதத்தெண்ணீர்
தூம்பிடையனுகுமாற்றுந்தொன்முறைநடைசெய்வோரிற்
றும்புடைபெயராவண்ணத்தலைத்தலைதள்ளுமள்ள
ரேம்பலோர்டார்க்குமோதையுலகெலாமிறுக்குமாதோ. (௩௩)

பணையொலியிரலையோதைபம்பையின்முழக்கமங்கட்
கிணையொலிமள்ளரார்ப்புக்கேழ்கிளர்தரங்கநன்னீ
ரணையொலியவற்றைவானத்தார்ப்பொலிக்கவனிதானு
மிணையொலிகாட்டிற்றேயென்றெண்ணுவார்விண்ணுளோரும். (௩௪)

இயல்புகுங்களிநல்யானையினந்தெரிந்தெய்துமாபோற்
கயல்புகுந்துலவுஞ்சின்னீர்த்தடம்புகுங்காமர்காவி
னயல்புகுங்கோட்டகத்தினகம்புகுமார்வத்தோடி
வயல்புகுங்களிப்புநீங்காமாக்களின்மயங்குமாதோ. (௩௫)

எங்கணுநிறைந்துவேறேரிடம்பிறிதின்மையாகச்
சங்கமாயீண்டுமள்ளர்தாங்குபல்லியமுழாப்பப்
பொங்கியநகரந்தோறும்புறமெலாம்வளைந்தநீத்த
மங்கண்மாஞாலஞ்சூழுமளக்கரைநிகர்த்ததாமே. (௩௬)

மாறுமள்ளருய்ப்பமருதத்தினிறைந்துவிஞ்சி
யேறியநாரமீட்டுமிருங்கடணேக்கிச்செனற
வேறுகொள்புலனைவென்றோர்மேலைநன்னெறியுய்த்தாலுந்
தேறியவுணர்விலாதோர்செல்வுழிச்செல்வரன்றே. (௩௭)

வாளென்ச்சிலையதென்னவால்வளையென்னத்தெய்வக்
கோளெனப்பணிகளென்னக்குலமணிகுயிற்றிச்செய்த
மீளிவெஞ்சரங்களென்னவேலெனமிடைந்துசுற்று
நாளெனப்பிறழுமீன்கண்டவினநாரமெங்கும். (௩௮)

மாண்டகுபொய்கைதோறும்வயறொறுமற்றுமெல்லாம்
வேண்டியவளவைத்தன்றிமிகுபுனல்விலக்குகினற
வாண்டகைமள்ளர்தம்பாலமைந்திடுங்காலையெஞ்சி
யீண்டியவெறுக்கைவீசுமிடைப்புவெள்ளமெலாததார். (௩௯)

ஆற்றுப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩௯.

---

# திருநாட்டுப்படலம்.

அவ்வியல்பெற்றிடுமாற்றன்மள்ளர்கண்
மைவருகடலுடைமங்கைதன்னிடை
மெய்வளங்கொள்வதைவேண்டியக்கிலச்
செவ்விகளுடையேயியைசெய்குவார். (௧)

சேட்டிளந்திமிலுடைச்செங்கணேற்றொடெங்
கோட்டுடைப்பகட்டினம்விரவிக்கோன்முறை
காட்டினர்கிரைபடவுழ்புதாகினி
பூட்டுறுபொலன்மணியாரம்போலவே. (௨)

காற்றினுமனத்தினுங்கடுமைசான்றன
கோற்றொழில்வினைஞர்தங்குறிப்பிற்செல்லுவ
வேற்றினஞ்சேறலுமிரிந்தசேவினம்
பாற்றினமருளவிண்படர்ந்துபாயுமால். (௩)

சால்வளைதரவுழும்வயலிற்றங்கிய
வால்வளையினம்வெரீஇயலவன்மாப்பெடைச்
சூல்வளைபுகுவதங்கதிஞர்சூழ்விலைக்
கோல்வளைமகளிர்பாற்கூட்டமொத்ததே. (௪)

உலத்தொடுமுறழ்புயத்துழவர்பொன்விளை
புலத்தினும்வியத்தகுவயலிற்போக்கிய
வலத்திடைப்பிறழ்மணிவேள்வியாற்றிடு
நிலத்திடைப்பிறந்தமின்னிகர்க்குநீர்மைய. (௫)

காலுசெய்குநர்சிலர்நாரநீர்வய
லூறுசெய்குநர்சிலரொத்தபான்மையிற்
சேறுசெய்குநர்சிலர்வித்திச்செல்லுநீர்க்
காறுசெய்குநர்சிலரளப்பின்மன்னரே. (௬)

சூச் * செனப்பரிமிசைக்குலாயகொய்யுளை
வைச்செனத்தவிர்ததெழுநாற்றின்மாமுடி
யச்செனப்பிதித்தனர்கடைஞராவியா
நச்சினமகளிரைநிகர்த்துலைநந்துளார். (௭)

வாக்குறுதேறலைவள்ளமீமிசைத்
தேக்கினருழவர்தந்தெரிவைமாதரார்
நோக்குறுமாடியினுனித்துநோக்கினர்
மேக்குறுகாதலின்மிசைதன்மேயினர். (௮)

வாடுகின்றார்சிலர்மயங்கிநெஞ்சொடு
மூடுகின்றார்சிலருயிர்க்கின்றார்சிலர்
பாடுகின்றார்சிலர்பணிகின்றார்சில
ராடுகின்றார்சிலர்நறவமாந்தினார். (௯)

அந்தரப்புள்ளொடுமெளிகடம்மொடும்
வந்தடுத்தவரொடுமெயக்குதேறலை
யிந்திரத்தெய்வதமிறைஞ்சிவாமமாந்
தந்திரக்கிளைஞர்போற்றூமேயினர். (௧௰)

வின்னுறுகாணினர்விரகத்தீயினை
ருன்னுறுமுயிர்ப்பினருலையுநெஞ்சினர்
தன்னுறுதம்முணர்வின்றிச்சாம்பினர்
கள்ளினுமுளதுகொல்கருத்தழிப்பதே. (௧௧)

பளிக்கறையன்னதோர்பகோர்ப்பாங்கினுந்
தளிர்ப்புறுசெறுவினுந்தவறற்றேருவார்
தெளிப்பவரின்மையினெறியிற்சென்றிலர்
களிப்பவர்தமக்குமோர்கதியுண்டாகுமோ. (௧௨)

* சூச்சு - பாவாற்றி.

இன்னனபற்பலவியற்றியீண்டினை
ருன்னருந்தொல்லையினுணர்வுவந்தூழிக்
கண்ணெடுந்திரள்புயக்கணவரேவலிற்
றுன்னினரவரொடுந்துவன்றிச்சூழ்ந்தனார். (கங)

மள்ளர்தம்வினைபுரிமழலைத்தீஞ்சொலார்
கள்ளுறுபுதுமணங்கமழும்வரிவித
ழுள்ளுறுநறுவிரையுயிர்த்துவீசிய
வெள்ளியகுமுதமென்மலரின்மேவுமே. (கச)

நட்டதோர்குழுவினைநடாததோர்குழு
வொட்டலர்போலநின்றொறுத்தலுன்னியே
யட்டினராமெனவடாதவான்களை
கட்டனர்வேற்றுமையுணருங்காட்சியார். (கரு)

ஏயினசெயலெலாமியற்றிவேறுவே
றாயிடைவேண்டுவதனையவாற்றியே
மாயிரும்புவிமிசைமகவைப்போற்றிடுந்
தாயெனவளர்த்தனர்சாலியீட்டமே. (கசு)

மன்சுடர்கெழுமியவயிரவான்கணை
மின்சுடர்தூணியின்மேலகீழுறத்
தன்சுடர்பொலிதரச்செறித்ததன்மைபோற்
பொன்சுடரிளங்கதிர்புறத்துக்கான்றவே. (கஎ)

பச்சிளங்காம்புடைப்பணையின்மீமிசை
வச்சிரத்தியற்றுமோரிலைகொள்வான்படை
யுச்சிமேலுறநிறீஇயொருங்குசெய்தெனக்
குச்சுறுசாலிமென்கதிர்குலாவுமால். (கஅ)

சுற்றுறுபஃறலைச்சுடிகைமாசுணம்
பெற்றுறுகுழவிகள்பெயர்தலின்றியே
முற்றுறுநிவப்பொடுமுறையினிற்றல்போ
னெற்றுறுபசுங்கதிர்நிமிர்தன்மிக்கவே. (ககூ)

மையுறுகணிகையர்மகிழ்நர்வந்துழிப்
பொய்யுறுமளியெனப்பயனில்புன்கதிர்
கையுறுமுவகையாற்பணியுங்கற்பினோர்
மெய்யுறுபரிவெனவிளைந்துசாய்ந்தவே. (உ0)

மாலுறுபொன்னகர்மருவுமன்னற்குப்
பாலுறுநிம்பதம்பலவுமார்த்தியே
மேலுறுசாலியின்விளைவுநோக்கியே
கோலிநின்றரிந்தனர்குழாங்கொண்மள்ளரே. (உக)

அரிந்திடுசுமைகளாலவனிப்பேருட
னெரிந்திடச்சேடனுநெளிந்துநீங்கிடத்
தெரிந்திடும்போர்கள்சேணளவுஞ்சேறலால்
விரிந்திடுகதிர்கலாமேருவாயவே. (உஉ)

ஏற்றெருபெகட்டினமிலைத்[illegible]
மாற்றினர்வலமுறைநிரித்துவாழ்த்தொலி
சாற்றினர்பரனெருதெமதுதெய்வதம்
போற்றினர்மீமிசைபொலிகென்றுறுவார். (௨௩)

தொங்கலம்பூமுடித்தொழுவர்போரினை
யங்குறப்படுத்துவையகற்றியாக்கிய
பொங்கழிப்பதடிகள்புறத்துவீசியே
யெங்கணுநெற்குவையியற்றுவாரரோ. (௨௪)

களப்பகைவலோர்கால்களான்முகக்
தளப்புறுநெற்குழாமவற்றுண்மன்னவற்
குளப்படுகடன்முறையுதவிமள்ளருக்
களித்தனாவேண்டியதனையகாட்டினோர். (௨௫)

ளுற்குவைவழிபடப்புகழிற்றூன்றுதம்
மிற்குவைவேண்டுவதேவியெஞ்சிய
நெற்குவைகுரம்பையினிரப்புவிததனர்
பொற்குவையரிக்தனாபொதிவித்தென்னவே. (௨௬)

தலத்திடைவேறிடத்தொதுவகுத்தண்ணிய
குல * த்திடைப்பிறந்தவாகூட்டமாமென
நலத்திடைவந்திடுமுதிரைநல்வள
நிலத்திடையொருசிறைவிளையுகீரவே. (௨௭)

பிறப்பதும்வளாவதும்பின்னர்மூப்புவக்
திறப்பதும்வைகலுமுலகிலேய்க்தெனச்
சிறப்புடனடுவதுமபருவஞ்செய்வது
மறுப்பதுந்தொகுப்பதுமுலப்பினறுயவே. (௨௮)

முழவொலிவிண்ணவர்முதல்வற்காக்குறும்
விழவொலியிணையொலிவிரும்புமெனசிறூர்
மழவொலிகடைசியாவள்ளைப்பாட்டொலி
யுழவொலியல்கலுமுலப்புறூதவே. (௨௯)

காலுறங்கியிரக்கிடுகொமாசோலையு
நீலமுங்கமலமுநிறைந்தபொய்கையு
மாலை † யங்கழனியுமநகைகற்காயூத
சாலைகளிலையெனச்சாற்றுகின்றவே. (௩௦)

நெறியிடையொழுகலாவிழுதைநீரரை
மறவிதன்னகரிடைவருத்தல்போலுமாற்
குறைபடத்துணித்தவண்குவைசெய்கன்னலை
யறைபடுமோலைகளிடையிட்டாட்டலே. (௩௧)

ஏறுகாட்டியதிறவினஞரெக்திரக்
கூறுகாட்டியகழையமுங்கக்கோறுனு
சாறுகாட்டியதரோயாதுக்தம்மிடை
யூறுகாட்டினர்க்கலாறுலோபரிவரோ. (௩௨)

* தண்ணியகுலம்-எளியகுலம். † ஆலை-கரும்பு.

மட்டு * நுகரைமுயினும்வலிதிற்கொண்டி
னிட்டகொள்கலங்களினிருந்ததிம்புன
ளெறுட்டிகெடலெனத்தோன் றுமன்னவை
யட்டதோர்புகைமுகிலனாவிற்றெருக்குமே. (௧௩)

கூடினதேனிசையிளமென்கோகிலம்
பாடினமயில்சிறைப்பறையடித்தன
வாடினவஞ்சிதந்தலையசைத்திடா
நாடினபாதவம்புகழ்வநாரையே. (௧௪)

காசொடுநித்திலப்பொதியுங்காட்டியே
பரசடைமாதுளைசினையிற்பைங்குயில்
பேசிடநிற்பனபெறீஇயர்வம்மென
வீசதல்கருதியேவிளித்தல்போன்றவே. (௧௫)

சித்திரக்கதலிமாவருக்கைத்திங்கனி
துய்த்திடவரும்பயனுதவுந்தோற்றத்தா
லுத்தமமுதலியகுணத்திறோங்கிய
மூத்திறத்தவர்கொடைமொழியநின்றவே. (௧௬)

வீசுகால்பொரவசைவிசும்பிற்றுழைக
டேசுலாம்பரிதிமெய்தீண்டுஞ்செய்கைய
காசினிதன்கையாற்கலைவெண்டிங்கள்போன்
மாசுறுவகைதுடைத்திடுதன்மானுமே. (௧௭)

வாசநீள்பொதும்பரின்மைந்தர்மாதர்கள
காசுநூன்மேகலைபரியக்கைவளை
பூசலிட்டலமரப்புணருஞ்செய்கைகண்
டாசைமிக்கழுங்குவபிரிந்தவன்றிலே. (௧௮)

கானுலாநந்தனவனமுங்காரென
வானுலாந்தண்டலைமருங்கும்வைகலும்
வேனிலானன்னவர்மகளிர்மேயினு
ரூனுலாங்குரம்பையுளுயிருற்றென்னவே. (௧௯)

அசும்புறுமகன்புனலருதகுழலின்
விசும்புறவோச்சியவிரைமென்றுதிறு
பசும்பொனிற்குயிற்றியபதியிற்றூபிகைத்
தசும்பெலாம்வெள்ளியதாக்குந்தாழையே. (௨௦)

உற்றிடவரிதவனுழவர்நீத்ததார்
சுற்றிடுந்தாண்மிசையிடறுஞ்சுல்வளை
தெற்றிடும்பூங்கொடிபுடைக்குஞ்சேலினை
மெற்றிடுந்தேம்பழமிழுக்குந்தேன்களே. (௨௧)

காணிமிர்கந்திகள்கான்றபாளைமேன்
மீனினம்பாய்தலுஞ்சிதறிவீழ்வுறு
வானதோர்மருதவைப்புடையுந்தன்மைய
வானுறுதாரகைவழுக்கிற்றெருக்குமால். (௨௨)

* மட்டு - அளவு.

மாகுலவுல்லியின்மஞ்ஞையாடல்போற்
கோகிலமார்தருக்குழாத்தினாசன்மேற்
பாகுலவின்சொலார்பணிக்குமெல்லிடைக்
காகுலம்பிறர்கொளமகிழ்விளைவினர். (௪௩)

வேறு.

ஊசலூற்றவர்குழைக்குடைந்திடுதலாலுவரை
வீசலொப்பனவாடுதீல்கிளிமொழிவெருவிப்
பேசலொப்பன்வீழ்ந்திலர்பிழைத்ததெதென்று
வேசலொப்பனகோகிலப்பறவைகளிசைத்தல். (௪௪)

கூர்ப்புக்கொண்டகட்கொடிச்சியர்குளிர்புனங்காப்போ
ரார்ப்புக்கொண்டுகைவிசைத்தெறிமணிக்கல்வந்தணையச்
சார்ப்புக்கொண்டதஞ்சிறகரால்விலக்கியத்தடத்துப்
பார்ப்புக்கொண்டுகொண்டெழுவனதோலடிப்பறவை. (௪௫)

வேறு.

கூடறபருகியமுகில்பெய்யுங்காட்சிபோ
லடற்பெருமேதிகளனைத்தும்புக்குராய்த்
தடப்புனல்வறிதெனப்பருகித்தம்முலைக்
குடத்திழிபாலினாற்குறையைத்தீர்க்குமே. (௪௬)

பாட்டியலளிமுரல்பதுமக்கோயிலி
னாட்டியகமலன்முனந்தி * நீரிடை
மாட்டியபல்பெருஞ்சுடரைமானுமாற்
கோட்டுயர்தடந்தொறுங்குவளைபூத்தவே. (௪௭)

கலனிடைத்தருவதுங்கானத்துள்ளதும்
பொலனுடைப்பொருப்பிடைப்பொருளுமல்லது
நலனுடைநாட்டவர்நயத்தலின்றியங்
கிலனிடைப்பொருள்பகர்வழக்கநீத்ததே. (௪௮)

யாழ்க்கையர்பொருநருக்கிறைவரேழிசை
வாழ்க்கையரளவையின்வகுத்தபாடலைக்
கேட்குநர்நன்றெனமருப்புக்கிம்புரிப்
பூட்கைகளுதவுவார்பொதுவிரேறுமே. (௪௯)

கஞ்சிதேய்ப்புண்டகில்கமழும்பூந்துகில்
வஞ்சிதேய்ப்புண்டனமருங்குலாரடி
பஞ்சிதேய்ப்புண்டனபணியத்தாக்கலாற்
குஞ்சிதேய்ப்புண்டன்குமரர்கூட்டமே. (௫௦)

அன்றிலம்பெடைகளையனுகியன்னைகே
ணன்றெனவினையின்மேனடந்தநாயக
ரின்றுவந்திடுவரிங்கெம்பொருட்டினு
லொன்றுநீயிரங்கலென்றுரைக்கின்றார்சிலர். (௫௧)

ஆடியல்கருங்கணுஞ்சிவப்புற்றங்கமும்
வாடுவதாகியேமதனவேர்வுறுக்
கூடியமகளிருங்குமரர்தங்களை
யூடியமகளிருமுலப்பின்றாயினார். (௫௨)

---

* நந்தி - நமிநந்தியடிகள்.

ஆனைமர்கணிலையராடிகன்ருடிவே
மூகனுறமுலைகையான்மூங்கியன்னவர்
நக்னுறுகுறிகொளிஇாளுங்காமஞற்
றனைகளுமசெய்காளையர்தொகுதிசான்றதே. (ருக)

வாளைகளிகல்புரியயநீம்வாவியும்
பாளையொடுற்பலம்பதுமநாறுமால்
வேளயர்தடங்கணர்விரைமென்ளுளிணை
காளையர்குஞ்சியுங்கரமுநாறுமால். (ருச)

சேவகமணைவனகரிகள்சேனைகள்
காவகமணைவனகலைகள்புள்ளினம்
பூவகமணைவனபொறிவண்டாயிடைப்
பாவக * மணைவனபாடலாடலே. (ருரு)

ஆடகமாமதிலம்பொற்கோபுர
நீடியமண்டபநெறிகொளாவணம்
பாடலொடாடிடம்பிறவும்பாலிநன்
ஞடுளபதிதொறுநண்ணியோங்குமே. (ருகூ)

தெண்டிரையுலகினிற்சீர்பெற்றோங்கிய
மண்டலமெங்கணுமதிக்கநின்றதோர்
தொண்டைநன்னட்டணிசொல்லினமினித்
தண்டமிழ்வளநகர்ததன்மைகூறுவாம்.  (ருஎ)

திருநாட்டுப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம - கசரு.

# திருநகரப்படலம்.



மாவுலகெங்குமலர்ததடமாகத், தாவறுசீர்புனைதண்டகநாடே
மேவியகஞ்சமதாவதின்மேவுந், தேவினையொத்ததுசீர்பெறுகாஞ்சி. (க)

பூங்கமலத்துறைபுங்கவன்மாயோன், பாங்குறைதேவர்பல்லாண்டிசைபரவ
வோங்கியபுள்ளினமூர்ந்தவனுறிலா, லாங்கவர்மேவுமரும்பதமாமே. (உ)

இன்னியறேர்தருமிந்திரன்முதலா, மன்னியவானவர்மற்றுளர்யாருந்
துன்னினராயிடைசூழ்ந்துறைசெயலாற், பொன்னகரென்றுபுகன்றிடலாமால்.()

கின்னரர்சித்தர்கெழீஇயதனுலத், தங்கரில்லவர்தம்பதிபோலும்
பன்னகவேந்தர்பராயினருறலா, லன்னவர்தம்பதியாகியதன்றே. (ச)

எண்டிசைகாவலர்யாவருமீண்டப், பண்டவர்பெற்றபதங்களைமானு
மண்டலமார்சுடர்மற்றையவுறலா, லண்டமுமாகியதப்பதியென்பார். (ரு)

இப்படியாவருமெய்தியிறனு, லொப்பன்போலவுரைத்திடலொப்போ
வப்பதியேயதனுக்கிணையன்றிச், செப்பரிதாற்பிறசீர்கெழுகாஞ்சி. (சு)

* ஆடலுக்கிசையப்பொருள்கொள்ளுங்கால் பாவகம் - அபிநயம்.

மறைமுதல்வோர்தனிமாவினிழற்கீ, ழுறைதருகாஞ்சிதனக்குலமெல்லாம்
பெறுமுயனுயிர்பெற்றிடவன்றோ, னிறுவியதொன்னகரோங்கிசீராமே. (௭)

மேயதொல்லூழியில்வேலைகளேழுந், தூயதனெல்லைசலாவுறநிற்ப
லாயபரஞ்சுடராங்குளதாயு, மாயைகள்சுற்றியமன்னுயிரொக்கும். (௮)

வேறு.

பாழிமால்வரையெறிதிரைவையகம்பலவும்
வாழுமண்டங்கள்சிற்றுருவமைந்துவந்தென்னச்
சூழுமேமியம்புள்ளினமுதலியசுருங்கு
மாழிநீத்தமதெர்த்ததுமதிற்புறத்தகழி. (௯)

மண்டலப்பொறையாற்றுவான்பற்பலவகுத்து
முண்டகாசனமீமிசையிருந்திடுமுதல்வ
னண்டகோளகைதாங்கவோரசுவாததலமதுவும
பண்டுசெய்தெனவோங்கியநெடுமதிற்பரப்பு. (௧௦)

சென்றுசூழ்வெயிலழலெழநகைத்தவன்செழும்பொற
குன்றுதோளுறவாங்கலுமுலகெலாங்குலைந்த
வன்றுநான்முகனனைதையுந்தாங்குகென்றருள
நின்றதென்னவும்பாதலம்புகுந்துமேனீண்ட. (௧௧)

மேகநாட்டிற்கும்விஞ்சையர்நாட்டிற்கும்விண்ணோர்
மாகநாட்டிற்குமலரயனாட்டிற்குமற்றை
நாகநாட்டிற்கும்பாதலநாட்டிற்குநணுகிப்
போகநாட்டியபொன்மதிலனதப்புரிசை. (௧௨)

முதிரைவண்ணமாகவமணிக்குலையும்வான்முளைக்குங்
கதிரினெல்லெனுமபொருளுடனேனவுநாட்டிப்
பொதிவதாகியேமுழுவதுநிரமபுதல்பொருந்தா
நிதியமேயகூட்டாததுநெடியமாமதிலே. (௧௩)

நிறையும்வாரகடல்சுற்றியநேமியுநேமிக்
குறையுளாகியகணிப்பிலாவண்டமுமொப்ப
சிறையில்வான்கிரிநிரையெனச்செவவிதிற்கிளர்ந்து
மறுகெலாந்திகழ்மாளிகைப்பத்திசூழ்மதிலே. (௧௪)

தடுக்குமாற்றலர்நால்வகைப்படையொடுஞ்சாய
முடுக்கும்வாள்கொடுவிதிர்த்திடுமெழுவினுன்முருக்கு
மெடுக்குமெற்றிடுமெறிந்திடுமவிழுங்கிடுமீர்க்கும
படுக்குங்கன்மழைசொரிந்திடும்விற்படையயினும். (௧௫)

உருக்குஞ்செம்பினைவங்கத்தையிழுதொடுமோச்சும்
வெருக்கொணேமிகளெறிந்திடும்வச்சிரம்வீசி
யிருக்குமின்றிடுங்குப்புறுஞ்செறுநரையிகலி
நெருக்குந்தாழ்ந்திடுமுலகளந்தோனெனநிமிரும். (௧௬)

பீடுதங்கியபணைமுரசியம்பிடும்பிடிக்குங்
கோடுமோர்த்திடுந்துடிகளுமொலித்திடுங்கொட்புற்
றூடேயுயர்புள்ளையுமெறிந்திடுமரண்மே
லோடுமீளுமக்கதிரையுந்தடுப்பபோலுந்தம. (௧௭)

சூலம்வீசிடேக்தோமரம்வீசிடுஞ்சுடர்வே
லாலம்வீசிடுஞ்சுடுமணல்வீசிடுமெளப்பில்
சாலம்வீசின்றீர்த்திடுமகழியிற்றள்ளுஞ்
சிலம்வீசியபாவிடமாமெனத்திரியும். (௧௮)

திகழும்வெங்கனலுமிழ்ந்திடுமொன்னலர்செலுத்தும்
பகழிமாரியைவிழுங்கிடும்பறவையிற்படரு
மிகழுநாவையுமனத்தையுமெறிந்திடுமென்றாற்
புகழுசீரவன்றமமதின்மேலுறும்பொறிகள். (௧௯)

பூணினேர்தரும்பொன்னவாம்புரிசைமேற்புனைந்த
வாணிலாநெடுந்துகிலிகைபெயர்வனமலரோன்
சேணுலாயதீஞ்சுடரெனுங்கோபுரசிகரங்
காணவேபலவெகினமாய்த்தேடல்போற்கவினும். (௨௰)

ஈர்த்தமாமதிசசியென்பதுலகுளோரிட்ட
வார்த்தையல்லதுசரதமோகடிமதின்மருங்கிற்
றூர்த்தகேதனமவன்மணிமேனியிற்றுடக்கப்
போர்த்தவெண்ணிலாக்கஞ்சுகம்பீறியபோலாம். (௨௧)

காட்சிமேயவக்கடிமதிற்கதலிகைகாணூஉச்
சூட்சிநாடியபரிதியுங்கீழுறத்தொடர்ந்தான
மாட்சிதேய்ந்திலன்வரன்முறைமனப்படுமதியோ
தாட்சிசெய்யினுமனையாபாலணுகுமோதவறு. (௨௨)

புடைபரப்பியபுரிசையினாற்றிசைப்புறத்துந்
தடநிலைப்பெருங்கோபுரமுள்ளதழனிறத்துக்
கடவுளுச்சியின்வதனமொன்றின்றியேகாண்பா
னடைதலுற்றிடுதிசைமுகம்பொருவினவவையே. (௨௩)

என்றுமாமதிக்கடவுளும்பிறருமீரியல்பூங்
குன்றமேயெனக்கீழ்த்திசையதனெடுங்குடபா
னின்றகோபுரங்கடக்கலாவாய்தலினெறியே
சென்றுசென்றுபோயப்புறததேகினர்திரிவார். (௨௪)

தீபுரத்திடைமடுத்தவனுணையாற்சிறந்த
மாபுரத்திடைவான்றொடுகடிமதில்வரைப்பி
லாபுரத்தவாய்க் * கிளர்ந்தவேயமைத்தவன்றென்னக்
கோபுரத்திடைக்கொழுந்துபோலோங்கியகொடிகள். (௨௫)

மாடமாளிகைமண்டபங்கோபுரமறுகிற்
கோடிகோடியின்மேலுமுண்டன்னதார்குணிப்பா
ரங்கேதனத்தளவையுமன்னதேயகல்வா
னூடுபோகலாதலமரும்பறவைகளொப்ப. (௨௬)

சிகரமால்வரையன்னமாளிகைதொறுஞ்சிவணு
மகரதோரணமாடிகள்பலவுறவயங்க
விகலும்வெய்யகோளிரண்டுமோயொருவடிவெய்தி
யகல்விசும்பிடைக்கதிர்களின்புறமறைத்தனைய. (௨௭)

---

* ஆபுரத்தவாய் - புரத்தோடுபொருந்தினவாய்.

செம்பொனிற்புரிசையுடைத்திசெயந்தேக்க
லம்பரத்திடைவழியுறவீற்றுவீற்றுருக்
தம்பமுற்றலமருவனசெய்யகோற்றலையிற்
பம்பரத்துருத்திரிப்புறக்கறங்கியபடிய. (௨௮)

பளிங்கினாற்செய்ததெற்றியின்றலைமிசைப்பனிதோய்
விளங்கொளித்திலஞ்செம்மணிகுயிற்றியவைப்பிற்
றுளங்காற்றியபொன்மணிப்பாலிகைதொறுவ
குளங்கொடாமரைமலர்ப்பொகுட்டரியினகுவிக்கின். (௨௯)

ஓவியத்தியன்மரகதத்தலத்தினதும்பர்த்
தாவிலாடகத்தலமிசைநிதிலத்தலமேற்
கோவைபட்டசெம்மணித்தலம்பொலிதலாற்கொண்மூ
மூவகைக்கதிரவியலிடந்தெரிப்பதம்மூதூர். (௩0)

கன்னல்வேளினுமைந்தருமாதருங்கலந்து
மன்னுநித்திலமாளிகைபபதியின்மாடே
பொன்னவாஞ்சிறைமணிமயிற்குழாத்தொடும்போகு
மன்னமாமதிமுகிலிடைநுழைந்துபோயினைய. (௩௧)

தண்டமாகி * யேபுவியுறுபணியெலாந்தழுவி
யண்டமீமிசையிரவியுமதியுமடைதல்
கண்டுமாளிகைச்சூளிகைமருங்குபோய்க்கவர்வான்
கொண்டசீற்றத்தினுவெறிந்தனபூங்கொடிகள். (௩௨)

தேனைவென்றசொல்லாரொடுமைந்தருந்திளைக்கு
மீனவாவிபோலவியனபடிகத்தினல்விளங்குந்
தானமீமிசைத்தயங்கியமுழுமணித்தலந்தான
வானகினறிடுதெய்வதமானமேமானும். (௩௩)

தேவர்தானவர்முனிவராசித்தரோடியக்கர்.
வாவுகின்னரருவணாகந்தருவாமறறுள்ளோ
ரேவருநதமதகன்பதியிகந்தவணெய்தா
மேவுகின்றனதனித்தனியிருக்கைகணமிகுமால். (௩௪)

தூங்குகுண்டிகையருகுறக்காலெதிர்தூண்டி
யோகநாசிமேல்விழிமுறைநயனங்களுறுத்தி
யாங்கொராசனத்திருந்தரனடியகத்தடக்கிப்
பாங்கர்மாதவம்புரிகுநாசாலைகள்பலவால். (௩௫)

யாகோன்மறையந்தணாவேள்விகள்பயில
மூடுதண்புகையண்டமுங்கடந்தனமுன்னக்
தேடுகின்றதோர்பரஞ்சுடாமீட்டுமித்திறத்தா
னீடுகின்றதோவென்றுநான்முகத்தனுங்கினைய. (௩௬)

நான்மறைக்குலத்தந்தணர்கலையறுகாட்சி
யூன்மறைத்திடுமுயிரெனவோம்பியவொழுக்கார்
மேன்முறைக்கணேரைம்புலப்படிற்றினைவென்றோர்
வான்மறைத்திடுமாளிகைவீதியுமலிந்த. (௩௭)

* தண்டமாகி - தண்டாகாரமாய்.

ஏவுபல்படைவலியினர்வெஞ்சமயிகத்தோர்
நாவினன்மறைபயில்புலவர்களுறுகலத்தாற்
கோவுநீணகர்மறுகெலாங்குருமணிச்சிகரத்
தேவுநீணகர்வீதியமையேபோல்வதுதெரியின். (௩௮)

அணியினோங்கலும்பன்மணிக்குவால்களுமாரவந்
தணிவிலாடகக்குவைகளும்பிறவுமுன்றலைப்பக்
கணிகளானூறுகற்பகமனையனகாட்சி
வணிகராவணத்தெற்றிகள்வயின்றொறும்வயங்கும். (௩௯)

கங்கைமாமகடொல்பெருங்குலத்தர்காசினியின்
மங்கையாளருள்புரிதருமகாரெனும்வழக்கோர்
செங்கண்மாணிகர்வெறுக்கையரயன்பதஞ்சேர்ந்தோர்
துங்கவீதியுமேனையர்மறுகொடுந்தொகுமே. (௪0)

கண்டுகேட்டவையுண்டுயிர்த்துற்றறிகருவி
கொண்டவைம்புலனொருங்குறநடாத்தியகொள்கைத்
தொண்டர்கூட்டமும்விழிவழிப்புனலுகத்தொழுங்கை
யண்டர்கூட்டமுமாலயந்தொறுந்தொறுமருவால். (௪௧)

ஆதிநான்முகனெகினத்தினடிகளுமமலன்
பாதியாளன்றனுவணத்தினடிகளும்பணிக்கார்
நாதனூர்தருதந்தியினடிகளுநாளும்
வீதிவீதிகடொறுந்தொறுங்காண்வரவிளங்கும். (௪௨)

மாவினோதையுங்களிற்றினதோதையுமருங்கின்
மேவுதேர்களினோதையுங்கவிகையாய்விரிந்த
காவுசூழ்தருமனனாசீரோதையுங்கறங்குந்
தேவதுந்துபியோதையுமிறுதிலதெருவு. (௪௩)

நாட்டியச்செயல்யாவையுஞ்சிவனதுநடனம்
பாட்டிசைத்திறம்யாவையுமன்னதேபதியோர்
கேட்டிருப்பனயாவையுமவனிசைக்கேள்வி
கூட்டம்யாவையுமன்னவன்றொண்டுசெய்கூட்டம். (௪௪)

பானுறுந்ததியிழுதுதேனிருக்கைகள்பலவுங்
கோலமாகுழக்ககரிடையவையுறைகூவில்
போலுமாயிடைமாதவத்தவளறம்புரியுஞ்
சாலையாயினவரம்பிலாவடிசிலஞ்சாலை. (௪௫)

அளவில்பற்பகறம்மினுமீங்கியோரடுத்த
கிளைஞர்வந்துழியெதிர்தழீஇநன்னயங்கிளத்தி
யுளமகிழ்ந்தவர்க்கூட்டுமின்னடிசில்போலுறவோ
ரெளிதினுங்கிடவழங்குமாலோதனவிருக்கை. (௪௬)

வேறு.

மாடமாளிகைவாயிறொறுந்தொறு, நீகேண்ணுளராமெனநின்றின்
றூடுசித்திரப்பத்தியமாரு, நாடிநோக்கியக்கிடப்பட்டதே. (௪௭)

எல்லைதீர்ந்தவிராவிகடேண்டிய, செல்வியாழிநிதிக்கண்மாறுமான்
மல்லன்மாநகர்மைந்தர்களூர்தரும், பல்வகைச்சுடர்ப்பண்ணுறுதேர்களே. (௪௮)

வெள்ளையாதிவியன்கவியாவையுந், தெள்ளிதின்மொழிதென்கலையேமுத
லுள்ளபல்கலையோதுகின்றார்களும், வள்ளியோர்களுமன்றுதொறீண்டுவார். (௪௯)

இகலும்வேழத்தெயிற்றினையெய்த்திடு, நகிலினார்கணறுங்குழன்மேவிடு
மகிலினாவியுமாய்மணிமாடமேன், முகிலும்வேற்றுமையின்றிமுயங்குமே. (௫௦)

பண்ணினோசையும்பானலைவென்றிடுங், கண்ணினார்கள்களிநடவோசையுந்
தண்ணரம்பியறந்திரியோசையும், விண்ணுளோர்க்கும்விருந்தெனலாயவே. (௫௧)

அணிகுலாவுமரம்பையர்காளையர், நணியதோளைநயப்புறநாகரும்
கணிகைமாதரைக்காமுறமேவலான், மணிகொள்காஞ்சிமதனரசாயதே. (௫௨)

கூற்றிற்செல்லுங்கொலைக்கரித்தானமு, மேற்றிற்செல்லுமிடையர்தஞ்சேரியி
னூற்றிற்செல்லுமொண்பாலுமுடனுறா, வாற்றிற்செல்லுமவ்வாவணந்தோறுமே.

வேறு.

பண்ணுளர்நரம்பியல்பாணிக்கேற்றிட, வெண்ணுளகணிகையரினத்தொடாடலுங்
கண்ணுளராடலுங்காமனுடலும், விண்ணுளராடலும்வெறுப்பமேவுமே. (௫௪)

அரிவையர்மைந்தர்களணிந்துநீத்ததே, திருமகள்காமுறுஞ்செல்வமாகுமேற்
கருதருநான்முகக்கடவுட்காயினும், பொருவருநகர்வளம்புகலற்பாலதோ. (௫௫)

வேறு.

மாறாய்ச்சிறார்களெறிந்தாடியமான்மதத்தாற்
சேறாய்ப்பொற்சுண்ணத்துலர்வாய்ப்பனிநீர்கள்சிந்த
வாறாய்ப்பளிதத்தினில்வாலுகத்தாறுமாகி
வேறாய்ப்புவியோருணர்வாமெனமேயவீதி. (௫௬)

தண்டாமரையேந்தியவானவன்றன்னை * யொத்தா
னெண்டாவியமாமதனேந்திண்முயாரிலஞ்சி
வண்டாமரைபூத்தனவொத்தனர்வந்துசெந்தே
னுண்டாடியதேன்களையொத்தனரோங்கன்மைந்தர். (௫௭)

ஏமங்குலவுமுரசங்களிரட்டவாசத்
தாமங்கமழ்பந்தரினூடுதமக்கியன்ற
வோமங்களின்மாமணஞ்செய்தனரூர்குலாவு
மாமங்கலமேயுலப்பின்றிமலிந்ததன்றே. (௫௮)

மாகந்திகழுமகிலாவிகொண்மாடமீதிற்
பாகின்மொழியாரிளமைந்தர்தம்பாலினோச்சப்
போகுஞ்சிவிறிப்பனிநீர்புறஞ்சிந்தவென்று
மேகஞ்சிதறும்பெயலென்னவிளங்கும்வீதி. (௫௯)

வன்மாமுலையேந்தியமங்கையர்மைந்தரானோர்
தொன்மாடமீதிலெறிந்தாடுபொற்சுண்ணமோடு
கன்மாமலர்த்தாதுவிசும்புறநண்ணமேகம்
பொன்மாமுகிலாய்ப்பனிச்சிற்பொழியுமன்றே. (௬௦)

---

* தண்டாமரையேந்திய வானவன் என்றது சூரியனை. இவன் இரண்டு புயங்களிலும் பொருந்திய நாளத்தோடு கூடிய இரண்டு வெண்டாமரைமலர்களைப் பிடித்த இரண்டு கைகளையுடையவனென்றறிக.

தாராற்பொலிபொற்புயவீரர்தவாதசெல்லுந்
தேரார்ப்புநால்வாய்க்கரியார்ப்பும்வெஞ்சேனையார்ப்பு
மேரார்ப்புமிக்கபதிமானவரீண்டொர்ப்புங்
காரார்ப்பும்வேலைக்கடலார்ப்புங்கடுத்தவன்றே. (௬௧)

வானோக்கிநிற்குமுலகென்னவுமன்னவன்செங்
கோனோக்கிநிற்குங்குடியென்னவுங்கோதிலும்ப
ரானோர்க்குநாகருலகோர்க்குமவனியோர்க்கு
மேனோர்க்குநாடுநகராகியிருந்ததவவூர். (௬௨)

கோடுநெறியுமிகலும்மனக்கோட்டமாய
கேடும்பிணியுமுதலாகியகேதம்யாவு
நீடும்பரிவோடுறைவாரிடைநீங்கலாலே
வீடுந்நகரேயெனிலென்னினிவிளம்பவற்றே. (௬௩)

வேறு.

ஏமமேதருவாச்சினைகளுமனைத்தாவிலைதளிர்செய்யபூந்துகிராக்
காமர்பூமணி * யாவுநித்தொருகாஞ்சிகண்ணரோரைவர்முன்கண்டு
தாமினிதருளும்பொய்கையின்மருங்கேதன்னிழல்பிரிகிலாதுறலாற்
பூமியெண்காஞ்சிமாபுரமெனும்பேர்புனைந்ததப்பொருவிலாநகரம். (௬௪)

சுருதியானுறங்குமிராத்தொறுமுடிவிற்றுஞ்சியவூழிகடோறும்
விரையவன்றுலகமழித்திடுங்கடலவ்வியன்பதியெல்லையுட்சிறிதும்
வருவதையஞ்சிப்புறந்தனிற்சூழவந்தொருசத்திகாத்திட்டலாற்
பிரளயசித்தென்றொருதிருநாமம்பெற்றதக்காஞ்சியம்பேரூர். (௬௫)

கயிலையிலரனையம்மைமபூங்காவிற்கண்களைமூட்டவுமுலகிற்
பயிலுறுகொடியவினையிருளகலும்பான்மையால்வந்துமாநிழற்கீ
ழியலொடும்பரமன்பூசனையியற்றியிரைத்தெழுகம்பைகண்டஞ்சிச்
செயன்முறைதழுவக்குழைந்தருள்செய்யச்சிவபுரமானதச்சீரூர். (௬௬)

விண்ணுறைமகவான்கரிபுரிதவத்தால்வெற்பதாய்த்தனைமுன்றாங்கு
புண்ணியகோடி † யிபகிரிமிசையேபொருவிலாவேதியுத்தரத்தி
லண்ணலங்கமலத்திசைமுகன்வேள்வியாற்றலுமவற்கருள்செய்வான்
கண்ணன்வந்திடலால்விண்டுமாபுரமாங்கட்டுரைபெற்றதக்காஞ்சி. (௬௭)

கார்த்திருமேனித்தண்டுழாய்மௌலிக்கண்ணனுங்கமலமேலயனு
மார்த்திடுந்தரங்கப்பகீரதிமிலைந்தவவிர்சடையமலனுமாகு
மூர்த்திகடத்தமுலகமேபோலமுன்னியப்பதியமர்செயலாற்
சீர்த்திரிமூர்த்திவாசமாகியபேர்சிறந்ததக்கச்சிமாநகரம். (௬௮)

தரணிகண்முழுதும்புரிதரும்விரிஞ்சன்றன்மனம்புனிதமாம்பொருட்டாற்
றிருமகள்கணவன்கமடமாய்ப்பூசைசெய்திடுகச்சபாலயத்தி
லரனடிபரவியருச்சனையியற்றியங்கண்வீற்றிருந்திடுநெறியால்
வரமிகுபிரமபுரமெனவொருபேர்மன்னியதன்னதோர்நகரம். (௬௯)

வீடுறுமுத்திபோகமென்றவற்றில்வெஃகியவெஃகியாங்கென்றுங்
கூடுறுதவத்தால்வழிபடுவோர்க்குக்கொடுத்திடுந்தன்மையாற்காம
பீடமென்றொருபேர்பெற்றதுமலர்மேற்பிரமனேமுதலினோர்தவத்தை
நாடினர்செயலாற்றபோமயமெனும்பேர்நணியதுகச்சிமாநகரம். (௭௦)

* காஞ்சிப்பூ நீலநிறமாதலால், மணி என்பதற்கு நீலமணியெனப் பொருள்கொள்க.
† புண்ணியகோடி - வரதராசப்பெருமான் சிவலிங்கபூசை செய்த ஆலயம்.

சகங்களோர்மூன்றிலும்பெரிதுணைநித்தராணியித்தராணிமாநகர்க்குண்
மிருந்தருமத்தின்பலத்தினைத்தரலால்வியன்சகற்காரமென்றொருபேர்
புரும்பரிசுடையதட்டசித்திகளும்பொருவின்மாதவர்க்கருடிறத்தாற்
பகர்ந்திடுஞ்சகலசித்தியென்றொருபேர்படைத்ததுகச்சியம்பதியே. (எக)

உன்னருங்கயிலைநாயகனுமையையொருபகனீலியென்றுரைப்ப
வன்னவடனதுகாளிமங்கழிப்பவங்கதிலையைவந்தெழலு
முன்னவனவளையிந்நகரிருக்குமுறைபுரிந்தருளெனவிடுப்பக்
கன்னிகாதிடலாற்கன்னிகாப்பென்னுங்கவின்பெயருடையதுகச்சி. (எஉ)

அரியதோர்கயிலைக்கணங்களிலொருவனுனதுண்டீரன்மாலதிபாற்
பெருமயல்கொள்ளச்சிவனிவளொடுநீபிறந்திருந்தின்பமுற்றெம்பால்
வருகெனநிலமேன்மன்னர்பாற்றோன்றிமற்றவளோடுசேர்ந்தரசு
புரிதருசெயலாற்காஞ்சிதுண்டீரபுரமெனப்புகலநின்றதுவே. (எங)

தன்னையேயருச்சித்திடமலர்க்கேகித்தடந்தனிற்கராவின்வாய்ப்பட்டுத்
தன்னையேநினைந்துதன்னையேயழைத்ததந்தியைக்காத்தவொண்புயமா
றன்னையேவேண்டித்தழன்மகஞ்செய்யத்தண்டகற்கெண்டிசையரசு
தன்னையீந்திடலாற்றண்டகபுரமாந்தனிப்பெயர்பெற்றதத்தனியூர். (எச)

அழகியவயோத்திமதுரையேமாயையவந்திகைகாசிநற்காஞ்சி
விழுமியதுவரையெனப்புவிதன்னின்மேலவாய்வீடருள்கின்ற
வெழுநகரத்துட்சிறந்ததுகாஞ்சியென்றுமுன்னெம்பிரானுமைக்கு
மொழிதருநகரந்நகரெனிலதற்குமூவுலகத்துநேருளதோ. (எரு)

பங்கமில்வசிட்டன்பசுப்பொழிபாலிபடர்ந்திடுமுத்தரஞ்சேயைச்
செங்கமலத்தோன்முதலினோராட்டுந்திருநதிதென்றிசைச்செல்லு
மங்கவற்றிடையேகம்பமேமுதலாமாலயத்தந்தருவேதி
கங்கைகாளிந்தியிடைப்படுந்தலத்தின்மேற்படுங்காஞ்சிமாநகரம். * (எசு)

தொல்லையோர்பிரமன்றுஞ்சியகாலத்தோன்றியநீத்தமேலரிபோற்
செல்லுமார்க்கண்டன்கரத்தினிற்கம்பைசேர்ந்ததோர்தனிப்பெருஞ்சூத
மெல்லிலைநீரிகத்துவளர்தலுமருப்பொன்றெய்தவக்கொம்பர்தொட்டிழிந்து
நல்லுமைகுறிக்கொண்முதல்வனைவணங்கிநயந்தவணிருந்ததந்நகரம். (எஎ)

சமையமாறினையுந்தாயெனவளர்த்துச்சராசரவனுக்களுய்ந்திடவா
னமைதருமெண்ணான்கறத்தினைப்போற்றியாதிபீடத்தில்வீற்றிருக்கு
முமையமர்காமக்கோட்டியைக்கதிரோனுடுபதிகணங்கள் † சூழ்தரலா
லிமையவர்தமக்குந்திசைமயக்குறுதவியல்புடைத்தந்நகரென்றும். (எஅ)

பாவமோர்கோடிபுரியினுமொன்றாம்பரிவினிற்றருமமொன்றியற்றி
னேவரும்வியப்பக்கோடியாய்மல்குமின்னதோர்பெற்றியைநாடித்
தேவர்கண்முனிவர்தம்பதம்வெறுத்துச்சிவனருச்சனைபுரிந்தங்கண்
மேவினர்தவஞ்செய்திருத்தலாற்காஞ்சிவியனகர்ப்பெருமையார்விரிப்பார். (எக)

---

* சேயாற்றுக்கும் பாலியாற்றுக்கும் நடுவேயுள்ள அந்தர்வேதியாகிய காஞ்சீபுரம், கங்கையாற்றுக்கும் யமுனையாற்றுக்கும் நடுவேயுள்ள அந்தர்வேதியாகிய காசியினுஞ் சிறந்ததென்பது கருத்து. அந்தர் - நடு. வேதி - சமபூமி.

† கணம் - நக்ஷத்திரம்.

கங்கைதன்சிறுவனருள்பெறுவேதாக்கண்பண்டகொண்டகாலையினு
மங்கவன்றுஞ்சும்பொழுதினுங்கீஞ்சியழிவுறாதிருந்தபாண்மையினாற்
றுங்கவெண்பிறையுமிதழியுமரவுஞ்சுராதிபர்முடிகளுமணிந்த
மங்கையோர்பங்கன்படைத்ததேயன்றிமலரயன்படைத்ததன்றதுவே. (௮௰)

அரியபல்லிசையுமறைபுனல்கங்கையருஞ்சிலையிலிங்கமங்குறைவோர்
சுரர்தருவனைத்துங்கற்பகமின்பந்துய்ப்பதுவேள்வியூண்பூசை
யுரைசெபநடத்தல்வலம்வருந்தன்மையுனனலேதியானமவீழ்ந்திடுதல்
பரனடிவணக்கமாவதுகாஞ்சிப்பதிக்கலாலெந்நகர்க்குளதே. (௮௧)

கணமுகில்செக்கர்போர்த்தெனுங்கரியகஞ்சுகச்செந்நிறக்கடவுண்
மணிசுடர்வயிரக்கிம்புரிமருப்புமால்கரிமுகததவன்வருசூர்
துணிபடவெறிந்தவேலவனயன்போறநூரேன்றியசாத்தன்மால்விசயை
யிணையில்சீர்க்காளிமுதலினோரென்றுமினிதுகாததிடுவதநகரம. (௮௨)

அறுசமயத்திற்கடந்தசைவத்தினன்றிவீடிலதெனதெளிந்து
பிறரறியாதுதொன்மைபோலிருந்துபிஞ்சகனமீதுகனமலரா
லெறிதருதேரரன்பர்தங்கலிங்கமெழிலிகணனைததலுஞ்சிரதனை
முறைபுரிசிலைமேன்மோதினோர்முதலோர்முததிபெற்றுடையதம்மூதூர. (௮௩)

ஈசனதருளாற்கயிலையைநீங்கியிமையமாமயிலறமபுரிவான்
காசியிலிருந்துமுடிவுறாதேகிக்கனகமாநீழலிற்பரனைப்
பூசனைபுரிந்துகமபைகண்டஞ்சிப்பூண்முலைவளைக்குறிப்படுத்தி
யாசிலாவருள்பெற்றின்னுநோற்றிடலாலனையகாஞ்சிக்குநேரதுவே. (௮௪)

ஆருயிர்முழுதும்வீடுபெற்றுய்வானறம்புரிசாலையதணித்தாப்
பேரரவிறைவன்றவத்தினமுனிருந்தபிலத்திடைக்கோயில்கொண்டெனறும்
பூரணிநோற்றுவழிபடவனையாள்பூசனைகொண்டியாவர்க்குங்
காரணமானபரசிவனனந்தகலையொடுநிலையதக்காஞ்சி. (௮௫)

இன்னமுமுமையாளோற்றிடுமாங்கேயிறப்பினும்பிறப்பினுநிலையாய்
மனனியேயுறினுமொருகணமேனும்வைகினுமறைகளாந்தனிமா
நனனிழலிருந்தபரஞ்சுடர்புரியுநடந்தரிசிககினுமதனை
யுன்னினுமுத்திவழஙகுகாஞ்சியைப்போலுலகில்வேறொருநகருளதோ. (௮௬)

கண்ணுதற்பரனுந்தண்டுழாய்மவுலிக்கடவுளுநகமலமேலயனும்
விண்ணவர்க்கிறையுங்கொற்றமாலினியுமேலைநாட்பிறந்ததொன்மனுவுந்
தண்ணளிபுரிதண்டீரனுநள்ளார்சமர்த்தொழில்கடந்ததண்டகனு
மண்ணலங்கரிகால்வளவனும்பிறருமரசுசெய்தளித்ததந்நகரம். (௮௭)

வேலைகுழுலகினெங்கணுமிருபால்வீட்டினைவெஃகினோர்க்குதவு
மாலயநூற்றெட்டெண்ணமற்றவற்றுளெம்முகப்பரஞ்சுடரமருங்
கோலமார்கிலயமிருபதுமாயோன்கோநகரெட்டுமாக்குழுமி
நாலெழுதானமுள்ளவந்நகர்போலும்புகழ்நகரமற்றெவனோ. (௮௮)

கச்சபாலயமேகம்பமேமயானங்கவின்கொள்காரோணமாகாளம்
பச்சிமாலயநல்லநேகபங்கடம்பைபணாதரமணீச்சரம்வராக
மெய்ச்சுரகரமுன்னிராமம்வீரட்டம்வேதநூபுரமுருத்திரர்கா
வச்சிரணகரம்பிரமமாற்பேறுமறைசையாஞ்சிவாலயமிருபான். * (அக)

கரிகிரியட்டபுயந்திருவெஃகாக்கருதூரகஞ்சகாளாங்கஞ்
சுரர்புகழ்கிராகாரக்கிலாத்திங்கட்டுண்டநற்பாடகமினைய
வரிதிருமுற்றமெட்டவை † யன்றியறுபதினாயிரநிலயம்
பரசிவன்சத்திகுமரர்மால்புறதேதோர்பலரும்வீற்றிருப்பவப்பதியே. (௬0)

ஒன்றுதிவிளக்கமிரிடமொருமூன்றுற்றிடுதெற்றிநான்கரண
நின்றிடுதருவைந்தாறுபுள்ளேழுநெடுநதியெண்பொதுவொன்பான்
மன்றலம்பொய்கைவியனசிலையொருபான்மன்றவைபத்தின்மேலொன்று
நின்றமர்க்கொழுகுநெறியிலற்புதமாய்நிகரிலாதுறையுமந்நகரம். (௬க)

சிறந்திடுமதியுமிரவியுமாழ்கச்செகமெலாந்தனதொளிபரப்பி
யறம்புரிகாமக்கோட்டிமந்திரத்துளம்மைவாழ்பிலத்தினுளநியா
துறைந்திடுதூண்டாவிளக்கமொன்றுதித்தவுயிர்தொகையிறந்திடாவிடமொன்
றிறந்திடுமுயிர்கள்பிறந்திடாவிடமொன்றெம்பிரானிருந்தவீரிடமே. (௬௨)

தோற்றுயிர்க்குணவுநல்குமோர்தெற்றிசொற்றவையுதவுமோர்தெற்றி
தேற்றுசொன்மூகர்க்களிக்குமோர்தெற்றிதெற்றிமூன்றிவைநகரெல்லை
யீற்றினிற்கீழ்பாலளக்கருந்தென்பாலியற்பெரும்பெண்ணைநன்னதியு
மேற்றிசைப்பவளசயிலமும்வடபால்வேங்கடவெற்புநான்கரணே. (௬௩)

மறைகளினுருவாய்ப்பொன்மலர்தனிமாமலரொடுகாயிலாதென்றுஞ்
செறிதருபலமகளுதவிநயகினாக்குச்சித்திகள்வழங்குறுமெகினம்
வெறிமலாபலவுமலர்ந்திடுமேதூகமவிண்ணிணைநோக்குமோரதி
நறுநிழல்பிரியாதிருநதேதோர்காஞ்சிநன்னகாதன்னிலைந்தருவே. (௬௪)

உம்பருண்பகிருஞ்சாதகமணிகளுதவிடுமனனமூவுரைதருக்
கொம்புறுகின்னையலகுசொல்லாந்தைகுறைபெறிறகூவுருக்கோழி
யிமபரிறபாவநதுடைத்திடுநேமியிவையறுபுள்ளௌழுநதிதான்
கம்பைநற்பமலைமஞ்சுணீரபிசசிகலிச்சிபொன்மண்ணிவெஃகாவே. (௬௫)

குரைபுனல்வேட்டோர்க்குதவியேதிரியுங்கூவலம்பொதுக்குறுமுயல்போய்க்
கரிதொடர்பொதுவேழிசையுறுபொதுமால்கண்டுயின்றிடுபொதுவேறோ
ருருவுசெய்பொதுவோரபுறநின்மாமுழவமொலித்திடும்பொதுத்திசைமயக்கம்
புரிதருபொதுவென்னம்மைநோற்றருளும்பொற்பொதுவிவைகளெண்பொதுவே.

---

* சிவாலயம் இருபது:—கச்சபாலயம், திருவேகம்பம், திருமயானம், திருக்காயாரோகணம், மகாகாளேசம், திருமேற்றளி, அநேகபேசம், கடம்பை, பணாதரேசம், மணீசம், வராகேசம், சுரகரேசம், பரசுராமேசம், வீரட்டகாசம், வேதநூபுரம், உருத்திராகா, இந்திராலயம், சதுர்முகசங்கரம், திருமாற்பேறு, திருவோத்தூர்.

† விஷ்ணுவாலயம் எட்டு:—அத்திகிரி, அட்டபுயம், வெஃகா, ஊரகம், சகாளாங்கம், கிராகாரம், சந்திரகண்டம், பாடகம்.

முன்னுறுபிணிகண்மாற்றிடும்பொய்கைமுதல்வர்கண்முடிவுறுங்காலைச்
செந்நிறமாகும்பொய்கைமுக்காலந்தெரித்திடும்பொய்கைகண்ணுதலோன்
றன்னடிகாட்டும்பொய்கைவேண்டிய துதந்திடும்பொய்கைமெய்ஞ்ஞானம்,
பொன்னிறஞ்செல்வம்வசீகரந்தருநாற்பொய்கையோடொன்பதாம்பொய்கை. ()

விடந்தனையகற்றுமொருகலாருயிர்கண்மெய்ப்பிணிமாற்றிடுமொருக
லடைந்தவரெல்லாமிமையவராகவளித்திடுமொருகல்வெம்படையாற்
றடிந்திடவேறாய்த்துணிபடுமுடலஞ்சந்துசெய்வித்திடுமொருக
னெடும்படைவரினுமவையிரிந்தோடநிலைபெறீஇநிற்குமாங்கொருகல். (௯௮)

துஞ்சினர்தம்மையெழுப்புமாங்கொருகன்றொல்வழக்கறுத்திடுமொருக
லெஞ்சலினிதியங்கெடுத்துளோர்வினவிலீதெனக்காட்டிடுமொருகல்
விஞ்சியவினைகடீர்த்திடுமொருகல்வேந்தருக்கரசியலுதவித
தஞ்சமதாகநின்றிடுமொருகறக்ககல்லையிரண்டவையே. (௯௯)

அயன்மனைச்சென்றோகணவரைப்பிழைத்தோரடிகளையிகழ்ந்துளோரனைற்
றுயருறுமுகையாக்குமோர்மன்றஞ்சோராமுன்சுழலுமோர்மன்றம
வியனிறம்பலவாத்தோன்றுமோர்மன்றம்விஞ்சைகள்வழங்குமோர்மன்ற
மயல்புரிகின்றபொழுதொடுதிசையின்மயக்கறதெளிக்குமோர்மன்றம். (௧௦௦)

நாகரூருயகுமபிலததந்தாமன்றநவமணியுதவுமோர்மன்ற
மாகாபேரமிர்தமிருக்குமோர்மன்றம்வடிவினைமறைப்பதோர்மன்ற
மேகநின்றருதுபொழியுமோர்மன்றம்வியன்பகலகங்குலாக்கஙகு
லாகியபகலாவிருப்பதோர்மன்றமையிரண்டொன்றுமன்றவையே. (௧௦௧)

ஈங்கிவையன்றிச்சிலைகளுந்தருவுமிடங்களுநகூவலுநதியும
பாங்குறுகுளனுந்தீர்த்தமுமபிலமும்பழனமுஞ்சோலையும்பிறவு
மாங்கவையநந்தகோடியுண்டோரொன்றளவிலற்புதத்தனவவற்றைப்
பூங்கமலத்தோன்சுருக்கறவிரித்துப்புகலினுமுலப்புறவற்றே. (௧௦௨)

தோட்டலர்வனசத்திசைமுகன்முனனஞ்சொற்றனனவனடிவணங்கிக்
கேட்டருள்சனகன்வியாதனுக்குரைப்பக்கேடில்சீர்வியாதனங்குணர்ந்து
மாட்டுறுசூதன்றனக்கியம்புதலுமற்றவன்முனிவரர்க்கிசைதத
பாட்டினிலடங்காக்காஞ்சியின்பெருமைபகர்ந்திடத்தமியனுக்கெளிதோ. (௧௦௩)

வேறு

சொற்படுமிலையகாஞ்சிதொன்னகரதற்குநாப்பண்
கற்புறுமிமையவல்லிகருணையாலவைகிநோற்கும
பொற்புறுகாமக்கோட்டமபோலவேயதற்கோசாரி
லெற்படுகுமரகோட்டமென்றோராலயமுண்டன்றே. (௧௦௪)

ஆவதோர்குமரகோட்டமதனிடையரனகண்வந்து
தாவுடையெஃகமொன்றாற்சூர்முதறொலையசசெற்றுத
தேவாவெஞ்சிறையைமாற்றிச்சேண்மகபதிக்குநல்கி
மேவியகுமரமூர்த்திவியத்தகவுறையுமாதோ. (௧௦௫)

மேவருங்கூடன்மேலைவெற்பி * னிலலைவாய்தன்னி
லாவினன்குடியினல்லேரகந்தனிற்றணிகையாதிப்
பூவுலகுள்ளவெற்பிற்பொற்புறுமேனைவைப்பிற்
கோவில்கொண்டருளிவ்வருங்குமரகோட்டத்துமேயோன். (௧௦௬)

* கூடன்மேலைவெற்பு - திருப்பரங்குன்று.

வச்சிரமெடுத்தசெம்மல்வைகியதுறக்கத்தன்னி
லச்சுதன்பதத்துக்கப்பாலானதன்பதத்தில்விண்ணோர்
மெச்சுறுகந்தவெற்பில்வீற்றிருந்தருளுமாபோற்
கச்சியிற்குமரகோட்டங்காதலித்தமருங்கந்தன். (௧௦௭)

ஈண்டுளதரணிமுற்றுமெல்லைதீர்வானவைப்பு
மாண்டகைமகவான்சீருமம்புயன்முதலோர்வாழ்வு
மாண்டிடல்பிறத்தலின்றிமன்னியவீடும்போற்றி
வேண்டினர்வேண்டியாங்குவேலவன்புரிந்துமேவும். (௧௦௮)

கொண்டலையளக்குநோச்சிக்குமரகோட்டத்துச்செவ்வேள்
கண்டிகைவடமுந்துநீக்கரகமுங்கரத்திலேந்திப்
பண்டையிலயனைமாற்றிப்படைத்தருள்வேடந்தாங்கி
யண்டர்களெவரும்போற்றவருள்புரிந்தமர்ந்தானன்றே. (௧௦௯)

ஆயதோர்காஞ்சிமூதூரதனிடையம்புயத்தின
மேயவன்றனதுபுந்திவிமலமாமபொருட்டான்மேனாண்
மாயவன்கமடமாகிவழிபடுதலத்தின்முக்க
ணாயகன்றனையர்ச்சித்துநாமகளுடனாங்குற்றான். (௧௧௦)

உற்றிடுகின்றநாளிலுலகினில்லறத்தையாற்றி
நற்றவம்பலவும்போற்றிநண்ணிய * முனிவரெல்லா
மற்றவணேகிக்கஞ்சமலர்மிசையிருந்தவையன்
பொற்றிருவடியைத்தாழ்ந்துபோற்றினர்புகலலுற்றார்: (௧௧௧)

அத்தகேளிந்நாள்காறுமடியமில்லறத்தையாற்றி
யித்தலநகரமெங்குமிருந்தனமினிமேனாங்கள்
சித்தமதொருங்கநோற்றுச்செய்கடனியற்றிவைக
மெய்த்தவவனமதொன்றைவிளம்பியேவிடுதியென்றார். (௧௧௨)

என்றலுந்தருப்பையொன்றையேழுலகளித்தோன்வாங்கி
யொன்றொருதிகிரியாக்கியோய்யெனவுருட்டிப்பாரி
லின்றிதன்பின்னராகியெல்லிருமேகியீது
நின்றிடும்வனத்தினூடேநிலைப்படவிருத்திரென்றான். (௧௧௩)

இருப்பதுமத்துவள்ளல்சேவடிக்கமலந்தாழா
விருப்பொடுவிடைகொண்டேகவிரைவினிலன்னான்விட்ட
தருப்பையினேமிசென்றோர்தனிவனத்திறுத்தலோடு
மிருப்பிடமெமக்கீதென்றுவிருந்தவரிருந்தாரங்கண். (௧௧௪)

தாமரையண்ணலுய்த்ததருப்பையினேமிதன்றா
னேமமதொன்றுபெற்றநைமிசாரணியம் † வைகுந்
தூமுனிவரர்களெல்லாஞ்சொல்லருந்தவத்தையாற்றி
யாமறைநெறியினின்றுமகமொன்றுபுரிதலுற்றார். (௧௧௫)

---

* நண்ணியவென்பது இங்கே வினையெச்சம்.

† நேமி - சக்கரம். ஶீ - கிடத்தல்; அல்லது ஶோ - ஒழிதல். நைமிசம் - சக்கரமோய்ந்தவிடம்.

அகனமர்புலனோர்நான்குமான்றமைபொருட்டாலாங்கோர்
மகவினைசெய்துமுற்றிவாலிதாமுணர்ச்சியெய்தி
யிகலறுமுளத்தராகியிருந்தனரிதனைநாடிச்
சுகனெனவுணர்வுசான்றசூதமாமுனிவன்போந்தான். (௧௧௬)

முழுதுணர்சூதன்றன்னைமுனிவரர்கண்டுநேர்போய்த்
தொழுதனர்பெரியோயெம்பாற்றுன்னலாலின்னவைகல்
விழுமிதுசிறந்ததென்னாவியத்தகுமுகமன்கூறித
தழையொடுதருப்பைவேய்ந்ததம்பெருஞ்சாலையுய்த்தார். (௧௧௭)

திருக்கிளர்பீடமொன்றுதிகழ்தரநவேணிட்டுச்
சுருக்கமில்கேள்விசான்றசூதனையிருத்தியாங்கே
யருக்கியமுதலநல்கியவனதுபாங்கராகப்
பொருக்கெனயாரும்வைகியிஃதொன்றுபுகலலுற்றார். (௧௧௮)

முந்தொருஞான்றுதன்னின்முளரியந்தேவன்சொல்லால்
வந்திவணிருந்தேமாகமற்றியாம்புரிந்தநோன்பு
தந்ததுநின்னையற்றாற்றவப்பயன்யாங்கள்பெற்றேஞ்
சிந்தையினுவகைபூத்தேஞ்சிறந்ததிப்பிறவியென்றார். (௧௧௯)

அனனதுசூதன்கேளாவாதியம்பரனையேத்தி
மனனியவேள்வியாற்றிவாலறிவதனையெய்தித்
துனனியமுனிவிர்காணுந்தொல்குழுவடைதலன்றே
வெனனிகராயினோருக்கிமமையிறபெறும்பேறென்றான். (௧௨௦)

அவவழிமுனிவர்சொல்வாரருமறைகண்டவண்ணல்
செவவியமாணாக்கர்க்குட்சிறந்துளோய்திறற்சூராவி
வவவியநெடுவேலண்ணன்மாண்கதைதேர்வான்பன்னா
ளிவவொருநசைகொண்டுள்ளேமியம்புதியெமக்கதெனறார். (௧௨௧)

அம்மொழிசூதன்கேளாவழல்படுமெழுகேயென்னக்
கொம்மெனவுருகவுள்ளங்குதூகலித்தவசமாகி
மெய்ம்மயிர்பொடிப்பதூநீர்விழிததுணையரும்பவாசான்
பொய்ம்மையில்படிவமுன்னணித்தொழுதிவைபுகலலுற்றான. (௧௨௨)

மன்னவன்மதலையாசான்மாமகன்றனதுமைந்தன்
பன்னுசொற்கொள்வோனீவோன்வழிபடுபண்பின்மிக்கோ
னென்னுமிங்கிவருக்கீவதேனைநூலுநகள்போலச்
செந்நெறியொழுகுவார்க்கேசெப்புவன்புராணமுற்றும். (௧௨௩)

தனைநிகர்பிறரின்றாயசண்முகற்கன்புசான்ற
முனிவிர்காளுரைப்போர்கேட்போர்முத்திசேர்காந்தத்துண்மை
வினவினீரதனையின்னேவிளம்புவன்புலன்வேறின்றி
யினிதுகேண்மின்களென்றாவெடுத்திவையியம்பலுற்றான். (௧௨௪)

திருநகரப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௭௦.

# பாயிரப்படலம்.

முந்தொருகாலத்தின்* மூவுலகந்தன்னில்
வந்திடுமுயிர்செய்தவல்வினையதனாலே
யந்தமின்மறையெல்லாமடிதலைதமொறிச்
சிந்திடமுனிவோருந்தேவருமருளுற்றார். (௧)

நெற்றியில்விழிகொண்டவிமலனதருளாலே
யற்றமின்மறையெல்லாமாதியின்வரலாலே
மற்றதனியல்பெல்லாமயலறவேகாடித்
தெற்றெனவெவராலுஞ்செப்புவதரிதாமால். (௨)

ஆனதொர்பொழுதின்கணமரருமுனிவோரு
மாநிலமிசைவருமாக்களுமிறையுள்ள
ஞானமதிலராகிநவின்மறைநெறிமாற்றித்
தீநெறிபலவாற்றிப்பனுவல்கள்சிலசெய்தார். (௩)

அவனியிலறமெல்லாமருவினையெனநீக்கிப்
பவநெறியறமென்றேபற்பலருஞ்செய்யப்
புவனமதுண்டோனும்போதனுமதுகாணாச்
சிவனருளாலன்றித்தீர்கிலதிதுவென்றார். (௪)

வேறு.

இன்னபான்மையையெண்ணியிருவரும்
பொன்னினாடுபுரந்திடுமன்னனு
துன்னுதேவருஞ்சுற்றினர்வந்திடக்
கன்னிபாகன்கயிலையிலேகினார். (௫)

அந்தில்செம்பொனணிமணிக்கோயிலின்
முந்துகோபுரமுற்கடையிற்புகா
நந்திதேவரைநண்பொடுகண்டுநீ
ரெந்தையார்க்கெம்வரவிசைப்பீரென்றார். (௬)

தேவதேவன்றிருமுன்னரேகியே
காவனந்திக்கடவுள்பணிந்தெழீஇப்
பூவைவண்ணனும்போதனும்புங்கவ
ரேவருஞ்செறிந்தெய்தினரீண்டென்றான். (௭)

என்றகாலையின்யாரையுமிவ்விடைக்
கொன்றைசூடிகொணர்கெனச்செப்பலு
நன்றதேயெனநந்திவணங்கியே
சென்றுமான்முதற்றேவரையெய்தினான். (௮)

செம்மைபோகியசிந்தையரைக்கெழீஇ
யெம்மையாளுடையானருளெய்தினா
னும்மையங்குவரநுவன்றானினி
வம்மினீரெனவல்லையிற்கூவினான். (௯)

---

* ஆதிகற்பத்திற்றுவாபரயுகத்திலென்றறிக.

விளித்தகாலைவிழிவழிபோதநீர்
துளிக்கநின்றுதொழுதுகவலொரீஇக்
களிக்குநெஞ்சினர்கண்ணுதலெந்தைமுன்
னளித்தியாலென்றவனுடனேகினார். (௧௦)

புடைகடந்திடுபூதர்கள்போற்றுமத்
தடைகடந்துதடுப்பரும்வேணிலான்
படைகடந்தவர்பாற்படுமெண்ணிலாக்
கடைகடந்துபினண்ணலைக்கண்டனர். (௧௧)

முன்னரெய்தித்தொழுதுமுறைமுறை
சென்னிதாழவிறைஞ்சினர்சேணிடைத்
துன்னுமாதரந்தூண்டவந்தண்மினா
ருன்னுமன்பினுததியினாழ்ந்துளார். (௧௨)

ஈர்க்கும்பாசத்திருவினையின்றொடே
தீர்க்கின்றாமிவனென்னுஞ்செருக்கினாற்
றூர்க்கின்றாமலாசோதிபொற்றாண்மிசைப்
போர்க்கின்றார்மெய்ப்பொடிப்பெனும்போர்வையே. (௧௩)

நேயமுந்தநெடும்பகனீங்கிய
தாயெதிர்ந்திடுகன்றின்றகைமையாய்த்
தூயவந்தனையோடுதொழுமவர்
வாயின்வந்தனவந்தனபோற்றினார். (௧௪)

அண்ணலீசன்வடிவையகந்தனி
லெண்ணினெல்லையின்பமயக்குமாற்
கண்ணினேர்வருகாட்சியராயிடி
னெண்ணுமோவவர்தஞ்செயலோதவே. (௧௫)

மேலைவானவர்வேந்தொடுமெம்பிரான்
சீலமேயதிருமுன்புமேவினா
மாலுநான்முகத்தண்ணலுமவந்திரு
பாலுமாகிப்பரவினரென்பவே. (௧௬)

வேறு.

அம்புயாசனமுடையண்ணலாழியா
னும்பரோடிதத்திறமுற்றுப்போற்றுழிச்
செம்பொனேர்முடிமிசைத்திங்கள்சேர்த்திய
வெம்பிரானருள்புரிந்தினையகூறுவான். (௧௭)

ஒன்றொருகுறைகளுமுறாதபான்மையா
னன்றுநும்மரசியனடந்தவோவெனாக்
குன்றவில்லுடையவோர்குழகன்செப்பலு
நின்றமாறொழுதிவைநெறியிற்கூறுவான். (௧௮)

ஆதியிலயன்படைப்பல்லதென்னருண்
மேதியனடுதொழிலேனைவிண்ணவ
ரேதமில்செயன்முறையாவுங்கண்ணுத
னாதநின்னருளினானடக்குநன்றரோ. (௧௯)

கருமணிமிடறுடைக்கடவுளின்னுமீ
யருளுவதொன்றுளததனைக்கூறுவ
னிருநிலமேலவர்யாருநின்றனைப்
பரமெனவுணர்கிலர்மாயைப்பான்மையால். (௨௦)

நின்றனதுரிமையைநிகழ்த்திமேன்மையா
வென்றனையயன்றனையெண்ணுவார்சில
ரன்றியுநின்னுடனநேகர்தம்மையு
மொன்றெனவேநினைந்துரைக்கின்றார்சிலர். (௨௧)

காலமுங்கருமமுங்கடந்ததோர்பொருண்
மூலமுண்டோவெனமொழிகின்றார்சிலர்
மேலுமுண்டோசிலவிளம்பவிஞ்சையின்
பாலுறுமுணர்ச்சியேபரமென்பார்சிலர். (௨௨)

ஆற்றறுபுனல்படிந்தழுக்குநீக்கலார்
சேற்றிடைவீழ்ந்தெனமறைகள்செப்பிய
நீற்றொடுகண்டிகைநீக்கிவன்மையால்
வீற்றொருகுறிகொடுமேவுவார்சிலர். (௨௩)

காமமோடுவகையுங்களிப்புநல்கலால்
வாமமேபொருளெனமதிக்கின்றார்சிலர்
தோமிலாமூவகைத்தொழிலும்வேள்வியு
மேமமார்பொருளெனவியம்புவார்சிலர். (௨௪)

உரையிசையாதியாமொலிகள்யாவையும்
பிரமமேயெனப்பேசுவார்சில
ரரிதுசெய்நோன்பினாலடைந்தசித்திகள்
பொருள்பிறிதிலையெனப்புகல்கின்றார்சிலர். (௨௫)

பெருமைகொள்குலந்தொறும்பிறந்துசெய்திடும்
விரதமுஞ்சீலமுமவினைகண்மாறிட
வருகலும்பிறவுமாயுங்கம்விட்டுயிர்
பரவுதல்வீடெனப்பகருவார்சிலர். (௨௬)

அறிந்தறிந்துயிர்தொறுமதுவதாகியே
பிறந்திறந்துணர்வெலாம்பெற்றுநோன்பொடு
துறந்துகொன்றிட்டனதுய்த்துக்கந்தமற்
றிறந்திடன்முதநியாமென்கின்றார்சிலர். (௨௭)

நன்னலமாதரைநண்ணுமின்பமே
யுன்னருமுத்தியென்றுட்கொள்வார்சில
ரின்னனதுறைதொறுமெய்தியாவருந்
துன்னரும்பிறவியுட்டுன்பநீங்கலார். (௨௮)

இறந்தனவரம்புலகெவரும்வேதநூன்
மறந்தனர்பவநெறிமல்கிநாடொறுஞ்
சிறந்தனவவ்வுயிர்செய்ததொல்வினை
யறிந்தருளையநீயமைத்தவாயினும். (௨௯)

அங்கவர்போதமூற்றுசொரீஇமனச்
சங்கையுமகன்றுநின்சரணமேயுறப்
புங்கவசிறிதருள்புரியவேண்டுமோ
லெங்கடம்பொருட்டெனவிறைவன்கூறுவான். (௩௦)

இனிதொருதிறமதற்கிசைத்துமாருயி
ரனையவும்புரப்பவனுதலாலவர்
வினையறுநெறிமையால்வேண்டுகெற்றினின
மனனுறுமெண்ணினைமறுத்திமாசிலாய். (௩௧)

காதலினருளுமுன்கலையின்பன்மையிற
கோதறுமோர்கலைகொண்டுநேமிசூழ்
மேதினியதனிடைவியாதனெனறிடு
போதகமுனியெனப்போந்துவைகுதி. (௩௨)

போந்தவணிருந்தபினபுகரிலாமறை
யாய்ந்திடினவந்திடுமவற்றைநால்வகை
வாய்ந்திடநல்கியேமரபினோக்கெலா
மீந்தனையவரகத்திருளைநீதியால். (௩௩)

அன்னதோராமறையினையறிந்துமையமா
வுன்னியநிலையினருள்ளந்தேறவு
மன்னவரல்லவா * மரபிற்றேரவு
மின்னமோர்மறையுளதிதுவுங்கேணமதி. (௩௪)

ஏற்றமதாகியமறைக்குமியாமுனரு
சாற்றியவாகமந்தனக்குமோங்கது
வீற்றுறவருவதுமன்றுமேனமைய
லாற்றவுநமதியலறையுமீரதே. (௩௫)

என்பெயரதற்கெனிலினிதுதோந்துளோ
துனபமதகற்றிடுநொல்புராணமா
மொன்பதிற்றிருவகையுண்டவறறினை
யன்புடைநந்திமுன்னறியக்கூறினேம. (௩௬)

ஆதியினந்திபாலளித்ததொன்மைசோ
காதைகள்யாவையுங்கருணையாலவன்
கோதறவுணர்சனற்குமாரற்கீந்தன
னீதியொடவனிடைநிலத்திறகேட்டியால். (௩௭)

என்னலுநனறெனவிசைந்துதாழ்ந்தெழீஇ
முன்னவன்விடைகொடுமுளரியான்முதற்
றுன்னியவானவர்தொகையொடேகியே
தன்னுலகத்தின்மால்சார்தன்மேயினன். (௩௮)

* மன்னவரல்லவர் - (வேதத்துக்கு) அதிகாரிகளல்லாதவர். அவர் நான்கு வருணத்துப்பெண்களுஞ் சூத்திரருமென்றறிக.

சார்தரும்மயன்றனைச்சதமகத்தனை
யார்தருமமரரையருளினவ்வவர்
சேர்தருபுரந்தொறுஞ்செல்லற்கேவியே
கார்தருமெய்யுடைக்கடவுள்வைகினன். (௩௯)

இருவொடுமருவியோன்செறிவுற்றெங்கணும்
பரவுறுமியல்பெறுபகவனுதலாற்
றரணியிலருளினற்றனதுசத்தியி
லொருகலைதன்னுடனுதிக்கவுன்னியே. (௪0)

பங்கயத்தயன்வழிப்பராசரப்பெயர்த்
துங்கன்முனிபனிததூவலெல்லையிற *
கங்கையிலியோசனகந்தியோடுற
வங்கவர்தம்மிடையவதரித்தனன். (௪௧)

மற்றவன்வதரிகாவனத்தில்வைகியே
யற்றமில்வாதராயணனெனும்பெயர்
பெற்றனனுகியெம்பிரான்றனுணையாற்
கற்றிடாதுணர்ந்தனன்கரையில்வேதமே. (௪௨)

மோனகமுற்றியமுனிவர்மேலவன்
ஞானுணர்மறையெனுந்தரங்கவேலையி
லானதோர்பொருளினையறிஞர்பெற்றிடத்
தூநெறிகொண்டுநாற்றுறைசெய்தானரோ. (௪௩)

கரையறுவேதமாங்கடலைநான்கவாய்ப்
பிரிநிலையாக்கியேநிறுவுபெற்றியாற்
புரைதவிர்முனிவரனபுகழ்வியாதனென்
றொருபெயர்பெற்றனனுலகம்போற்றவே. (௪௪)

விரவியமறைதெரிவியாதனுமவன்
குரவனேயாஞ்சனற்குமாரன்றன்னிடை
யிருவகையொனபதாயியல்பராணமு
மரபொடுகேட்டவைமனததுட்கொண்டபின். (௪௫)

ஏத்திடுசுருதிகளிசைக்குமாண்பொருண்
மாத்திரைப்படாவெனுமாசில்காட்சியா
பார்த்துணர்பான்மையாற்பலவகைப்படச்
சூத்திரமானவுஞ் † சொற்றுவைகினன். (௪௬)

---

* பனிததூவலெல்லையில் - பனிததூவலினலே சூரியகிரணம் மறைக்கப் பட்ட பகற்காலததில். எல்லை - பகல்.

† வியாசசூத்திரம் வேதாந்தசூததிரமெனவும், பிரமமீமாஞ்சையெனவும், உத்தரமீமாஞ்சையெனவும் பெயர் பெறும. அதற்கு நீலகண்டசிவாசாரியர், சங்கராசாரியர், இராமாநுஜாசாரியர், மத்துவாசாரியர் என்னும் நால்வர் பாஷ்யங்கள் செய்தனர். சைவர்களாற் கொள்ளப்படுவது நீலகண்டபாஷ்யம், மாயாவாதிகளாற் கொள்ளப்படுவது சங்கரபாஷ்யம், வைஷ்ணவர்களாற் கொள்ளப்படுவது இராமாநுஜபாஷ்யம், மாத்துவர்களாற் கொள்ளப்படுவது மாத்துவபாஷ்யம். வியாசசூத்திரத்தின் உண்மைப்பொருள் சைவசித்தாந்தப்பொருளேயாமென்பது "தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு—மூவர் தமிழு முனிமொழியுங் - கோ

மயல்றுபயிலரேவைசம்பாயனர்
சயிமினிசுமந்துவாந்தவத்தர்நால்வர்க்கும்
வியவிருக்காதியாம்வேதநான்கையு
முயர்வுறுதவத்தினன்முறையினேதினன். (சஎ)

தோல்வருமறைகளின்சூத்திரததையு
மேல்வருசயிமினிமுதலமேதையர்
நால்வருமுணரியநவின்றுநல்கின
னல்வருகடவுளேயனையதன்மையான். (சஅ)

மெய்ம்முனியனையரைவிளித்துநீரினி
யிம்மறையியல்பிறேரெவர்க்குமீமென
வம்முறைநால்வருமனையவேதநூல்
செம்மையொடளித்தனர்சிறந்துளோர்க்கெலாம். (சகூ)

அன்னதோர்முனிவரனதற்குப்பின்னரே
பன்னருந்தொகையினற்பதினெண்பான்மையாய்
முன்னுறுபுராணநூன்முழுதுமுற்றிய
வின்னருணிலைமையாலெனக்குநல்கினன். (ருo)

வேதமதுணர்தருவியாதமாமுனி
காதலனுமெனைக்கருணைசெய்திவை
யோதுதியாவருமுணரவென்றன
னுதலினுலகினிலவற்றைக்கூறினேன். (ருக)

காமருதண்டுழாய்க்கண்ணனாகிய
மாமுனியருளினன்மறைகள்யாவையுந்
தோமறுபுராணநூற்றொகுதியானவையு
நேமிகொளுலகெலாநிலவியுற்றவே. (ரு௨)

நமபனாக்கொருபதுநாரணற்குநான்
கம்புயததவற்கிரண்டலரியங்கியா
மும்பர்வான்சுடர்களுக்கோரொன்றென்பரா
லிம்பரிலிசைக்குமப்புராணத்தெல்லையே. (ருங)

---

வை—திருவா சகமுந் திருமூலர் சொல்லு—மொருவா சகமென் றுணர்." என்னும் ஔவையார் திருவாக்காலுணாக. முனிமொழியென்றது வியாசசூத்திரத்தை. புறப்புறச்சமயமும், புறச்சமயமும், அகப்புறச்சமயமும், அகச்சமயமுமெனச் சமயம் நானகுவகைப்படும். அவற்றுள், புறப்புறச்சமயம் உலோகாயதம், நால்வகைப்பௌத்தம், ஆருகதமென அறுவகைப்படும். புறச்சமயம் தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என வறுவகைப்படும். இங்கே மீமாஞ்சையென்றது சைமினிசூத்திரமாகிய பூருவமீமாஞ்சையை. ஏகான்மவாதம் மாயாவாதமும், பாற்கரியவாதமும், கிரீடாப்பிரமவாதமும், சத்தப்பிரமவாதமுமென நான்குவகைப்படும். சங்கரபாஷ்யத்துப்பொருள் மாயாவாதப்பொருளேயாம். மாயாவாதம் உலோகாயதமுதலியவற்றோடு சேர்த்துக் கண்டிக்கப்படுதல் "மிண்டிய மாயாவாத மென்னுஞ்—சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்—துலோகா யதனெனு மொண்டிறற் பாம்பின்—கலாபே தத்த கடுவிட மெய்தி—யதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்" என்னுந் திருவாசகத்தானுமுணர்க.

வேறு.

எதிரில்சைவமேபவிடியமார்க்கண்டமிலிங்க
மதிகொள்காந்தநல்வராகமேவாமனமற்சம்
புதியகூர்மமேபிரமாண்டமிவைசிவபுராணம்
பதுமமேலவன்புராணமாம்பிரமமேபதுமம். (௫௪)

கருடகாருடநாரதம்விண்டுபாகவத
மரிகதைப்பெயராக்கினேயம்மழற்கதையா
மிரவிதன்கதைபிரமகைவர்த்தமாமிவைதாந்
தெரியுமொன்பதிற்றிருவகைப்புராணமாந்திறனே. (௫௫)

இத்திறத்தவாம்புராணங்களொன்பதிற்றிரண்டி
னத்தனுக்குளபுராணமீரைந்தினிலடல்வேற்
கைத்தலத்தவன்காந்தத்துளன்னவன்கதையை
மெய்த்தெரிகைப்படவுரைப்பனெனறேமுனிவிளம்பும். (௫௬)

வேறு.

பூமிசையிருந்தபுத்தேள்புரிந்திடுபுதல்வர்தம்மு
ளேமுறுதக்கனீன்றவிருந்தனிக்குமரியான
தீமையயகற்றவம்மைசிந்தைசெய்திமையமன்னன்
மாமகளாகிநோற்றுவைகினாள்வைகுநாளில். (௫௭)

அவுணர்களோடுசூரனவனிமேற்றோன்றிநோற்றுச்
சிவன்வரமளிக்கப்பெற்றுதேவர்யாவரையும்வென்று
புவிதனிலுவரிதன்னிறபுங்கவர்புனைவன்செய்த
தவலருமகேந்திரத்தில்வைகினான்றனைசூழ. (௫௮)

அனையதோர்காலைவெள்ளியடுக்கலிற்சனகனாதி
முனிவரர்தமக்குதொல்லைமூவகைப்பதமுங்கூறி
யினியதோர்ஞானபோதமித்திறமெனறுமோனத்
தனிநிலையதனைக்காட்டித்தற்பரனிருந்தானன்றே. (௫௯)

வீற்றிருந்தருளுமெல்லைவெய்யசூர்முதலாவுள்ளோ
ராற்றவுந்தீங்குசெய்தேயமராகள்சிலரைப்பற்றிப்
போறறிடுஞ்சிறையிலுய்ப்பப்புரந்தரன்முதலாவுள்ளோர்
மாற்றருந்துயரின்மூழ்கிமறைந்தனராகிவைகி. (௬௦)

சங்கரன்மோனத்தன்மைசதுர்முகற்குரைப்பவன்றன
வெங்கணைவேளையுய்ப்பவிழித்தலன்புரநீறாக்கிப்
பங்கயன்முதலாவுள்ளோரபலரும்வந்திரங்கிப்போற்ற
வங்குறைமோனநீங்கியவர்க்கருள்செய்தானையன். (௬௧)

ஓரெழுமுனிவாதம்மையோங்கலுக்கிறைவன்றன்பாற்
பேரருண்முறையாற்றூண்டிப்பெருமணம்பேசுவித்துப்
பாரறுநோன்பின்மிக்கபராபரையன்புதேர்ந்து
காரணிகண்டத்தெந்தைகணங்களோடிமையம்புக்கான். (௬௨)

புடையகலிமையந்தன்னிற்புவனங்கண்முழுதுமீண்ட
வடபுவிதாழ்ந்துதென்பாலுயர்தலுமலயந்தன்னிற்
கடமுனிதன்னையேவிக்கவுரியைமணந்துபின்ன
ரடன்மதவேளைநல்கியநங்கனேயாகச்செய்தான். (௬௩)

மன்புனைகயிலைதன்னின்மலைமகளோடுமீண்டு
முன்பெனவமர்ந்துநாதன்முழுதுலகுயிர்கட்கெல்லா
மின்பமும்புணர்ப்புநல்கியிமையவர்யாரும்வேண்டத்
தன்பெருநுதற்கட்டீயாற்சரவணபவனைத்தந்தான். (௬௪)

அந்தமில்விளையாட்டுள்ளவறுமுகக்கடவுடனைத்
தந்திடுமெல்லையன்னோன்றானையந்தலைவராக
முந்தியவிறல்சேர்மொய்ம்பன்முதலியவிலக்கத்தொன்பா
னந்திதன்கணத்தினோரைநங்கைபாலுதிப்பச்செய்தான். (௬௫)

அண்ணலங்குமரப்புத்தேளலகிலாவாடல்செய்து
மண்ணுறுகடலுமவெற்பும்வானமுந்திரிபுசெய்து
துண்ணெனக்குழவியேபோற்றோன்றிடவதனைநோக்கி
விண்ணவர்யாருஞ்சூழ்ந்துவெஞ்சமர்புரிந்துநின்றார். (௬௬)

ஆரமாசெய்துளாரையட்டடனுயிருநல்கிப்
பேருருநிலைமைகாட்டிப்பெறலருங்காட்சிநல்கி
நாரதன்மகத்திற்றோன்றிநடந்ததோர்செச்சைதன்னை
யூர்தியதாகக்கொண்டேயூர்ந்தனனொப்பிலாதான். (௬௭)

மறைமுதற்குடிலைதன்னின்மாண்பொருண்முறைகடாவி
வெறிகமழ்கமலப்புத்தேள்விடைகொடான்மயங்கக்கண்டு
சிறையிடையவனைவைததுச்செகமெலாமளித்துத்தாதை
குறையிரந்திடவேவிட்டுக்குறுமுனிக்கதனையீந்தான். (௬௮)

ஆவதோர்காலையீசனறுமுகப்பரனைநோக்கி
யேவருமுடிக்கவொண்ணாதிருந்தசூர்முதலோர்தம்பான்
மேவினைபொருதுவென்றுவிரிஞ்சனேமுதலாவுள்ள
தேவாதமினனனீக்கிச்செல்லுதிகுமரவென்றான். (௬௯)

விராவியவிலக்கத்தொன்பான்வீரரைவெய்யபூத
ரிராயிரவெள்ளததோரையிகற்படைமான்றேரோடு
பராபரனுதவிதூண்டப்பன்னிருபுயத்தனேகித்
தராதலம்புக்குவெற்பைத்தாரகனோடுசெற்றான். (௭௦)

பூவினன்முதலாவுள்ளபுங்கவர்வழிபட்டேத்தத்
தேவர்தங்கிரியின்வைகித்தென்றிசைநடந்துதாதை
மேவருமிடங்கள்போற்றிமேதகுசேய்ஞனண்ணி
மூவிருமுகத்தன்முக்கண்முன்னவன்படையைப்பெற்றான். (௭௧)

பரனருள்படையைப்பெற்றுப்பராசரன்சிறார்வந்தேத்தத்
திருவருள்புரிந்துசென்றுசெந்திலின்மேவிச்சூரன்
வரமொடுதிருவுஞ்சீரும்வாசவன்குறையும்வானோர்
குரவனைவினவியன்னோன்கூறவேகுமரன்றேர்ந்தான். (௭௨)

அறத்தினையுன்னியையனுடல்சேர்மொய்ம்பன்றன்னை
யுறத்தகுமாயிற்றூண்டியொன்னலன்கருத்தையோர்ந்து
மறத்தொடுகடலுள்வீரமகேந்திரமணுகியேதன்
புறத்துளதானையோராற்சூர்கிளைபொன்றச்செற்று. (௭௩)

சியமாமுகத்தனென்னுஞ்செருவலான்றனையுமட்டு
மாணையுந்திருவுஞ்சீரும்வரங்களும்பிறவுமாற்றி
யாயிரவிருநாலண்டத்தரசனுஞ்சூரன்றன்னை
யேயெனுமளவில்வேலாலிருதுணிபடுத்துநின்றான். (௭௪)

துணிபடுசூரனோர்பால்சூட்டுவாரணமாயோர்பால்
பிணிமுகமாகிநிற்பப்பெருந்தகையவற்றையூர்தி
யணிபடுதுவசமாக்கியப்பகல்செந்தில்வந்து
மணிசொரியருவிதூங்கும்வான்பரங்குன்றஞ்சேர்ந்தான். (௭௫)

தெய்வதயானையென்னுஞ்சீர்கெழுமடந்தைதன்னை
யவ்விடைவதுவையாற்றியங்ஙனஞ்சிலநாள்வைகி
மெய்வியனுலகிற்சென்றுவிண்ணவர்க்கரசனுக்கி
யெவ்வமின்மகுடஞ்சூட்டியிந்திரன்றன்னைவைத்தான. (௭௬)

சில்பகலங்கண்மேவிச்சேனையோடணங்குந்தானு
மல்லலங்கயிலையேகிமங்கைபங்குடையவண்ணன்
மெல்லடிவணங்கிக்கந்தவெற்புறைநகரினேகி
யெல்லையிலருளால்வைகித்தணிகையிலெந்தைவந்தான். (௭௭)

சாரலினோங்குதெய்வத்தணிகைமால்வரையின்மீது
வீரமதுடையவேலோன்வீற்றிருந்திடலுமங்க
ணாரதன்வந்துதாழ்ந்துநவைதவிரெயினமாதின்
சீரெழினலத்தைக்கூறவவள்வயிற்சிந்தைவைத்தான். (௭௮)

வள்ளிமால்வரையிற்போந்துமானிடைப்பிறந்ததெய்வக்
கிள்ளையையடைந்துபோற்றிக்கேடில்பல்லுருவங்காட்டிக்
கள்ளமோடொழுகிப்பன்னாட்கவர்ந்தனன்கொணர்ந்துபின்னர்த்
தெள்ளுசீர்வேடாநல்கதிருமணஞ்செய்துசேர்ந்தான். (௭௯)

செருத்தணிவரையில்வந்துசிலபகல்வள்ளிதன்னோ
டருத்தியின்மேவிப்பின்னரவளொடுங்கந்தவெற்பின்
வரைத்தனிக்கோயில்புக்குவானமின்பிரிவுநீக்கிக்
கருத்துறவிருவரோடுங்கலந்துவீற்றிருந்தானகந்தன். (௮௰)

என்றிவையனைத்துஞ்சூதனியம்பலுமுனிவர்கேளாத்
துன்றியமகிழ்வாற்சென்னிதுளக்கியிங்கிதனைப்போல
வொன்றொருகதையுங்கேளேமுரைத்தனைசுருக்கியாங்க
ணன்றிதனகலங்கேட்கநனிபெருங்காதல்கொண்டேம். (௮௧)

என்னவேமுனிவரானோர்யாவருமெடுத்துக்கூற
மன்னியவருள்சேர்சூதன்மற்றவரார்வநோக்கி
யன்னவைசுருக்கமின்றியறைந்தனனவனாறோர்ந்து
தொன்னெறிவழாதியானும்வல்லவாதொகுத்துச்சொல்வேன். (௮௨)

பாயிரப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௫௨.

---

உ

திருச்சிற்றம்பலம்.

முதலாவது

# உற்பத்திகாண்டம்.

## திருக்கைலாசப்படலம்.

பாசநீக்கித்தன்பாற்படுநல்லரு, ளீசனல்குமியல்பெனவெய்திஞேர்
தேசமாற்றிச்சிறந்ததன்மெய்யொளி, வீசுகின்றதுவெள்ளியங்குன்றமே. (க)

ஆறுசூடியவாதியம்பண்ணவ, னேறுமூரிவெள்ளேறுமுக்கண்ணுத
னீறுசேர்தருகோலமுநித்தனைத், தேறுமன்பர்தஞ்சிந்தையும்போன்றதே. (உ)

மோனநன்னிலைமுற்றியபெற்றியர், ஞானமார்பிழம்பன்னநலத்ததா
யூனுலாயவுயிர்த்தொகைமாசொரீஇத், தானெலாஞ்செறிந்தென்னவுஞ்சான்றதே.

கானமார்ந்தகடுக்கைநற்கூவிளைத், தேனவாம்பொழிற்றிண்சிகரத்திடை
வானயாறுவருதலினமாசிலா, ஞானநாயகன்போலநணியதே. (ச)

தண்ணறுந்துளவாற்புனைதார்முடிப், பண்ணவன்கண்படுத்திடுபாற்கடல்
கண்ணுதற்குமொர்காமருபீடமாய், நண்ணுகின்றதுபோலுநலத்ததே. (ரு)

பொதியுமின்னமுதோடுபொருந்துவ, கதிரின்மிக்கநறையறுகாட்சிய
மதியமாயிரகோடிமணந்துதா, முதயமானதுபோன்றதவவொண்கிரி. (சு)

நெற்றிமேனிமிர்கண்ணுநிலாவொளிர், பொற்றடம்புயநான்கும்பொருந்துறப்
பெற்றெம்மானருளாற்பிரம்பொன்றுகைப், பற்றுநந்திபரிவொடுகாப்பது. (எ)

புரந்தரன்முதலாகியபுங்கவர், வரம்பின்மாதவர்மாசறுகாட்சியர்
நிரந்தபூதகணவர்நிரந்தரம், பரிந்துபோற்றிப்பயில்வதம்மால்வரை. (அ)

மின்னரம்பையராடலும்விஞ்சையர், கின்னரம்பயில்பாடலுங்கீழ்த்திசை
மன்னனாதியர்வாழ்த்துமவ்வானவ, ரின்னியங்களுமெங்கணுமார்ப்பது. (கூ)

வேறு.

கீணிலாவுறுமுலகெலாநீங்கியேகீழ்போய்ச்
சேணிலாவுறுபதமெலாமுருவிமீச்சென்று
மாணிலாவுறுமண்டத்தினடிமுடிமருவத்
தாணுவாயுலகிறுதியினிற்பதச்சயிலம். (கo)

மாடுசூழ்தருமேருவேயாதியாம்வரைகள்
பாடுசேரினுமுலகெலாமழியினும்பாந்து
கூடுமெண்டங்கள்குலையினுங்கொன்றைவேணியன்போற்
கேடிலாமலேயமர்வதுகயிலையங்கிரியே. (கக)

நலம்வருங்கலைமதியமுமிரவியுநாகர்
குலம்வருந்தனுக்குறையலாமற்றையகோளு
மலமருஞ்சுடருடுக்களுமமரரும்பிறரும்
வலம்வரும்படியிருப்பதுகயிலைமால்வரையே. (க௨)

ஏற்றமேருவேயாதியாம்வரைகளேழ்வகையாற்
சாற்றுநேமிகளாழியங்கிரிபெருஞ்சலதி
நாற்றிசைக்கணுநொச்சிபோற்சூழ்தரநடுவண்
வீற்றிருப்பதுகயிலையாகியதனிவெற்பு. (க௩)

படியெலாமுண்டுமேனமாய்த்தாங்கியும்பண்டோ
ரடியினுலகப்படுத்தியுமிடந்துமுற்றருளு
நெடியமாயனுமுலகிறுமெல்லையினிமலன்
வடிவமேயெனக்காணுதற்கரியதவவரையே. (க௪)

வே று.

அன்னதோர்கயிலைநாப்பணம்பொனின்சுடர்மேல்கொண்ட
நன்னெடுஞ்சிமயத்தோங்கனவையொரீஇநண்ணிற்றென்னக்
கன்னியங்காப்புமேவிக்கதிர்மணிக்கற்றைசுற்றப்
பொன்னெடுங்கோயிலொன்றுபொலிவொடும்பொருந்திற்றன்றே. (க௫)

திணிகதிராரந்தன்னிற்சிறந்தவச்சிரத்திற்செக்கர்
மணிதனின்முழுநீலத்தின்மற்றையவெறுக்கைதன்னிற்
பணிபடவருளாற்றானேபலித்திடுசிகரமாதி
யணியினுக்கணியாய்மல்குமாலயச்சூழலெங்கும். (க௬)

என்றுமீறென்பதின்றியிருந்திடுங்கயிலைவெற்பிற்
பொன்றிகழ்நகரந்தன்னுட்பொருவிலாக்கோலநாளுந்
துன்றியதன்மைத்தென்னத்தூமணிக்கதிர்கள்சூழ
மன்றமருறையுளொன்றுவனப்பொடுவைகிற்றன்றே. (க௭)

வே று.

சோதிசேருமத்தூமணிமண்டபத், தாதியானவரியணையும்பரிற்
காதலாகுங்கவுரியொர்பாங்குற, வேதநாயகன்வீற்றிருந்தானரோ. (க௮)

பீடுகொண்டபெருந்தவப்பெற்றியோர், தேடுகின்றசிறப்புடைத்தாம்புகழ்
நாடுதும்புருநாரதர்விஞ்சையர், பாடுகின்றனர்பாணியின்பாற்பட. (க௯)

அதிகன்வேணியிலார்தருகங்கையை, விதிபுரந்தரன்விண்டுலகத்துள
நதிகடாழ்ந்தெனநன்னயத்தேவல்செய், கதியினோர்கள்கவரிகள்வீசினார். (௨0)

சீலவட்டமுடிப்பிறைதேடுவான், ஞாலவட்டத்தெழுதருநாகர்போ
லேலவட்டமுகத்தருசெங்கணு, மாலவட்டமசைத்தனரன்பினோர். (௨க)

ஆதிதன்னருளெய்தியவன்றிருப், பாததாமரைசூடியப்பண்ணவன்
கோதிலாததிருவுருக்கொண்டுளோர், பூதராதியர்போற்றிமுனீண்டினார். (௨௨)

திருக்கைலாசப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩௭௪.

# பார்ப்பதிப்படலம்.

அன்னுழியுமையவளகத்துளோர்செய
லுன்னினளுக்கமுற்றொல்லைதானெழீஇத்
தன்னிகரில்லவன்றாளிறைஞ்சியே
முன்னுறநின்றிவைமொழிதன்மேயினாள். (௧)

கற்பனைமுதலியகடந்தகண்ணுதற்
றற்பரனையிகழ்தக்கன்றன்னிடைப்
பற்பகல்வளர்ந்தவன்பயந்தமாதெனச்
சொற்படுநாமமுஞ் * சுமந்துளேனியான். (௨)

ஆங்கதோர்பெயரையுமவன்கணெய்தியே
யோங்கினன்வளர்ந்தவிவ்வுடலந்தன்னையுந்
தாங்கினன்மேலவைதரித்தற்கஞ்சினே
னீங்குவனவ்வகைபணித்திநீயென்றாள். (௩)

மன்னுயிராகியமரபுமுற்றவு
முன்னுறவருளியமுதல்வியன்பினா
லின்னணமியம்பலுமிதனைத்தேர்ந்திடாத
தன்னிகரில்லதோர்தலைவன்கூறுவான். (௪)

பத்திமையெம்வயிற்பழுத்தபண்பினாற்
சத்தியேநின்னிகர்சகத்தினில்லைநீ
யித்திறமுயலுதலெல்லைதீர்ந்தநின்
புத்திரர்வீடுறுபொருட்டெப்போதுமால். (௫)

கற்றிறமேயினுநங்கைசிந்தனை
முற்றியவேண்டுமேன்மொழிதுமேருவின
சுற்றமதாகியவிமையத்தொல்வரைக்
கொற்றவன்புரிவனாற்கொடியமாதவம். (௬)

ஏதவன்பெறத்தவமியற்றுமென்றியேன
மாதுனைமகண்மையாமரபிற்போற்றியே
காதலொடமக்கருள்கருத்ததாகுமா
லாதலிற்குழவியாயவன்கணெய்துநீ. (௭)

தளர்ந்துடன்மெலிவுறத்தவஞ்செய்வெற்பினா
னிளஞ்சிறுகுழவியாயெய்திமற்றவ
னுளங்களிகூரவாண்டோரைந்தின்றுணை
வளர்ந்தனைபுரிதிமேன்மாசின்மாதவம். (௮)

அணங்குநீநோற்றுழியகிலத்துள்ளதோர்
கணங்களுந்தலைவருங்கணிப்பிறேவரு
மிணங்கினர்சூழ்தரவெய்திநின்னையா
மணம்புரிந்தேகொடுவருதுமீண்டெனா. (௯)

---

* தக்கன்மகளெனப் பொருள்படும் பெயர் தாக்ஷாயணி.

கடல்விடமுண்டிடுகேடவுளித்திற
நடைமுறையருளானன்றெனுமகிழ்ந்
தடியிணைவணங்கிநின்றன்பிற்போற்றியே
விடையதுபெற்றனள்விமலையேகினாள். (௧0)

அல்லதுமுவகையுமன்புமெம்பிரா
னெல்லையிலருளுமாயீண்டிமுன்செல
மெல்லியலுமையவள்வெள்ளிவெற்பொரீஇ
வல்லையினிமையமால்வரையிற்போயினாள். (௧௧)

வள்ளியன்கடகரிவடிவின்வீழ்த்ரு
துள்ளியம்பனிமழைச்சோலைசூழ்தலா
லெள்ளருந்தன்மைசேரிமையமால்வரை
வெள்ளியங்கிரியெனவிளங்குகின்றதே. (௧௨)

எண்டகுமிமையமுமிமையமேலுறு
கொண்டலுமொன்றியேகுலவுகாட்சிய
தெண்டிரைமிசையெழுநஞ்சுந்தீயுநஞ்
சுண்டிடுமணிமிடற்றிறையுமொக்குமால். (௧௩)

நீலுறுமழைமுகினிலவுமின்னொடு
மேலுறவிளங்கியவிமையவெற்பது
மாலவன்றிருவொடுமெருவிக்கண்டுயில்
பாலுறுபன்னகப்பாயல்போன்றதே. (௧௪)

கரும்புயலார்த்துறுகாட்சித்தாகியே
யிரும்பனியிடையுறுவிமையப்பொன்வரை
சுரும்பினமிசையொடுதுவன்றிச்சுற்றிட
வரும்பவிழாதவெண்கமலமனனதே. (௧௫)

நீடியமண்மகணிதியினகுப்பையைப்
பாடுறுதண்ணிலாப்படாமதொன்றினா
லூடினள்வைத்திடுமுறையதேயெனக்
கோடியர்பனிகொள்பொற்குன்றநின்றதே. (௧௬)

பொன்னெடுங்கிரியெனவீண்டும்புங்கவர்
துன்னினர்சூழ்வரென்றுன்னிததொன்மனு
வன்னதைமறைத்தனனிரதத்தாவியா
லென்னவுநின்றதாலிமையப்பொன்வரை. (௧௭)

குடகடல்குணகடல்கூடுமுவகை
யிடையொருவாலிதாமேனமெய்தியே
தடைபுரிசிறப்பெனவிமையத்தாழ்வரை
நெடுநிலவளவையுநிமிர்ந்துபோயதே. (௧௮)

விண்ணவர்ததிக்கடல்கடைந்தவெண்ணெயு
ளண்ணலம்பாற்கடலமுதம்வைத்தெனக்
கண்ணகன்பெரும்பனிகவைஇயவெற்பின்மே
லுண்ணிறைபுனற்றட * மொன்றுவைகிற்றே. (௧௯)

* இதனைபெயா பதமை:

அன்னதோர்தடத்திடையசலமன்னவன்
மன்னியகௌரிதன்மகண்மையாகவுந்
தன்னிகரிலாவரன்றனக்குநல்கவு
முன்னுறவருந்தவமுயன்றுவைகினான். (௨0)

மெய்த்தவமியற்றியவெற்பன்காணிய
வத்தடமலருமோரரவிந்தத்தின்மேற்
வைத்ததோர்குழவியின்படிவத்துற்றன
ளெத்திறத்துயிரையுமீன்றதொன்மையாள். (௨௧)

வேறு.

ஆங்கவட்கண்டுவெற்பனடியனேன்பொருட்டாலம்மை
நீங்கினள்போலுமுக்கணிருமலன்றன்னையென்று
வேங்கினன்றனதுநோன்புக்கிரங்கினனிவைகளீச
னோங்குபேரருளேயென்றுவுவகையங்கடலுட்பட்டான். (௨௨)

கண்ணுற்போதவாரிகான்றிடவுரோமராசி
யுண்ணிகழன்புமிக்குப்புறந்தணிலொழுகிற்றென்ன
வண்ணன்மெய்பொடிப்பத்துள்ளியடியனேனுய்ந்தேனென்றுத்
துண்ணெனப்பாடியாடியமலையைதொழுதுநின்றான். (௨௩)

பங்கயத்தவிசின்வைகும்பராபரைதனைத்தனது
செங்கையினெடுத்துவல்லேசெனனிமேற்றாங்கியேகித
துங்கநல்லிமையத்தண்ணன்றன்முறையிருக்கைபுக்கு
மங்கலமேனையெனுமனைவிகைக்கொடுத்தான்மாதோ. (௨௪)

கொடுத்தலுந்தொழுதுவாங்கிக்கொற்றவவிவணின்பாங்க
ரடுத்ததங்கெவனேவென்னவரசனுநிகழ்ந்தவெல்லா
மெடுத்துரைசெய்யக்கேளாவீசனதருளேரவென்று
வடுதவிர்கற்பின்மேனைமனமுறமகிழ்ச்சிகொண்டாள். (௨௫)

சுரந்தனகொங்கைபாலுந்துண்ணெனவொழுகிற்றெங்கும
பரந்தனபொடிப்பின்போர்வைபரைதனதருளேயுள்ள
நிரந்தனகவலையாவுநீங்கினபவ்முனனுள்ள
கரந்தனவிமையத்தண்ணலகாதலிதனக்குமாதோ (௨௬)

பரிபுரந்தண்டையம்பொற்பாடகம்பாதசாலம்
விரவியதொடியேசங்குவியன்மணிசுட்டியார
மரிகெழுமதாணிபொற்றோடங்கதம்பிறவுஞ்சாத்தி
வரையுறழ்தனப்பாலார்த்திவரம்பெறுகாப்புநேர்ந்தாள். (௨௭)

வனைதருபவளங்காலாவயிரமேமருங்கிற்கோலாப்
புனையிரும்பலகைநீலாப்புரிந்தபொற்றொட்டின்மேலா
வனையவடன்னையுய்த்துமங்கையிற்கொண்டுந்தன்கோன்
மனமகிழ்திறனாற்போற்றிமதியெனவளர்க்கலுற்றாள். (௨௮)

மன்னுயிர்புவனமேனைமற்றுளபொருளுக்கெல்லா
மன்னையாயுதவினாளுமவற்றினைவளர்த்துநிற்பா
டன்னையும்வளர்ப்பாருண்டோவளர்ந்ததுசழக்கேயந்தக்
கன்னிதன்னருளினீர்மைகாட்டினள்போலுமன்றே. (௨௯)

இந்தவாறினையர்பாலாயெம்பெருமாட்டிமைவி
லயந்தியாண்டகன்றபின்றையயன்முதற்றேவர்யார்க்குக்
தந்தையாரருளையுன்னித்தவமினிப்புரிவலென்னாச்
சிந்தியாவிமையத்தோங்கற்செம்மலுக்குரைக்கலுற்றாள். (௩௰)

நாற்பெருந்தடந்தோளண்ணலத்தகவுரைந்துகொள்வா
னேற்பனவிளையவெற்பினுவலருமொருசார்வைப்பி
னேற்பதோர்கன்னிமாரோடேனைவிடுத்தருண்மோவென்னாப்
பார்ப்பதியியம்பலோடும்பனிவரையரசன்சொல்வான். (௩௧)

அன்னைகேளெம்பினீங்கியருந்தவமாற்றற்கொத்த
தின்னதோர்பருவமன்றாலியாண்டுமோரைந்தேசென்ற
நின்னுடல்பொறாதாலீண்டிந்நிலைமையைத்தவிர்தியென்னக்
கன்னிகைநகைத்துக்கேண்மோவிஃதெனக்கழறலுற்றாள். (௩௨)

ஈசனேகாப்பனல்லால்யாரையம்பிறராற்றம்மா
லாசறப்போற்றலாகாததுதுணிவாகுமீண்டுப்
பேசியதிறனுமன்னோன்பேரருண்மறுதியென்ன
நேசமோடியைந்திட்டன்னைநினைந்தநோன்பியற்றுகென்றான். (௩௩)

மன்னனுமியைந்துபின்னர்மால்வரையொருசார்தன்னி
லன்னமென்னடையினாளுக்கருந்தவச்சாலையாற்றித்
தன்னுறுகிளைஞர்தம்பாற்றவத்தினால்வந்தபான்மைக்
கன்னியர்பலரைக்கூவிக்கௌரிபாலாகச்செய்தான். (௩௪)

நீலுறுமணிதோய்மேனிநிமலையங்கிமையத்துச்சி
மேலுறுமரசன்றேவிவிடையினான்மடவார்பல்லோர்
பாலுறுபணியிற்சூழப்பரமனையுன்னியந்தச்
சாலையையடைந்துமிக்கதவத்தினையிழைக்கலுற்றாள். (௩௫)

தங்கியவைகறோறுந்தாதையுந்தாவில்கற்பின்
மங்கையும்போற்றியேகமாதுநோற்றிருந்தாளிப்பா
லங்கவட்பிரிந்தபின்றையரும்பெருங்கயிலைமேய
வெங்கடம்பெருமான்செய்தபரிசினையியம்பலுற்றேன். (௩௬)

பார்ப்பதிப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௪௧௦.

# மேருப்படலம்.

பன்னருஞ்சிறப்பின்மிக்கபனிவரையரசன்றன்பாற்
கன்னியம்புதல்வியாகிக்கௌரிநோற்றிருந்தகாலைத்
துன்னியவவுணர்சூழ்ச்சூரபன்மாவாம்வெய்யோ
னிந்நிலவரைப்பினண்டத்திறைவனேயாகியுற்றான். (௧)

மற்றதுபோழ்திற்றொல்லைமறைப்பொருள்வடத்தின்பாங்கர்ப்
பெற்றிசேனகனாதிமுனிவரர்பின்னும்பன்னா
ளற்றமிறவஞ்செய்தெந்தையருளினாற்கயிலைநண்ணி
முற்றுணர்நந்திபோற்றுமுதனிலைவாயில்புக்கார். (௨)

நோன்மையின்முனிவரானோர்நுவலருங்காட்சிநந்தி
தான்முறைவணங்கிநிற்பவனையவன்கருணைதன்னால்
வான்மலிகடவுட்கோயின்மந்திரங்கொண்டுசெல்ல
நான்முகன்முதலோர்க்கெய்தாஞானநாயகனைக்கண்டார். (௩)

மொழியதுதவறல்செல்லமுற்றுடல்பொடிப்புக்கொள்ள
விழிபுனல்பெருகதீசேர்மெழுகெனவுள்ளம்விள்ள
வழகியமறைக்குமெட்டாவாதிநாயகனைநோக்கித்
தொழுதனருவகைபூத்துத்துள்ளினர்துளக்கமுற்றார். (௪)

மண்ணவரமரர்யாரைவணங்கினுமவைகளெல்லா
நண்ணியபரமன்றாளினாற்பெருந்தவத்தினோருந்
தண்ணளிநெறியிற்பல்காற்றாழ்ந்தனரெழுந்துநின்று
பண்ணிசைமறைகடம்மாற்றுதித்திவைபகர்தலுற்றார். (௫)

இருட்பெருங்கடலுள்யாமத்தெறிமருத்திடைப்பட்டாங்குப்
பொருட்பெருங்கடலாம்வேதம்புடைதொறுமலைப்பவிந்நா
ளருட்பெருங்கடலேயெய்த்தேமமைந்திலதுணர்வியாங்கண்
மருட்பெருங்கடலினீங்கும்வண்ணமொன்றருடியென்றார். (௬)

நவையறுதவங்களாற்றிநல்லருள்படைத்ததொல்லோ
ரிவைபுகன்றிடலுமன்பர்க்கெளிவருங்கருணைவள்ள
லவர்முகந்தெரிந்துநுங்களறிவமைந்தடங்குமாறு
தவலருஞ்சிறப்பினன்னூல்சாற்றுதுமிருத்திரென்றான். (௭)

என்றிவையருளவெந்தையிணையடிதனாதுமுன்னர்
நன்றுணர்காட்சிகொள்ளுநால்வருமிருந்தாரங்கட்
சென்றிடுநந்திப்புத்தேள்சிறப்புடைவதனநோக்கிக்
கொன்றையந்தொடையல்வேய்ந்தகுழகனொன்றியம்புகின்றான். (௮)

பூங்கணைக்கிழவனன்றிப்புங்கவர்யார்போந்தாலு
மீங்குறத்தருதியல்லையீதுனக்கடைத்ததென்ன
வாங்கதுபுரிவனென்னாவமலனையிறைஞ்சியங்க
ணீங்கியக்கணத்தினந்திநெறிமுதல்போற்றல்செய்தான். (௯)

நந்திமுற்கடையைப்போற்றஞானநாயகனுமண்ணன்
முந்துறைசனகனாதிமுனிவரர்தொழுதுகேட்ப
வந்தமிலாகமத்தினரும்பதமூன்றுங்கூறப்
புந்தியதொடுங்குஞானபோதகம்போதியென்றார். (௧௦)

என்னலுநகைத்தியாதுமெதிர்மொழிபுரிந்தானல்லன்
பன்னுவதன்றான்மற்றிப்பரிசினாலிருத்தல்கண்டவ
ரந்நெறியாகுமென்றேயுனையவர்க்குணர்த்துமாற்றா
லுன்னரும்பரத்தின்மேலோனொன்றுசெயல்புரிதலுற்றான். (௧௧)

இருவருமுணராவண்ணலேனவெள்ளெயிறியாமை
சிரநிரையநந்தகோடிதிளைத்திடுமுரத்திற்சேர்கொள்
கரதலமொன்றுசேர்த்திமோனமுத்திரையைக்காட்டி
யொருகணஞ்செயலொன்றின்றியோகுசெய்வாரினுற்றான். (௧௨)

இனையதோர்தன்மைகாட்டியெம்பிரானுணர்த்தக்கண்டு
சனகனேமுதலாவுள்ளோர்தவலருஞானபோதம்
பனுவலினளவன்றென்னும்பான்மையைத்தெரிந்துமுக்கட்
புனிதனதருளாற்றத்தம்புந்தியினொடுக்கம்பெற்றார். (௧௩)

தத்தமுள்ளொடுங்கல்பெற்றதாபதகணத்தர்யாரு
முத்தொழில்புரியுமூவாமுதல்வனுமுக்கண்மூர்த்தி
மெய்த்தவவடிவமுன்னிமேவினர்சூழ்ச்சிமேலோன்
சித்திரம்புணர்த்தபாவைசெயலறவிருக்குமாபோல். (௧௪)

தற்பரனினையவாற்றாற்றுபதருணருந்தன்மை
யற்புதஞானபோதமளித்திடுங்கணமதொன்றின்
முற்படுகமலப்புத்தேண்முதலியவமரர்க்கெல்லாம்
பற்பலயுகங்கள்சென்றபிறர்க்கினிப்பகர்வதென்னோ. (௧௫)

இத்திறஞானபோதமென்றுதொனமுனிவர்க்கெந்தை
கைத்தலங்கொண்டுகாட்டுங்கணத்தினிலமரர்க்கெல்லா
மெத்துபல்லுகங்கள்சென்றவிழுமியகாஞ்சிதன்னி
லத்தன்மெய்குழைத்தநங்கையவன்விழிபுதைத்தநாட்போல். (௧௬)

காரணமுதல்வன்மோனக்காட்சியாலமரரெல்லாஞ்
சூரரமகளிர்தங்கடுணைமுலைப்போகமின்றி
யாரிடர்நிலைமைதன்னையடைந்தனரளக்கர்சூழ்ந்த
பாரிடையுயிருங்காமப்பற்றுவிட்டிருந்தவன்றே. (௧௭)

ஆரணன்றனதுமைந்தர்க்கரும்பெறன்ஞானபோத
மோரிறைகாட்டுமுன்னருலகெலாமொருப்பாடொன்றி
யீருடன்முயங்குமார்வமின்றியேயிருந்தயார்க்குங்
காரணன்சிவனேயென்கைகழறவும்வேண்டற்பாற்றே. (௧௮)

பிணைவிழைச்சூழ்தந்துய்ப்பப்பெருமறைவிதிவழாம
லணைவிழச்சடங்கிற்கொண்டவரிவையரோடுதேவ
ரிணைவிழைச்சியற்கைகூடாதிரங்கினர்கவற்சியெய்திப்
புணைவிழச்சலதியாழ்ந்துபுலம்புகொண்மாக்களேபோல். (௧௯)

வன்முலையணங்கினோரும்வானவர்யாருங்காமத்
தன்மையும்புணர்ப்புமின்றித்தளர்ந்தனர்வறிஞர்தம்பா
லின்மைகொண்டோர்கள்செல்லவீவதுகூடாவெல்லைப்
புன்மையொடிருவர்தாமும்புலம்புறுதன்மையேபோல். (௨௦)

பொற்புருக்குறைவின்றற்றும்புவனமேன்மகளிர்மைந்த
ரற்பொடுகலந்துகாமத்தரும்பயன்கோடறேற்றார்
தற்பரவடிகளுணைத்தன்மையாலலகையீட்ட
கற்புணர்வீழல்பெற்றுநணுகருந்தன்மையேபோல். (௨௧)

மாடகவெழாலையன்னபணிமொழி * மகளிர்மைந்தர்
கூடினரிருந்துமின்பங்கொண்டிலர்சிறூர்குழாமு
மாடவர்குழாமும்வாட்கணரிவையர்குழாமுமேனைப்
பேடியர்குழாமும்வெவ்வேறுற்றிபெற்றியேபோல். (உஉ)

இருந்திடவிரிஞ்சன்மாயோனிருவருமீசன்றன்பாற்
பொருந்திமுணர்ச்சிகொண்டுமுத்தியிற்புக்கசேயுந்
திருந்துசீர்வசிட்டன்சொல்லாற்சிலையெனப் † பன்னுணின்ற
வருந்ததிமாதும்போன்றாரடவர்மகளிரெல்லாம். (உங)

ஏமருபுவனமூன்றுமினிதருள்கமலக்கண்ணர்
பூமடமாதர்தம்பாற்புணர்கிலர்பொருவில்வேளுங்
காமருமகளிர்கூட்டங்கருதலனிவர்போற்சிந்தை
யாமையினொடுங்கல்பெற்றாராசையுள்ளோரகளெல்லாம. (உச)

மண்ணகத்துயிர்கண்முற்றுமாதிரத்துயிர்கண்முற்றும்
விண்ணகத்துயிர்கண்முற்றும்வேற்றகத்துயிகண்முற்றும்
பெண்ணகததாண்மைகூடுஞ்சிறுநலம்பிழைததஞானக்
கண்ணகததிறைவற்கண்டுகடைநின்றகாட்சியார்போல். (உரு)

நாகமார்சடிலத்தண்ணலாற்பெருந்தவருமுய்ய
யோகுசேர்நிலைமைகாட்டுமொருகணததுயிரின்பொம்மல்
வாகைவேடானுநிற்கமையலும்புணர்ப்புமற்ற
வாகையாலகிலமெல்லாமவனென்கைதெரிந்ததன்றே. (உசு)

சிலையொடுபகழிவாடத்திருமதிக்குடைசீர்குன்ற
வலிதளர்வெய்தத்தென்றன்மறிகடற்சுறவுதூங்க
வலைபுரியானைநீங்கியாடன்மாமதனுமாதின்
கலவியதொழிந்தானென்னிற்பிறர்செயல்கழறற்பாற்றோ. (உஎ)

சாலிகள்வளருமெல்லைதடம்புனல்வறுமைத்தாக
வாலிதுகுரல்வாங்காதுவருததொடுமொய்வதேபோன்
மேலவனருளாற்போகம்வெறுத்தலிற்கருமல்கினறி
ஞாலமன்னுயிர்கண்முற்றுநாடொறுங்குறைந்தவன்றே. (உஅ)

முள்ளரைமுளரிப்புத்தேண்முதற்புரிதுணையேயனறித்
தள்ளருமுயிர்கள்பின்னுந்தலைததலைமல்காதுற்ற
தெள்ளிதினுலகமீன்றதேவியின்றாகியீசன்
வெள்ளியகையிலைதன்னின்மேவியமேலைநாட்போல். (உகூ)

இம்முறைநிகழநாதனீரிருதவத்தினோர்க்கு
மெய்ம்மைகொளுணர்ச்சிகாட்டிவீற்றிருந்தருளுமெல்லை
தெம்முயல்சூரன்றீங்குசெய்தலான்மகவான்வானோர்
தமமொடுந்துறக்கம்விட்டுச்சசியொடுந்தரணிபுக்கான். (௩௦)

மேகமூர்கடவுள்வெள்ளிவெற்பினிலேகிமுக்க
ணேகநாயகனைக்காணுமெல்லையின்றாகமீண்டு
சோகமோடம்பொன்மேருத்துன்னியேசூரன்மைந்தன்
மாகநாடழித்துச்சேயைச்சிறைசெய்தவண்ணந்தேர்ந்தான். (௩௧)

---

* பணிமொழி - மெல்லியமொழி. † சிலையென - கல்லைப்போல அசைவற.

தமனியமேருவெற்பிற்றன்னுளமொருப்பாடெய்த
விமலனையுன்னிப்பன்னாளெண்ணிலதவமுழந்தவோடு
மிமில்விடையிசைக்கொண்டங்கணெம்பிரானேகக்காணாஉ
வமரர்கோன்வணங்கிப்போற்றவனையவனருளிச்செய்வான். (௩௨)

நொந்தனையளப்பில்காலநோற்றனையாற்றதீர்ந்தா
யிந்திரனைக்குவேண்டிற்றென்னையதியம்புகென்று
வந்தமிலறிவின்மேலோனறிகிலன்போலக்கேட்ப
வந்தனைபுரிந்துபோற்றிமகபதிபுகலலுற்றான். (௩௩)

பன்னரும்பழிசேர்சூரன்பூருவரற்படுத்திப்பின்ன
ரென்னொருபுதல்வன்றன்னையிமையவர்பலரைவாட்டித்
தன்னகர்ச்சிறையிட்டெம்மூர்தழல்கொளீஇத்தவறுசெய்தா
னன்னவன்றன்னையட்டேயளித்தியாலெம்மையென்ன. (௩௪)

மெய்ம்மையதகன்றதக்கன்வேள்வியினிருந்தபாவ
மும்மிடையிருந்ததற்றானேதகவுழந்தீர்மேனா
ணம்மிடையொருசேய்வந்துதானுகிவெஞ்சூரைக்காதி
யிம்மெனவும்மைக்காப்பனெனப்புகன்றிறைவன்போனான். (௩௫)

மறைந்தனனிறைவனேகமகபதியிரக்கமெய்திக்
குறைந்தனனுணர்வுதுன்பங்கூர்ந்தனன்குமரனங்கட்
பிறந்துமைக்காப்பனென்றேபிரானருள்புரிந்தபெற்றி
சிறந்ததன்மனத்திலுன்னித்தேறினனுவகைசெய்தான். (௩௬)

மாசறுகாட்சிகொண்டமாதவர்க்கருளியெங்கோன்
றேசறுகயிலையுற்றானுமையவளிமையஞ்சேர்ந்தா
ளாசறுகுமரனன்னாக்கடைவதெத்தன்மையென்று
வாசவனிருந்துநாடிமனமிசைக்கவலைகூர்ந்தான. (௩௭)

மயர்வொடுதுறக்கமன்னன்மனோவதியென்னுமாண்டை
வியனகரெய்தியாங்கண்வீற்றிருந்தருளும்பொன்னி
னியன்முறைமனைவிதன்பாலில்வினையிருத்தல்செய்தாங
கயனுறுகடிமாண்கோயிலடைந்தனனமரரோடும். (௩௮)

இனையதோர்காலைமுக்கணெம்பிரான்ஞானபோத
முனிவரர்க்குணர்த்திவைகுமுறையினற்படைப்பின்றுகித
துனியொடுவேதாவைகுந்தொன்முறையவையைநண்ணி
யனையவன்கழன்முன்றாழூஉவளப்பிலவழுத்திநின்றான். (௩௯)

கிற்றலுமகவான்றன்னைநீடருள்புரிந்துநோக்கிப்
பொற்றனிக்கமலமேய்புங்கவர்முதல்வன்வானோர்
கொற்றவவந்ததென்னைகூறுதியென்னலோடுஞ்
சொற்றனன்சூரபன்மன்செய்திடுந்துன்பமெல்லாம். (௪0)

வெய்யதோர்சூரன்செய்கைவிளம்பியேமுனிவர்க்கீச
னையமிலுணர்வுகாட்டியமர்வதுமுரைத்துத்தான்பின்
செய்யுறுதவங்கண்டன்னானருளியதிறனுஞ்செப்பி
யுய்வதோர்பரிசதென்றேவும்பரும்யானுமென்றான். ௧)

என்றலுமலரோன்கேளாவெவர்க்குமேலாகுமீச
னென்றியவருளினோனுமுற்றவர்க்குதவுவோனு
மன்றியுமுறைசெய்வோனுமாதலின்முனிபோல்வெள்ளிக்
குன்றிடையெம்மையாளுங்குறிப்பின்வீற்றிருந்தானன்றே. (௪௨)

செங்கண்மாலுநானுந்தேடுதற்கரிதாய்நின்ற
வெங்கடம்பிராற்குமேலாவெண்ணவோர்தேவுமுண்டோ
வங்கவன்ஞானபோதமறிவருக்குணர்த்திவைக
னங்குறைமுழுதுமாற்றுநல்லருளாகுமன்றே. (௪௩)

படர்மதிமிலைச்சுஞ்சென்னிப்பகவனாருயிர்களெல்லா
மடுவதும்வருத்தந்தீர்க்குமாரருளானவாபோற்
கொடியவெஞ்சூரன்றன்னைக்கொண்டெமக்கலக்கண்செய்கை
விடலரும்பவப்பேறூர்த்திவீடருள்கருணையன்றே. (௪௪)

பெற்றிடுங்குரவரானோபிள்ளைகடம்பானோயொன்
றுற்றிடிற்பிறரைக்கொண்டுமுறுதுயர்செய்துதீர்ப்பா
மற்றவர்தம்பாலனபோவன்கனோவதுபோனம்பாற்
பற்றியபவங்கடீரப்பான்பரமனுமிவைகள்செய்தான். (௪௫)

தெருமருகின்றநம்பாற்றீங்கெலாநீங்குமெல்லை
யொருசிறிதணுகிற்றூகுமாதலாலுணாவினமேலோன
பரிவொடுநின்பாலவந்துபரிசிவையருளிப்போனா
னிருவினைப்பௌவவேலையேறினம்போலுமன்றே. (௪௬)

ஆதலினிறைவனேமேலருள்செயுமதற்கியாமுந்
தீதறமுயலுமாறுசிறிதுளதிவற்றைமாயோற்
கோதினம்வேண்டுஞ்செய்கையொல்லையிற்செய்துமென்று
வேதமில்கமலப்புத்தேளிருக்கைவிட்டெழுந்தானன்றே. (௪௭)

வேறு.

அன்னகாலையதுநன்றுநன்றெனாத, துன்னும்வானவர்சூழலொடிந்திரன்
பின்னராகப்பெயர்ந்துடன்வந்திடச, சென்னிநான்கினன்செல்லுதன்மேயினான்.

ஞாலம்யாவையுநல்கியபுங்கவன், வாவிதாந்தன்மனோவதிநீங்குறா
மேலைவைகுந்தமென்னும்வியனக, ராலயதினைகனகடையேகினான். (௪௯)

அங்கவெல்லையதுகண்டுநேமியுஞ், சங்குமேந்தியதாளையங்காவலன்
செங்கண்மாயன்முன்சென்றுவிண்ணோருடன்,பங்கயத்தன்படர்ந்ததுசெப்பினான்.

பணிலமேந்தியபண்ணவனன்னரைக், கொணர்தியாலெனக்கூறிவிடுத்துழி
யிணையில்காவலனுய்த்திடவிந்திரன், கணமொடேகினன்காசினிநல்கியோன். ()

பொருவின்மாமுனிபுங்கவர்போற்றுதன், னுருவுகொண்டவுலப்பறுகண்ணர்கண்
மரபினேத்தமணிப்பணிப்பீடமே, லரியிருந்தவவைக்களநண்ணினான். (௫௨)

அன்னமூர்தியமருலகாளுநு, மன்னனோடுமவ்வானவர்தம்மொடும்
பன்னகாசனப்பங்கயக்கண்ணவன், பொன்னின்மாணடிபோற்றிவணங்கினான்.

தரையளந்திடுதாளினனவ்வழிக், கருணைசெய்துதன்காதலனாகிய
பிரமனுக்கொருபீடிகைபெற்றியா, லருளியங்கணவணையிருத்தினான். (௫௪)

குல்லைமாமுடிக்கொண்டவனத்துணை, யல்லிமாமலரண்ணலைநோக்குறீஇ
யொல்லுமின்விதியூதிலதாகியே, செல்லுகின்றகொலென்றலுஞ்செப்புவான். (௫௫)

கனகனச்சுறக்கந்திடைவக்தெழு, மனகவித்திறங்கேட்கவறிவுடைச்
சனகன்முற்படுதாபதர்நால்வரு, மெனகருத்திடைமுற்பகலெய்தினர். (௫௬)

அறிவின்மிக்கவனையரைநோக்கியான், பெறுவதாமிப்பெருந்தொழிலாற்றியீண்
டுறுதிரென்னவுளத்ததுகொண்டிலர், முறுவல்செய்துமொழிந்தனரிவ்வுரை. (௫௭)

பாசவன்சிறைப்பட்டுப்படைப்பெனப், பேசலுற்றபெருந்தளைபூணல
மீசன்மாணடியெய்துதும்யாமெனு, மாசில்காட்சியர்வல்விரைந்தேகினர். (௫௮)

மாதவத்தினைமைந்தர்களாற்றலு,மாதிநாயகனவ்வுழிவந்துமக்
கேதுவேண்டியதென்றலுமெண்ணிலா, வேதவுண்மைவிளம்புதியாலென்றார். ()

என்றலோடுமிறையவன்வெள்ளியங், குன்றமீதுதென்கோட்டிடைநிற்புறு
மொன்றொராலினிழலுற்றுமறையெலா, நன்றுணாத்திடநால்வருந்தேர்ந்தனர். (௬0)

முந்தைவேதமுழுதுமுணர்த்தியே, யெந்தையேகவிருநிலம்போந்துதஞ்
சிந்தையொன்றுந்திறனரிதாதலி, னுந்துபின்னருநோற்றலைமேயினர். (௬௧)

பின்னுமைந்தர்பெருந்தவமாற்றியே, தொன்னலம்பெறுதூயவுளத்தரா
யென்னையாளுடையீசனருளினுன், மன்னுவெள்ளிவரையிடையேகினர். (௬௨)

ஏகல்பெற்றிமெக்கட்கினிதுளம், பாகமுற்றபரிசுணர்ந்தெம்பிரா
னுகமத்தினரும்பதமுன்றையு, மோகைபற்றியுணர்வகைகூறியே. (௬௩)

கூனன்மாமதிக்கோடுமிலைச்சிய, வானநாயகன்மற்றவர்காண்டக
ஞானபோதநவிலருந்தனமையான், மோனமேயமுதற்குறிகாட்டினன். (௬௪)

அந்தவெல்லையரனருள்கண்டுதம், புந்தியொனறியப்புகவன்றுண்மலர்
சிந்தைசெய்துசெயலறறுவைகினா, முந்தியாப்புறமுததளைமூட்டற. (௬௫)

வேதநாயகன்மெய்த்தவாக்கே‥கணம, போதயோகின்பொருண்மையைக்காட்டுழி
யோதலாகுமுகம்பலசெனறன, சீதவானதிசோந்ததொனனுளினே. (௬௬)

அன்னதன்னையகன்றரன்யோகிபோ, லெனனதுஞ்செயலின்றியிருத்தலான்
முன்னையாண்பெண்முயக்கமதின்மையாய், மன்னுயிர்தொகைமல்கலின்றுயதே.

நவிறலென்னினிஞாலம்விசும்பளா, ரிவறுகாமப்புணர்ச்சியதின்றியே
கவறல்கொண்டுகலங்கஞரெயதினர், தவறல்கொண்டதுநல்குந்தனிச்செயல். ()

நல்கல்பெற்றதமியனுநாமகட், புல்கல்பெற்றபுணர்ச்சியின்றுகியே
யல்கல்பெறறவருந்தவயோகரி, னுல்கல்பெற்றனனுண்மையிதாகுமால். (௬௯)

நிற்கவிங்கிதுநித்தன்வரத்தினு, லொற்கமில்வளனுண்டிடுவெய்யகு
ரெற்குநித்தனுமேவலொன்றிட்டனன், சொற்கநாட்டிற்றுயரினைநாட்டினன். ()

தேசுகீங்குறுதேவரையீண்டுள, வாசவன்றனைமாதிரத்தோர்களைப்
பாசனத்தொடுபெற்றினனித்தனுங், கூசலின்றிக்குற்றேவல்கொண்டானரோ. (௭௧)

நிறைபுரிந்தநிலவினைவாளரா, மறைபுரிந்தெனவானகத்தோருட
னிறைபுரிந்தவிவவிந்திரன்மைந்தனைச், சிறைபுரிந்தனன்றீத்தொழிலாற்றியே. ()

நிரந்தபல்லுயிர்தங்கட்குநித்தனு, மரந்தைமல்கவறிலன்போலவே
யிருந்தனன்சிவனெனனினிச்செய்வது, விரைந்துகூறுதியென்றுவிளம்பினன். ()

அரியதத்துவமையைந்தின்பேதமு, மருபினுடினர் * வாலுணர்வெய்திய
திருவினாயகன்செங்கமலத்திகழ், பிரமன்மாமுகநோக்கினன்பேசுவான். (எச)

வேறு.

ஆவிகளனைத்துமாகியருவமாயுருவமாகி
மூவகையியற்கைத்தானமூலகாரணமதாகுந்
தேவர்கடேவன்யோகின்செயன்முறைகாட்டுமென்னி
லேவர்கள்காமங்கன்றிதொன்மைபோலிருக்குநீரார். (எரு)

ஊழ்வினைநெறியான்முன்னமொருபெருவேள்வியாற்றித்
தாழ்வினையடைந்ததக்கன்றனபுடையிருந்தோதம்பாற்
சூழ்வினையெச்சமுற்றுமருத்தியேதொலைத்ததொல்லை
வாழ்வினையருளநாதன்மனத்திடைநினைந்தானன்றே. (எசு)

சூரெனுமவுணற்காற்றல்புரிந்ததுஞ்சுராகள்யாருஞ்
சார்வருந்திறத்தாலீசன்றவத்தருக்குணாவுகாட்டி
யாருயிரெவைக்குமின்னலாக்கியவாறுந்தூக்கிற்
பேருண்முறையேயன்றிப்பிறிதொருசெயலுமன்றால். (எஎ)

முனிவருக்குணாவுகாட்டுமோனத்தைமுதல்வனீங்கிப்
பனிவரையணங்கைமேவிற்படைப்பயனமுற்றுமனாக்
கினியொருகுமரன்றோன்றிற்சூர்கிளையெனைத்துமபோனறுந்
துணியுறுமுலகமெல்லாந்தொன்மைபோலுய்யுமாதோ. (எஅ)

அத்திறமுற்றுமாறென்றறைகுவனகிலந்தன்னி
லெத்திறத்தருமால்கொள்ளவெய்திடுங்காமன்றன்னை
யுய்த்திடினமுனிவாதங்கட்குணாவுசெய்மோனநீங்கிச்
சத்தியைமணந்துசேயைத்தந்திடுமெந்தையென்றான். (எகூ)

பதுமபீடிகையோனன்னபரிசுதேர்ந்துவகையெய்தி
யிதுசெயன்முறையேயெந்தாயேற்றனபுகன்றாயென்ன
வதுபொழுதவனைநோக்கியச்சுதனமலன்றன்பான
மதனனைவிளித்துவேண்டிவிடுத்திநீவல்லையென்றான். (அ0)

என்னலுமலரோனுள்ளத்திசைவுகொண்டெழுந்துமாயன்
பொன்னடிவணக்கஞ்செய்துவிடைகொடுபுலவரோடு
மன்னெடுமங்கணீங்கிமனோவதியதன்பாற்சென்று
தன்னகரடைந்துகஞ்சத்தவிசினவீற்றிருந்தானன்றே. (அக)

மேருப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சகக.

---

* தத்துவம் இருபத்தைந்தெனவும், இருபத்துநான்காந்தத்துவமாகிய குணதத்துவத்தின்மேல் இருபத்தைந்தாந் தத்துவம் வாசுதேவனென்றொருவனுளனென்னவும், அவனே பரம்பொருளெனவும், கூறுவோர் பாஞ்சராத்திரிகளென்றறிக.

# காமதகனப்படலம்.

---

இந்திரன்வானவரீட்டமொடேகி, முந்துறுகஞ்சமுகட்டிடையுற்றோ
னைந்திறனுமியவாசகவில்வேள், வந்திடுமாறுமனத்தினினைந்தான். (க)

நினைந்திடுகின்றுழிநீணிறமாயோன், முனைந்தருகின்றமுரண்டகுவில்வேள்
மனந்தனிலுன்னுமலர்ப்பகவன்முன், னினந்தருசூழலொடிம்மெனவந்தான். (உ)

மாமறையண்ணன்முன்வந்துபராவித், தாமரைநேர்தருதாடொழுதென்னை
நீமனமீதுநினைந்ததெனென்னக், காமன்வினவவயன்கழறுற்றான். (ங)

கங்கைமிலைச்சியகண்ணுதல்வெற்பின், மங்கையைமேவநின்வாளிகடேவி
யங்குறைமோனமகற்றினையின்னே, யெங்கள்பொருட்டினிலேகுதியென்றான். ()

வேதனிவ்வாறுவிளம்பியகூற்றாந், தீதுறுபொங்கழல்செய்யவள்சேயோன்
காதிடையேநெறியாக்கடிதிற்போ, யேதமிலுள்ளமெரித்ததையன்றே. (ரு)

கிட்டியரன்செயல்கெடுசெயெனனுங, கட்டுரையேவருகாமனுளங்குஞ்
சுட்டதெனிற்பிறைசூடியவனமெய, யட்டிடுகின்றதுமற்புதமாமோ. (சு)

இத்திறமாமலரேந்தலியம்பக், கைததுணைகொண்டிருகனனமும்வல்லே
பொத்தியினைந்துபுராந்தகனுமஞ், சித்தசவேளுரைசெய்தனனம்மா. (எ)

ஈட்டுறுபல்பவமெய்துவதோர்சொற, கேட்டனனென்றுகிலேசமதாகி
வாட்டியமென்மலர்போலணிமாழ்கிப், பூட்டுவிலண்ணல்புகன்றிடுகின்றான். (அ)

வேறு.

வன்கண்ணருமாசறுகாட்சியர்பா, னன்கண்ணுறினுய்யுநலம்புகல்வா
ருன்கண்ணுறினீததவறோதினையா, லெனகண்ணடிகட்கிலையோவருளே. (க)

வன்னப்புவிமங்கையைமாமலர்மேற்,பொன்னைப்பிறரைப்புணர்வுற்றிடுவான்,கன்
னற்சிலைபூங்கணைகொண்டமர்செய, தென்னததனைவென்றிசைகொண்டிலனோ.()

வெள்ளைக்கமலத்திலையமெய்யுறவுந், தெள்ளுற்றணிசெய்ததிலோத்தமைபா
லுள்ளப்புணர்வுற்றிடவும்முனையான, பிள்ளைச்சமர்செய்திசைபெற்றிலனோ. (கக)

சீர்பெற்றிடுசெந்திருவைத்திருமான், மார்பிறகுடியாயுறவைத்திலனோ
கார்பெற்றவிழிக்கலைமங்கையையுன், னோபெற்றிடுநாவிலிருததிலனோ. (கஉ)

தண்ணின்றகுழற்சசியென்றுரைசெய், பெண்ணின்றலையுற்றிடுபெற்றியலால்
விண்ணின்றலைவற்குளமெய்ம்முழுதுங், கண்ணென்றிடுபல்குறிகண்டிலனோ.(கங)

விசையுற்றிடுசெங்கதிர்மேலவர்கீழ்த், திசையுற்றவராகவொருசேயிழைபோ
லிசையுற்றிடுபாகனிடைப்புணரா, வசையுற்றிடுபொன்மைமயக்கிலனோ. * (கச)

---

* சுவர்க்கத்தில் இந்திரனது சபையிலே அரமபையர்கள் செய்த நிருத்தத்தைச் சூரியனுடைய தேர்ப்பாகனாகிய அருணன் பெணவடிவங்கொண்டு சென்று பார்த்தான். நிருத்தமுடிந்தபின், இந்திரன் 'அருணனுடைய பெண்வடிவத்தைக் கண்டு மயல்கொண்டு புணர்ந்தான்,' புணர்ந்தபின், அருணன் முன்னைவடிவங் கொண்டு சூரியனிடத்துச் செல்ல, சூரியன் "நீ இதுகாறுந்தாழ்த்ததென்னை" என்றான். அருணன் நிகழ்ந்ததைச சொல்ல, சூரியன் "அவ்வடிவத்தைக் கொள்ளக்கடவாய்" என்றான.' அருணன் அவ்வடிவங்கொள்ளச் சூரியனும மயல்கொண்டு புணர்ந்தான்.

கதனத்தொடுவெந்துகலுந்தவர்யா, விதகட்புறுமாடிதியென்கணையான்
மதனத்தொடுதேசிகன்மாதையுருப், புதனைத்தருபான்மைபுணர்த்திலனோ. (௧௫)

முற்றேதின்மறைத்தொகைமூதறிவாற், கற்றேதுமுணர்ந்திடுகோட்சிபெறு
நற்றேவர்கள்யாரையுநாரியர்தங், குற்றேவல்செயும்படிகூட்டிலனோ. (௧௬)

மறைதேரும்வசிட்டன்மரீசிமிகக், குறிதாமுனியத்திரிகோதமனல்
லறிவார்துயர்காசிபனாதியராந், துறவோர்தமதாற்றலொழித்திலனோ. (௧௭)

மன்னான்மரபூற்றிடுமானவரைப், * பின்னாகியமும்மைகொள்பேதகரை †
மின்னார்கண்மயக்கினில்வீட்டிலனோ, வென்னானைகடந்தவர்யாருளரே. (௧௮)

அறைபெற்றிடுமித்திறமானவெலா, முறைபெற்றிடுமென்னின்முடிந்திடுமோ
பிறைபெற்றிடுகின்றபெருஞ்சடையெம், மிறைபெற்றிடுசெத்தியயற்றிடுமே. (௧௯)

மாலேமுதலாகியவானவர்தம், பாலேயடல்வாகைபடைப்பதலான்
மேலேநதிசூடியமேலவன்மேற், கோலேவினன்வென்றிடல்கூடுமதோ. (௨௦)

ஐதாகியசீர்கொடவன்முறைசெய், நொய்தானவர்போலநுவன்றனையால்
வெய்தாமழலாகியமேலவன்மே, லெய்தாலுமென்வாளிகளெய்திடுமோ. (௨௧)

கையுந்நகையுங்கதிரார்விழியு, மெய்யுந்தழலாம்விமலன்றனையா
னெய்யும்படிசென்றிடினிவ்வுயிர்கொண், டுய்யுந்திறமுமுளதோவுரையாய். (௨௨)

பற்றேதுகலற்றபரம்பொருளை, யெற்றேமயல்செய்குவதீசனையு
மற்றோரெனநின்னினமதித்தனையாற், சற்றேவவனாற்றறவிர்த்திடுவே. (௨௩)

சூறாவளிவைகியசூழலின்வா, யேறாவொருபூளையெதிர்ந்துளதே
னீறாடியமெய்யுடைநின்மலன்மேல், வீறாய்வினையேன்பொரமேவுவனே. (௨௪)

ஆறுற்றிடுசெஞ்சடையண்ணலுடன், மாறுற்றவருண்டெனின்மற்றவர்தா
மூறுற்றனரல்லதுளதுயர்கொண், டூறுற்றனரல்லதிருந்துளர்யார். (௨௫)

இந்நாரணனாதியர்யாவர்களு, மந்நாளமலன்பணியாற்றிடலு
முன்னாவவர்சிந்தனைமொய்ந்நகையா, லொனனாபுரமட்டதுணர்ந்திலையோ. (௨௬)

எந்தாயருளெனவொருரிளங்கும்ரன், வந்தாதியையேத்தலும்வைதுசினக்
கொந்தாரழல்போல்வருகூற்றுவனை, யந்தாள்கொடுதைத்ததறிந்திலையோ. (௨௭)

முன்னைப்பகனீயுமுருக்தனுமாய்ப், பன்னற்கரிதாயபரம்பொருள்யா
மென்னச்சிவனெய்தியிகழ்ந்தவுனைச், சென்னித்தலைகொண்டதுமோர்கிலையோ. ()

அடனமேவுசலந்தரனாதியராய்ப், படிமேலுளதோர்பஃறானவர்தா
முடிவாரரனோடுமுரண்டிடலுங், கெடுமாறுபுணர்த்ததுகேட்டிலையோ. (௨௯)

வீடெய்துறுநின்மகன்வெள்விகலத், தூடெய்தினர்யாவருமொப்பிலரன்
மாடெய்தியவீரனின்மானமொரீஇப், பாடெய்தியபுன்செயல்பார்த்திலையோ. (௩௦)

அண்டாதவகந்தையொடாழியின்வாய், விண்டானவரச்சுறமேவிட
முண்டானிகழ்கங்கையையோரணுவிற், கொண்டானவன்வன்மைகுறிக்கிலையோ.

தரியாவுளமால்கொடுதென்னிகழு, மரியோடுகைம்மாவையடற்புலியை
யுரியாமிசைபோர்வையுடுக்கையெனப், பரியாவரனுற்றதுபார்த்திலையோ. (௩௨)

---

* நான்மரபுற்றிடுமானவரென்றது பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னு நான்குவருணத்தாரை.

† மும்மைகொள்பேதகரென்றது அநுலோமர், பிரதிலோமர், சங்கரசாதியார் என்னு மூன்றுசாதியாரை.

ஓரார்தன துண்மையையுள்ளமிசை, யாராயினுமாற்றவகத்தைபெறின்
வாராவவர்தம்வலிமாற்றிடுமாற், றோராய்கொல்பரஞ்சுடர்செய்கையதே. (௩௩)

இறுகின்றகடைப்பகலீறிவுழ்தோர், கறைதுன்றுமிடற்றிறைகண்ணினும்வீழ்
பொறியொன்றதனாற்பொடிபட்டிடுநீ, யறிகின்றிலையோவகிலங்களுமே. (௩௪)

இப்பெற்றியனாகியவீசனையென், கைப்பற்றியவிற்கொடுகெந்தமல
ரப்பிற்பொருகின்றிலனாருயிர்மேன், மெய்ப்பற்றிலரிச்செயல்வேண்டுவரே. (௩௫)

மேனாளிலந்தரமெல்லியலா, வானவருடன்னையளித்தொருபாற்
றானாகவிருத்தியதற்பரனை, நானுமயல்செய்வதுநன்றிதுவே. (௩௬)

வேறு.

என்னாமதவேளிசையாமறுத்திடலும்
பொன்னார்கமலப்பொருட்டுதெதலைவந்த
முன்னானவேதாமனக்கவலைகொண்டுசெல்போ
துன்னாநெடிதேயுயிராவுரைக்கின்றான். (௩௭)

வெண்மையறிவாற்றமைவியக்கும்விண்ணவர்பா
லண்மையிலனாகுமண்ணலியல்கூறினையா
துண்மையிதுவாமுவனைப்பொருவதுவு
மெண்மையதுவோவெவாக்குமரிதன்றோ. (௩௮)

அன்னபரிசேயெனினுமடைந்தோர்த
மின்னலகற்றுமிறையருளாலிக்கரும
முன்னின்முடியுமொழிந்தோரானமுற்றுவதோ
முன்னினிதற்குமுதற்காரணநீகாண். (௩௯)

எல்லாசெயலுமிறைவனியற்றுவதே
யல்லாதிலையோரணுவுமசையாதெவையு
நில்லாதருளின்றேனீயினறவன்பாலிற்
செல்லாயுனதுசெயலுமவனசெய்கையதே. (௪0)

செம்மாந்துதற்புகழுந்தேவாகுழுவும்மருள
வெமமான்பிறன்போலிருந்தோர்துரும்புநிறீஇ
யமமாதின்செய்கையனைத்துமெனக்காட்டினனே *
நமமானுமுற்றுஞ்சில்வென்கைநாணன்றோ. (௪௧)

---

* முன்னொருகாலத்திலே தேவர்களும் அசுரர்களும் யுத்தஞ்செய்தபொழுது தேவர்களை அசுரர்கள் வென்றார்கள். பின்பு சிவபெருமானுடைய திருவருளினால் அசுரர்களைத் தேவர்கள் வென்றார்கள். வென்றபின்பு, தேவர்களெல்லாரும் தங்கள் தங்களையே புகழ்ந்து செருக்கடைந்து தங்களுள்ளே பிணக்குற்றபொழுது, சிவபெருமான் ஓரியக்கவடிவங்கொண்டு எழுந்தருளிவந்து, அவர்களெதிரே ஒரு துரும்பை நட்டு, இருமாந்திருந்துகொண்டு, அவர்களைநோக்கி "இத்துரும்பைத் துணிக்க வல்லவனெவனோ அவனே அசுரர்களை வென்ற வீரன்" என்றார். இந்திரன் முதலிய எட்டுத்திக்குப்பாலகர்களும் பிரமவிட்டுணுக்களும் தனிததனியே தத்தம்படைக்கலத்தை விடுத்து, அத்துரும்பை அசைக்கவும் ஆற்றலில்லாதவர்களாகிச் செருக்கழிந்து, அவ்வியக்கரை நோக்கி "நீர் யாவர்" என்றார்கள். உடனே அவவியக்கர் மறைந்தருளினார். உமாதேவியார் தேவர்களெதிரே வெளிப்பட்டு இயக்கவடிவங்கொண்டு எழுந்தருளிவந்தவர் சிவபெருமான் என்று உணர்த்தியருளினார்.

பாடுதிகழ்பாவையல்லுயிருமல்லனவு
மாடல்புரிவிப்பானருவுருவாய்நின்றபர
னாடலவனையின்றிநம்மாலொன்றாகவற்றோ
வேட்விதனிலைமையிந்நாளுமோர்ந்திலையோ. (௪௨)

கையம்புபூட்டிக்கருப்புச்சிலைகோட்டி
யெய்யும்படிவழிக்கொண்டேகாயிறுதியிலா
வையன்றனைநீயதுவுமவனருள்காண்
மெய்யங்கதற்கேதுமேனாளேகண்டனம்யாம். (௪௩)

ஈங்கிதுவுமன்றியெவரேனுந்தம்மடங்காத்
தீங்குபெறினுதவிசெய்யென்றிரந்திடலு
மாங்கொருவன்செய்யாததுமறுத்துதன்னுயிரைத்
தாங்கலுலகநடைதனக்குத்தக்கதுவோ. (௪௪)

என்னானுமோருதவியாதொருவன்யார்க்கெனினுந்
தன்னான்முடிவதெனிற்றானேமுடித்தறலை
சொன்னான்முடித்தலிடையாகுஞ்சொல்லுகினும்
பன்னாண்மறுததுப்புரிதல்கடைப்பான்மையதே. (௪௫)

எவரெனினுமிடருற்றனராகி
யோவில்குறையொன்றுளரேலதுமுடித்தற்
காவிவிடினுமறனேமறுத்துளரேற்
பாவமலதுபழியுமொழியாதே. (௪௬)

உய்கைபொருளாவொருவர்க்குமோருதவி
செய்கையிலனேற்சிறியோன்கழித்தபகல்
வைகலதுவோவறிதேயவன்வாழ்க்கை
பொய்கைமலர்ந்தகொட்டிபோலும்பொலிந்துளதே. (௪௭)

அந்நாரணனோடுமாமுற்றியமுனியைப்
பொன்னாடருளும்புலவோரிறையிரப்ப
வென்னாருமென்புவிருத்திரனுக்காவுதவித்
தனாருயிர்விட்டதன்மைதனைக்கேட்டிலையோ. (௪௮)

மேலொன்றுளதோவிளம்பவெவரெவர்க்கு
மூலந்தலைதெரியாமுன்னோன்கடலெழுந்த
வாலந்தனையுண்டமரர்க்கமுதளித்த
சீலந்தனைநீசிறிதுந்தெளிந்திலையோ. (௪௯)

தேக்குஞ்சலதியிடைத்தீப்போலெழுந்தவிடந்
தாக்கும்பொழுதுதளரேலெனவுரையா
வூக்கங்கொடுமாலொருகணநின்றேநம்மைக்
காக்கும்படிக்குக்கறுத்தசெயல்கண்டிலையோ. (௫௦)

ஆராயினுமொருவரன்பிற்றலைப்பட்டுப்
பேராதரத்தாற்பிறர்க்குதவிசெய்வாரேற்
றீராதவெந்துயரிற்சேர்தலேமாய்தலவை
பாரார்புகழேபயனென்றுகொள்வாரே. (௫௧)

சூரந்தனில்வலிசேர்சூரபன்மனைவலின்யா
மூருந்துயர்கொண்டுழுங்கின்றேழுன்னதினித்
தீரும்படிக்குச்சிவனொருசேயைத்தருவா
னோரைம்படைசெலுத்தவுன்னையாம்வேண்டினமே. (ருஉ)

ஆதலினாலெங்களலக்கணகற்றும்பொருட்டுச்
சாதல்வரினுந்தவரோபுகழ்செய்வா
ரேதுவரினுமெதிர்செல்வாரெம்பணியிற்
போதியினிமாறுபுகலேலெனவுரைத்தான். (ருக)

வேறு.

பங்கயப்பொகுட்டிருந்தபகவனீதுபுகறலு
மைங்கணைக்கரத்தினோனரந்தையெய்தியாதியாம்
புங்கவற்குமாறுகொண்டுபொருகிலேனிதன்றியே
யிங்கெனக்கடுத்ததொன்றியம்புசெய்வலென்றனன். (ருச)

என்னும்வேலையமரரோடிருந்தவேதன்முனிவுறா
நன்னயந்தழீஇயுரைத்தநமதுசொன்மறுததியா
லன்னபான்மைபுரியினுய்தியல்லதேலுனக்கியாந்
துன்னுசாபமிடுதும்யாதுதுணிவுசொல்லுகென்றனன். (ருரு)

வெய்யசாபமிடுதுமென்றுவெகுளியான்மொழிந்தகேட்
டையமேனிமதனவேளழுங்கிவெய்துயிர்த்தினிச்
செய்யலாவதென்னெனத்தெரிந்துசிந்தைதேற்றியே
வையகம்படைத்தவண்ணல்வதனநோக்கியுரைசெய்வான். (ருசு)

கேளிதொன்றுரைப்பல்வேதகேடுசூழினதுவாய்ச்
சூளின்மேலையியல்பகன்றுதன்புழந்துபடுதலிற்
காளகண்டன்முன்புசென்றுகடியவெய்யகணைகடூஉய்
மாளினுஞ்சிறந்ததம்மமற்றுமுய்யலாகுமே. (ருஎ)

செற்றநீர்மைகொள்ளலையசெஞ்சடைப்பிரானிடத்
திற்றைவைகலமரியற்றவேகுவேனியானெனக்
கொற்றவேளுரைத்தலுங்குளிர்ந்தபூவிருக்கைமே
லுற்றபோதன்மகிழ்சிறந்துளங்களித்துமொழிகுவான். (ருஅ)

பணிந்துசொல்லனாகிநாம்பணித்தவாபுரிந்திடத்
துணிந்தவாறுநன்றுநன்றுகூலிபாவினுனைவிடாத்
தணந்திடேக்தொடர்ந்துபின்புசார்துமஞ்சல்போகென
வுணர்ந்துகூறிமாரவேளையோவிலன்பொடேவினான். (ருகூ)

ஏவுகாலைமதனைவேள்வியிறைதெரிந்துமைந்தயான்
றேவரோடுதயருழந்துசிறுமைபெற்றதறிதியே
யோவில்வாழ்வுதருதியென்னினுமைமடந்தைதனையரன்
மேவுமாறுபுரிகெனவிரைந்துசெல்லநல்கினான். (சுO)

நல்கலுங்கரங்கள்கூப்பிநான்முகத்தனுலகோரீஇ
யல்குதன்புரத்துநண்ணியவவியற்கைகூறியே
யொல்குதேவியைத்தெளித்தொருப்படுத்திநறியதேன்
பில்குவாளியிட்டதூணிபின்னியாத்திறுக்கினான். (சுக)

கயக்கணின்றபூவின்மிக்ககாமகாண்டங்கன்னல்வில்
வியக்கமானபாரவில்லெடுத்துமொய்ம்பிலேந்தியே
தயக்கமுற்றுலாயசெய்யதண்ணெனன்மாவிளந்தளிர்
வயக்கடுங்கண்வாளமொன்றுமாமருங்குவைத்தரோ. (௬௨)

கோகிலங்களானவுங்குழாங்கொள்வேலையானவுங்
காகளங்கண்முரசமாய்க்கறங்கவோதம்யாவதுஞ்
சீகரங்களாயசைந்துசெல்லமீன்கேதன
மாகவும்பருலவவெண்மதிக்குடைநிழற்றவே. (௬௩)

பொருவில்கிள்ளையென்னுமாக்கள்பூண்டதென்றல்வையமே
விரதியோடுமேறிவேளிருந்ததொல்லையுலகினை
யரிதகன்றுகுறிகள்வெய்யவளவையின்றிநிகழவே
பரமன்வைகுகயிலையம்பருப்பதத்தையணுகினான். (௬௪)

கயிலைகண்டுதொழுதுதேரிழிந்துகாமவேடனக்
கயலின்வந்தபரிசனத்தையவணிறுத்திமாதுடன்
பயிலும்வில்லும்வாளியும்பரித்துவல்லியத்தினைத்
துயிலுணர்த்துமாவெனத்துணிந்துபோதன்மேயினான். (௬௫)

கூறுலாவுமதிமிலைந்தகுழகன்வைகுகயிலைமே
லேறியேதனதுகையிருந்தகார்முகம்வளைஇ
மாறிலேவுபூட்டியங்கண்வைகுபுள்ளுமாக்களு
மூறிலாதிருந்தகாமமுன்னுவித்தன்முன்னினான். (௬௬)

பொருவில்காமனின்னதன்மைபுந்திகொண்டுமற்றவண்
விரவுபுள்ளின்மீதினும்விலங்கின்மீதினும்மலாச
சரமெலாம்விடுப்பவாதிதனதுமந்திரதமுன்
னருளினோடிருந்தநந்தியடிகளன்னகண்டரோ. (௬௭)

கொம்மெனச்சினம்புரிந்துகொடியபூசன்மதனனு
தம்மியற்கையாமிதம்மசரதமென்றுநினைவுறு
வும்மெனத்தெழித்துரப்பவொலிகொள்புள்விலங்கின்மேல்
வெம்மையிற்செலாதுமாரன்விசிகம்விண்ணினின்றவே. (௬௮)

நிற்றலோடுமவ்வியற்கைநின்றுநோக்கிநெடியவேள்
கொற்றநீடுசூரலொன்றுகொண்டுகோபுரத்தலைத
தெற்றிமேலிருந்தநந்திதேவர்காப்புமாணையு
முற்றுநோக்கிநெடிதுயிர்த்துளந்துளங்கிவிம்மினான். (௬௯)

விம்மிநந்திதேவர்முன்விரைந்துசென்றுதாழ்ந்தெழூஉச்
செம்மைசெய்கருத்தனாய்த்திகழ்ந்துபோற்றெடுத்தனு
மிம்மலைக்கண்வந்ததென்னையெனவயன்புணாப்பெலா
மெய்ம்மையாவுணர்த்தலும்வினாவியீதுளங்கொள்வான். (௭௰)

வேதனாதியானதேவர்விழுமநோயகன்றிட
மேதுவால்விடுத்துளார்களிவனையீசன்யோகுறும
போதில்யாவர்வருகினும்புகாதுசெய்திமதனவேள்
சாதலெய்துவான்வரிற்றடோடலெனாவியம்பினான். (௭௧)

புன்மையாம்பசுத்தடிந்துபுரையில்வேள்வியாற்றியே
தொன்மைபோலெழுப்புமாறுசுருதிசொற்றவாறுபோன்
மன்மதன்றனைப்படுத்துமாதைவேட்டுமெற்றதன்
பின்முறைக்கணல்கவெம்பிரானினைந்தனன்கொலாம். (எ௨)

ஆகையாலிதருளதேயிவன்வரத்துமாணையென்
றோகையாலுணர்ந்துவேலைநோக்கியும்பராகுலம்
போகுமாறியற்றல்செய்தபொருவிலாதகருணைசே
ரேகநாயகன்றன்முன்னரேகல்வேண்டுமோவென்றான். (எ௩)

நந்திதேவனினையவாறுநவிலவேயுணர்ந்துவே
ளெந்தைகேட்டியாலிதென்றெனக்கொரீறுகூறுகினு
மந்திவேணியண்ணன்முன்னமணுகுமாறமைந்திவண்
வந்தனன்னதற்கியைந்தவகைமைநல்குவாயென. (எ௪)

இகலுமன்புமிறையுமின்றியெவ்வுயிர்க்குமுள்ளதோர்
புகுதிநாடிமுறையினைப்புரிந்துசேர்பவர்க்குமேற்
றகுதிசெய்துகருணைகூர்சயம்புமுன்புசார்தியேன
மிகுதிகொண்டமேலைவாய்தன்மேவியேகுகென்றனன். (எ௫)

என்றலுங்கரங்குவித்திறைஞ்சிமாரனோர்புறீஇ
நன்றிலங்குவேத்திரக்கைநந்திதேவர்விடைதரச்
சென்றுமேலைவாயில்சார்ந்துதேவதேவனீற்றழற்
குன்றமென்னமோனமோடிருந்தவெல்லைகுறுகினான். (எ௬)

வேறு.

ஒருதனிச்சிம்புள்வேந்தனுறைந்ததுகண்டசீயக்
குருளையினமலன்றன்னைக்கோலமால்புதல்வன்காணூ
வெருவருமுளத்தனாகிவியர்த்துமெய்பனியாவுட்கிப்
பருவரலுழந்துகொண்டபடையொடுங்கடிதில்வீழ்ந்தான். (எஎ)

எழுதருமதனுமேகமிறைவனைக்கண்டேயஞ்சி
விழியிருண்மூடக்கோலவில்லிட்டுவியர்ப்பின்வாரி
மழைபடவிடியார்ப்பெய்தமார்புமற்றதுவீழ்கின்ற
தொழின்முறைபுதரங்காட்டத்துளங்கிவீழ்ந்திட்டதன்றே. (எ௮)

அஞ்சிவீழ்குற்றமாரனறிவிலாதவசமாகத்
துஞ்சினன்கொல்லோவென்னாத்துயருழந்தெடுத்துத்தேவி
கஞ்சநேர்கரத்திற்றாங்கிக்கடிவகையுய்த்துத்தேற்ற
நெஞ்சமேலுணர்ச்சிகூடவினையவைநினைந்துநைவான். (எ௯)

முறுவலினெயின்மூன்றட்டமுதல்வனைப்பொருதியென்றே
நறைமலரயனுமேனைத்தேவருநாகர்கோனு
முறுதுயரகலவிங்ஙனுய்த்தனர்வினையேற்கின்னே
யிறுதிவந்தணுகிற்றாகுமிதற்குமோரையமுண்டோ. (அ0)

எண்டருகுணத்தின்மேலாமிறையவனிருந்தவண்ணங்
கண்டலும்வெருவியாவிகாண்கிலனவனையென்கைக்
கொண்டதோர்கணைகள்வாகைகொள்ளுமோவினையபான்மை
யண்டருமயனும்யாருமறிகிலர்போலுமன்றே. (அ௧)

தாக்கினால்வலிபெற்றுள்ளமருத்தின்முன்றனித்ததீபம்
போக்கினிற்பதுண்டோவனையதுபோலத்தேவர்
வாக்கினான்மனத்தாலெட்டாவள்ளன்முனாய்த்தாரன்ற
னோக்கினாலினிச்சில்போதினுண்பொடியாவன்போலாம். (௮௨)

ஏழுறவுலகமெல்லாமீறுசெய்முதல்வன்றன்னைப்
பூமலர்கொண்டியானேபொருகின்றேனகையீதன்றே
வர்மிதுவிதியின்செய்கையதனையாரகடக்கவல்லார்
தாமரைமுதல்வற்கேனுந்தள்ளருந்தகையதன்றே. (௮௩)

ஈங்கிவையமலன்சூழ்ச்சியாவதோமுடிவதோரேன்
றூங்கியான்கிடததலொல்லாதுண்ணெனவெழுந்துவில்லும
வாங்கினன்சரமுமபூட்டிவல்லவாறிழைப்பனையன்
பாங்குறநின்றுமேலேபட்டவாபடுகவெனறான. (௮௪)

இனையனபலவுமுன்னியெழுந்துமாமதவேளிட்ட
தனுவினையெடுததுவாஙகிததண்மலாவிசிகமபூட்டி
மனைவிதன்னகலாள்செல்லமதிக்குறைதவழ்ந்தசென்னிப
புனிதனதொருசார்போகிப்பொருவகைமுயனறுநினறான. (௮௫)

மாரவேளீண்டுநிற்பமனோவதிகரினமேய
வாரணமுதல்வன்றன்னையமரர்கோனன்றுழுதுநோக்கிக்
காருறழ்கண்டன்றன்பாற்காமனைவிடுத்தியன்றன
போரியலுணர்வானங்கட்போதரல்வேண்டுமெனறான். (௮௬)

சதமகனினையகூறத்தண்மலாக்கடவுளேராக்
கதுமெனவெழுந்துவானோகணத்துடனனையன்போறறப்
பொதிதருகயிலையநதண்பொருப்பினமேலொருசார்போகி
மதனியறெறிந்துமுக்கண்வள்ளலைவழுத்திநின்றா. (௮௭)

எறிதருகணிச்சிச்செஙகையீசன்மேலிலக்காநுங
குறியினாபோலநின்றகொடுந்தொழினமாரன்றுஞ்சு
நெறியினர்க்கச்சமுண்டோநினைததுமுடிப்பனென்று
நறுமலர்வாளியைந்துநாதன்மேற்செலலவிட்டான். (௮௮)

விட்டவெம்பகழியைந்தும்வியததகுவிமலன்மீது
பட்டலுஞ்சிறிதேவேளைப்பார்ததனனபாரததலோடுங்
கட்டழல்பொதிந்தநெற்றிக்கண்ணதுகடிதேகாமற்
சுட்டதுகயிலைமுற்றுஞ்சூழ்புகைபரவிற்றன்றே. (௮௯)

ஆலையஞ்சிலைவேளாகமழல்படக்கயிலையின்க
ணேலவெமபுகையுந்தீயுமெழுதருமியற்கைநாடின்
மாலயன்முதலோராருமதிததழிவிரைந்துபாலின்
வேலையினடுவுதீயவிடமெழுந்தனையதம்மா. (௯௦)

செறிந்ததீப்புகையின்மாலைசெல்லலுங்குணபால்வாய்த
லுறைந்ததோர்நந்திதேவனெல்லையிலதனைப்பாரா
விறந்துபாடாயினான்கொலேகியமதனனென்று
வறிந்தரோவடைந்தார்க்கோதியொருசெயலறையலுற்றான். (௯௧)

துன்னியவுணர்வின்மிக்கீர் துமக்கிதுபுகல்வனெங்கோன்
கண்ணுதனுமிழ்ந்தசெந்தீக்காமனைப்பொடித்ததன்றா
லண்ணலையெய்வனென்றுவனையவன்றுணிவிற்கூறித்
துண்ணெனவீண்டுவந்தசெயற்கையேசுட்டபோதும். (கூஉ)

இன்னினிமகிழ்நன்றுஞ்சுமியற்கையையிரதிநாடி
வன்னிபெய்யலங்கல்போலாய்வயிறலைத்திரங்கியெங்கோன்
றன்னைவந்திரப்பவேனைத்தருகுவன்காண்டிரந்த
முன்னவனனுக்கட்காயமுறைபுரியருளாலென்றான். (கூங)

ஐந்தொகையாற்றின்மாடேயமலனைநினைந்துநோற்ற
நந்தியந்தேவனின்னநவிறலுமவற்சூழ்கின்ற
வந்தமில்கணத்தோர்கேளாவகிலமும்பொருட்டாலெங்கோன்
புந்திகொளருளின்செய்கைபோற்றெடுத்தனராயுற்றார். (கூச)

வாவலங்கிள்ளைமான்றேர்மதன்புரிவினையாலனனுன்
வேவரப்புணர்த்துநோக்கிமிதைபடாதவனசாரான
தேவியைமுடிக்குமாற்றல்செய்திலனிகல்பற்றின்றி
மூவரைவிடுத்துத்தொனனுண்மூப்புரம்பொடித்தமுன்னோன். (கூரு)

கண்ணழல்சுடுதலோடுங்காமவேள்யாக்கைமுற்றுஞ்
சுண்ணமதாகிவீழத்துஞ்சினன்போயபின்னை
யண்ணலம்பகவன்றொல்லையமைதியினிருந்தானெல்லா
மெண்ணிநின்றியற்றுமெங்கோற்கினையதோவரிதுமாதோ. (கூசு)

பாடுறுகணவன்செய்கைபார்த்தலுமிரதியுள்ளங்
கூடினதுயரமவீந்தகொண்டதொல்லுணர்ச்சிகண்ணீ
ரோடினவியர்த்தமெய்மூக்குயிர்த்தனவொடுங்கிற்றாவி
வீடினளிவளுமென்னவிரைந்துகீழ்த்தலத்தின்வீழ்ந்தாள். (கூள)

சுரிதருகுடிஞையாற்றிற்சுழித்தலைப்பட்டமானபோற
பருவரல்வாரிநாப்பட்படிந்துபற்றினறிச்சோரு
மிரதிசிலபொழுதிற்பின்னரிறந்ததொல்லுணர்வுதன்பால்
வருதலுமறிந்துசசெங்கைவயிறலைத்திரஙகலுற்றாள். (கூஅ)

வேறு.

செம்பதுமைதிருக்குமாரதமியேனுக்காருயிரேதிருமான்மைந்தா
சம்பரனுக்கொருபகைவாகன்னல்வரிச்சிலைபிடித்ததடக்கைவீரா
வம்பவளக்குன்றனையசிவன்விழியால்வெந்துடலமழிவுறாயே
யும்பர்கடமவிழியெல்லாமுறங்கிற்றோவயனருமுவப்புற்றாரோ. (கூகூ)

மூன்றுளிற்புரமூன்றுமட்டவன்மேற்பொரப்போதன்முறையோவென்று
சொனனுலுங்கேட்டிலையேயமரர்பணிபுரிவதுவேதுணிந்திட்டாயே
யுன்னுகம்பொடியாகிப்போயினதேயிதுகண்டுமுய்வாருண்டோ
வென்னுவியாகியநீயிறந்தபின்னும்யான்றனியேயிருப்பதேயோ. (க00)

மாறுகப்பரமன்விழிகின்றுற்றவிலதாகமற்றுன்மெய்யு
நீறுகவிண்டெல்லாநெருப்பாகக்கவலைவிண்ணோர்நெஞ்சத்தாக
வாறுதபெருந்துயரமெனக்காகவெங்கொளித்தாயருவாயேனுங்
கூறுயோவறிதிருந்தாயென்கணவாயான்செய்தகுறையுண்டோதான். (க0க)

உம்பர்கடம்பாலேயோவிந்திரனூர்பாலேயோவுன்னையுய்த்த
செம்பதுமத்திசைமுகத்தோன்பாலேயோவரன்செயலைச்சிதைப்பனென்று
விம்பரிடைவல்விரைந்துவந்திடுகின்பாலேயோவீசன்கண்ணால்
வெம்பொடியாய்நீயிறந்தவிப்பழிதானெவர்பாலின்மேவிற்றையோ. (கoஉ)

வில்லான்முப்புரமெரித்தபரம்பொருள்யோகந்தவிர்க்கவேண்டில்விண்ணோ
ரெல்லாருமிறந்தனரோவென்கணவாநீயோதானிலக்காய்நின்றாய்
கொல்லாதுபோலவுனைக்கொன்றனரேயென்னுயிர்க்குங்கொலைசூழ்ந்தாரே
பொல்லாதபேர்க்குநன்றிசெய்வதுதம்முயிர்போகும்பொருட்டேயன்றே. (கoங)

என்னபவஞ்செய்தேனோவென்போல்வார்தமக்கென்னவிடர்செய்தேனோ
முன்னையுளவிதிப்பயனையறிவேனோவிப்படியேமுடிந்ததையோ
கன்னல்வரிச்சிலைபிடித்தகாவலவோதமியேனைக்காத்திடாயோ
வன்னிவிழியாவுடையபெருமானைநோவதற்குவழக்கொன்றுண்டோ. (கoச)

பொன்செய்தார்முடிகாணேனழகொழுகுந்திருமுகத்துப்பொலிவுகாணேன்
மின்செய்பூணணிகுலவும்புயங்காணேனகன்மார்பின்மேன்மைகாணேன்
கொன்செய்பூங்கணைகாணேன்சிலைகாணேனுடல்புரிகோலங்காணே
னென்செய்வேனென்கணவாவென்னையொழிதெவ்விடத்தேயிருக்கின்றாயே. ()

அந்நாளிலழற்கடவுள்கரியாகவானவரோடயன்மால்காணப்
பொன்னுருமங்கலநாண்பூட்டியெனைமணஞ்செய்துபுணர்ந்தகாலை
யெந்நாளுமினியுன்னைப்பிரியலமென்றேவாய்மையிசைத்தாய்வேனின்
மன்னுவோமன்னுவோவெனைத்தனியேவிட்டேகல்வழக்கோசொல்லாய். (கoசு)

போவென்றுவரவிட்டதேவரெலாம்பொடியாகிப்போனவுன்னை
வாவென்றுகடிதெழுப்பமாட்டாரோநின்றதைவலியனென்பா
ரோவென்றுநானிங்கேயரற்றிடவும்வந்திலனூலுறங்கினானே
வேவென்றுநின்சிரத்தில்விதிதிருந்தாலவரையெலாமவெறுக்கலாமோ. (கoஎ)

நேயமொடுமறைபயிலுந்திசைமுகனைப்புரந்தரனைநின்னைத்தந்த
மாயவனைமுனிவாகளையாவரையுநின்கணையான்மருட்டிவென்று
மாயதுபோன்மதிமுடித்தபரமனையுநினைந்திவ்வாறழிவுற்றாயே
தீயழலின்விளக்கத்திற்படுகின்றபதங்கத்தினசெயலிதன்றே. (கoஅ)

தண்பனிநீர்ச்சிவிறிகொண்டுவிளையாடிமலர்கொய்துதண்காநண்ணி
யெண்படம்பூம்பள்ளிமிசைச்சிறுதென்றல்கவரிகளாயினிதுசெல்ல
வெண்பளிதநறுஞ்சாந்தச்சேறாடியிருவருமாய்விழைந்துகூடிக்
கண்படைகொண்டமர்வாழ்வும்பொய்யாகிக்கனவுகண்டகதையாயிற்றே. (கoக)

மருகென்றேயவமதித்ததக்கனூர்வேள்விசெற்றவள்ளறன்னைப்
பொருகென்றேதேவரெலாம்விடுத்தாரேயவராலேபொடிபட்டாயே
யெரிகின்றேனுனைப்போலவாறுதபெருந்துயரால்யானுமங்கே
வருகின்றேன்வருகின்றேனென்னுயிரேயெனப்புலம்பிவருந்துகின்றாள். (ககo)

காமதகனப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சுoக.

# மோனநீங்குபடலம்.

இரதியின்னணம்வருந்திடத்தொன்மைபோலெங்கோமான்
விரதமோனமோடிருத்தலுமுன்னரேவிறற்காமன்
கருதுமுன்பொடிபட்டதுகண்டனர்கலங்குற்றூர்
சுருதிநன்றுணர்திசைமுகன்முதலியசுரரெல்லாம். (க)

சிதலைமெய்த்தொகைவன்மிகத்தெழுந்தெனச்செலக்கண்ணீர்
பதலையொத்தனவல்லல்கூர்ந்தரற்றிடப்பகுவாய்கள்
விதலைபெற்றுமெய்வியர்ப்புறவுளநனிவிதிப்பெய்த
மதலையிற்றுழிநாய்கர்போற்றுயர்க்கடன்மறிகின்றூர். (உ)

மையுலவுவருகறைமிடற்றிறையவன்மருங்காக
வெய்யுமாரனைவிடுத்தனமவனையுமிறச்செய்தான்
பொய்யிறன்னிலைதவிர்ந்திலனொன்மையேபோனூற்று
னையகோவினிச்செய்வதென்னேவெனுவயர்கின்றூர். (ங)

பூத்தருங்கணைமாரனைவிழியினற்பொடிசெய்த
வாத்தனுற்றலைப்புணாப்பினனீக்குவதரிதன்னன்
காத்துநந்துயரகற்றிடவேணடுமேற்கடிதேயா
மேத்தல்செய்வதேகடனெனயாவருமிசைவுற்றூா. (ச)

எகினமூர்பவன்முதலியகடவுளரெல்லோரு
மகனமர்ந்திவையிசைந்துதொல்கயிலையினகநாப்பட்
புகலதாயபொன்னகரிடைக்கோபுரப்புறனேகித
தொகுதியோடெமதிறைவனையொல்லெனத்துதிக்கின்றூர். (ரு)

நஞ்சருந்தியுநதியினைச்சூடியுநடுநெற்றித்
துஞ்சும்வெங்கனல்பரித்தும்வெவவலியரைத்தொலைச்செ ...
மஞ்சலென்றுமுற்காத்தனையின்றெமக்கருளாயேற்
றஞ்சமாருளாதாதையேயல்லதுதனயர்க்கே. (சு)

கோளிலன்பர்களிழுக்கியபுரியினுங்குணனுக்கொண்
டாளுமெம்பிரானின்னடியரணமெனநடைந்தேஙக
ளூளும்வெந்திறற்சூரபன்மாவினனலிவெய்தி
மாளுகின்றதோசிறிதுமெம்முறுதுயர்மதியாயோ. (எ)

தையலைப்பிரீஇயோகியல்காட்டிடுதெனிச்செய்கை
யையநிற்கிதோரிறைவரையாகுமாலதுகாலை
வையுமெங்களுக்குகம்பலசென்றனநாமெல்லா
முய்வதெப்படியின்னுநீபுறக்கணித்துறுவாயேல். (அ)

நோற்றுமாயவன்முதலினோர்யாவருநுனதாளைப்
போற்றியர்ச்சனைபுரியவிதிருவெலாம்புரிந்துற்றாய்
தோற்றமின்றியேயைந்தொழிலியற்றியதொல்லோய்நீ
யாற்றுகின்றதோர்தவநிலையெம்பொருட்டளவன்றே. (கூ)

எய்த்திடுஞ்சிறியேங்களைத்தவறுகூறிடர்வாளா
னித்தலுந்துணித்திருதிசெய்வினைநெறிநேடி
யத்தவிங்கினிக்காத்தருளல்லதேலடுவல்லே
சித்தமென்னுனக்கன்னவாறென்றினைச்செய்வாயே. (௧௦)

கங்கைவேணியாயம்மையைமணந்தெமைக்கடிகொள்ளத்
திங்கள்வெண்குடைமதனனைவிடுத்தனந்தெளிவில்லே
மங்கவன்புரம்பொடித்தனைமுன்புபோலமர்ந்துற்று
யிங்கியாந்தளர்கின்றதேயினிச்சிறிதிரங்காயோ. (௧௧)

ஆரழற்சினவயப்புலிமுதலியவடன்மாவின்
பேருரிதகிறந்தரித்தனைசிறுவிதிபெருவேள்வி
வீரனைக்கொடுதடிந்தனையஃதெனமிகவெய்ய
சூரபன்மனைத்தொலைவுசெய்தெந்துயர்தொலைக்கென்றார். (௧௨)

மூரற்கொள்வண்டுசூழ்சததளப்பண்ணவன்முதலோர்க
ளுருக்கரக்கெனமெய்தளர்ந்திவ்வகையுளநொந்தே
யரற்றியேத்தலுமவர்பவமுடிவதற்கணித்தாக
விரக்கமாயருணந்தியைநினைந்தனனிறையோனே. (௧௩)

எந்தைநந்தியையுன்னலுமவனறிந்திறைவன்முன
வந்துவந்தனைசெய்துகைதொழுதலுமறைமேலோன்
கந்தமாமலர்க்கடவுளாதியாதமைக்கடிதெம்முன
றந்திடென்றனனன்றெனமுதற்கடைதனில்வந்தான். (௧௪)

கணங்கள்காப்புறுமுதற்கடைகுறுகலுங்கண்டேத்தித்
தணங்கொள்பங்கயன்வாசவன்விண்ணவர்தாமெல்லாம்
வணங்கவெம்பிரானுமைத்தருகெனறனன்வறிதேனு
மணங்குகொள்ளலீர்வம்மினோநீவிரெனறருள்செய்தான். (௧௫)

சீதநந்திவந்திவ்வகையுரைத்தசொற்செவிதோறும்
வார்ததபேரமுதாதலுமுவகையின்மதர்ப்பாகிப்
போதவொர்மாற்றமுமுரைத்திலர்பிரமனேமுதற்றேவ
ரார்த்துநாதனைப்பாடினராடினரலமந்தார். (௧௬)

பெரிதுநோயுழந்தருள்பவரின்றியேபெருங்கால
நிரயமுற்றுளோர்தங்களையெடுத்திடுநிலைத்தன்றோ
வருளினீர்மையாலுமையரனவிளித்தனனைவீரும்
வருதிரென்றசொற்பங்கயனமுதலியவானோர்க்கே. (௧௭)

செய்யலாவதொன்றின்றியேமகிழ்ச்சியிற்றிளைத்தோராய்
மையலாகியபண்ணவர்தங்களைவல்லேகொண்
டையன்முன்னுறவுய்த்தனனிருவகையறத்தோரு
முய்யவெஞ்சமனுடைதரப்புவியினிலுதிக்கின்றோன. (௧௮)

வேறு.

வண்டுளர்கமலமேன்மதலைவாசவ, னண்டர்களனைவருமன்பொடேகியே
பண்டுயிர்முழுதருள்பரனைக்கண்களாற், கண்டனர்வழுத்தினர்கரங்கள்கூப்பினார்.
விண்மதிபடர்சடைவேதகீதனை, யண்மினர்வணங்கினரரிமுனூற்றியு
வுண்மகிழ்பூசனையொப்பப்போதநீர், கண்மலரதனொடுகழல்கள்சேர்வே. (௨௦)
வணங்கியபண்ணவர்வல்லவல்லவா, பணங்கிளரரவரைப்பரமற்போற்றலு
முணங்கியசிந்தையீருமதுவேண்டலு, மணங்குறுநிலைமையுமறைமினென்னவே. ()

பேருகமளப்பிலபெயர்தலின்றியே, ஞானதானையிற்றுயர்ப்பட்டாழ்ந்தனங்
காருறழ்கந்தரக்கடவுணீயலா, தாருளரடியுரேமலக்கணிக்குவார். (௨௨)
ஆயவெஞ்ஞானதாவிநீக்கவோர், சேயினையருளுவான்சிமையமாகிய
மீயுயர்வரையிடைமேவிநோற்றிடு, மாயையின்முதல்வியைமணத்தல்வேண்டுநீ. ()
என்றிவைகூறியேயாருமெம்பிரான், மன்றலந்தாண்மலர்வணங்கிப்போற்றலு, மி
ன்றிகழ்பசுங்கதிர்மிலைச்சும்வேணியா, னன்றெனவிசைந்திவைநவிறன்மேயினான்.
புங்கவர்யாவரும்பொருமல்கொள்ளலீ, ருங்கடம்பொருட்டிலவ்வோங்கல்வைகிய
மங்கையைமணந்துநும்வருத்தநீக்குது, மிங்கினியாவருமேகுகென்றனன். (௨௫)

முழுதுணர்பரனிதுமொழியப்போதனுஞ், செழுமையில்பொன்னகர்த்தேவும் யாவருந், தொழுதனர்விடைகொடுதுயரஞ்சிந்தியே, விழுமியமேருவின்மிசைக்க ணேகினார். (௨௬)

வேறு.

அன்னார்விடைகொண்டேகியபினதுகண்டிரதியெம்பெருமான்
முன்னாவிறைஞ்சிப்போற்றிசெய்துமுறையோமுறையோவிறையோனே
பொன்னார்கமலத்தயன்முதலோர்புணர்ப்பாலெங்கோன்போந்திங்கே
யுன்னாமுடிந்தானவன்பிழையையுளங்கொளாமலருளென்றாள். (௨௭)

வேறு.

இனையகூறினளிரதிவேண்டிடுதலுமினைதீர்ந்த
புனிதனல்லருளெய்தியேமங்கைநீபுலம்பாய்கேள்
வனைகருங்குழற்கவுரியைமேவியாம்வரைபோதி
னுனதுகேள்வனையளிக்குதும்போதியென்றுரைசெய்தான். (௨௮)
தன்னையேதனக்கொப்பவனிரதியைத்தளரேலென்
றின்னவாறருள்செய்தலுமகிழ்ந்தடியிறைஞ்சிப்போய்ப்
பொன்னின்மாவிமையக்கிரிபுகுந்தொருபுடையுற்றாள்
வன்னமாமுகில்வரவுபார்த்துறைதருமயிலேபோல். (௨௯)

வேறு.

தமியளாயிரதிபோய்த்தானங்குற்றிட, வமரர்களாயுளாரரந்தைதீர்க்கவு, மிமைய
மால்வரைமிசையிருந்துநோற்றிடு, முமைதனைமணப்பவுமுதல்வனுன்னினான். ()
மனந்தனிலித்திறமதித்துவானதி, புனைந்தவன்சனகனென்றுரைக்கும்புங்கவன்
சனந்தனற்சனாதனன்சனற்குமாரனா, மினந்தருமுனிவரையினிதுநோக்கினான்.()
நன்னலமைந்தர்காண்ஞானபோதகஞ், சொன்னடையன்றதுதுயரநீங்கியே
யிங்கிலைமோனமோடிருந்துநந்தமை, யுன்னுதலேயெனவுணரவோதினான். (௩௨)
கட்படுமிமைத்துணைகாட்சியோகினை, நுட்பமதாகவேநுதலிக்காட்டினா, னொட்
பமொழிவவகையுரைப்பவாற்றவுந், தெட்பமதடைந்தனர்விதியின்சேயினோர். ()

அந்தகல்வேலையிலாற்றுநோன்பினோர், சிந்தைகொளன்பொடுசிவன்பொற் றாண்முறை, வந்தனைசெய்துநம்மருட்கைநீங்கியே, யுய்ந்தனம்யாமெனவுரைத்துப் போற்றினார். (௩௪)

போற்றலுமத்துணைப்புனிதனின்னினி, யேற்றிடுகிட்டையிலிருந்துவீடுறீஇ
மேற்றிகழெம்பதமேவுவீரெனாச், சாற்றினன்விடுத்தனன்றவத்தினோர்தமை.(௩௫)

மோனநீங்குபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௩௬.

# தவங்காண்படலம்.



நீதறுமுனிமைந்தர்செல்லலுமதுபோழ்தின்
மாதவநெறிநிற்குமலைமகடணியன்புங்
காதலுமெனவோர்க்குங்காட்டுதலருளாகிச்
சோதனைபுரிவாரிற்றுண்ணெனவெழுந்தற்றுன. (க)

செறிதவருடையாளன்சிகையினனணிநீற்றின்
குறியினனொளிநூலன்குண்டிகையசைகைய
னுறைபணிகதிர்போற்றுமோலையனுயர்கோலன்
மறைபயின்முதியோர்போல்வடிவிதுகொடுபோனான. (உ)

போயினனிமையத்திற்புவனமொடுயிர்நல்குந்
தாய்தளாவொடுநோற்குஞ்சாலையினிடைசார்ந்த
தூயவரிவரெனறேதோகையாகடைகாப்போ
ராயவாபலாவந்தேயடிதொழுதுரைசெய்வார். (ங)

தளாநடைமுதியீரிததடவரையிடைசேற
லெளிதலவடிகேளவந்தெய்தியதெவனென்ன
வளமலையரசன்றனமகளபுரிதவநாடற்
குளமுடணிவண்வந்தேனுவகையினுடனென்றான். (ச)

என்றலுமினிதென்றேயிமையவளிடைசெல்லா
சென்றனாகிழவோன்றன்செயலினையறைகாலை
யொன்றியமுதியோரேனுய்க்குதிரிவணென்ன
நின்றதோர்பெரியோனைநேரிழைமுனமுய்த்தார். (ரு)

உய்த்தலுமிவரெந்தைக்குறுபரிவினரெனறே
பத்திமைபடுபோலாற்பார்ப்பதிதொழுவோடு
மெய்த்துணையெனநின்றவிசயைமொடாவிசிட்டு
நித்தனையுறைவித்தாணிமலையுமயனின்றாள். (சு)

அப்பொழுதுமைதனனையாதரவொடுபாராச்
செப்புதலரிதாமுன்றிருநலனழிவெய்த
மெய்ப்படுதசையொலகமிகுதவமுயல்கின்று
யெப்பொருள்விழைவுறறுயெனணியதுரையெனறான். (எ)

வேறு.

முடிவிலாணிவையுரைத்தலும்விசயையைமுகநோக்கிக
கொடியினெல்லையநசப்புடையுமையவள்குறிப்பாலே
கடிதினீங்கிவாக்கெதிர்மொழியேகெண்கண்காட்ட
வடியனேற்கிதுபணித்தனளெனவறிந்தவள்சொல்வாள். (அ)

மன்னுயிர்க்குயிராகியகண்ணுதன்மணஞ்செய்து
தன்னிடத்தினிலிருத்தினன்கொள்வதேதானுன்னிக்
கன்னிமெய்த்தவமியற்றினளெனறுகாதலிகூற
முன்னவர்க்குமுன்றனவனகைதகைவமொழிகின்றான். (கூ)

புவியளித்தருண்முதல்வருநாடரும்புனிதன்றா
னிவடவத்தினுக்கெய்துமோவெய்தினுமினையாளை
யவன்விருப்பொடுவரையுமோவுமையவளறியாமே
தவமியற்றினளெளியனோசங்கரன்றனக்கம்மா. (௧௦)

அல்லல்பெற்றிடநோற்றிடுபெறுதியாலாம்பாலொன்
றில்லையித்துணைப்பெறலரும்பொருளிவட்கெளிதாமோ
பல்பகற்றனதெழினலம்வறிதுபட்டனவன்றோ
வொல்லையித்தவம்விடுவதேகடனினியுமைக்கென்றான். (௧௧)

இத்தவாசகங்கேட்டலுமெம்பிராற்கிவரன்பு
ரந்தண்மாமுதுகுரவரென்றுன்னினனறியேனால்
வந்துவெம்மொழிகூறுதலெனச்சினமனங்கொண்டு
நொந்துயிர்த்துநாணிக்கியேபொறாதுமைநுவல்கின்றாள். (௧௨)

முடிவிலாதுறைபகவனென்வேட்கையைமுடியாது
விடுவனென்னினுந்தவத்தினைவிடுவனோமிகவினனங்
கடியநோன்பினையளப்பிலசெய்துயிர்கழிப்பேனா
னெடிதுழுதலினமயங்கினைபிததனோநீயென்றாள். (௧௩)

ஈட்டுமோருயிர்த்தொகையெலாமளித்தவளிவைகூற
மீட்டுமோர்புணர்ப்புன்னியேமாதுநீவெஃகுற்ற
நாட்டமூன்றுடைப்பிஞ்ஞகன்வளத்தியனன்றாய்ந்து
கேட்டிலாய்கொலாமுணாததுவனஃதெனக்கிளக்கின்றான். (௧௪)

ஆடைதோல்விடையேறுவதணிகலமரவென்பு
கேடில்வெண்டலைமாலிகைகேழலின்மருப்பினன
வோடுகொள்கலமூண்பலிவெய்யநஞ்சலப்புறமோர்
காடதேநடம்புரியிடங்கண்ணுதற்கடவுட்கே. (௧௫)

வேய்ந்துகொள்வதுவெள்ளெருக்கறுகுநீர்வியன்கொன்றை
பாந்தளுச்சியேமத்தமென்றினையனபலவுண்டாற்
சாந்தமவெண்பொடிசூலமானமழுத்துடிதழலங்கை
யேந்துகின்றதுபாரிடஞ்சூழ்படையிறையோற்கே. (௧௬)

அன்னைதாதைகேள்வடிவொடுகுணங்களிலனையானுக்
கின்னவாகியபலவளனுண்டவையெவையுந்தா
னின்னவாகவோதவமபுரிந்தெய்த்தனைநெடுந்தொல்சீர்
மன்னன்மாமகட்கியைவதேயித்துணைவழக்கென்றான். (௧௭)

வேறு.

புரங்கண்மூன்றினையுமட்டபுங்கவனினையகூற
வரங்கண்மேதகையவெற்பின்மடமயில்கேட்டலோடுங்
கரங்களாற்செவிகள்பொத்திக்கண்ணுதலுமம்போற்றி
யிரங்கிவெஞ்சினத்தளாகியிடருழந்தினையசொல்வாள். (௧௮)

கேட்டியாலந்தணாளகேடிலாவெம்பிரான்றன்
மாட்டொருசிறிதுமன்புமனத்திடைநிகழ்ந்ததில்லை
காட்டுறுபுள்ளின்சூழல்கவருயான்புதன்மேற்கொண்ட
வேட்டுவனியல்போன்மேலோன்வேடநீகொண்டதன்மை. (௧௯)

நேசமிலாதுதக்கனிமலனையிழித்துநின்போற்
பேசியதிறனுமன்னான்பெற்றதுங்கேட்டிலாயோ
வீசனையிங்ஙனென்முனிகழ்ந்தனையிந்நாள்காறு
மாசறுமறைகளேதுமாய்ந்திலைபோலுமன்றே. (௨௦)

முறைபடுசுருதியெல்லாமொழியினுமதுவேசார்வா
வுறுகிலராகிப்பொல்லாவொழுக்கமேகொண்டுமுக்க
ணிறைவனையிகழ்ந்துமுத்தியெய்திடாதுழலுமனாண்
மறையவர்பெற்றசாபநினையுமயக்குறாதோ. (௨௧)

தாதையாய்த்தம்மைநல்கித்தந்தொழிற்குரியனாகி
யாதியாய்த்தங்கட்கினறியமைவுறுசிவனைநீங்கி
யேதிலார்பக்கமாகியில்லொழுக்கிறந்தாபோலும்
வேதியர்முறையேசெய்தாய்வெறுப்பதெனின்னையானே. (௨௨)

ஆயினுமறையோர்தம்மினருமறைமுறையேவேடந்
தூயனதாங்கியெங்கோன்றொண்டுசெய்வோருமுண்டா
னீயவர்தன்மைத்தாயுநித்தனையிகழ்ந்தாயென்னிற
றீயவருனைப்போவில்லையவுணாதந்திறததுமாதோ. (௨௩)

வேண்டுதல்வேண்டாமையில்லதோர்விமலன்றனை
யீண்டுநீயிகழ்ந்தவெல்லாமயாரையுமளிக்குமன்பு
பூண்டிடுகுறிகாணற்றாற்புகழ்ச்சியாமனறிமுக்க
ணாண்டகையியற்கையெல்லாமாகொலோவறியகிற்பார். (௨௪)

போதனேமுதலாவுள்ளபுங்கவாவழிபட்டேத்த
வேதமிவிறைமையாறறலியாவையுமபுரிந்நாதன்
காதலுமவெறுப்புமின்றிக்கருணைசெயநிலைமையேகாண்
பேதைநீயிகழ்ச்சியேபோறபேசியதனமையெல்லாம். (௨௫)

இமமுறைமறைகளாதியிசைததனவினையவெல்லாஞ்
செமமைகொளுணாவினாறோதெளிகுவரிறையையெள்ளும
வெம்மைகொளகுணத்தாய்நிறகுவிளமபொருளுவிளயபிறபாவம்
பொய்ம்மறைவேடதேதோடுமபோதிநீபுறநதிலெனறான். (௨௬)

அறத்தினைப்புரிவாளிவவாறறைதலுமணஙகேயீங்குன்
றிறத்தினிலாவஞ்செய்துசெனறவெனசெயல்கேளாது
புறத்திடைப்போதியெனறிபுரைவதோபுகுந்தபான்மை
மறைச்சடங்கியற்றிநின்னைவரைந்திடற்காகுமென்றான். (௨௭)

வஞ்சகமுதல்வன்சொற்றவாசகமிறைவிகேளா
வஞ்செவிபொத்தியாற்றாதழுங்கிமெய்பதைப்பவிம்மி
யெஞ்சலின்முதியோன்போகானேகுவன்யானேயென்னாப்
பஞ்சடிசேப்பவாண்டோர்பாங்கரிற்படர்தலுற்றாள். (௨௮)

படர்ந்தனள்போதலோடும்பணிபடிமையம்வைகு
மடந்தைதன்னியற்கைநோக்கிவரம்பிலாவருண்மீதூர
வடைந்ததொல்பனவக்கோலமகன்றுமால்விடைமேல்கொண்டு
தொடர்ந்துபல்கணங்கள்போற்றத்தோன்றினன்றொலைவிலாதோன். (௨௯)

தொலைவறுபகவன்வான்மீத்தோன்றலுந்துளங்கிகாணி
மலைமகள்கண்டுபெல்காலவணங்கியஞ்சலியாற்போற்றி
யலகிலாவுணர்வாலெட்டாவாதிநின்மாயைதேறேன்
புலனிலாச்சிறியேனின்னையிகழ்ந்தவாபொறுத்தியென்றாள். (௯0)

நற்றவமடந்தைகேண்மோநம்மிடத்தன்பாணீமுன்
சொற்றனயாவுமீண்டேதுதித்தனபோலக்கொண்டாங்
குற்றமுண்டாயினன்றேபொறுப்பதுகொடியநோன்பான்
மற்றினிவருந்தனுனைமணஞ்செயவருதுமென்றான். (௯௧)

சிறந்தநின்வதுவைமுற்றச்செல்லுதுவெனறுதொல்லோன்
மறைந்தனன்போதலோடுமலைமகளுள்ளந்தன்னி
னிறைந்திடுமகிழ்ச்சிகொண்டுநிததனைநினைந்துபோற்றி
யுறைந்தனளிதனைவேந்தற்குரைத்திடச்சிலவாபோனார். (௯௨)

அன்னவந்தருளிச்செய்கையரசனுக்குரைத்தலோடு
முன்னிமகிழ்யாசகிநிஙகியொல்லைதனனிலவினேடு
நன்னினனுமையைக்கொணடுநலங்கொடனனகரத்துய்த்தான
கன்னுதலிறைவனஙகடசெய்தனகழறலுறறேன். (௯௩)

தவங்காணபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௬௯.

# மணம்பேசுபடலம்.

பொருடருமலைக்கொடிபுரியுநோனபுகண், டருடனைநல்கியவாதிநாயகன்
றெருடருக்கயிலையிற்சேவுற்றேழ்வகை, யிருடிகடஙகளையிதயத்துன்னினான். (௧)

நினைதலுங்கண்ணுதனிமலனேழ்பெரு, முனிவருமன்னதைமுன்னியுள்வெரீஇப்
பனிவருமெய்யொடுபடாதுவல்லையி,லனையனையிறைஞ்சிநின்றறைதன்மேயினார்

பங்கயன்மானமுதற்பகரும்பண்ணவ, ருங்குனதேவனுக்குரியராயுற
வெஙகளையுனனினையாஙகள்செய்தவ, மஙகவாதவத்தினுமதிகமபோலுமால். (௩)

எந்தையெம்பெருமகியெய்மைவமமெனமுந்துறுகருணையின்முன்னிற்றுதலி
னுய்ந்தனமடியரேமுடையதிப்பவஞ, சிநதினைமினியொருநீதுண்டாகுமோ. (௪)

ஒருந்தலையைத்தொழிலுலப்புறுவகை, புரிதருபகவநம்புன்மைநீக்குவான்
கருணையொடுன்னினைகடிதிற்செய்பணி, யருளுதியென்றனராற்றுநோன்பினோர்.

வேறு.

அமலனம்முனிவர்மாற்றங்கேட்டலுமவரைநோக்கி
யிமையமேலிறைவன்றனபாவைகியேயெமக்கிவ்வைக
லுமைதனைவதுவைசீராலுதவுவான்வினவிவல்லே
நமதுமுன்வம்மினென்றுநன்றருள்புரிந்தானன்றே. (௬)

நாயகனருளக்கேளாநன்றெனவிறைஞ்சியேகி
யேயதொன்முனிவாயாருமிமையமேலிறைமுனண்ண
வாயவன்மனைவியோடுமடைநதெதிர்கொணடுதொழ்ந்து
தேயமொடருச்சிததேத்திநின்றிதுபுகலுகின்றான். (௭)

படியறுநுந்தாளீண்டுப்பதெலாவிமையமேருத்
தடவரையதனிற்றூய்தாய்த்தலைமையும்பெற்றதன்றே
நெடியவென்பவழுமின்னேனீங்கினைநீவிரெல்லா
மடியனேன்றன்பால்வந்தநிமித்தமென்னறையுமென்றான். (௮)

அங்கதுவினவுமெல்லையருந்தவரகிலமீன்ற
மங்கையைவதுவைசெய்வான்மன்னுயிர்க்குயிராய்நின்ற
சங்கரனினைந்துன்னோடுசாற்றுதற்கெம்மையுய்த்தா
னிங்கிதெம்வரலாறெனவிசைவுகொண்டிறைவன்சொல்வான். (௯)

துன்னியவுயிர்கள்யாவுந்தொல்லுலகனைத்துமீன்ற
கன்னிகையுமையாடன்னைக்கடிமணமுறையினல்கி
யென்னையுமடிமையாகவீகுவனிறைவற்கென்ன
மன்னவனயலேநின்றமனைவியீதுரைக்கலுற்றாள். (௧௦)

மலரயனபுதல்வனறன்னோர்மடந்தையைமணத்தினல்க
வலைபுனற்சடிலத்தண்ணலவன்றலைகொண்டானென்பா
நிலைமையங்கதனையுன்னிநெஞ்சகமஞ்சுமெங்கள்
குலமகடனையவற்குக்கொடுத்திடலெவனோவென்றாள். (௧௧)

என்றலுமவளைநோக்கியெழுமுனிவோருஞ்சொல்வா
ரொன்றுநீயிரங்கலவாழியொப்பிலாமுதல்வன்செய்கை
நன்றுதேர்ந்திலையாற்றக்கனலதகுமவியைமாற்றி
யன்றுதன்னிகழ்தலாலேயவன்றலைமுடிவுசெய்தான். (௧௨)

அடைந்துளோர்க்கருளுமாறுமல்லவர்தமக்குத்தண்டம்
படுந்துணைதெரிந்துகூட்டும்பான்மையும்பரமன்செய்கை
மடந்தையிதனைமையாருமனப்படுத்துணர்வரீதே
திடம்படவுணர்திவேறுசிந்தனைசெய்யேலென்றார். (௧௩)

வேறு.

இயலுறுமுனிவோர்களிவைமொழிதலுமோரா
மயலறுவரையண்ணலவாய்மையிதெனலோடு
மயலுறுமனைமேனையஞ்சினளமலன்றனை
செயலிதுவுணராதேசெப்பினனிவையென்றே. (௧௪)

உண்ணலிவொடுமேனையுவாமலரடிதாழூஉப்
பெண்ணறிவெவையேனும்பேதைமைவழியன்றோ
வண்ணறனருணீர்மையணுவதுமறிகில்லேன்
புண்ணியமுனிவீரென்புன்மொழிபொறுமென்றாள். (௧௫)

பணிவுடனிவைமேனைபகர்தலுமவடன்பாற்
கணிதமிலருள்செய்யக்காவலனதுகாணூ
வினைதவிர்முனிவீர்காளிவளுரைகருதன்மின்
மணமியலிறையோனைவர்மொழிகுதிரென்றான். (௧௬)

பணிபடுவரையண்ணல்பகர்மொழியதுகேளா
மனமிகமகிழ்வாகிமற்றவாதமையங்க
ணினிமையொடுறநல்கியெழுவருமவணீங்கித்
தனிநிகர்பிறிதில்லாத்தண்கயிலையில்வந்தார். (௧௭)

வந்தெழுமுனிவோருமாநகரிடைசாரா
நந்திகண்முறையுய்ப்பநாதனைநணுகுற்றே
யந்தமிலளியோடுமெவனடிதொழுதேத்தி
யெந்தையையிதுகேளென்றியாவதுமுரைசெய்தார். (கஅ)

வரைமிசையரசாள்வோன்மணவினையிசைவெல்லா
முரைசெயவருள்செய்தேயும்பரின்முனிகாணீர்
புரிதருசெயலாற்றப்போகுதிரெனலோடு
மரனடிதொழுதேத்தியவர்பதமணுகுற்றார். (கக)

வேறு.

எங்குறைதீர்ந்ததென்றெழுதவத்தரும், தங்கடம்பதத்திடைத்தணப்பின்றெய்தினா
ரிங்கிதுநின்றிடவிமையமேலிறை, யங்கினிசெய்தவாறறியக்கூறுவாம். (உ0)

மணமபேசுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சுஅக.

## வரைபுனை படலம்.

கண்ணுதலுமைதவங்கண்டுநின்னையா, மண்ணவர்புகழ்வகைமணத்துமென்றது
தும், விண்ணெழுமுனிவரின்வினவிவிட்டது,மெண்ணினன்மகிழ்ந்தனனிமையத்
தண்ணலே. (க)

கனிதமிலுயிரெலாங்கலந்துமற்றவை, யுணர்வுதொறிருந்தவற்கொருதன்கனி
யை, மணமுறைபுரிதிறமதித்துதேவர்தம், பணிபுரிதச்சனைப்பரிவொடுன்னினான்.

உன்னியபோதினிலும்பர்கம்மியன, மன்னவனெதிருறவந்துகைதொழு,தென்னை
கொல்கருதினையாதுசெய்பணி, யன்னதைமொழிகெனவறைதன்மேயினன. (ங)

எனையாள்கணனுதலிறைவற்கியான்பெறு, மனையாமுமைதனையளிப்ப
னிவ்வரைக், கன்னிமாநகரெலாங்கவின்சிறந்திடப், பொன்னிறாடாமெனப்புனை
தியாலென்றான. (ச)

அப்பொழுதத்தினிலடுக்கன்மேலையோன், செப்பியவாசகஞ்செவிக்கொண்டுள்ள
மேன், மெய்ப்பெருமகிழ்ச்சியைமேவியந்நக, ரொப்பனைசெய்திடவுன்னினனரோ

நீடுறுதருநிரைநிமிருங்கால்களாய்ப், பாடுறுகழிகளாய்ப்பரம்பும்பல்பணை
மூடுறவதன்மிசைமுகில்களெங்கணும், பீடுறுபந்தர்போற்பிறங்கும்வெற்பின்மேல்.

மலையுறழ்கோபுரமன்றஞ்சூளிகை, நிலைகெழுசெய்யதேர்நிழற்றுமண்டபம்
பலவுடனறுமலர்ப்பந்தரன்னவை, தொலைவறுமாவணந்தோறுநல்கினான். (எ)

நீக்கமில்கதலிகைநெடியகேதன, மேக்குயர்காவணமிசைத்தந்தூள்ளிடை
யாக்குறுகம்பலமணிசெய்தாயிடைத், தூக்கினன்கவரியுஞ்சுடர்கொண்மாலையும்.()

குரகதமுகம்புரைகுலைகதேகிய, மரகதவொளிபடுவாழைபூகநன்,னிரைகெழுதன்
மையினிறுவிப்பூந்துணர், விரைகெழுதோரணம்விசும்பினூற்றினான். (க)

ஒண்ணிதியக்கர்கோனுறையுளானதும், விண்ணவர்தொழுதிடவீற்றிருந்திடு
மண்ணறன்கோயிலுமாகவீதிக, ளெண்ணருந்திருவுறவெழில்படுத்தினான். (க0)

ஒருபுறத்தினையினியுமைக்குநல்குவோ, னிருபுறத்தினும்வருமெண்ணிறேவருக்
தருபுறப்பொருளெலாஞ்சாரச்சாலைக, ளிருபுறத்திருபுறச்செய்தமைத்தனன். (௧௧)

ஆயிரப்பத்தெனவறையும்யோசனை, போயதோரளவையிற்புரிசையொன்றினைக்
கோயிலினொருபுடைகுயிற்றிக்கோபுரம், வாயில்கணான்கினுமரபினல்கினான். (௧௨)

அங்கதனடுவுறவகன்பரப்பினின், மங்கலமணஞ்செயவதுவைச்சாலையைச், செங்
கனகத்தினாற்றிகழச்செய்தனன், கங்கையஞ்சடையினான்கயிலைக்கோயில்போல்.

சாலையினிலத்திடைச்சந்தமான்மத, மேலுறுநாவிநீர்விரவிப்பூசியே
கோலமென்மலர்கடூஉய்க்குறுகும்வானவர்க், கேலுறுபலதவிசிருப்பச்செய்தனன்.

வானவின்மணிமுகில்வனசமாமலர், நீணிறம்விரிதருநெய்தல்சண்பக
மேனையநிறங்களாலெண்ணில்வேதிகை, யானவைபுரிந்தனனயனுநாணவே. (௧௫)

கண்ணாடிபூந்தொடைகவரிபஃறுகின், மண்ணியசெழுமணிமாலைதூங்குறப், பண்
ணுறுவித்தனன்பரமன்பால்வரும்,விண்ணவர்விழியெலாம்விருந்துகொள்ளவே.()

தேவருமுனிவருந்திருவனார்களும், பாவையினுயிருறுபண்பினாக்கியே
மேவருகவரிதாரவீணையேந்தியே, யேவலர்தொழின்முறையியற்றநல்கினான். (௧௭)

பெண்ணியலாரெனப்பிறங்கும்பாவைக, ளண்ணுமைமுதலியதாக்கித்தண்டியல்
பணொடுகளிநடம்பயிலுவித்தனன, விண்ணவரரம்பையர்யாரும்வெஃகவே. ()

நெருங்கியகிளிமயினேமிதண்புறாப், பொருங்கரியரிபரிபொருநர்வானுளோ
ரொருங்குடன்மணிகளாலோவியப்பட,வருங்கடியிருக்கையுளமரநல்கினான்.(௧௯)

குறைதவிர்நிலைமையாற்குயிற்றுஞ்சாலையு, ணிறைதருமிந்திரநீலத்தாலொரு
திறலரியணையினைச்சிறப்பிற்செய்தன, னிறைவனுமிறைவியுமினிதுமேவவே. ()

குண்டமும்வேதிகைவகையுங்கோதில்சீர், மண்டலமானதும்வகுத்துவேள்விசெய்
பண்டமதானதும்படுத்திப்பண்ணவ, ரெண்டொகைமங்கல * மிருத்தினானரோ.()

கண்டெறுகதிர்மதிக்காந்தங்காஞ்சன, மொண்டுகிர்நித்திலமொளிறுவச்சிர,முண்ட
கவெயின்மணிமுதல்வெறுக்கையான, மண்டபமெண்ணிலமருங்கினல்கினான். ()

காவிகண்மலர்தருகயங்களோர்பல, வோவறுமுற்பலவோடையோர்பல
பூவியல்வாரிசப்பொய்கையோர்பல, வாவிகளோர்பலமருங்கிலாக்கினான். (௨௩)

பாசடைமரகதம்பளிங்குவச்சிரங், காசறுநன்மணிகனகமன்னதாற்
றேசுறுநளிமலர்செறிந்தபூந்தடம், வாசவன்கண்டுளமருளத்தந்தனன். (௨௪)

கற்பகஞ்சந்தகில்கதலிபூகமே, பொற்புறுவருக்கைமாப்புன்னையாதிய
பற்பலமணிகளாற்படுத்தியன்னவை, நற்பயனவழங்கவுநல்கினானரோ. (௨௫)

இன்னவாறளப்பிலவிமையவர்க்கெலா, முன்னுறுகம்மியன்முன்னிச்செய்தலும்
பொன்னியலிமகிரிப்புரத்துமேவிய, மன்னவன்கண்டவைமகிழ்ச்சியெய்தினான்.()

சீதரனயன்முதற்றேவர்மாத்தொகை, மாதவமுனிவரர்மடந்தைமாரொடு
காதலினுமைமணங்காணவந்திடத், தூதரையெங்கணுந்தூண்டினானரோ. (௨௭)

ஒற்றர்தம்முரைதெரிந்தும்பர்யாவருங், குற்றமின்முனிவருங்குன்றவில்லினாற்
பற்றலர்புரமடுபரமற்போற்றியே, மற்றவன்றன்னொடுவருதுமென்றனர். (௨௮)

---

* தேவமங்கலம் எட்டு:—கண்ணாடி, பூரணகும்பம், இடபம், இரட்டைச்சாமரம், ஸ்ரீவற்சம், சுவஸ்திகம், சங்கம், தீபம்.

வெற்றிகொள்வயப்புலிமிசையுயர்த்திடும், கொற்றவையாமவளைசூழீஇயகாளிகள்
சுற்றுறுமெழுநதியினமயத்தொல்கிரி, யுற்றனர்தொழுதனருமைமுனண்ணினர். ()

செந்திருநாமகள்சீர்பெறுஞ்சசி, பந்தமிலுரூபதபன்னியாயுளா
ரந்தமிலணங்கினர்யாருமவவரை, வந்தனரவரவர்மகிழ்நரேவலால். (௩௦)

பங்கயமிசைவருபாவையேமுத, னங்கையர்யாவருநற்றவத்திறை
லங்கொரத்துறைதருமம்மைதாடொழா, மங்கலவதுவையின்வனப்புச்செய்தனர்.()

நெறிதருதவத்துருநீக்கிக்காமருக், குறையுளதாகியவுமைதன்மெய்யினைக்
குறைதவிர்கிலைமையிற்கோலஞ்செய்தன, ரிறைவனைவழிபடுமியல்பினரென. ()

மேதகுபொலஞ்சுடர்மேருமந்தர, மாதியவாகியவலகில்சுற்றமு
மோதருங்கடல்களுமுரகவேந்தரு, மாதிரயானையும்பிறவுமவந்தவே. (௩௩)

வேறு.

ஈங்கிதுகாலைதன்னிலிமகிரிபுரக்குமன்னன்
பாங்குறுதமர்களோடும்பரிவொடுஞ்சென்றுவெள்ளி
யோங்கலினந்தியுய்ப்பவுயிர்க்குயிரானவண்ணல்
பூங்கழல்வணங்கிநின்றுங்கிணையனபுகலுற்றான். (௩௪)

ஆதியினுலகமெல்லாமளித்திடுமென்னைதன்னைக்
காதலின்வதுவைசெய்யக்கருதினைதணிதநூலோ
ரோதுபங்குனியின்றிங்களுத்தரமின்றேயாகு
மீதுநன்முகூர்த்தமெந்தாயிமையமேல்வருதியென்றான். (௩௫)

அல்லுறழ்கண்டத்தெந்தையரசனைநோக்கியின்னே
யெல்லையில்கணங்கள்சூழவிமையமேல்வருதுமுன்னஞ்
செல்லுதியென்றலோடுந்திருவடிவணங்கிப்போற்றி
வல்லையின்மீண்டுபோய்த்தனவளநகரிருக்கைபுக்கான். (௩௬)

வரைபுனை படலமுற்றிற்று

ஆ திருவிருத்தம் - ௪௨௫.

---

# கணங்கள்செல்படலம்.

அந்தவேலையிற்கயிலையிலெமபிரானருளா
னந்திதேவரைவிளித்துநம்மணச்செயனுட
முந்துசீருடையுருத்திரகணங்கண்மான்முதலோ
ரிந்திராதியர்யாரையுந்தருதியென்றிசைத்தான. (௧)

இன்னவின்பமின்றாகியபரமனீதுரைப்ப
நன்னயப்புடனிசைந்துபின்னந்தியம்பெருமா
னன்னர்யாவருமணப்பொருட்டேற்றிடவகத்து
ளுன்னல்செய்தனனவரெலாமவ்வகையுணர்ந்தார். (௨)

உலகமுய்ந்திடவெம்பிரான்மணம்புரியுண்மை
புலனதாதலுமவனருண்முறையினைப்போற்றி
மலியும்விம்மிதம்பத்திமைபெருமிதமகிழ்ச்சி
பலவுமுந்திடக்கயிலையைமுன்னியேபடர்வார். (௩)

பாலத்தீப்பொழிவிழியுடைப்பஞ்சவத்திரனே
மூலத்தீப்புரைவிடைப்பெருங்கேதுவேமுதலாகு
சூலத்திக்கரத்தாயிரகோடியோராசூழக்
காலத்தீப்பெயருருத்திரன்வந்தனனகடிதில். (௪)

சுழலனூற்றிடுகுறையும்வடவையுந்தொலைய
முழுதுயிர்த்தொகையலமரவுயிர்க்குமொய்ம்புடையோ
ரெழுபதிற்றிருகோடிபாரிடத்தொகையீண்ட
மழுவலத்தினனயகூர்மாண்டனும் * வந்தான. (௫)

நீடுபாதலத்துறைபவாநெற்றியங்கணணா
பீடுதங்கியபல்வகைநிறத்தவாபெரியா
கோடிகோடியாமுருத்திரகணத்தவாகுழுவோ
டாடகேசனுமுருத்திரன்கயிலையிலடைந்தான. (௬)

கோரமிகுயர்நூறுபத்தாயிரகோடி
சாரத்தொகைசூழ்தரசதாமுகனமுதலோ
ராருமச்சுறசரபமாய்வந்தருள்புரிந்த
வீரபத்திரவுருத்திரனவந்தனனவிரைவில. (௭)

விண்டொங்குறுமுலகுயிர்முழுதுமோரவிரவிற்
கொண்டொங்குறுகுறடபடைகோடிநூறிணடப
பண்டொராங்கலந்தரியரனிருவருமபயந்த
செண்டுதாங்குகைமமேலையோன்மால்வரைசென்றான. (௮)

மூந்தைநான்முகன்விதிபெறுனமயங்கலுமூக்கட்
டந்தையேவலாலங்கவனெறறியந்தலத்தினை
வகுத்துதோனறிநலலருளசெய்துவாலுணாவளித்த
வைந்துமாறுமாமுருத்திராநாமுமவந்தடைந்தா. (௯)

இத்திறத்தராமுருத்திரபல்லதையோனை
மெத்துபல்புவனங்களுமளித்தவணமேவி
நித்தனன்புறுமுருத்திரகணங்களுநெறிசே
புத்தியட்டகமுதல்வரும † வந்தனாபொருபபில் (௧௦)

தொட்டதெணகடலயாவையுநதுகளினூறுறாக்கு
மெட்டுநூறெனுங்கோடிபாரிடத்தொகையீண்டக்
கட்டுசெஞ்சடைப்பவாமுதலாகவேகழறு
மட்டமூர்த்திகடாங்களுமொருங்குடனடைந்தா. (௧௧)

ஏறுகொண்டிடுதெழிப்பினரெம்பிரான்விழிநீ
நாறுகொண்டுளகலத்தொடுபொடிபுனைநலத்தோ
நூறுகொண்டிடுகோடிபூதத்தொடுநொடிப்பின்
வீறுகொண்டகுண்டோதரன்போந்தனனவெற்பில. (௧௨)

* கூவ்தமாண்டன - கூசமாண்டனென்றாயிற்று.

† புத்தியட்டகமுதல்வர் - புத்திதத்துவத்திலுள்ள சூக்குமபுவனமெட்டின் அதிபதிகள். அச்சூக்குமபுவனாட்டகமாவன பைசாசம், ராக்ஷசம, யாக்ஷம், காந்தாவம, மாகேந்திரம, சௌமியம, பிராசேசுவரம, பிராமம் என்பனவாம.

அண்டம்யாவையுமுயிர்த்தொகையனைத்தையுமழித்துப்
பண்டுபோலவேதந்திடவல்லதோர்பரிசு
கொண்டசாரதர்நூற்றிருகோடியோர்குழுமக்
கண்டகன்னனும்பினாகியும்வந்தனர்கயிலை. (௧௩)

ஆனனங்களோராயிரமிராயிரமங்கை
மேனிவந்தபொன்மால்வரைபுரைநிறமேவித்
தானைவீரர்நூற்றைம்பதுகோடியோர்சாரப்
பானுகம்பனாந்தலைவனொண்கயிலையிற்படர்ந்தான். (௧௪)

தங்கள்சீர்த்தியேமதித்திடுகடவுளர்தலையும்
பங்கியாகியகேசமும்படைகளும்பறித்துத்
துங்கமெய்தியகணங்கள்பல்கோடியோர்சூழச்
சங்குகன்னன்வந்திறுத்தனனறடவரைதன்னில். (௧௫)

காளகண்டனுந்தண்டியுநீலனுங்கரனும்
வாள்வயம்பெறுவிச்சுவமாலியுமற்று
மாளிமொய்ம்பினராயபல்பூதருமனந்த
நீளிருங்கடற்றானையோடணைந்தனாநெறியால். (௧௬)

கூற்றின்மொய்ம்பினைக்கடந்திடுசாரதக்குழுவோர்
நூற்றுமுப்பதுகோடியோர்சூழ்ந்திடநொய்தின்
மாற்றலாபுரமட்டவன்றாளிணைவழிபட்
டேற்றமிக்கவீசானனக்கயிலையிலிறுத்தான். (௧௭)

ஏகினமாகிய * மாலயன்வாசவனிமையோர்
புகலுமாதிரங்காவலாகதிாமதிபறக்கோண்
மிகையதாரகையன்னைகள்வசுக்கள்வேறுள்ளா
மகிழும்விஞ்சையாமுனிவராயாவருமவந்தார். (௧௮)

வாலிதாகியமறைகளாகமங்கண்மந்திரங்கண்
ஞாலமாதியபூதங்களுலகங்கணாகள்
காலமானவையேனையபொருளெலாங்கடவுட்
கோலமெய்திவந்திறுத்தனகயிலையிற்குறுகி. (௧௯)

இந்தவாற்றினாற்கயிலையில்யாவரும்யாவும
வந்ததன்மையைநோக்கியேயாற்றவுமகிழ்ந்து
நந்தியுள்புகுந்தமலனுக்கித்திறநவில
முந்தையன்னவர்யாரையுந்தருகெனமொழிந்தான. (௨௦)

பராரியித்திறமொழிதலுஞ்சிலாதனார்புதல்வ
னொராய்முதற்கடைகுறுகியேயுருத்திரகணங்கள்
முராரியாதியாமவிண்ணவர்முனிவரெல்லோரும்
விராவுநீர்மையிற்சென்றிடக்கோயிலுள்விடுத்தான. (௨௧)

விடுத்தகாலையிலரியணைமீமிசைவிளங்கிக்
கடுத்தயங்கியகண்டன்வீற்றிருப்பதுகாணூஉ
வடுத்தவன்புடன்யாவருமிறைஞ்சியேயவன்சீ
ரெடுத்துநீடகின்றேத்தியேயணுகினரிமைப்பில். (௨௨)

---

* முன்னொருகாலத்தில அன்னவடிவங்கொண்டு, விட்டுணு வேதங்களை யருளிச்செய்தமைபற்றி, எகினமாகிய மாலெனப்பட்டது.

நீண்டசீருருத்திரர்தமைநிறைந்தபல்கணத்தை
யீண்டுதேவரைமுனிவரைவீற்றுவீற்றிசையா
வாண்டுதன்விரற்சுட்டியேயாதிநாயகற்குக்
காண்டல்செய்துநின்றேத்தினன்வேத்திரக்கரத்தோன். (உ௩)

ஆரழற்பெயரண்ணல்கூர்மாண்டனுடகத்தோன்
வீரபத்திரன்முதலுருத்திரகணமேத்தப்
பாரிடத்தவர்யாவருமெம்பிரானபாங்கிற்
சேரலுற்றுநின்றேத்தினர்பணிந்தசிந்தையராய். (உ௪)

அன்னகாலையினான்முகனெம்பிரானணிவா
னுன்னியேமுடிமுதலியபல்கலனுதவிப்
பொன்னினாயதோர்பீடிகையிற்கொடுபோந்து
முன்னராகவைத்திறைஞ்சியேயித்திறமொழிவான. (உ௫)

ஐயகேளுனக்கில்லையாறபற்றிகலடியே
முய்யுமாறிவணமணஞ்செயவுனனினையுனபான்
மையன்மாசுணப்பணியெலாமாற்றிமற்றிந்தச
செய்யபேரணியணிந்தருளென்றுசெப்பினனே. (உ௬)

பங்கயாசனனுரையிரந்திணையனபகர
வங்கண்மூரல்செய்தனபுடனீயளித்திடலா
லிங்குநாமிவையணிந்தெனமகிழ்ந்தனமெனருச
செங்கையாலணிகலத்திணைத்தொட்டருள்செய்தனன. (உ௭)

பிரமனன்புகண்டிவ்வகையருள்செய்தபின்ன
ரொருதனமெய்யணிபணிகளேயணிகளாயுறுவான்
றிருவுளங்கொளவவ்வகையாகியசெகத்தை
யருள்புரிந்திடுபராபரற்கிசசெயலரிதோ. (உ௮)

கண்டியாவருமற்புதமடைந்துகைதொழுதும
வண்டுலாங்குழற்கவுரிபாலேகுவான்மனத்திற
கொண்டுபோங்குறைதலைவருககுணர்த்தியேகுறிப்பாற்
பண்டுமாலயற்கரியவனெழுந்தனன்படர. (உ௯)

கணங்கள்செலபடலமுற்றிற்று
ஆக திருவிருத்தம் - எ௫௪.

# திருக்கல்யாணப்படலம்.

நாறுடையபுயக்கண்ணுதனந்தியம்பெருமான
போற்றிமுன்செலவமரருமுனிவரும்புகழ
வேற்றதும்புருநாரதர்விஞ்சையாயாருமா
பாற்றியக்கமுனீழலுமாமெனப்பாட. * (௧)

* பருந்து பறக்கின்றவிடத்து முறையே உயர்ந்து தன்னிலத்தின்கணின்றுயர்ந்து பின்னும் அம்முறையே மேன்மேலுயாகின்றாற்போலப் பாடவேண்டுதலின், மிடற்றிசைக்குப் பருந்தினியக்கம் உவமையாயிற்று. அப்பருந்தினியக்கத்தை அதனது நிழலியக்கம் பின்செல்லுமாறுபோல அம்மிடற்றிசையை யாழிசைபின்செல்லவேண்டுதலின், யாழிசைக்குப் பருந்துநிழல் உவமையாயிற்று.

சொன்மறைத்தொகையாகமமுதலிய துதிப்பப்
பொன்மைபெற்றதன்கோநகர்நீங்கியேபொற்றுள்
வன்மைபெற்றகுண்டோதரன்மொய்ம்பிடைவைத்துச்
சின்மயத்தனிமால்விடையேறினன்சிவனே. (௨)

விடையின்மீமிசைத்தோன்றியேயெம்பிரான்விளங்கப்
புடையின்வந்தவரல்லதுதிருநகர்ப்புறத்துக்
கடையினின்றவர்யாவருங்கண்டுகண்களியா
வடையவேபணிந்தேத்தினாரளக்கரிஞாததார். (௩)

நந்திமேல்கொண்டுநந்திமேவுறுதலுநந்தித
தந்திமாமுகததவுணாகோனலமரத்தடிந்தோ
னைந்துநூற்றெழுகோடிபூதப்படையனாக
வந்துவந்தனைசெய்துமுன்போயினன்மாதோ. (௪)

கதிருஞ்சோமனுங்கவிகையுஞ்சிகரநகானு
முதலியணைல்சாந்தாற்றியுமும்பர்தங்கோமான்
புதியகால்செயுமவட்டமுமெடுத்தனர்புடைபோய்
முதிருமாதவமோடப்பணிபரிந்தனர்முறையால். (௫)

பேரிகொக்கரைசல்லிகைகாடிகைபீலி
சாரிகைத்துடிதணனுமைகுடமுழாத்தடாரி
போரியற்படகாகளம்வயிர்முதற்புகலுஞ்
சீரியத்தொகையியம்பினர்பாரிடத்திறலோர். (௬)

அத்தனேவலாலுருத்திரர்குழுவுமாலயனு
மெய்த்தவம்புரிமுனிவருமேனைவிண்ணவரு
மொய்த்ததேரொடுமானமாப்புள்ளிவைமுதலாந்
தத்தமூர்திமேல்கொண்டனர்செய்பணிதவாதோர். (௭)

தாழ்ந்துதன்பணிபரியுமத்தலைவருந்தவத்தாற்
காழ்ந்தநெஞ்சுடைப்பூதருமேனையகணமுஞ்
சூழ்ந்துசென்றிடக்கயிலையையகன்றுதொலலுலகம்
வாழ்ந்திடும்படியேகினனிமையமாலவரைமேல். (௮)

வார்ப்பெரும்பணையாதியவரம்பில்பல்லியத்தி
னார்ப்புமெங்கணுமவெள்ளிடையினறியேயகல்வான்
றார்ப்பினீண்டியதானையினோதையுஞ்சுராக
ளார்ப்பும்வாழ்த்தொலியரவமும்புணரியுண்டெழுமால். (௯)

வேறு.

அனையதன்மையிலாதியமபண்ணவன், பணிகொள்வெறபிறபடரவம்மன்னவ
னினியகேளொடெதிர்கொடுதாழ்ந்துதன், புனிதமாநகரிற்கொடுபோயினான். (௧௦)

போதலோடும்புனிதன்வரத்தினைக், காதலாற்கண்டுகண்களிப்பாகியே
யாதமெய்திநின்றஞ்சலிதேத்தியே, வீதியாவும்விழாவயர்ந்திட்டவே. (௧௧)

மீண்டிநின்றிடேவீதியின்மாதரா, ரண்டர்நாயகனற்புதப்பேருருக்
கண்டுதாழ்ந்துகரைதவிர்காதலாந், தெண்டிரைப்படிந்தார்செயல்வேறிலார். (௧௨)

நிறைத்தபூண்களுநேர்ந்தபொன்னாடையு, நறைத்தசாந்தமுநாண்மலர்க்கண்ணியும்
பிறைத்திருச்சடைப்பிஞ்ஞகன்பேரெழினை, மறைத்ததென்றுமணந்தளர்வார்சிலர்.

உய்யுமாறெனுவர்தமைக்காண்டலும், வெய்யகாமக்கனல்சுடவேவுறுந்
தையலார்கடனுவுறுநீறுகொ, லையராகத்தணிந்ததென்பார்சிலர். (௧௪)

எழாலையன்னசொலேந்திழைமாதரார், குழாமகன்றுகுழகனைச்சேர்தலுங்
கழாலுகின்றபல்காழுடைமேகலை, விழாதிறைஞ்சினர்மெல்லியலார்சிலர். (௧௫)

அல்லிசேர்தருமம்புயமீமிசை, வல்லியன்னவர்வான்றுகில்சோர்வுறு
மெல்லவீழ்தலுமின்னிடையார்க்கெலா, மில்லையோபுனையென்றுரைப்பார்சிலர். ()

வாசமவீழ்தலும்வந்துவந்தில்லிடைத், தூசுடுத்திலமென்றெரூர்துகில்புனைந்
தாசையோடுசென்றன்னதும்வீட்டியே, யூசல்போன்றனரொண்டொடிமார்சிலர்.

மாண்டசாயன்மடநதையரேதனை, வேண்டிமால்கொடுவீடுறும்வேலையி
லீண்டுபோறறுகெனவுமெண்ணுதேதோ, வாண்டகைக்கியலாகுமென்பார்சிலர். ()

கருமபுநோமொழிக்காரிகைமாதரா, விரும்பிவேண்டவுமேவலர்போலுழா, லரும்
பொனமேனியெமமண்ணலுக்குள்ளமு, மிரும்புகொலலென்றியம்பிடுவாசிலா. ()

நெருக்குபூண்முலைநேரிழையார்க்குமால், பெருக்கிஞரவர்பேதுறலோகிலா
ருரைப்பதெனகொலுயிர்க்குயிராகியே, யிருக்குமிஙகிவரெனறுரைப்பார்சிலர். ()

திருகுவார்சடைசசெய்யனைநோக்கினெ, றுருகுவாசிலருள்ளுறவெம்பியே
கருகுவாசிலர்காதலிமாரொடும, பெருகுகாதலைப்பேசுகின்றாசிலா. (௨௧)

வேறுளாமெய்விளாப்பினைநோக்கியே, யீறிலாரையிவரணைந்தார்கொலோ
நீறுமெய்யினிலவியதென்றவாச், சீறியேயிகல்செய்திடுவாசிலர். (௨௨)

கட்டுசெஞ்சடைக்கான்மிசையூர்தர, விட்டவெண்மதிமெல்லியலார்தமைச்
சுட்டதமமசுமப்பதென்னீரொருக், கிட்டிநினறுகிளததிடுவார்சிலா. (௨௩)

கஞ்சமேலயனுஇக்கடவுளா, தஞ்சமென்றுசரண்புகவுண்டதோர்
நஞ்சின்வெயயகோனஙகையாகொஙகைமேற, றுஞ்சுகின்றதுயிலதென்பாசிலா.

பினனருள்ளபெருநதொழிலாற்றுவான், றன்னுவீரெனிற்றெல்குழுவாடவா
நன்னலதொடுநண்ணமின்னுரையே, யினனலசெய்வதெனனறுரைப்பாசிலர்.

சாற்றியிஙகினியாவதென்றையன்மீ, ரேறறின்மேவினரெம்மைமணநிட
மாற்றிலாதமலைமகள்போலயா, நோற்றிலோமெனநொந்துயிாப்பார்சிலா. (௨௬)

தேவருய்யததிருமணஞ்செய்திட, மேவுகினறவாமெல்லியன்மங்கைய
ராவிகொள்ளவமைந்தனரித்திற, மேவாசெய்வரெனவுரைப்பார்சிலர். (௨௭)

மையல்வேழம்வயப்புலிபோல்வரும், வெய்யர்தம்மைமெலிவிப்பதன்றியே
நொய்யமான்புரைநோக்கியர்க்குந்துயர், செய்யுமோவெனச்செப்புகின்றார்சிலர். ()

நங்கள்கொற்றவனற்றவத்தாற்பெறு, மங்கைபாலின்மணப்பொருட்டேகின
ரிஙகெமக்கினிமைத்திறஞ்செய்கலார், சங்கரர்க்குத்தகாதிதென்பார்சிலர். (௨௯)

பேதைநீரவர்பேரிளம்பெண்மையோ, ரர்தியந்ததணங்கினரின்னணம்
வீதிதோறும்விரவியததாருக, மாதராரினுமாதர்பெற்றாரரோ. (௩0)

பண்டைவேதன்பதத்தினும்பேரெழில், கொண்டுநின்றவக்கோநகர்வீதியி
னண்டம்வெஃகவணிபடுத்திட்டவை, கண்டுபோந்தனன்கண்ணுதலண்ணலே. ()

செய்யதானசெழுங்கமலாசனத், தையல்காழுறத்தக்கனவீதிகள்
பையநீங்கிப்பராபரையாகிய, வையைகோயிலணித்தெனநண்ணினன். (கூஉ)

வேந்தனேவலின்வேதங்களின்றுகா, ருய்ந்துநாடற்கரியவெம்மண்ணன்முன்
பூந்தடம்புனல்பூரித்தபல்குட, மேந்திவந்தனர்மாதவரெண்ணிலார். (கூக)

இருவகைப்படுமெண்வகைமங்கலப், பொருண்மைமுற்றவும்பூவையர்பற்பல
வரிசையிற்கொடுவந்தெதிரெய்தினு, ரரியயற்கரிதாகியவண்ணன்முன். (கூச)

அறுகுநிம்பமழுசிலரிசனஞ், சிறுகுமையவிசெம்பஞ்சின்விததிவை
குறுகுதண்புனற்கொள்கலமேந்தியே, மறுகிலவந்தனாமங்கையரெண்ணிலார். ()

நெருக்குபூண்முலைநேரிழையாரவா, பொருக்கெனவெதிர்போந்துயிராவினு
மிருக்குமாதியிறைவனையேத்தியே, தருக்கொடேநினறுதந்தொழிலாற்றினர். ()

எங்கணுதனெதிருறவெண்ணிலா, மங்கைமார்சுடர்மன்னியதட்டைகள்
செங்கையிற்கொடுசென்றுவலன்வளைஇ, யஙகண்மும்முறையன்பொடுசுற்றினர்.()

ஆனகாலையருமணச்சாலைமுன், ஞானநாயகனட்பொடுநண்ணியே
வானுலாயமழவிடைநீங்கினன், யானமீதினின்றியாருமிழிந்திட. (கூஅ)

விடையிழிந்துழிமேனைவிண்ணாட்டவர், மடமின்னொரொடுவந்துபராபர
னடிகண்மீதினிலான்பொழிபாலகொடு, கடிதினூட்டினள்கைதொழுதேகினள். ()

நாதனவவழிநந்திகளுய்த்திடும், பாதுகைக்கட்பதமலர்சேர்த்தியே
போதன்மாதவனபொறகரந்தநிடக், கோதினமாமணக்கோயிலுளெய்தினன். ()

வேறு.

பல்லியமியம்பவானோபரவவிஞ்சையர்கள்பாட
வொல்லெனக்கணங்களார்ப்பவுருத்திராயாருஞ்சூழ
மெல்லெனசசெல்லுமணணல்விரிஞசனுமாலுமவேண்ட
மல்லலங்கோயிலுள்ளவனப்பெலாநோக்கலுற்றான். (சக)

உலாவுறுசுருமபுமூசாவொண்மலாச்சோலைவாவி
நிலாவுறம்புனலசேரோடைநெடுந்தடநிறம்வேறுகிக்
குலாவுமண்டபங்களின்னகொண்டியல்வனப்புக்காட்டிச்
சிலாதனன்மதலைகூறச்சென்றுசெனறிறைவன்கண்டான். (சஉ)

கண்டலுந்தம்போற்றங்களகாமர்விண்ணகரந்தானு
மண்டலவரைப்பின்வந்துவைகியதாங்கொலென்று
வண்டார்கள்வர்விகேணியகனபுனல்குடைந்துங்காமர்
தண்டலையாடல்செய்துந்தலைத்தலைதிரிதந்துற்றார். (சங)

நந்தியந்தேவுகாட்டநல்வனப்பனைத்துநோக்கிக்
கந்தமெனபோதுவேய்ந்தகடிமணச்சாலைதன்னி
லிந்திரநீலத்திட்டவெழினலத்தவிசினும்பர்
வந்துவீற்றிருந்தானெல்லாமறைகட்குமறையாய்நின்றான். (சச)

வீற்றிருந்தருளுமெல்லைவீரபத்திரன்றீப்பேரோ
னாற்றல்கொள்கூர்மாண்டேசனுடகனையனேனோர்
போற்றிசெயயனேமாலேபுரந்தரன்முனிவர்தேவ
ரேற்றிடுதேவிசுதோறுமிருந்தனரிறைவற்சூழ. (சரு)

வேறு.

அமையப்பமெய்ப்பொழுதத்தினிலாதியண்ணல்
விமலத்திருமாமணங்காணுறமேலையண்டச்
சுமையுற்றிடுமெப்புவனத்தருந்தொக்கநீரா
லிமையச்சயிலந்துளங்குற்றதிடுக்கணெய்தி. (௪௬)

பொன்பாலிமையந்துளங்குற்றழிப்போற்றுசேடன்
றன்பாலவனியெனலாந்துலைத்தட்டிரண்டின்
வன்பாலதானவடபாலதுதாழமற்றைத்
தென்பாலதாற்றவுயர்ந்திட்டதுதேவருட்க. (௪௭)

ஓங்குற்றதுதென்புவியாதலுமும்பரெல்லா
மேங்குற்றனர்மண்ணுலகோர்களிடுக்கணுற்றுத்
தீங்குற்றனவோவெமக்கென்றுதியக்கமுற்றார்
பாங்குற்றிடுதொன்முனிவோரும்பரியலுற்றார். (௪௮)

இன்னோரெவருஞ்சிவனேயென்றிரங்கலோடு
முன்னோனுமன்னசெயல்கண்டுமுறுவலெய்தி
யன்னோர்குறைநீததிடநந்தியைநோக்கியாழி
தன்னோகரத்திற்செறிததானைத்தருதியென்றான. (௪௯)

என்றானதுகாலையினந்தியிறைஞ்சியேகிக்
குன்றாதகும்பமுனிவன்றனைக்கூவவங்கட்
சென்றானவனைக்கொடுபோய்ச்சிவன்முன்னருய்ப்ப
மன்றார்கழல்கள்பணிந்தான்மலயத்துவள்ளல். (௫0)

தாழ்ந்தவத்தோன்றனைக்கண்ணுதற்சாமிநோக்கித்
தாழுங்குறியோயிவண்யாவருஞ்சார்தலாலே
தாழும்புவிதக்கிணமுத்தரஞ்சாலவோங்கத்
தாழுஞ்சுவாக்கநிலனுந்தனிதாழமன்றே. (௫௧)

தெருமந்துழலுந்தரைமன்னுயிர்செய்ததொல்லைக்
கருமந்தனைவிட்டயர்வெய்திக்கலங்குகின்ற
பெருமந்தரமேமுதலாயபிறங்கல்யாவு
மருமந்தமேருவரையுந்தவறாகுமம்மா. (௫௨)

ஆனான்முனிகேளொருநீயிவ்வசலநீங்கித
தேனார்மருதவளமேயதென்னாடுநண்ணி
வானாபொதியமலைமேவுதிவையமெல்லா
மேனாளெனவேசமாகிவிளங்குமென்றான். (௫௩)

பிறையொன்றுவேணிப்பரனிங்கிதுபேசலோடு
மறையொன்றுதீஞ்சொற்றமிழ்மாமுனியச்சமெய்திக்
குறையொன்றியான்செய்துளனோகொடியேனையீண்டே
யுறையென்றிலைசேணிடைச்செல்லவுரைத்தியென்றாய். (௫௪)

என்னக்குறியமுனிவன்றனையெந்தைநோக்கி
யுன்னைப்பொருவுமுனிவோருலகத்திலுண்டோ
வன்னத்தவனுமுனைநேர்கிலனாதலானீ
முன்னிற்றெனவையுந்தவறின்றிமுடித்திமன்னோ. (௫௫)

வேறுற்றிடுதொன்முனிவோர்களின்விண்ணுளோரி
னீறுற்றிடுமோவிதுசெய்கையெவர்க்குமேலாம்
பேறுற்றநின்னுண்முடிவாகும்பெயருகென்று
கூறுற்றிடலுமுனியீதுகுறித்துரைப்பான். (௫௬)

வான்செய்தமேனிநெடுமான்மகவேள்விமன்னன்
றேன்செய்தகஞ்சத்தயனிற்கவிச்செய்கைதியேன்
றான்செய்திடவேபணித்திட்டனைதன்மையீதே
னான்செய்ததுவேதவம்போலுலகத்ததெந்தாய். (௫௭)

ஈங்கிப்பணியையளித்தாயெனிலெந்தையுன்றன்
பாங்குற்றபுத்தேண்மணக்காட்சிபணிந்திடாம
னீங்கற்கரிதாங்கவல்கின்றதெனநெஞ்சமென்ன
வோங்கற்கயிலைத்தனிநாயகனோதலுற்றான். (௫௮)

வேறு.

சிந்தையதழுங்கலின்றித்தென்மலைச்சேறியங்கண்
வந்துநம்வதுவைக்காட்சிவழங்குதுமகிழ்ந்துகாண்டி
நந்தமையுன்னியாங்கேநாளசிலவிருத்திபின்னா
முந்தையிலெமதுபாங்கர்வருதியானமுனிவவென்றான். (௫௯)

என்றிவையமலன்செப்பவிசைதருபுலத்தனாகி
மன்றமர்கழல்கடம்மைப்பன்முறைவணக்கஞ்செய்து
நின்றுகைதொழுதுபோற்றிநெடிதுயிர்த்தரிதினீங்கித்
தென்றிசையெல்லைநோக்கிச்சிறுமுனிகடிதுபோனான். (௬௦)

கிற்புறுமாயைவல்லகிரவுஞ்சவரையும்விந்த
வெற்பதும்வன்மைசிந்தவில்வலனோடுவாதாவி
கற்பனையகன்றுமாய்க்காவிரீத்ததோடு
முற்பகல்படாத்தென்னமுனிவரன்றென்பாற்போனான். (௬௧)

மறைபுகல்வேள்வியாற்றுமாவலிவலிகொள்காட்சிக்
குறியவன்றனையாய்மற்றோர்குறளுமுண்டாங்கொலென்னா
நெறியெதிரவுணாதமழுளொருசிலாநில்லாதோடச்
சிறுமுனிவானநீந்திச்சிமையமாமலயம்புக்கான். (௬௨)

முண்டகன்வலிகொண்டுற்றமூவெயிலழிப்பான்முன்னி
யண்டரும்புவனமுற்றுமாகியகொடிஞ்சிமான்றேர்
பண்டொருபததாலூன்றிப்பாதலதிட்டவண்ணல்
கொண்டதொல்லுருவமுன்னிக்குறுமுனியங்கணுற்றான். (௬௩)

பொதியமதென்னும்வெற்பிற்புனிதமாமுனிவன்வைகத்
துதியுறுவடபாற்றென்பாற்புவனியோர்துலைபோலொப்ப
வதுபொழுதுயிர்களானோரணங்கொரீஇயரனையேத்தி
மதிமகிழ்ந்தமர்ந்தாதொல்லைவதுவையின்செய்கைசொல்வாம். (௬௪)

கதுமெனமலயந்தன்னிற்கடமுனிசேறலோடு
முதுமைகொளிமையம்புக்கமுனிவருஞ்சுரருந்தேர்ந்து
மதிமலிசடையெம்மண்ணல்வரமயில்போருளுமன்னோன்
பதமுறைவழிபட்டோதம்பாள்மையும்பரவலுற்றார். (௬௫)

அங்கதுபொழுதுதன்னிலரசனதிசைவாலெங்கள்
சங்கரியையைகாப்பச்சசியென்பாளடைப்பையேந்தக்
கங்கைகள்கவரிவீசக்காளிகள்கவிகைபற்றப்
பங்கயமான்கைபற்றிப்பாரதிபரவவந்தாள். (௬௬)

வந்திடுமுலகையீன்றாள்வதுவையஞ்சாலைநண்ணி
யந்தமொடாதியில்லானடிகளைவணங்கமுன்னோன்
முந்துறுதவிசின்றன்பானமுற்றிழையிருத்தியென்ன
விந்திரைமுதலோராயாருமேத்திடவிருந்தாளன்றே. (௬௭)

இருந்திடுமெல்லைதன்னிலேலவார்குழலியெனனும்
கருந்தடங்கண்ணினளைக்கண்ணுதற்பராபரற்கு
விரைந்தருள்செய்யவுன்னிவேந்தனதிசைவானமேனை
பெருந்தடம்புனலுஞ்சந்துமலர்களும்பிறவுந்தந்தாள். (௬௮)

தருதலுமிமையத்தண்ணறாழ்ந்தனனிருந்துதேவி
சிரகநீர்விடுப்பவாதிதிருவடிவிளக்கிசாந்தம்
விரைமலர்புனைந்துநின்றவியன்கடன்பலவுஞ்செய்து
பொருவருமகிழ்ச்சியோடுபூசனைபுரிந்தானமாதோ. (௬௯)

பூசனைபுரிந்தபின்னர்ப்புவனமீன்றாடன்கையைப்
பாசமதகன்றதொல்சீர்ப்பரஞ்சுடர்கரத்துள்வைத்து
நேசமொடளித்தேனென்றுநெடுமறைமனுக்கள்கூறி
வாசநல்லுதகமுய்த்தான்மருகனென்றவனையுன்னி. (௭௦)

எங்குளபொருளுங்கோளுமீதலுந்தானேயாகுஞ்
சங்கரனுலகமெல்லாந்தந்திடுங்கன்னிதனை
மங்கலமுறையாற்கொண்டான்மலைமகன்கொடுப்பவென்றா
லங்கவனருளினீர்மையாரறிந்துரைக்கற்பாலார். (௭௧)

ஆனதோரமையந்தன்னிலாடினரமரர்மாதர்
கானமிசைத்தார்சித்தர்கந்தருவத்தாரானோ
ரேனையவிருவர்தாமுமேழிசைகீதஞ்செய்தார்
வானவர்முனிவர்யாருமறைகளையறையலுற்றார். (௭௨)

அல்லியங்கமலந்தன்னிலரிவையும்புண்டரீக
வல்லியுமற்றுளோருமங்கலம்பாடலுற்றார்
சல்லரிதிமிலைகாளந்தண்ணுமைசங்கமாதிப்
பலவியமியம்பிச்சூழ்ந்துபாரிடத்தொகையோரார்த்தார். (௭௩)

அதுபொழுதிமையத்தண்ணலாபொழிந்திட்டதீம்பால்
கதலிமாப்பலவினறீயகனிவகைநெய்தேனாதி
மதுரமாஞ்சுவையின்வர்க்கமவரம்பிலவீறறுவீற்று
நிதிகொள்பாசனத்திலிட்டுநிருமலன்முன்னருய்த்தான். (௭௪)

மறைநெறியினையவெல்லாமலைமகனுய்த்துமற்றெம்
மிறையிவைநுகர்தல்வேண்டுமெனத்தொழவினிதேயென்றுக்
கறைமிடற்றணிந்தமேலோன்கரத்திலவற்றைதொட்டாங்
குறுபெருங்கருணைசெய்தேயுவந்தனனங்கோடியோனான். (௭௫)

தொன்மைகொளருளினீராற்றுய்த்தனவாகத்தொட்ட
கின்மலவுணவைமன்னனேயமோடங்கண்மாற்றி
யின்மலர்கந்தத்தீர்த்தமிவற்றெடுமொருசாருய்ப்ப
நன்மகிழ்வோடுவேதாநாயகற்குரைக்கலுற்றான். (எசு)

படங்கிளர்சேடன்றாங்கும்பார்விசும்புறையுமீரா
றடங்கலுமணஞ்செய்போதத்தவவவர்க்கடுத்ததாற்றி
நடக்கிடுமொழுக்கமெங்கைநடத்திடல்வேண்டுமென்றற்
சடங்கினியுளதுமுற்றத்தண்ணளிபுரிதியென்றான். (எஎ)

என்னலுமுறுவல்செய்தேயிறையருள்புரியவேதன்
வன்னியுமதற்குவேண்டுமபொருள்களுமரபிற்றந்து
பொன்றெடுபுகருமேனேமுனிவருமபுடையிறகுழத
தன்னிகரில்லாமன்றற்சடங்கெலாமியற்றலசெய்தான. (எஅ)

அந்தணர்கரணமெல்லாமாற்றியேமுடிந்தபினனாத
தந்தையுந்தாயுமாகியுலகெலாந்தந்தோாதம்மை
மூந்துறவயனுமபினனாமுகுந்தனுமதற்குப்பின்ன
ரிந்திரன்முனிவர்வானோயாவருமிறைஞ்சலுற்றா. (எக)

அரனுடனுமையாடன்னையாங்கவர்பணிதலோடு
முருகெழுகிலையுட்கொண்டவுருததிரததலைவரேனோ
பரிசனர்கணங்கள்யாருமபணிந்தனரதன்பின்னுகக்
கிரியுறையிறைவன்மைந்தனகேளொடுவணக்கஞ்செய்தான். (அ0)

தமதுமுன்பணிகின்றோர்கடமக்கெலாமீசனறனு
முமையுநல்லருளைசசெய்யவோாந்திதுபதமெனறுன்னி
யிமகிரிபுரந்தவண்ணலினைடுறைதீராக்கெல்லா
மமலனதுணவுமறறுமளிபபனென்றகததுட்கொணடான். (அக)

ஆய்ந்திடுமறைகள்போற்றுமாதிதன்றிருத்தமபோது
சாந்தமொடவிகடமசைசசதூமுகன்முதலவானோக்குமு
வாய்ந்திடுமுனிவாயாாககுமறறுளாாாதமககுமனன
னீந்திடவவற்றையனனோரியாவருமணிந்துட்கொண்டார். (அஉ)

ஆலமாமிடற்றோற்கானவமலமாமபொருளையேற்றுச்
சீலமோடணிந்துட்கொணடுசிந்தையுண்மகிழ்ந்துநநத
மூலமாம்வினைகட்கின்றேமுடிபொருநகுற்றதென்றார்
மேலவரன்றுபெற்றவியபபினைவிளமபலாமோ. (அங)

அனையதோர்காலைதன்னிலமலமாமபொருள்கடமமைப்
பனிவரையிறைவனறனும்பன்னியுந்தமருளாரு
மெனைவருமருந்திமேற்கொணடெல்லையிலின்பமுற்றா
வினைவலியொருவிமேலாமவீடுபேறடைந்துளார்போல். (அச)

தன்னுறகணவன்றஞ்சசத்தாபதகிலை * யளாகி
யின்னலையடைநதநகுற்றவிரதியவவெல்லைவந்து
மன்னுயிர்முழுதுமீன்றமஙகையையமணந்தவள்ளல்
பொன்னடிவணங்கிததீயேன்புன்கணைதவிர்த்தியென்றாள். (அரு)

* தாபதகிலை - விதவைவிரதம்.

சீருறுகணவனில்லாள்செப்பியமாற்றங்கேளா
வாருயிர்முழுதுநின்றேயனைத்தையுமுணர்ந்துகூட்டும்
பேரருளுடையநாதன்பேதுறன்மடந்தையென்று
மாரன்வந்துதிக்கும்வண்ணமனத்திடைநினைந்தானன்றே. (அசு)

நினைதருமெல்லைதன்னின்னெடியமான்முதலாவுள்ள
வனைவருமருட்கையெய்தவழுங்கியவிரதிநோக்கி
மனமகிழ்சிறந்துகார்காண்மஞ்ஞையிற்களிப்பவங்கட்
குனிசிலைகொண்டமாரன்கொம்மெனத்தோன்றினானே. (அஎ)

முன்பொடுதோன்றுமாரன்முதல்வியோடிருந்தநாதன்
பொன்புனைகமலத்தாண்முன்போந்தனன்றாழ்ந்துபோற்றி
யென்பிழைபொறுத்தியென்னையாமுனைமுனியினன்றே
பின்பதுதணிவதுள்ளம்பேதுறன்மைந்தவென்றான். (அஅ)

எரிபுனைநமதுநோக்காலிறந்தநின்னுடலநீறாய்
விரைவொடுபோயிற்றன்றேவேண்டினளிரதியன்றாட்
குருவமாயிருத்தியேனையும்பரோடிம்பர்க்கெல்லா
மருவினையாகியுன்றனரசியல்புரிதியென்றான். (அகூ)

செய்வினைமுறையாலீசன்சித்தசற்கினையகூறி
யவ்வனரசுஞ்சீருமாணையுமவ்வியுநல்கி
மைவிழியிரதியோடுமனனுதொல்புரத்துச்செல்ல
மெய்விடையுதவவன்னோவிரைந்துடனெழுந்துபோனான். (கூ0)

இரதியுமதனுமேகவிந்திரநீலத்திட்ட
வரியணையிருந்தநாதனம்மையொடிழிந்துதன்னோ
திருவுருவுடையமேலோர்தேவர்மாமுனிவரேனோ
பரவினர்செல்லப்பூதபல்லியந்தெழிப்பச்சென்றான். (கூக)

மன்னுயிர்க்குயிராய்நின்றோன்மால்விடையேறிமாதைத்
தன்னொருபாங்கிற்கொண்டுதழீஇகொடுநட்டதிவானோ
தொன்னிலையமைந்துசெல்லத்துவன்றியேகணங்கள்சுற்றப்
பொன்னியலிமையந்தீர்ந்துவெள்ளியம்பொருப்பில்வந்தான். (கூ௨)

அன்னதோர்காலைமாலையயனைவெற்பரசைவேள்வி
மன்னனையமரர்தம்மைமுனிவரைமாதராரக
ளென்னவர்தமையுந்தத்தமிடந்தொறுமேகும்வண்ண
முன்னுறவிடுத்தானென்பமூலமுமுடிவுமில்லோன். (கூ௩)

அடுகனலவன்கூர்மாண்டனுடகனையன்சிம்புள்
வடிவினனாதியானவரம்பிலாவருத்திரர்க்குங்
கடகரிமுகத்தினாற்குங்கணங்களிற்றலைமையோர்க்கும்
விடையினையுதவியையன்வியன்பெருங்கோயில்புக்கான். (கூ௪)

ஏறெனுங்கடவுண்மீதினிம்மெனவிழிந்துதன்னோர்
கூறுடைமுதல்வியோடுங்கோநகர்நடுவணெய்தி
யாறணிசடையெம்மண்ணலரியணைப்பீடமீதில்
வீறொடுதொன்மையேபோல்வீற்றிருந்தருளினானே. (கூ௫)

அன்பினர்க்கெளிவந்துள்ளவாதியம்பரமன்மாது
தன்புடையாகச்சியத்தவிசின்வீற்றிருத்தலோடுந்
துன்பகன்றிருபாலாகித்துவன்றியவுயிர்களெல்லா
மின்பொடுபோகமாற்றியினிதமர்வுற்றவன்றே. (கக)

திருக்கல்யாணப்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - அ௱௦.

# திருவவதாரப்படலம்.

பற்பகலினையவாறுற்படாதலும்பினனோவைகளை
மூற்படுமயன்மாலவேள்விமுதலவன்றிசைகாப்பாளர்
சொற்படுமுனிவர்வானோர்யாவருந்தொலலைமேரு
வெற்பினிற்குழுமிசுராணமிகமெலிந்திரங்கிச்சொல்வார். (க)

உலகினையவுணர்க்கீந்தேயோகிபோல்வைகும்பான்
மெலிவினைப்படுத்தியாமபோய்வேண்டலுமிரக்கமெய்தி
மலைமகடனைவேட்டான்மைந்தனைத்தந்துநமமைத
தலையளிபுரியான்வாளாவிருப்பதென்றுணுவானோன. (உ)

இவறலுமிகலுமின்றியார்க்குமோர்பெற்றித்தாகி
யவரவாவினைகளுடியதற்படுபொருளைநல்குஞ்
சிவனையாமவெறுத்தல்குற்றஞ்சிறந்தநோன்பியற்றிடாதே
தவறுசெய்தனமெனநெம்மைநோவதேதக்கதென்றார். (ங)

ஆயினுமவன்றாள்போற்றியடையினன்கனைத்துமாகுந்
தீயனவகலுமீதுதிண்ணமாமதனாலின்னுங்
காய்கதிர்மதிசூழ்கின்றகயிலையங்கிரியின்முக்க
ணாயகற்கிதனைக்கூறநாமெலாம்போதுமென்றார். (ச)

போதரவிசைந்தகாலைப்பொன்னலாகமலபுதமேன்
மேதகுபரமன்செய்கைவினவியேயகலவேண்டுந்
தூதுவனொருவன்றனைத்தூண்டிமுன்னறிதுமென்றே
யூதையங்கடவுடனைநோக்கியீதுரைக்கலுற்றான். (ரு)

வடவரையதனின்மூன்றுமாணகுவடெறிந்துவெளவி
யுடலசினவரவமுட்கவுததியிலுய்த்தமைந்த
படாயதிமிலைச்சுஞெனணிப்பண்ணவன்செயலைவெள்ளிக்
கடிவரைநகரதெய்திக்கண்டனைமீடியென்றான். (சு)

பல்விதழ்வனசமேலோனினையனபகரநோன்றாள்
வில்லுடைமதனவேளைவிழித்தடுகடவுண்முன்னஞ்
செல்லுவதரிதுசெல்லிற்றீமையேபயக்குமென்பா
வொல்லுவதன்றிச்செய்கையுள்ளமும்வெருவுமென்றான். (எ)

கூற்றிதுநிகழ்ந்தவேலைக்கோகனதத்துமேலோன்
காற்றினுக்கரசைநோக்கிக்கம்பலைகொள்ளேல்யாண்டு
மூற்றமொடுலவல்செய்யுமொருவனைநீயேயன்றி
வீற்றொருதேவருண்டோமேவிதுபுரிதற்பாலார். (அ)

உற்றுழியுதவிசெய்வோருலப்புறுதெவையுமீவோ
ரற்றமிறவத்தாறற்ருேரமர்புரிவீரராவோர்
மற்ருெருபொருளும்வெஃகார்வருத்தமுமோராராவி
யிற்றிடவரினுமெண்ணுரினிதெனமகிழ்வரன்றே. (௯)

ஆதலினெங்கட்கெல்லாமாற்றிமுதவிக்காகப்
போதியாலையவென்றுபுகழ்ச்சியாலிளையபல்வே
றேதிடுபொருண்மைகூறவிசைந்தனனெழுந்துதீயின்
காதலன்விடைகொண்டேகிக்கயிலைமால்வரையிற்சென்ருன். (௧௦)

குணறதன்புடையில்வீழுங்குரைபுனலாற்றிஞடி
மணறலங்காமாகாவினமலாமணமளாவிவாரித
தென்றியாயசைந்துமெல்லச்சினகரம்புகுதுமெல்லை
நின்றதோராநந்திகாணுாஉவுரப்பினனெடிதுசீறி. (௧௧)

பொற்பிரம்பொன்றுபற்றிப்பொலனமுதற்கடையைப்போற்றி
நிற்புறமாணைவள்ளனெடுஞ்சினததுரப்பலோடு
கற்பொழியெழிலிகான்றகனையொலிகேட்டபாமபின்
முற்படாகின்றகாலோனமொய்ம்பிலன்வெருவிவீழ்ந்தான. (௧௨)

வே று.

ஒல்லெனவீழ்வுறுமுயிரப்பின்காவல, னெல்லையிலச்சமொடிரங்கியேயெழீஇத்
தொல்லையினுருக்கொடுதோனறிநந்திதன, மல்லலங்கழல்களைவணங்கிக்கூறுவான்.

மாலயன்மகபதிவானுளோரெலா, மாலமர்கடவுளையடைதனமுனனிநீ
காலையதறிந்தனைகடிதுசெலகென, மேலுரைசெய்தனர்வினையினேனுடன். (௧௩)

கறுத்திடுமிடறுடைக்கடவுளாடலைக்,குறிக்கரிதஞ்சுவல்குறுகவென்றியான், மறுத்
தனனனையர்தமவருத்தஙகூறியே, யொறுதெனைவிடுத்தனருடையவனமையால்.

ஆதலினடியனேனஞ்சியஞசியே, மேதகுதென்றியாய்மெல்லவந்தன
ஞேதிடநினைந்திலனுனகுமற்றிது,பேதைமையுணர்வினேன்பிழைபொறுத்திநீ.()

தானவாதொழவருதகையில்சூரனுன், மானமதொருவியேவருத்துற்ருேய்ந்தன
ஞனதொன்றுணாகிலேனறிவுமாழ்கினே, னேனையதேவருமினையநீரரே. (௧௭)

அறைதருகணத்தருளாதியாகிய, விறைவநினமுனிவினுக்கிலக்குற்ருரிலை, சிறி
யவெனபொருட்டினுற்சீற்றங்கோடியோ, பொறைபுரிந்தருளெனப் போற்றிவே
ண்டினன். (௧அ)

ஆண்டகைநந்தியெம்மடிகளவவழி, மூண்டெழுதன்பெருமுனிவுநீாந்தியா
மீண்டுநின் னுயிர்தனையீதுநிற்கலை, மீண்டனைபோகெனவிடைதந்தேவினுன். (௧௯)

சீரியநந்தியநதேவனேவலு, மாருதனவனடிவணங்கிவல்லையி
னேரறுகயிலையினீங்கிநீடுபொன், மேருவிலவிண்ணவாகுழுவைமேவினுன். (௨௦)

மேவருகாவினுன்விரிஞ்சன்மாயவன், பூவடிவந்தனைபுரிந்துநந்திதன்
காவலின்வன்மையுநிகழ்ந்தகாரியம், யாவதுமுறைபடவியமபினனரோ. (௨௧)

காற்றுரைவினவியேகமலக்கண்ணனு, நாற்றிசைமுகத்தனுநாகர்செம்மலுஞ்
சாற்றருநதுன்பினாதம்மிலோர்ந்திடாத, தேற்றமொழிடினையனசெப்பன்மேயினுர்.

எந்தைதன்செய்கைதேர்ந்தேருநீயென, வெந்திறன்மருத்தினைவிடுத்துமாங்கவ
னந்திதன்ருனையானடுக்கமுற்றிவண், வந்தனனச்சுறுமனத்தனுகியே. (௨௩)

மன்னியகயிலைமால்வரையின்யாமெலா, மின்னினியேகியேயீசன்றன்முன
முன்னருங்காலமொடுற்றநங்குறை, பன்னுதறுணிபெனப்பலருங்கூறினர். (உ௪)

இவ்வகையவரெலாமிசைந்துசெம்பொனின்,மெய்வரைநீங்கியேவெள்ளிவெ
ற்பினிற், றெய்வதக்கோயின்முன்சென்றுநந்தியை, யவவிடைதொழுதிவையறை
தன்மேயினர். (உ௫)

வேறு.

நந்தியந்தேவுகேணங்கள்பாற்றுன்பெலாஞ்
சிந்தைசெய்திடுதியத்தேவதேவற்கியாம்
வந்தவாறோதியேவல்லைநீயெம்மையவன்
முந்துறக்காட்டெனறுமுகமனோடுரைசெய்தார். (உ௬)

மற்றிவாறுரைசெயும்வானவத்தொகையினை
நிற்றிராவென்றவணிறுவியேயுறையுள்போய்க்
கூற்றைவார்சடைமுடிக்கண்ணுதற்கடவுடன்
பொற்றடந்தாள்களைதொழுதனனபுகலுவான். (உ௭)

அண்ணலேயுனதுபொனனடிகளைக்காணிய
விண்ணுளோராயாவரும்வேந்தன்மாலயனொடு
நண்ணினரெனறலுநந்தியைதெரிகுறீஇத
தண்ணிலாவேணியான்றருதியென்றருள்செய்தான். (உ௮)

அருள்புரிந்திடுதலுமாதியமபண்ணவன்
றிருமலாததாள்களைச்சென்னியிற்சூடியே
விரைவுடன்மீண்டுறுவேதன்மாலாதியாஞ்
சுரரெலாம்வமமெனத்தூயவன்கூவினன். (உ௯)

கூவியேயருடலுங்கொண்டல்பேரொலியினற்
றூவிலாமகிழ்வுறுஞ்சாதகத்தனமையாய்ப்
பூவினுயகனமுதறபுகலுமவானவரெலாந்
தேவதேவனமுனஞ்செல்லுதனமேயினர். (௩௦)

அம்மையோர்பாகுறவரியணைக்கண்ணுறு
மெம்மையாளிறைவனமுன்னெய்தியேயாங்கவன்
செம்மைசோதாள்களைச்சென்னியாற்றாழ்ந்தெழீஇப்
பொய்மைதீரன்பினுவிணையவாபோற்றுவார். (௩௧)

வேறு.

நோக்கினுநுணைமுகிலைநுவலுகின்றதோர்
வாக்கினுமமைகிலைமதிப்பவொண்கிலை
நீக்கருநிலைமையினிற்றியெந்தைநீ
யாக்கியமாயதீதறிகிலேமரோ. (௩உ)

இருமையுமொருமையுமிரண்டுமொன்றிய
வொருமையுமனறெனவுலகம்யாவையும்
பெருமையினியற்றியபெருமநின்செய
லருமறையானவுமறிதற்பாலவோ. (௩௩)

உருவொடுதொழில்பெயரொன்றுமின்றியே
பரவியசீயவைபரித்துநிற்பது
விரவியவுயிர்க்கெலாம்வீடுதந்திடுங்
கருணையதேயலாற்கருமம்யாவதே. (௩௪)

அவ்வுயிர்யாவுநின்னருளிலாவழிச்
செய்வினைபுரிகிலசிறிதுமாதலால்
வெவ்வியநயப்பொடுவெறுப்பிலாதநீ
யெவ்வகையோவுலகியற்றுந்தன்மையே. (கரு)

முன்னதின்முன்னெனமொழிதுமேயெனிற்
பின்னதின்பின்னுமாப்பேசநிற்றியா
லன்னவையேயெனிலொழிந்ததல்லையோ
வென்னெனநின்னையாமேத்துகின்றதே. (கசு)

புல்லியபுரம்பொடித்ததுவுங்காமனை
யொல்லெனவெரித்ததுமுனக்குச்சீர்த்தியோ
வெல்லையில்விதிமுதலெனைத்துமீண்டுநின்
னல்லருளாணையேநடாத்துமென்கையால். (கஎ)

எங்களைமுனனரேயியல்பினீந்தனை
யெங்களையிவ்வரசியற்றுவித்தனை
யெங்களொடொருவனென்றிருத்திநினசெய
லெங்களினறிவரிதெனறுபோற்றினா. (கஅ)

வேறு.

அவவகையமரரெல்லாமன்புசெய்தேத்துமெல்லை
மைவருமிடற்றுப்புத்தேண்மற்றவர்வதனநோக்கி
நொவவுறலெய்திச்சிந்தைநுணஙகினீாறுங்கட்கின்னே
யெவவரமெனினுமீதுமவேணடியதிசைததிரென்றான். (கக)

என்றலுமமராசொல்வாராயாமெலாமிந்நாள்காறும்
வன்றிறலவுணர்தம்மால்வருந்தினமதனைநீஙகி
நன்றிகொடொலலையாககநண்ணுவாளுகநின்பா
லொன்றொருவரம்வேண்டிற்றுமதனியல்புரைததுமன்றே. (௨௦)

மும்மையினுயிாகள்பெற்றமுகிழ்முலைக்கன்னியாகு
மம்மையைமணந்ததன்மையாஙகவளிடமாவீஙகோர்
செம்மலையளிததற்கன்றேதீவினைக்கடறபட்டுள்ள
வெம்மையாளுவதற்கேதுக்காட்டியவியற்கையல்லால். (௨க)

ஆதியுநடுவுமீறுமருவமுமுருவுமொப்பு
மேதுவும்வரவுமபோக்குமின்பமுந்துன்புமின்றி
வேதமுங்கடந்துநின்றவிமலவோாகுமரன்றன்னை
நீதரல்வேண்டுநின்பாணின்னையேநிகாக்கவென்றா. (௨௨)

வந்திக்குமலரோளுதிவானவருரைத்தல்கேளாப்
புந்திக்குளிடர்செய்யற்கபுதல்வனைத்தருதுமென்னு
வந்திக்குநிகர்மெய்யண்ணலருள்புரிந்தறிஞராயோர்
சிந்திக்குந்தனதுதொல்லைத்திருமுகமாறுங் * கொண்டான். (௨௩)

* திருமுகமாறுதல் "ஐந்து முகத்தோ டதோமுகமுந் - தந்து - திருமுகங்க ளாறாகிச் செந்தழற்க ளாறு - மொருமுகமாய்த நிப்பொறியா றய்ப்ப" எனத் திருச்செநதூர்க் கநதர்கலிவெண்பாவிற் கூறியவாற்றாலுணாக.

சிற்புறமமரர்யாருநெஞ்சுதுண்ணென்னவே
மற்புதகீரரிகியருண்முறையுன்னிப்போற்றச்
சிற்பரன்றன்கொண்டுள்ள திருமுகமாறுதன்னிற்
பொற்புறுநுதற்கண்டோறும்புலிங்கமொன்றொன்றுதந்தான். (௪௪)

ஆவதோர்காலையீசனறுமுகநுதற்கண்மாட்டே
மூவிருபொறிகடோன்றிமுளரியான்முதலாவுள்ளோ
ரேவருமணுகல்செல்லாவெல்லைதீர்வெம்மைத்தாகிப்
பூவுலகண்டமுற்றும்பொள்ளெனப்பராயவன்றே. (௪௫)

மாதண்டங்குலவுநேமிவால்வளைவயிரவொள்வாள்
கோதண்டம்பரித்தோன்வேதாக்குறித்துணர்வரியசோதி
வேதண்டம்பரவிற்றென்னமேதினிசூழ்ந்துவிண்போய்
மூதண்டங்காறுஞ்சென்றமுதல்வன்கண்ணுதலிற்செந்தீ. (௪௬)

வேறு.

மங்கையோர்பங்குடைவள்ளலேந்திய, செங்கனலூழியிற்செறிவதாமென
வங்கவன்விழிபொழியனலம்யாவையு, மெங்குளவுலகமுமீண்டலுற்றவே. (௪௭)

ஆங்கனந்தழலெழவகிலமுற்றுமா, யோங்கியகால்களுமுலைவுற்றோய்ந்தன
வாங்கியதிரைக்கடல்வறந்ததாயிடைத, தீங்கனல்வடவையுஞ்செருக்குநீங்கிற்றால்.

பக்கனபாரகம்பதலைமுற்றுற, நெக்கனபணிகண்மெய்நெளித்துநீங்கிய
திக்கயமாற்றியேதியக்கமுற்றன, தொக்கனவுயிர்த்தொகைதுளக்கமுற்றவே. (௪௯)

காரணமில்லவன்கண்ணிற்கான்றதீப், பேரருள்புரிந்திடப்பிறந்தபான்மையா
லோருயிர்தன்னையுமொழிவுசெய்திலவ், வாரையுமெவற்றையுமச்சஞ்செய்தவே. ()

அன்னதன்வெம்மைகண்டமலன்பாங்குறை, கன்னியும்வியர்த்தனள்கலங்கி
யேயெழீஇப், பொன்னடிநூபுரம்புலம்பித்தாக்குறத், தன்னதோருறையுளைச்சார
வோடினள். (௫௧)

முண்டகனுதியாமுன்னர்நின்றுள, வண்டர்கள்யாருமவ்வழல்கண்டஞ்சியே, விண்
டனாதலைத்தலைவெருவியோடினார், பண்டெழுவிடத்தினுற்பட்டபான்மைபோல்.

இங்கனலடர்தலுஞ்செம்பொற்கோயிலின், யாங்கணுமாகியேயிரிந்தபண்ணவர்
வீங்கியவுயிர்ப்பொடுமீண்டுமெந்தைதன, பாங்கரில்வந்தனர்பரியுநெஞ்சினார். (௫௩)

வலைத்தலைமானெனவன்னிசூழ்ந்துழித், தலைத்தலையிரிந்துளோர்தமமின்மீள்குரு
நலத்தகுகண்ணுதனுதற்சேர்ந்தனர், கலத்தலையகன்றிடாக்காகம்போலவே. (௫௪)

தோற்றியநுதல்விழிச்சுடரின்சூழ்வினுக், காற்றலராகியேயடைந்தவானவர்
நாற்றடம்புயமுடைஞானநாயகற், போற்றிசெய்தினையனபுகல்வதாயினார். (௫௫)

வெந்திறலவுணரைவீட்டுதற்கொரு, மைந்தனையருள்கெனவந்துவேண்டினே
மந்தமிலழலேயருடல்செய்தனை, யெந்தையேயெங்ஙனம்யாங்களுய்வதே. (௫௬)

பங்குறையுமையவள்பாணியின்வரு, கங்கையெவ்வுலகமுங்கலந்ததாமென
விங்குநின்னுதல்விழியிருந்துநீங்கிய, பொங்கழலெங்கணும்பொள்ளென்றீண்டிய.

கற்றையஞ்சுடர்பொழிகனல்களின்றொகை, சுற்றியெவ்வுலகமுந்துவன்றலுற்
றவான், மற்றொருகணத்தவைமாற்றிடாயெனின், முற்றுயிர்த்தொகையையுமுடி
வுசெய்யுமால். (௫௮)

விஞ்சியபேரழல்வெம்மையாற்றலா, தஞ்சினமிரிந்தயாமையநின்னிரு
செஞ்சரணடைந்தனந்தெரியினீயலாற், றஞ்சமதுளதுகொலெம்மைத்தாங்கவே.()

மலக்குறுமனத்தினேம்வருத்தமுற்றவு, முலக்குறநீக்குநீயொல்லையெம்மிடை
யலக்கணதியற்றுதியாயினன்னதை, விலக்குறுநீரினர்வேறியாவரே. (சுO)

நிறைமுடிப்பணிமிசைநிலனுமவானமு, மிறைமுடிக்கின்றவிவெரியைநீக்கி
யே, பிறைமுடிக்கொண்டிடுபெருமவெமமுடைக், குறைமுடித்தருளெனக்கூறிவே
ண்டினா. (சுக)

அஞ்சலினவர் * புகழணலாதியோ, ரஞ்சலிசெய்திவையறைந்துவேண்டலு
மஞ்சலிலஞ்சடையணிந்தநாயக, னஞ்சலிரெனறுகையமைததுக்கூறினன். (சுஉ)

பொன்மலைவிலவினன்புதிதினவந்திடு, தனமுகமைந்தையுங்கரந்துதாவில்சீர்,
நன்முகமொன்றொடு நண்ணியததுணைத், தொன்மையினியற்கையாய்த தோன்றி
வைகினன். (சுந)

தன்னருணிலைமையாறசண்முகததிடை, நனனுதல்விழிகளினலருதீப்பொறி
யிந்நிலவரைப்புவானீண்டலுறறவை,முனனுறவருமவகைமுதல்வன்முன்னினன்.

அந்தியமபெருநிறததமலனவவகை, சிந்தைகொண்டிடுவழிச்செறிநதபேரழன
முந்தையின்வெம்பொறிமுவிரண்டவாய்,வநதுமுன்குறுகலுமகிழ்ந்துநோக்கினன.

ஆதருகாலையிலமராதஙகளு, மோா † தருசெயலிலாவுலவைததேவையு
மூதருநிலையுமுகததைநோக்குறு, மேதருகருணையால்விமலன்கூறுவான். (சுசு)

நீங்களிச்சுடர்களைநெறியிற்றுங்கியே, வீங்குநீாக்கஙகையில்விடுதிரன்னவை
யாங்கவள்சரவணமமரவுய்க்குமா, லீஙகிதுநுமபணியென்றியம்பினன். (சுஎ)

கூற்றுயிருண்டதாட்குழகனிவவகை, சாறறியதுணாதலுந்தாழ்ந்துமுமமுறை
போற்றினர்நடுஙகினர்பலமபுநெஞ்சினா, காறறொடுகனலிவைகழறன்மேயினா. ()

ஒருநொடியளவையினுலகயாவுமாய்ப், பெருகியவிததழல்பெருமநின்னுடைத்
திருவருணிலைமையாறசிறுகிற்றுதலா, லரிதரிதடியரேமாற்றலாகுமோ. (சுகூ)

ஈறறிவினையுலநினுக்கிழைக்குநினகணே, தோற்றியகனலினைச்சுமததறகோர்கண
மாற்றலையுடையரோவவனிகேளவனு, நாற்றிசைமுகமுடைநளினததேவுமே. ()

பண்டெழுவிடத்தினிற்பரந்ததீச்சுடா, கணடலுநின்றிலங்கவலுற்றோடின
மண்டவும்வெருவுதுமவறறையாந்தலைக், கொணடனமேகுதல்கூடற்பாலதோ. ()

அப்பெருங்கனலினையடைதற்குனனினும், வெப்புறுமெமதளம்வியாக்கும்
யாக்கையு,மெப்பரிசேந்துவம்யாஙகளெனறலுந,துப்புறழ்படாசடைப்பகவனசொ
ல்லுவான். (எஉ)

ஒன்றொருநொடியினிலுலகமுற்றுமாய்த, துனறியவிச்சுடர்சுமந்துகங்கையிற், செ
னறிடநுங்கள்பாற்றிண்மையெய்துக,வென்றனனறனவிசைந்துபோற்றினா.()

மற்றதுதெரிதலுமாலயன்முதற், சொற்றிடுமமரர்களெக்கநீங்குறு
விற்றதுகொல்லெமதின்னலின்றென, வுற்றனருவகையையுடலம்விம்மினர். (எச)

ஆங்கனமவர்தமையாதிநோக்கியித், தீஙகனல்சரவணஞ்செறிந்தொாசெம்மலா
யோங்குபுசூர்கிளைக்கொழிவுசெய்யுமா, லீஙகினியாவருமேகுவீரென்றான். (எரு)

* அஞ்சலினவர் - யாஞ்சராததிரிகள். † ஓ - முதனிலைத்தொழிற்பெயர்.

அருவமுமுருவுமாகியநாதியாய்ப்பலவாயொன்றாய்ப்
பிரமமாய்நின்றசோதிப்பிழம்பதோர்மேனியாகக்
கருணைகூர்முகங்களாறுங்கரங்கள்பன்னிரண்டுங்கொண்டே
யொருதிருமுருகன்வந்தாங்குதித்தனனுலகமுய்ய. (௯௨)

தோன்றல்வந்திடலும்விண்பாற்றுந்துபிகறங்கலுற்ற
வான்றதொன்மறைகளெல்லாமார்த்தனவயனுமாலும்
வான்றிகழ்மகத்தின்றேவுமுனிவருமலர்கடூவி
யேன்றெமையருளுகென்றேயேத்திசையெடுத்துச்சூழ்ந்தார். (௯௩)

ஏவர்தம்பாலுமின்றியெல்லைதீரமலற்குள்ள
மூவிருகுணனுஞ்சேய்க்குமுகங்களாய்வந்ததென்னப்
பூவியல்சரவணத்தண்பொய்கையில்வைகுமைய
னாவிகளருளுமாற்றாலறுமுகங்கொண்டானன்றே. (௯௪)

மல்லலம்புவனத்துள்ளமன்னுயிர்க்கணங்கட்கெல்லா
மொல்லையின்மகிழ்ச்சியெய்தியுவகையின்குறிப்புண்டான
தொல்லையிலவுணருஞ்சூரனேமுதலாவுள்ள
வெல்லவர்தமக்குமாயுமிருங்குறிப்புற்றவந்நாள். (௯௫)

மறைகளின்முடிவால்வாக்கான்மனத்தினாலளக்கொணாம
னிறைவுடன்யாண்டுமாகிநின்றிடுநிமலமூர்த்தி
யறுமுகவுருவாய்த்தோன்றியருளொடுசரவணத்தின்
வெறிகமழ்கமலப்போதின்வீற்றிருந்தருளினானே. (௯௬)

பாங்குறுதருச்சூழ்காலாப்பஃறழைசினைமென்கொம்பர்
நீங்கறப்புடைபோய்வானினிரந்தனபந்தராகத்
தூங்கியபழனுங்காயுந்துணர்களுமகத்துட்டுன்ன
யாங்கதனடுவட்பொய்கையணிநிழலமர்ந்தானையன். (௯௭)

முடிபொருதசையுநாகர்முதியகால்பலகைவையந்
தொடாகரைமரனேவானந்தூங்குபன்னணந்தெண்ணீர்த்
தடமலர்பாயலாகச்சரவணமஞ்சமீதி
னடைதருமைந்தன்மென்காலசைப்பவீற்றிருந்தானன்றே. (௯௮)

எண்பெருநாகர்சேடனேந்தெழிலரிமானாகத்
தண்பொலிபுனற்பூம்பொய்கைதவிசுருவாகநாள்கோள
விண்படர்விதானமாகவேலையந்தலைவன்காலை
யொண்பதலாடிகாட்டவுமைமகனங்கணுற்றான். (௯௯)

தரணியினடுவண்வைகுஞ்சரவணப்பொய்கைதன்னில்
விரைசெறிகமலப்போதில்வீற்றிருந்தருளுஞ்செவ்வேள்
பெருவடிவமைந்தமாயன்பிறங்கியமனத்திற்றண்ணென்
றெரிசுடர்விளக்கத்துச்சியிருந்திடுமீசன்போன்றான். (௧00)

பெருந்தரைநடுவணுகிப்பிறங்கியசரவணத்தி
லிருந்தணிக்கமலமொன்றிற்குமரவேளிருந்தபான்மை
திருந்துநல்லண்டப்புத்தேள்சிந்தையாம்புண்டரீக
புரந்தனில்விரும்பித்தானைவைகியவியற்கைபோலும். (௧0௧)

கொன்படைசேவலாகுமெனைமோர்கோடியீசன்
றன்பெருங்குமரற்குழத்தடத்தினின்மிழற்றலெந்தை
பொன்பிறழ்பதுமன்செய்கைபுரியுநாளுநேர்தியால
லென்புடையிருத்தியென்றேதமித்தமியிரத்தல்போலும். (௧௧௨)

வளஞ்செறியினையபாலால்வான்சரவணமாம்பொய்கைத்
தளஞ்செறிபதுமமொன்றிற்சராசரம்யாவுங்காப்பா
னுளஞ்செறிகருணையெய்தியொப்பிலாக்குமரமூர்த்தி
யிளஞ்சிறுமதலைபோலவினிதுவீற்றிருந்தான்மன்னோ. (௧௧௩)

நீரத்திகைக்கங்கைதன்னிற்றிகழ்சரவணத்தில்வந்த
மூர்த்திகைக்குழவியேபோன்முதற்புரியாடனோக்கி
யார்த்திகையுறுதவுள்ளத்தரிமுதலமரர்யாருங்
கார்த்திகைத்தெரிவைமாரைவிளித்திவைகழறலுற்றார். (௧௧௪)

சாற்றருஞ்சரவணத்திறசண்முகத்தொருவனாகி
வீற்றிருந்தருளுகின்றவிமலனோர்குழவிபோலத்
தோற்றினனவனுக்குங்கடுணைமுலையமுதமூட்டிப்
போற்றுதிராநாளுமென்னனநன்றெனப்புகன்றுவந்தார். (௧௧௫)

மறுவறுமாரலாகுமாதர்மூவிருவர்தாமு
நிறைதருசரவணத்தினிமலனையடைந்துபோற்ற
வுறுநர்கடமக்குவேண்டிற்றுதவுவோனுதலாலே
யறுமுகவொருவன்வேறாயறுசிறுருவங்கொண்டான. (௧௧௬)

ஆறுருவாதலோடுமறுவருமகிழ்ந்துவேறு
வேறுதாமெடுத்துத்தத்தமவியத்தகுதுணைமெனகொங்கை
யூறுபாலமுதமன்னோற்குதவலுமுறுவல்செய்து
மாறிலாவருளாலாற்றவருந்தினனபோலவுண்டான். (௧௧௭)

உண்டபினறுவராகுமொருபெருமுதல்வன்றனைத்
தண்டலைபொதுளுநீபத்தண்ணிழற்பொய்கைதன்னில்
வண்டயிலுறுதகஞ்சமாமலர்ப்பள்ளிசேர்த்திக்
கண்டுயில்செய்வித்தேதத்தக்கருணையாலினையசெய்வான. (௧௧௮)

துயிலவோருருவந்துஞ்சித்துண்ணெனவெழுந்துமென்சொற்
பயிலவோருருவம்யாய்தனபயோதரம்பவளவாய்வைத்
தயிலவோருருவநக்காங்கமரவோருருவமாட
லியலவோருருவம்வாளாவிரங்கவோருருவஞ்செய்தான். (௧௧௯)

ஓருருத்தவழமெல்லவோருருத்தளர்ந்துசெல்ல
வோருருநிற்றல்செல்லாதொய்யெனவெழுந்துவீழ
வோருருவிருக்கப்பொய்கையோருருவுழக்கிச்சூழ
வோருருத்தாய்கண்வைகவொருவனேபுரிதலுற்றான். (௧௨௦)

ஆடவோருருவஞ்செங்கையறையவோருருவநின்று
பாடவோருருவநாடிப்பார்க்கவோருருவமாங்க
ணோடவோருருவமோர்பாலொளிக்கவோருருவம்யாண்டுந்
தேடவோருருவமாகச்சிவன்மகன்புரிதலுற்றான். (௧௨௧)

இத்திறமிருமூன்றனயாக்கையுங்கணமதொன்றிற்
பத்துநூறாயபேதப்படும்வகைபரமாய்நின்ற
வுத்தமகுமரன்றானவுயிர்தொறுமாடல்போல்
வித்தகவிளையாட்டின்னமாயையால்விரைந்துசெய்தான். (௧௨௨)

சிற்பரனாகிவந்தசெய்யவேளாடற்றன்மை
பற்பலதிறமுநாடிப்பங்கயத்தயனுமாலுஞ்
சொற்படுமகத்தின்றேவுமுனிவருஞ்சுரரும்யாரு
மற்புதமகிழ்ச்சிகொண்டாங்கின்னவாறறைதலுற்றார். (௧௨௩)

சேயிவனொருவனேபல்சிறாருருக்கொண்டுநமமு
னேயெனுமளவைதன்னிலெண்ணில்பேத்ததனாகு
மாயினிக்குமரனாடலறிவரிதெமக்குமெல்லா
மாயமுமியற்றவல்லனவரம்பிலாவறிவன்மாதோ. (௧௨௪)

கைப்பயில்குழவிபோலக்காட்டியகடவுள்செய்யு
மிப்பெருமாயைபோலயாவருமபுரிதறேற்றா
செப்பியென்வேறியாமுஞ்செய்ததொன்றில்லையன்னா
னைப்பறுபரனேயாமென்றுரைசெய்துதொழுதுநின்றார். (௧௨௫)

அழலெனுமீனவர்க்கத்தறுவருக்குமரனுடன்
முழுவதுநோக்கிநோக்கிமுதிருமற்புதநீரெய்திக்
குழவிகளெனறேயுள்ளங்கோடல்விட்டகலாதஞ்சி
வழிபடுகடவுளோமிறபோற்றினாமனங்கொளன்பால். (௧௨௬)

அம்புயமுறழுஞ்செங்கேழறுமுகம்படைத்தகோல
நம்பிதன்வரவுதன்னைநவின்றனமினிமேலங்க
ணெம்பெருமுதல்விதன்பாலிலக்கதொனபதின்மர்செவவே
டமபியராகிவந்ததன்மையைவிளம்பலுற்றாம். (௧௨௭)

திருவவதாரப்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௧௭௭.

---

## துணைவர்வருபடலம்.

---

நஞ்சயின்றவனெற்றிகாட்டத்தினாலல்கு
வெஞ்சுடர்ப்பொறிவெம்மையையாற்றலன்விமலை
செஞ்சிலம்படிதாக்கலினவமணிசிதற
வஞ்சியோடினளித்திறமுணர்ந்தனளகத்துள். (௧)

மாயவன்முதலமரர்களீசனைவணங்கி
நீயொர்மைந்தனைத்தருகெனநெற்றிநாட்டத்தா
லாயவன்சுடருதவியோர்மதலையாயமர்வா
னேயினன்சரவணத்தெனத்தெரிந்தனளிறைவி. (௨)

அன்னதற்பினருமையவளெனதுபாலமலன்
றன்னருட்பெறுமதலைதோன்றுவகைதடுத்த
பொன்னகர்க்கிறைவிரிஞ்சன்மான்முதலபுத்தேளிர்
பன்னியர்க்கெலாம்புதல்வரின்றுகெனப்பகர்ந்தாள். (௩)

இமையமாமகளித்திறம்புகன்றுமீண்டேகிச்
சமயம்யாவையுநிறுவியகண்ணுதற்றலைவ
னமலமாந்திருமுன்னர்வந்தரிக்குமுன்னரிதாங்
கமலமாரடிகண்டனள்பணிந்துகண்களித்தாள். (௪)

உம்பர்யாவருங்குறையிரந்திடலுநீயுதவுஞ்
செம்பொறித்தொகையாற்றலும்வெம்மையுந்தெரிந்து
வெம்பிழுற்றுடல்பதைப்புறவகன்றிவண்மீண்டே
னெம்பெருந்தகையவ்வழனீக்கலாவென்றாள். (௫)

கன்னியிங்ஙனம்பகர்தலுங்கருணைசெய்தருளித்
தன்னிடத்தினிலிருத்தினனிருந்திடுதையல்
முன்னமோடலிற்சிதறுநூபுரமணிமுழுது
மென்னையாளுடைநாயகன்முன்னிலங்கினவால். (௬)

தளிரின்மெல்லடிப்பரிபுரமாயினதணந்து
மிளிருமந்நவமணிகளிற்றுணையால்விமலை
யொளிருநல்லுருததோன்றினவைமமுகதொருவன
றெளிருமுச்சுடரகததிடையமாநதிடுஞ்செயல்போல். (௭)

எண்ணிலாநவமணிகளினுமையுருவெனைத்துங்
கண்ணினுற்றெரிந்தருளினலவமமெனக்கழற
வண்ணமேலோர்வகைமணிக்கொருசததிகளாக
நண்ணினார்நவசததிகளமராநற்றவத்தால. (௮)

பருப்பதக்கொடிபுரைநவசத்திகள்பரமன்
றிருப்பதத்திடைவணங்கிநின்றவணிடைச்சிந்தை
விருப்பமவைததலுமுனிவர்தமகளிர்போல்விரைவிற்
கருப்பமுற்றனாயாவதுமுமையவள்கண்டாள். (௯)

முனமபுரிந்துலகளித்தவளனையாபானமுதிருஞ்
சினம்புரிந்திவணெமக்குமாறாகியதிறததாற்
கனம்புரிந்தவிக்கருப்பமோடிருததிரபல்கால
மினம்புரிந்தநீர்யாவருமென்றருளிசைததாள். (௧௦)

ஆவதெல்லையினடுக்கமுற்றஞ்சியேயயங்கண்
மேவுமாதர்மெய்வியர்த்தனரவ்வியர்ப்பதனிற்
றேவதேவனதருளினாற்றினகரத்திரள்போ
லோவிலாவிறல்வீரர்களிலக்காவந்துதித்தார். (௧௧)

வடுத்தனைப்பொருங்கண்ணினர்வியர்ப்பினில்வந்தாங்
கடுத்தமானவரோரிலக்கத்தருமசனி
கடுத்தசொல்லினர்பொற்றுகிலுடையினர்கரத்தி
லெடுத்தவாளினாபலகையராகியீண்டினரால். (௧௨)

அனையர்யாவருமீசனையடைந்தனரன்புற்
றினியவாகியவமலனுமங்கனையேத்தி
வனைகருங்கழல்வணங்கிமுன்னிற்றலுமற்றப்
புனிதநாயகனவர்தமைநோக்கியேபுகல்வான். (௧௩)

மைந்தர்கேண்மினோநீவிர்கள்யாவரும்வயத்தா
லிந்திராதியர்பகைவரையலைதற்கெமது
கந்தவேள்படையாகுதிரென்னவேகழறி
முந்துபேரருள்புரிந்தனன்யாவர்க்குமுதல்வன். (௧௪)

இன்பநீருடனிவையருள்புரிதலுமிலக்க
கன்பெருந்திறன்மைந்தர்களாயினோராளு
மன்புமேதகுபரிசனராகியேயமலன்
முன்புநீங்கலாதொழுகினர்செய்பணிமுறையால். (௧௫)

மாற்றருஞ்சினத்தம்மைமுன்கொடுமொழிவழங்கத
தோற்றுநன்மணியுருவமாந்தோகையர்துளங்கிப்
போற்றிவந்தனைசெய்துபின்னவள்பணிபுரிந்தே
யாற்றுதொல்கருப்பத்துடனபற்பகலமர்ந்தார். (௧௬)

இகலுமாமணிமகளிர்தங்கருவினுளிறைவற்
புகழுநந்தியங்கணத்தவாகுழவியாய்ப்போந்து
நிகரில்காளையராகிவீற்றிருந்தனர்நெறிசேர்
சுகனெனுமபடிபரமனைமுன்னியேதொழுது. (௧௭)

அரதனங்களிற்றோனறியமங்கையரகட்டிற்
கருவின்வந்திடுமாடவரீசனைக்கருதிப்
புரியும்யோகுடனிருத்தலினாற்றரும்பொறையாய்ப்
பரமதாதலுமுமையுடன்பரமனைப்பணிந்தார். (௧௮)

இருவர்தம்மையுமபணிந்தவரின்றுகாறினைய
கருவினொந்தனமின்னினியாமபரிக்கல்லே
மருள்புரிந்திடுமென்றலுமாதியங்கடவுள்
பரிவினாலுமைதிருமுகநோக்கியேபகர்வான். (௧௯)

ஏலவார்குழற்கவுரிநின்செய்யதாளிடையிற
சாலுநூபுரத்துதித்தவருனதுசாபத்தாற
சூலினான்மிகமெலிந்தனர்பற்பகல்சுமந்தார்
பாலரைப்பெறவினியருள்புரிகெனப்பணித்தான். (௨௰)

இறைவனிங்கிதுபணித்தலுநன்றெனவிசையா
முறுவல்செய்துமைமாதரைநோக்கிமொய்ம்பினரைப்
பெறுதிராலினியென்றலுமவர்வயிற்பெயரா
துறையும்யோகுடைவீரர்களித்திறமுணர்ந்தார். (௨௧)

மறத்தலில்லதோருணர்வுடைவீரர்கண்மற்றித்
திறத்தைநாடியேயோகுவிட்டுளமகிழ்சிறப்ப
விறத்தனீங்கியபரம்பொருளருண்முறையிறைஞ்சிப்
பிறத்தலுன்னியேமுயன்றனராயிடைப்பெயர்வார். (௨௨)

பரிபுரந்தனின்முன்வருமங்கையர்பலர்தன்
கருணைகொண்டசொற்கேட்டலுங்கவற்சியையகன்று
விரைவின்மேலவர்பதம்பணிந்தேத்தியேவிடைகொண்
டொருவிமைந்தரையளித்தனர்யாவருமொருசார். (௨௩)

நந்திதன்கணமுதல்வர்களாகியேநணியோர்
பந்தநீங்கியேசனித்தனரொன்றிலாப்பதின்ம
ரெந்தையாரருள்பெயர்கொடேயிருநிலவரைப்பிற்
சுந்தரன்விடைமுகத்தவன்றோன்றியவாபோல். (௨௪)

பேரவாகுவையுடையவனிளவல்பேரருளாற்
சூரவாகுலம்வானவர்பெறுவகைதொலைப்பா
னேரவாகுறுஞ்செம்மணிப்பாவைதன்னிடத்தில்
வீரவாகுவந்துதித்தனனுலகெலாமவியப்ப. (௨௫)

விரள * வல்லியார்தந்திருரரிவியனபடையாங
கரளவல்லிருளகற்றுவானெழுந்தவெண்கதிர்போற்
றிரளவல்லிணையிணையபூண்முலையுடைத்தெய்வத்
தரளவல்லிபாற்றோன்றினனவீரகேசரியே. (௨௬)

மக்கள்வானவாக்கருந்துயாபுரியும்வல்லவுணா
தொக்கவீரமாமகேந்திரப்பெருவளந்தொலையச
செக்காநூபுரப்புட்பராகததிபாற்சிறப்பாற்
றக்கவீரமாமகேந்திரனவந்தவதரிததான. (௨௭)

ஆதவததனிக்கடவுளுமவடவையாரழலுரு
சீதளப்புதுமதியமும்வெளகுறத்திகழ்கோ
மேதகத்தமர்பாவைபால்விண்ணவாபுரியு
மாதவத்தினல்வீரமாமகேச்சுரன்வந்தான். (௨௮)

தானமாநிலத்தேவாகணமகிழ்வுறத்தகுவ
ரானபேரெலாமுடிவுறவறந்தலையெடுபபக்
கானல்சேர்வயிடூரியமினனிடைக்கழற்காள்
மானவீரமாபுரந்தரனெனபவன்வநதான். (௨௯)

சூரராக்கமுந்துணைவர்தமமாக்கமுஞ்சூழுந்
தீரராக்கமும்வானவரேக்கமுஞ்சிதைய
வாரராக்கமழ்கொன்றைவேணியனருளதனுல
வீரராக்கதன்வந்தனன்வயிரமெல்லியல்பால். (௩0)

கரகதத்தனிமால்வரையெடுதெதாருகணததிற்
புரகதத்தினையிழைத்தவனருளினறபுணரிக்
குரகதத்திடைப்பைங்கனல்கொமமெனவெழல்போன
மரகதத்திபால்வீரமார்த்தாண்டன்வந்தனனே. (௩௧)

மையன்மாக்கரிவாம்பரிவிரவியமணித்தோ
வெய்யதானவர்பஃறுகையிமைப்பினில்விளிய
மொய்யினார்த்தமோனவன்பவளமாமொழிப்போத
தையறன்வயின்வலியவீராந்தகனசனிததான. (௩௨)

கந்துதித்திடுவியனரமடஙகலுங்கடலின்
முந்துதித்திடுமாலமும்வடவையுமூரண
நந்துதித்தநற்களமணி † ப்பாவைநற்றவததால்
வந்துதித்தனன்வீரதீரப்பெயர்வலியோன். (௩௩)

---

* விரளம் - நீக்கம், நெகிழ்வு. † மணி - இநதிரநீலமணி.

இந்தவீரரொன்பதின்மருமீசனதருளாற்
றந்தமன்னையர்நிறங்கொடேபோலத்துகிற்றங்கி
வந்துபற்பகல்வளர்தருமுறுப்பொடுமெடவா
ருந்தியின்வழிநான்முகத்தண்ணல்போலுதித்தார். (௩௪)

வேறு.

உதிதருமத்திறல்வீரரரியணைமேலம்மையுடனுறைந்தநாதன்
பதமலர்கள்பணிந்தெழுமவர்க்கண்டுபார்ப்பதியைப்பரிவானோக்கி
மதியுடையர்திறலுடையர்மானவருங்கலத்தினர்நம்மைந்தரின்னோர்
புதியரலர்நந்திதனிக்கணத்தவரென்றான்சுருதிப்பொருளாய்நின்றான். (௩௫)

தேவியதுகேட்டுமைந்தர்க்கருள்புரியவவர்க்கெல்லாஞ்சிவன்வெவ்வேறு
தாவில்சுடர்வாளுதவிவியர்ப்பில்வருமோரிலக்கந்தனயரோடு
நீவிர்களுமொன்றிநுங்கட்கிறையவனாகியசேயைநீங்கலின்றி
யேவலவன்பணித்தனசெய்தொழுகுதிரென்றனவருமிசைந்துதாழ்ந்தார். (௩௬)

ஒன்பானுமிலக்கத்தோரோரிலக்கத்தோர்தம்மோடொன்றிப்புல்லி
யன்பாகியெம்பெருமான்சினகரத்தையகலாமலங்கண்வைக
மென்பானல்புரையும்விழிச்சத்திகளொனபதின்மர்களும்விமலக்கன்னி
தன்பாலையிகவாமலவள்பணித்ததொழில்புரிந்துசார்தலுற்றார். (௩௭)

துணைவாவருபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧,௦௧௪.

## சரவணப்படலம்.

எற்றமானவரொன்றொழிபதினமரோடிலக்கர்
தோற்றமெய்தியதனமையையித்துணைசொற்றா
மாற்றல்சேர்புனறசரவணததடந்தனிலறுவர்
போற்றவைகினோனைகயிலையிற்புகுந்தமைபுகல்வாம். (௧)

தருப்ப * மிக்குளார்காணுறாத்தாவில்சீர்வெள்ளிப்
பொருப்பினுற்றிடுபரம்பொருள்கருணையாற்பொறைகூர்
கருப்பமற்றுயிர்முழுவதுந்தந்திடுகைகணிப்
பருப்பதக்கொடிக்கவவழியினையனபகாவான். (௨)

பொம்மலுற்றிடுநான்முகனாதியோர்புந்தி
விம்மலற்றிடமுந்துநம்விழியிடைத்தோன்றிச்
செம்மலர்ப்பெருஞ்சரவணத்திருந்தனசேயை
யிம்மலைக்கணேயுய்க்குதும்வருகெனவிசைத்தான். (௩)

வேறு.

செய்புவியதனினுஞ்செப்பிற்றோர்தலு
மம்பிகையுமையோடன்புகொண்டெழீஇ
நம்பெருமதலையைநாங்கொண்டேகுது
மெம்பெருமுதல்வநீயெழுதியாலென்றாள். (௪)

* தருபபம் - அகங்காரம்.

கொம்மைவெம்முலையினாற்குறிபடுத்திய
வம்மையீதுரைத்துழியருளினாலெழா
மைம்மலிமிடறுடைவானநாயக
னிம்மெனவவளொடுமேறதேறினான். (௫)

நந்தியினொருத்தமேனங்கையாளொடு
நந்திவந்திடுதலுநாகமேலுளா
நந்தியவினைத்தொகைநந்திற்றென்றிடா
நந்திதன்கணத்தொடுநண்ணிப்போற்றினார். (௬)

அந்தமில்விடத்தினையடக்குகையுடைச்
சுந்தரனாதியாந்தொல்கணததினோ
ரெந்தைதனுருவுகொண்டிருந்தமேலவர்
வந்திருமருங்குமாய்வழுததியீண்டினா. (௭)

ஆன்முகநந்தியெம்மடிகளுய்த்திடத்
தேன்முகநறுமலர்சிதறிச்செங்கையாற்
கான்முறைவணங்கியேகமலக்கணணவ
னான்முகன்மகபதிபிறருநண்ணினா (௮)

சல்லரிவயிர்துடிதடாரிசச்சரி
கல்லெனவிரங்குறுகரடிகாகளஞ்
செல்லுறழ்பேரிகைதிமிலையாதியாம்
பல்லியமியம்பினபாரிடங்களே. (௯)

வேறு.

வேதநான்குங்குடிலையும்வேறுள, பேதமாயகலைகளுமபேரிசை
நாதமோடுநெருங்கினவிஞ்சையர், கீதமயாவுமிசைத்துக்கெழுமினார். (௧௦)

வள்ளல்வேணியின்மாமதியீண்டியே, பிள்ளைவெணபிறையைப்படர்பேராக்,கொ
ள்ளுமென்றுகுறித்ததுபோறறல்போல், வெள்ளிவெணகுடைவெய்யவரேந்தினார்

சகரரென்னுந்தலைவர்கடம்வழிப, பகி தப்பெயர்ப்பார்த்திவன்வேண்டலு
நிகரிலானருணீததொழுக்கெனப், புகரில்சாமரம்பூதர்கள்வீசினா. (௧௨)

சீறுமால்கரிசீயம்வயப்புலி, யேறுபூட்கையிரலையெணகேமுதல்
வேறுகொண்டவியனமுகசாரதர், நூறுகோடியர்நொய்தெனச்சுற்றினார். (௧௩)

இமிலுடைப்பலவேற்றிருநகேதனந், திமிலவிண்புனனக்கிச்சிதறுவ
வமலனைத்தொழுதாற்றுமெய்யன்பினும், கமலமுய்த்திடுங்காட்சியர்போன்றவே.

அன்னகாலையகிலமுமீன்றருள, கன்னிதன்னொடுகோமாவெள்ளேற்றின்மேன
மன்னிவைகுமதிமுடிவானவன, றன்னதாலயததைத்தணந்தேகினான். (௧௫)

வேறு.

தன்னதாலயநீங்கியேகயிலையைத்தணந்து
பொன்னினீடியவிமையமால்வரைப்புறத்தேகி
யன்னமாடுறுஞ்சரவணப்பொய்கையையடைந்தா
னென்னையாளுடைநாயகனிறைவியுந்தானும். (௧௬)

பிறையுலாஞ்சடைத்தேவனுமவன்றனைப்பிரியா
துறையுமாதுமோராறுவகையுருவுகொண்டுற்ற
சிறுவனீர்மையைநோக்கியேதிருவருள்செய்து
நிறையும்வான்புனற்பொய்கையங்கரையிடைநின்றார். (கஎ)

முண்டகச்சரவணந்தனின்மூவிருவடிவங்
கொண்டுலாவிவீற்றிருந்திடுமொருபெருங்குமர
னண்டர்நாயகன்றன்னுடனகிலமீன்றாளைக்
கண்டுமாமுகமலர்ந்தனன்றனதுளங்களித்தான். (கஅ)

அந்தவேலையிற்கவுரியைநோக்கியெம்மைய
னிந்தநின்மகன்றனைக்கொடுவருகெனவியம்பச்
சுந்தரங்கெழுவிடையினுந்துண்ணெனவிழிந்து
சிந்தைகொண்டபேராதரந்தன்னொடுஞ்சென்றாள். (க௯)

சரவணந்தனிற்றனதுசேயாறுருத்தனையு
மிருகரங்களாலன்புடனெடுத்தனள்புல்லித
திருமுகங்களோராறுபன்னிருபுயஞ்சேர்ந்த
வுருவமொன்றெனச்செய்தனளுலகமீன்றுடையாள். (உ0)

எந்தைசத்திகளுயிரெலாமொடுங்குறுமெல்லை
முந்துபோலவொன்றாகியேகூடியமுறைபோ
லந்தமில்லதோர்மூவிருவடிவுமொன்றாகிக்
கந்தனென்றுபேர்பெற்றனன்கவுரிதன்குமரன். (உக)

முன்புபுல்லியகுமரவேண்முடிதொறுமுயிர்த்து
மின்பிறங்கியபுறந்தனைநீவலும்விமலை
தன்பெருந்தனஞ்சுரந்துபால்சொரிந்தனதலையா
மன்பெனப்படுகின்றதித்தன்மையேயன்றே. (உஉ)

ஆதிநாயகன்கருணையாயமலமாயப்பரம
போதநீரதாயிருந்ததன்கொங்கையிற்பொழிபா
லேதிலாததோர்குருமணிவள்ளமீதேற்றுக்
காதன்மாமகற்கன்பினாலருத்தினாள்கவுரி. (உ௩)

கொங்கையூறுபாலருத்தியேகுமரனைக்கொடுசென்
றெங்கணாயகன்முன்னரேயிறைஞ்சுவித்திடலு
மங்கையாலவன்றனையெடுத்தகலமேலணைத்துப்
பொங்குபேரருணீர்மையாலிருத்தினன்புடையில். (உ௪)

அருத்திதந்திடுகுமரவேளொருபுடையமரப்
பெருத்தமன்னுயிர்யாவையுமுன்னரேபெற்ற
வொருத்திதன்னையுங்கையினாலொய்யெனவாங்கி
யிருத்தினான்றனதிடந்தனிலெம்மையாளிறைவன. (உ௫)

ஏலவாகுழலிறைவிக்குமெம்பிரான்றனக்கும்
பாலனாகியகுமரவேணடுவுறும்பான்மை
ஞாலமேலுறுமிரவொடுபகலுக்குநடுவாய்
மாலையானதொன்றழிவின்றிலைவருமாறொக்கும். (உ௬)

## வேறு.

விடையுற்றிடுபெரமற்குமவ்விமலைக்கும்விறற்சே
யிடையுற்றதுகண்டாரயன்மகவான்முதலிமையோர்
கடையுற்றிடுகெடலாமெனக்கல்லென்றிரைத்தணுகாப்
புடையுற்றனரெதிருற்றனர்புறனுற்றனர்புகழ்வார். (௨௭)

காமாரிதன்விழிதந்திடுகழிகாதலவொழியாத
தோமாரியல்புளனாகியசூரன்கொடுந்தொழிலால்
யாமாரினுமிழுக்குற்றனமெமையாளினியென்னாப்
பூமாரிகள்பொழிந்தார்பணிந்தெழுந்தாசிகள்புகன்றார். (௨௮)

வாரற்புதமுறவீங்கியவன்னததனமுருந்தின்
மூரற்பவளச்சேயிதழ்முழுமாமதிவதனத்
தாரற்பெயாபெறுமங்கையாதுகாலையிலரன்முன்
பேரற்பொடுபணிந்தேயெழப்பெருந்தண்ணளிபுரிந்தான். (௨௯)

கந்தன்றனைநீர்போற்றியகடனாலிவனுங்கண்
மைந்தன்னெனும்பெயராகுகமகிழ்வாலெவரேனு
நுந்தமபகலிடையினனவனொன்றுள்வழிபடுவோர்
தந்தங்குறைமுடித்தேபரந்தனைநல்குவமென்றான. (௩0)

என்னாவருள்புரிகின்றுழியிமையத்தவள்சேயைத்
தன்னாருளொடுசென்றெதிர்தழுவித்தனதிழிபால்
பொன்னார்மணிவள்ளத்துமுன்பூரித்தருத்திடவே
யன்னாண்முலையமுதுக்கவையாறாத்தொழுகினவே. (௩௧)

வானார்சுரநதிபோற்சரவணத்தூடவைபுகலுந்
தூநான்மறைகரைகண்டவன்முதல்வந்திடுதுணைவ
ராறுவருசிறுவோாதமையளிதோன்சபிததிடலான்
மீனாயவண்வதிகின்றவர்புகும்பாலினைமிசைந்தார். (௩௨)

கயிலைக்கிறையவன்மெய்த்தனகலசத்தினுமுகுபா
லயிலுற்றிடுபொழுததனிலறவிற்புடைபெயரு
மயிலைத்தனுவொருவிததவவடிவுற்றெழுதருவார்
துயிலுற்றுணர்பவரொததனர்மயலற்றிடுதொடர்பால். (௩௩)

அன்னாறுவருமாயெழுந்தகன்பொய்கைவிட்டமலன்
முன்னாய்வணங்கினர்போற்றலுமுனிமைந்தர்கள்பரங்கோ
டென்னாவுரைபெறுகுன்றிடையிருந்தேதவம்புரிமின்
சின்னாண்மிசையிவண்வந்தருள்செயுமென்றருள்செய்தான். (௩௪)

நன்றாலெனத்தொழுதன்னவர்நாதன்விடைபெற்றே
சென்றாருமடவாரொடுதிருமாலயன்முதலா
நின்றார்தமக்கருள்செய்தவர்நிலயம்புகவருளிப்
பொன்றாழ்சடையினன்வெள்ளியம்பொருப்பின்றலைபுக்கான். (௩௫)

அடையார்புரமெரிசெய்திடுமமலன்கயிலையிற்போய்
விடையூர்தியினிழிந்தேதனிவிறற்சேயொடும்வெற்பின்
மடவாளொடுநடவாப்பொலன்மாமந்திரத்தவையி
னிடையாரரியணைமீமிசையிருந்தானருள்புரிந்தே. (௩௬)

சேயோனெனுமுன்னோன்றனைச்சிலம்பின்வருமொன்பான்
மாயோருதவியமைந்தருமற்றுள்ளவிலக்கத்
தூயோர்களுந்தொழுதேமலர்தூவிப்பணிந்தேத்தி
யாயோர்தமதுயிரேயெனவவனைக்குறித்தணைந்தார். (௩௭)

சரவணப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - க,0௫க.

## திருவிளையாட்டுப்படலம்.

அனந்தரமதாகவுமையம்மையொடுபெம்மா
னனந்தலையில்வைகியநலங்கொள்குமரேச
ளினங்கொடுதொடர்ந்தவிளையாரொடுமெழுந்தே
மனங்கொளருணீர்மைதனினாடலைமதித்தான். (க)

தட்டையொடுகிழங்கழல்சதங்கைகள்சிலம்பக்
கட்டழகுமேயவரைஞாண்மணி * கறங்க
வட்டமணிகுண்டலமதாணிநுதல்வீர
பட்டிகைமினக்குமரனாடல்பயில்கின்றான். (உ)

மன்றுதொறுலாவுமலர்வாவிதொறுலாவுந்
துன்றுசிறுதென்றறவழ்சோலைதொறுலாவு
மென்றுமுலவாதுலவும்யாறுதொறுலாவுங்
குன்றுதொறுலாவுமுறையுங்குமரவேளே. (௩)

குளத்தினுலவுந்நதிகுறைந்திடுதுருத்திக்
களத்தினுலவுநிரைகொள்கந்துடை † நிலைத்தாந்
தளத்தினுலவும்பனவர்சாலையுலவும்மென்
னுளத்தினுலவுஞ்சிவனுமைக்கினியமைந்தன். (௪)

இந்துமுடிமுன்னவனிடந்தொறுமுலாவுந்
தந்தையுடன்யாயமர்தலங்களினுலாவுங்
கந்தமலர்நீபமுறைகண்டொறுமுலாவுஞ்
செந்தமிழ்வடாதுகலைசோந்துழியுலாவும். (௫)

மண்ணிடையுலாவுநெடுமாதிரமுலாவு
மெண்ணிடையுறாதகடலெங்கணுமுலாவும்
விண்ணிடையுலாவுமதிவெய்யவனுடுக்கோள்
கண்ணிடையுலாவுமிறைகண்ணில்வருமண்ணல். (௬)

கந்தருவர்சித்தர்கருடத்தொகையரேனோர்
தந்தமுலகாதியதலந்தொறுமுலாவு
மிந்திரனிருந்ததொல்லிடந்தனினுலாவு
முந்துதவர்வைகுமுலகந்தொறுமுலாவும். (௭)

* அரைஞாண்மணி - கிங்கிணி. † கந்து - ஆதீண்டுகுற்றி.

அங்கமலநான்முகனரும்பதமுலாவு
மங்கலநிறைந்ததிருமால்பதமுலாவு
மெங்கள்பெருமாட்டிதனிரும்பதமுலாவுந்
திங்கண்முடிமேற்புனைசிவன்பதமுலாவும். (௮)

இப்புவியிலண்டநிரையெங்கணுமுலாவு
மப்புவழலூதைவெளியண்டமுமுலாவு
மொப்பில்புவனங்கள்பிறவுள்ளவுமுலாவுஞ்
செப்பரியவோபரசிவன்றனதுமைந்தன். (௯)

வேறு.

இருமூவகைவதனத்தொடுமிளையோனெனத்திரியு
மொருமாமுகனொடுசென்றிடுமுயர்காளையினுலவும்
பெருமாமறையவரேயெனமுனிவோரெனப்பெயருந்
தெரிவார்கணமறவீரரிற்றிரிதந்திடுஞ்செவ்வேள். (௧௦)

காலிற்செலும்பரியிற்செலுங்கரியிற்செலுங்கடுந்தேர்
மேலிற்செலுந்தனியாளியின்மிசையிற்செலுந்தகரின்
பாலிற்செலுமானத்திடைபரிவிற்செலும்விண்ணின்
மாலிற்செலும்பொருசூரொடுமலையச்செலுமவலியோன். (௧௧)

பாடின்படுமணி * யார்த்திடும்பணைமென்குழலிசைக்குங்
கோடங்கொலிபுரிவித்திடுகுரல்வீணைகள்பயிலு
மீடொன்றியசிறுபல்லியமெறியும்மெவரெவரு
நாடும்படிபாடுங்களிநடனஞ்செயுமுருகன. (௧௨)

இன்னேபலவுருவங்கொடியாணடுங்குமரேச
னன்னேயமொடாடுற்றுழிநனிநாடினள்வியவா
முன்னேயுலகினையீன்றவண்முடிவின்றுறைமுதல்வன்
பொன்னேர்கழலிணைதாழ்ந்தனள்போற்றிப்புகல்கின்றாள். (௧௩)

கூடுற்றநங்குமரன்சிறுகுழவிபபருவததே
யாடற்றொழிலெனக்கற்புதமாகும்மவனபோல்வார
நேடிற்பிறரிலைமாயையினினைநோதருமனையான
பீடுற்றிடுநெறிதன்னையெம்பெருமானமொழிகெனறாள். (௧௪)

அல்லார்குழலவளின்னணமறியாகளின்வினவ
வொல்லார்புரமடுகண்ணுதலுன்றன்மகனியல்பை
யெல்லாவுயிர்களுமுய்ந்திடவெமைநீகடவினையா
னல்லாயிதுகேண்மோவெனவருளாலிவைநவில்வான். (௧௫)

வேறு.

ஈங்கனமதுகண்ணினெய்தியகுமரன்கங்கை
தாங்கினள்கொண்டுசென்றுசரவணத்திடுதலாலே
காங்கெயனெனப்போபெற்றான்காமர்பூஞ்சரவணத்தின்
பாங்கரில்வருதலாலேசரவணபவனென்றானான். (௧௬)

* பாடின்படுமணி - ஓசையினிதாகிய அசைகின்ற மணி. பாடு - ஓசை.

தாயெனவாரல்போந்துதனங்கொள்பாலருத்தலாலே
யேயதோர்கார்த்திகேயனென்றொருதொல்பேர்பெற்றான்
சேயவன்வடிவமாறுந்திரட்டிநீயொன்றாச்செய்தா
யாயதனாலேகந்தனுமெனுநாமம்பெற்றான். (௧எ)

நன்முகமிருமூன்றுண்டானமக்கவைதாமேகந்தன்
றன்முகமாகியுற்றதாரகப்பிரமமாகி
முன்மொழிகின்றநந்தமூவிரண்டெழுத்துமொன்று
யுன்மகனுமத்தோராறெழுத்தெனவுற்றவன்றே. (௧அ)

ஆதலினமதுசத்தியறுமுகனவனும்யாமும்
பேதகமன்றானம்போற்பிரிவிலன்யாண்டுநின்று
னேதமில்குழவிபோல்வான்யாவையுமுணர்ந்தான்சீரும்
போதமுமழிவில்வீடும்போற்றினர்க்கருளவல்லான். (௧௯)

மேலினியனையசெவ்வேள்விரிஞ்சனைச்சுருதிக்கெல்லா
மூலமதாகிநின்றமொழிப்பொருள்வினவியன்னான்
மாலுறச்சென்னிதாக்கிவன்சிறைப்படுத்தித்தானே
ஞாலமன்னுயிரையெல்லாநல்கியேநண்ணும்பன்னாள். (௨0)

தாரகன்றனைச்சீயத்தடம்பெருமுகத்தினானைச்
சூரபன்மாவையேனையவுணரைத்தொலைவுசெய்தே
யாரணன்மகவானேனையமரர்களிடுக்கணீக்கிப்
பேரருள்புரிவனின்சேய்பின்னாநீகாண்டியென்றான். (௨௧)

என்றலுமிளையோன்செய்கையெம்பெருமாட்டிகேளா
நன்றெனமகிழ்ச்சிகொண்டுநணுகலுமுலகமெல்லாஞ்
சென்றருளாடல்செய்யுநதிருததகுகுமரன்பின்ன
ரொன்றொருவிளையாட்டுள்ளதுனனியேபுரிதலுற்றான். (௨௨)

குலகிரியனைத்துமோர்பாற்கூட்டிடுமவற்றைப்பின்னாத்
தலைதடுமாற்றமாகத்தரையிடைநிறுவுமெல்லா
வலைகடறனையுமொன்றாவாக்குறுமாழிவெற்பைப்
பிலனுறவழுததுங்கங்கைப்பெருநதியடைக்குமன்றே. (௨௩)

இருள்கெழுபிலத்துள்வைகுமெண்டொகைப்பணியும்பற்றிப்
பொருள்கெழுமேருவாதியடுக்கலிற்பூட்டிவீக்கி
யருள்கெழுகுமரவள்ளலாவிகட்கூறின்றாக
வுருள்கெழுசிறுதேராக்கொண்டொல்லெனவுருட்டிச்செல்லும். (௨௪)

ஆசையங்கரிகடம்மையங்கைகொண்டொன்றோடொன்று
பூசல்செய்விக்கும்வானிற்போந்திடுங்கங்கைநீராற்
காய்சினவடவைமாற்றுங்கவின்சிறைக்கலுழனோடு
வாசுகிதன்னைப்பற்றிமாறிகல்விளைக்குமன்றே. (௨௫)

பாதலநிலயத்துள்ளபுயங்கரைப்படியிற்சேர்த்திப்
பூதலநேமியெல்லாம்புகுந்திடப்பிலத்தினுய்க்கு
மாதவமுதல்வன்றன்னையவிர்மதிப்பதத்திலோச்சுஞ்
சீதளமதியைவெய்யோன்சென்னெறிப்படுத்துச்செல்லும். (௨௬)

எண்டிசைபுரந்துதேவரிருந்ததொல்பதங்களெல்லாம்
பண்டைநிறத்தினீங்கப்பறித்தனன்பிறழவைக்குங்
கொண்டலினிருந்தமின்னின்குழுவுடனுருமுப்பற்றி
வண்டினமுறுதசெந்தண்மாலைசெய்தணியுமன்றே. (உஎ)

வெய்யவர்மதிகோளேனோர்விண்படர்விமானந்தேர்கண்
மொய்யுறப்பிணித்தபாசமுழுவதுந்துருவனென்போன்
கையுறுமவற்றில்வேண்டுங்கயிற்றினையிடைக்கணீர்ந்து
வையகந்திசைமீச்செல்லவானியில்விடுக்குமைந்தன். (உஅ)

வடுத்தவிர்விசும்பிற்செல்லும்வாசிலையிரண்டும்பற்றி
யுடுத்திரள்பலகோளின்னவுண்டையாக்கொண்டுவானோ
முடித்தலையுரந்தோள்கண்டமுகம்படக்குறியாவெய்தே
யடற்றனுவிஞ்சைகாட்டுமொறிருதடநதோளண்ணல். (உகூ)

இத்திறமுலகந்தன்னிலிம்பரோடும்பரஞ்சிச்
சித்தமெய்தளாதலன்றிச்சிதைவுறவகைமைதோந்து
வித்தகவெண்ணிலாடல்வியபபொடுபுரிந்தானுவி
முத்தர்தம்விழியினன்றிமுன்னுருநிமலமூர்த்தி. (நூO)

ஆயதுகாலைஞாலத்தவுணாகளதனைநோக்கி
யேயிதுசெய்தாரயாரேயென்றுவிம்மிதராயெஙக
ணுயகன்வடிவந்தன்னைநனிபெரும்பவததுட்டங்குந்
தீயவராதலாலேகண்டிலர்தியக்கமுற்றார். (நூக)

சிலபகல்பின்னும்வைகுந்திறததியலாயுள்கொண்டே
யுலகினிலவுணாயாருமுறைதவினவாக்குததன்மெய
நிலைமைகாட்டாதுசெவவேணிலாவவுநேடியன்னோ
மலரயன்றெரியாவண்ணன்மாயமேயினையதெனறா (நூஉ)

ஆயதோர்குமரன்செய்கையவனியின்மாக்கள்காணுக்
தீயனமுறையால்வெங்கோல்செலுததியவவுணரெல்லா
மாய்வதுதிண்ணம்போலுமறறதற்கேதுவாக
மேயினவிம்மிதஙகொலிதுவெனவெருவலுறறா. (நூநூ)

புவனியின்மாக்களின்னபுகறலுந்திசைகாப்பாளர்
தவனனேமதியமேனோசண்முகன்செய்கைநாடி
யவனுருவதனைக்காணாவுணாதம்வினையுமன்று
லெவரிதுசெய்தார்கொல்லென்றிரங்கினர்யாருங்கூடி. (நூச)

தேருறுமனையதேவர்தேவர்கோன்சிலவரோடு
மேருவிலிருந்தான்போலும்வேதனுமஙகண்வைகு
மாருமங்கவர்பாலேகியறைகுதுமென்றுதேறிச்
சூரர்கோன்றனக்குமஞ்சிததுயரொடுபெயாதலுற்றார். (நூரு)

வடவரையும்பர்தன்னில்வானவராறேநேகி
யடைதருகின்றகாலையாறுமாமுகங்கொண்டுள்ள
கடவுள்செய்யாடனேககியவனுருக்காணுறி
யிடருறுமனத்திறேடுமிருந்தவிந்திரனைக்கண்டார். (நூசு).

அரிதிருமுன்னரெய்தியடிதொழுதங்கண்வைகி
விரிகடலுலகின்வாணின்மேவுதொன்னிலைமையாவுந்
திரிபுறவெவரோசெய்தார்தெரிந்திலமவரையீது
புரிகலரவுணர்போலும்புகுந்தவிப்புணர்ப்பென்னென்றார். (கஎ)

வானவரிறைவனன்னோர்மாற்றமங்கதனைக்கேளா
யானுமிப்பரிசுநாடியிருந்தனனிறையுந்தேரே
னானதையுணரவேண்டினனைவருமேகியம்பொன்
மேனிகொள்கமலத்தோனைவினவுதுமெழுதிரென்றான். (கஅ)

எழுதிரென்றுரைத்தலோடுமிந்திரன்முதலாவுள்ளோர்
விழியிடைத்தெரியவனனோர்மெய்த்தவம்புரிந்தநீரா
லழிவறவுலகிலாடுமறுமுகன்வதனமொன்றிற்
குழவியதென்னவன்னகுன்றிடைத்தோன்றினால். (ககூ)

வாட்டமொடமரர்கொண்டமயக்கறத்தனதுசெய்கை
காட்டியவந்தோன்மேருக்கனவரையசைத்துக்கஞ்சத்
தோட்டிதழ்கொய்துசிந்துநதுணையெனவுயர்ந்தசெம்பொற்
கோட்டினைப்பறித்துவீசிக்குலவினனகுழவியேபோல். (ச0)

தோன்றியகுமரன்றனனைச்சுரபதிசுரராயுள்ளோ
ரான்றதோர்திசைகாப்பாளரனைவருநதெரிகுற்றன்னொ
வான்றனைதிரிபுசெய்தோன்மற்றிவனாகுமென்னாக்
கான்றிரியரியைநேரும்விலங்கெனக்கலங்கிச்சொல்வார். (சக)

வேறு.

நொய்தாங்குழவியெனக்கொள்கிலநோன்மைநாடின
வெய்தாமவுணக்குழுவோரினும்வெய்யன்யாரு
மெய்தாதமாயமுளனாலிவனறன்னைவெமபோர்
செய்தாடல்கொள்வமிவனென்றுதெரிந்துசூழ்ந்தார். (ச௨)

சூழுற்றவெல்லையிமையோர்க்கிறைசொல்லைநாளிற
காழுற்றதந்தமறவேகிவெண்காட்டீசன்
கேழுற்றதாளர்ச்சனைசெய்துகிடைததுவைகும்
வேழத்தையுன்னவதுவந்ததுமேருவின்பால். (சந)

தந்தங்கள்பெற்றுவருகின்றதனிக்களிற்றினை
கந்தந்தனிற்போந்தடல்வச்சிரங்காமரொள்வாள்
குந்தஞ்சிலைகொண்டிகல்வெஞ்சமர்க்கோலமெய்தி
மைந்தன்றனைவானவரோடுமவளைந்துகொண்டான். (சச)

வன்னிச்சுடர்கால்விசையோடுமெரீஇயபாங்கிற
பன்னற்படுகுன்றவைசூழ்தருபாண்மையேபோ
லுன்னற்கரியகுமரேசனையுமபாகோனு
மின்னற்படுவானவரும்மிகல்செய்யவுற்றார். (சரு)

தண்ணார்கமலத்துணைமாதரைத்தன்னிரண்டு
கண்ணாவுடையவுமையாடருகந்தன்வானோ
நண்ணாரெனச்சூழ்வதுநோக்கிநகைத்தியாது
மெண்ணாதுமுன்போற்றனதாடலிழைத்தவேலை. (சசு)

எட்டேயொருபான்படைதம்முளெறிவவெல்லாந்
தொட்டேகட்டவுட்படைதன்னொடுந்தூர்த்தலோடு
மட்டேறுபோதிற்படுகின்றுழிவச்சிரத்தை *
விட்டேதெழித்தான்குமரன்மிசைவேள்விவேந்தன். (௪௭)

வயிரத்தனிவெம்படையெந்தைதன்மார்புநண்ணி
யயிரிற்றுகளாய்விளிவாகவதனைநோக்கித்
துயரத்தழுங்கவிமையோரிறைதொல்லைவேழஞ்
செயிருற்றியம்பிமுருகேசன்முனசென்றதன்றே. (௪௮)

செல்லுங்கரிகண்டுமையாண்மகன்சிந்தையாலோர்
வில்லுங்கணைகள்பலவும்விரைவோடுநல்கி
யொல்லெனவிடநாணொலிசெய்துயர்சாபம்வாங்கி
யெல்லொன்றுகோலொன்றதனெற்றியுளேகவுய்த்தான். (௪௯)

அக்காலையில்வேள்செலுத்துங்கணையணுடாதமயின
மிக்கானையிராவதநெற்றியுளமேவிவல்லே
புக்காவிகொண்டுபுறம்போதப்புலம்பிவீழா
மைக்கார்முகிலச்சுறவேயதுமாண்டதன்றே. (௫௦)

தன்னோர்களிறுமடிவெய்தலுந்தானவேந்த
னன்னோவெனவேயிரங்காவயல்போகின்று
மின்னேறெழ்தன்சிலைதன்னைவெகுண்டுவாங்க
முன்னோன்மதலையொருகோலவன்மொய்ம்பிலெய்தான். (௫௧)

கோலொன்றுவிண்ணோர்க்கிறைமேற்குமரேசனுய்ப்ப
மாலொன்றுநெஞ்சனவருந்திப்பெருவன்மைசிந்திக்
காலொன்றுசாபத்தொழினீத்தனன்கையிலுற்ற
வேலொன்றதனைக்கடிதேகுகன்மீதுவிட்டான். (௫௨)

குந்தப்படையோர்சிறுபுற்படுகொள்கையேபோல்
வந்துற்றிடவற்புதமெய்தினமறைவானோ
கந்தக்கடவுள்சிலையிற்கணையொன்றுபூட்டித்
தந்திக்கிறைவன்றடம்பொன்முடிதள்ளியாத்தான். (௫௩)

துவசந்தனையோர்கணைகொண்டுதுணித்துமாபிற்
கவசந்தனையோர்கணையாற்றுகள்கண்டுவிண்ணோ
னவசம்படவேழ்கணைதூண்டினனூழிவேண்டிச்
சிவசங்கரவென்றரிபோற்றியசெம்மன்மைந்தன். (௫௪)

தீங்காகியவோரெழுவாளியுஞ்செல்லமாயி
னாங்காரமிக்கமகவானயர்வாகிவீழ்ந்தா
னோங்காரமேலைப்பொருண்மைந்தனையும்பரேனோ
பாங்காய்வளைந்துபொருதார்படுகின்றதோரார். (௫௫)

இவ்வாறமரர்பொருமெல்லையிலீசன்மைந்தன்
கைவார்சிலையைக்குனித்தேகணைநான்குதூண்டி
மெய்வாரிதிகட்கிறைவன்றனைவீட்டிமற்று
மைவாளியினாற்சமனாற்றலடக்கினானால். (௫௬)

ஓரம்பதனான்மதிதன்னையுமொன்றிரண்டு
கூரம்பதனாற்கதிர்தன்னையுங்கோதின்மைந்த
னீரம்பதனாலனிலத்தையுமேவுமூன்றால்
வீரம்பகர்ந்தகனலோனையும்வீட்டிநின்றான். (௫௭)

நின்றாரெவருங்குமரேசனிலைமைநோக்கி
யின்றாரையுமற்றிவனேயடுமென்றுதேறி
யொன்றானசிம்புள்விறல்கண்டவரியுட்கியோடிச்
சென்றாலெனவேயிரிந்தோடினர்சிந்தைவிம்மி. (௫௮)

ஓடுஞ்சுரர்கடிறநோக்கியுதிக்கும்வெய்யோ
னீடுங்கதிர்கணிலவைதராக்கினறதேபோ
லாடுங்குமரனவரைத்துரந்தண்டாமுனனர்
வீடுங்களத்தினிடையேதனிமேவிநின்றான. (௫௯)

ஒல்லாதவரிற்பொருதேசிலவும்பர்வீழ
நில்லாதுடைநதுசிலதேவாகணீஙகநேரில்
வில்லாளியாகித்தனிநின்றவிசாகனமேனு
னெல்லாரையுமட்டிலவுந்தனியீசனேதான். (௬௦)

வேறு.

சுரர்கள்யாருந்தொலைந்திடவென்றுதா, னொருவனாகியுமைமகன்மேவுழி
யருளினாரதனச்செயல்கண்டுவான், குருவையெயதிப்புகுந்தனகூறினான. (௬௧)

கற்றவம்புரிநாரதன்கூற்றினை, யறறமில்லுணாவநதணன்கேட்டெழீஇ
யிற்றதேகொலிமையவாவாழ்வெனுச, சொற்றுவல்லைதுயருழநதேகினன. (௬௨)

ஆதபன்மதியண்டர்தமக்கிறை, மாதிரததவாமால்கரிதன்னுடன், சாதல்கொண்ட
சமர்க்களந்தன்னிடைப், போதனமேயினனபொனனெனுமபேரினன். (௬௩)

ஆவியின்றியவாமறிகுற்றது, தேவராசான்றெரிந்துபடருறுத
தாவிலோகெழுசண்முகனவவிடை, மேவியாடும்வியப்பினைநோக்கினன். (௬௪)

முழுதுணர்ந்திடுமொய்சுடர்ப்பொனனவ, னெழுதொணாதவெழினலந்தாங்கியோர்
குழவிதன்னுருக்கொண்டகுமரனைத, தொழுதுநின்றுதுதித்திதுசொல்லுவான். ()

வேறு.

கரியரிமுகத்தினன்கடியசூரனென
றுரைபெறுதானவரொறுபபவல்கலும
பருவரலுழந்துதன்பதிவிட்டிப்பெரு
வரையிடைமகபதியறைந்துவைகினன. (௬௬)

அன்னவனின்னடியடைந்துநிற்கொடே
துன்னலர்தமதுயிர்தொலைததுத்தொன்மைபோற்
றன்னரசெய்தவுந்தலையனாகவு
முன்னினனபிறிதுவேறொனறுமுன்னலான். (௬௭)

பற்பகலருந்தவம்பயின்றுவாடினன்
றற்பரசரவணத்தடத்திற்போந்தவுன்
னுற்பவநோக்கியேயுவகையூத்தனன்
சொற்படுதுயரெலாந்தொலைத்துளானெனா. (௬௮)

கோடனுமராத்தொடுகுரவுஞ்செச்சையுஞ்
சூடியகுமரநின்றொழும்புசெய்திட
நேடுறுமிந்திரனீயித்தன்மையி
னூடல்செய்திடுவதையறிகிலானரோ. (௬௯)

நாரணன்முதலினோர்நாடிக்காணொணா
வாரணமுதல்வனுமுமையுமன்னவா
சீரருளடைந்தனர்சிலருமல்லதை
யாருனதாடலையறியுநீரினோர். (௭0)

பற்றியதொடர்பையுமுயிரையும்பகுத
திறனெனவுணாகிலமேதந்திராகிலஞ்
சிற்றுணர்வுடையதோர்சிறியமயாமெலா
முற்றுனதாடலையுணரவல்லமோ. (௭௧)

ஆதலால்வானவாக்கரசனுற்றவு
மோதிதானின்மையாலுன்றனூடலைத்
தீதெனவுனனிவெஞ்செருவிழைத்தன
னீதிசோதண்டமேநீபுரிந்தனை. (௭௨)

மற்றுளதேவருமலைந்துதமமுயி
ரற்றனரவாகளுமறிவிலாமையாற்
பெற்றிடுங்குரவரேபிழைத்தமைந்தரைச்
செறறிடினெவரருள்செய்யற்பாலினோர். (௭௩)

சினமயமாகியசெம்மல்சிம்புளாம்
பொன்மலிசிறையுடைப்புள்ளிறையகன்
வன்மைகொள்விலங்கினைமாற்றலல்லது
மின்மினிதனையடல்விசயமாகுமோ. (௭௪)

ஒறுத்திடுமவுணர்களொழியவேறொடு
மறுததருளுணர்விலாவளியருன்னடி
மறததலிலனபினர்மற்றினனோர்பிழை
பொறுததருள்கருணையாற்புணரிபோனறுளாய். (௭௫)

பரமுறவணிகரைப்பரித்துப்பல்வளந்
தருகலங்கவிழ்ந்திடச்சாய்த்துமற்றவ
ரொருதலைவிளிதல்போலுன்னிற்பெற்றிடுந்
திருவினர்பொருதுனைச்செருவிற்றுஞ்சினோர். (௭௬)

தொழுதகுநின்னடித்தொண்டராற்றிய
பிழையதுகொள்ளலைபெருமசிந்தையு
ளழிதருமினையவாறிவுபெற்றிவ
ணொழுவகையருளெனவிறைஞ்சிக்கூறினான். (௭௭)

பொன்னவனின்னனபுகன்றுவேண்டிட
முன்னவர்முன்னவன்முறுவல்செய்துவான்
மன்னவனுதியர்மால்களிற்றொடு
மந்நிலையெழும்வகையருள்செய்தானரோ. (௭௮)

வேறு.

அந்தியின்வனப்புடையமெய்க்குகனெழுப்புதலுமன்னபொழுதே
யிந்திரனுமாதிரவரைப்பினரும்வானவரும்யாவருமெழாஅச்
சிந்தைதனின்மெய்யுணர்வுதோன்றுதலுமுன்புரிசெயற்கையுணராக்
கந்தனொடுகொல்சமர்புரிந்ததெனவுன்னினர்கலங்கியெவரும். (எக)

கலங்கினரிரங்கினர்கலுழ்ந்தனர்புலர்ந்தனர்கவன்றனருள
மலங்கினர்விடந்தனையயின்றவரெனும்படிமயர்ந்தனலிசே
ருலங்கென * வுலைந்தனரொடுங்கினர்நடுங்கினருரந்தனையிழந்
திலங்கெழின்முகமபொலிவிகந்தனாபொருந்தமையிகழ்ந்தனர்களே. (அ0)

துஞ்சியெழுமன்னவர்களேழுலகுமுனனுதவுசுந்தரிதரு
மஞ்சனருளோடுவிளையாடுவதுகாண்டலும்வணங்கியனையான்
செஞ்சரணிரண்டினையுமுச்சிகொடுமோயினர்சிறந்தலர்துணைக்
கஞ்சமலரிற்பலநிறங்கொளரியின்றொகைகவைஇயதெனவே. (அக)

கந்தநமவைந்துமுகர்தந்தமுருகேசநமகங்கையுமைதன்
மைந்தநமபன்னிருபுயததநமநீபமலர்மாலைபுனையுந்
தந்தைநமவாறுமுகவாதிநமசோதிநமதறபரமதா
மெந்தைநமவென்றுமிளையோய்நமகுமாரநமவென்றுதொழுதார். (அஉ)

பொருந்துதலையனபுடனெழுந்தவர்களிவ்வகைபுகழ்ந்துமனமே
லரந்தைகொடுமெய்நடுநடுங்குதலுமன்னதையறிந்துகுமரன்
வருந்தலிர்வருந்தலிரெனக்கருணைசெய்திடலுமற்றவர்கடாம்
பெருந்துயருமச்சமுமகன்றுதொழுதேயினையபேசினர்களால். (அங)

ஆயவமுதத்தினொடுநஞ்சளவியுண்குநரையவ்விடமலாற்
றூயவமுதோவுயிர்தொலைக்குமதுபோலுனதுதொல்லருளினு
லேயதிருவெய்திடவிருந்தனமுன்னோடமரியற்றியதனு
னீயெமைமுடித்தியலையனதவறெம்முயிரைநீக்கியதரோ. (அச)

பண்டுபரமன்றனையிகழ்ந்தவன்மகத்திலிடுபாகமதியா
முண்டபவமின்னமுமுடிந்திலவதனறியுமுனைப்பொருதுநேர்
கொண்டிகல்புரிந்தனமுளப்பில்பவம்வந்துகுமரேசவெமைநீ
தண்டமுறைசெய்தவைதொலைத்தனையுளத்துடையதண்ணளியினல். (அரு)

ஆதலினெமக்கடிகள்செய்தவருளுக்குநிகராற்றுவதுதா
னேதுளதுமற்றெமையுனக்கடியராகவிவணீதுமெனினு
மாதிபரமாகியவுனக்கடியம்யாம்புதிதளிப்பதெவனோ
தாதையர்பெறச்சிறுவர்தங்களையவாக்கருள்கைதக்கபரிசோ. (அசு)

அன்னதெனினுந்தெளிவில்பேதையடியேம்பிழையனைத்துமுளமே
லுன்னலைபொறுத்தியெனவேகுமரவேளவையுணர்ந்துநமைநீர்
முன்னமொருசேயெனநினைந்துபொருதீர்நமதுமொய்ம்புமுயர்வு
மின்னுமுணரும்படிதெரித்துமெனவோருருவமெய்தினனரோ. (அஎ)

எண்டிசையுமீரெழுதிறத்துலகுமெண்கிரியுமேழுகடலுந்
தெண்டிரையுநேமிவரையும்பிறவும்வேறுதிரிபாகியுளசீ
ரண்டநிரையானவுமனைத்துயிருமெப்பொருளுமாகியயனும்
விண்மொறனுஞ்செறியவோருருவு † கொண்டனன்விறற்குமரனே. (அஅ)

* உலங்கு - கொசுகு.

† இவ்வுருவம் பாரமேசுவரரூபமெனவும் விசுவரூபமெனவும பெயர்பெறும்.

மண்ணளவுபாதலமெலாஞ்சரண, மாதிரவரைப்புமிருதோள்
விண்ணளவெலாமுடிகள், பேரொளி * யெலாநயன, மெய்ந்நடுவெலாம்,
பண்ணளவுவேதமணிவா, யுணர்வெலாஞ்செவிகள், பக்கமயன்மா,
லெண்ணளவுசிந்தையுமை, யைந்தொழிலுநல்கியருளீசனுயிரே. (௮௯)

ஆனதொருபேருருவுகொண்டுகுமரேசனுறவண்டர்பதியு
மேனையருமற்புதமிதற்புதமிதென்றுதொழுதெல்லவருமாய்
வானமிசைநோக்கினர்கண்மெய்வடிவம்யாவையும்வனப்புமுணரார்
சானுவளவாவரிதுகண்டனர்புகழ்ந்தினையசாற்றினர்களால். (௯0)

வேறு.

சேணலம்வந்தசோதிச்சிற்பரமுதல்வவெம்முன
மாணலமுறநீகொண்டவான்பெருங்கோலந்தன்னைக்
காணலமடியேங்காணக்காட்டிடல்வேண்டுமென்ன
நீணலங்கொண்டுநின்றநெடுந்தகையதனைக்கேளா. (௯௧)

கருணைசெய்தொளிகண்மிக்ககண்ணவர்க்கருளிச † செவ்வே
ளருணமாபரிதிப்புத்தேளநந்தகோடிகள்சோநதென்னத்
தருணவில்வீசிநின்றதனதுருமுற்றுங்காட்ட
விரணியவரைக்கணின்றவிந்திரனமுதலோர்கண்டார். (௯௨)

அடிமுதன்முடியின்காறுமறுமுகனுருவமெல்லாங்
கடிதவனருளானோக்கிக்கணிப்பிலாவண்டமுற்று
முடிவறுமுயிர்கள்யாவுமூவருந்தேவர்யாரும்
வடிவினிலிருப்பக்கண்டுவணங்கியேவழுத்திச்சொல்வார். (௯௩)

அம்புவிமுதலாம்பல்பேரண்டமுமங்கங்குள்ள
வும்பருமுயிர்கள்யாவுமுயிரலாப்பொருளுமானுஞ்
செம்பதுமத்தினோனுஞ்சிவனொடுஞ்செறிதல்கண்டோ
மெம்பெருமானின்மெய்யோவகிலமுமிருப்பதம்மா. (௯௪)

அறிகிலமிந்நாள்காறுமகிலமுநீயேயாகி
யுறைதருதன்மைநீவந்துணர்த்தவினுணர்ந்தாமன்றே
பிறவொருபொருளுங்காணேம்பெருமநின்வடிவமன்றிச்
சிறியமயாமுனதுதோற்றந்தெரிந்திடவல்லமோதான். (௯௫)

முண்டகனொருவன்றுஞ்சமுராரிபேருருவாய்நேமிக்
கண்டுயிலகந்தைநீங்கக்கண்ணுதற்பகவனெல்லா
வண்டமுமணிப்பூணாரமாகவேயாங்கொர்மேனி
கொண்டனனென்னுந்தன்மைகுமரநின்வடிவிற்கண்டேம். (௯௬)

நாரணன்மலரோன்பன்னாளுடவுந்தெரிவின்றாகிப்
பேரழலுருவாய்நின்றபிரான்றிருவடிவேபோலுன்
சீருருவுற்றதம்மாதெளிகிலரவருமெந்தை
யாரருளெய்தினம்போலடிமுடிதெரிந்திடாரோ. (௯௭)

அரியொடுகமலத்தேவுமாடல்செய்தகிலந்தன்னோ
டொருவரையொருவர்தூங்கியுந்தியான்முகத்தானல்கி
யிருவருமிகலுமெல்லையெடுத்தபேருருநீகொண்ட
திருவுருவிதனுக்காற்றச்சிறியனபோலுமன்றே. (௯௮)

---

* இங்கே ஒளியென்றது சோமசூரியாக்கினியை.
† மாமிசநேத்திரமன்றித் திவ்வியநேத்திரங்கொடுத்தருளினார்.

ஆகையாலெம்பிரானீயருவுருவாகிநின்ற
வேகநாயகனேயாகுமெமதுமாதவத்தாலெங்கள்
சோகமானவற்றைநீக்கிச்சூர்முதறடிந்தேயெம்மை
நாகமேலிருத்துமாற்றானண்ணினைகுமரனேபோல். (௯௯)

எவ்வுருவினுக்குமாங்கோரிடனதாயுற்றவுன்றன்
செவ்வுருவதனைக்கண்டுசிறந்தனமறம்பாவத்தி
னவ்வுருவத்தின்றுப்புமகலுதுமின்னும்யாங்கள்
வெவ்வுருவத்திற்செல்லேம்வீடுபேறடைதுமன்றே. (க00)

இனையனவழுத்திக்கூறியிலங்கெழிற்குமரமூர்த்தி
தனதுபேருருவைநோக்கிச்சதமகன்முதலாவுள்ளோர்
தினகரன்மலர்ச்சிகண்டசில்லுணர்வுயிர்களென்ன
மனமிகவெருவக்கண்களலமரமயங்கிச்சொல்வார். (க0க)

எல்லையிலொளிபெற்றன்றாலெந்தைநின்னுருவமின்னு
மொல்லுவதன்றாற்காணவொளியிழந்துலைந்தகண்க
ளல்லதும்பெருமைநோக்கியஞ்சுதுமடியமுய்யத்
தொல்லையினுருவங்கொண்டுதோன்றியேயளித்தியென்றார். (க0உ)

என்றிவைபுகன்றுவேண்டவெம்பிரானருளால்வான்போய்
நின்றபேருருவந்தன்னைநீத்தறுமுகத்தோனாகித்
தொன்றுளவடிவத்தோடுதோன்றலுந்தொழுதுபோற்றிக்
குன்றிருஞ்சிறைகளீர்ந்தகொற்றவன்கூறலுற்றான். (க0ந)

தொன்னிலைதவாதுவைகுஞ்சூரனேமுதலாவுள்ள
வொன்னலருயிரைமாற்றியும்பரும்யானும்பாங்கர்
மன்னிநின்றேவல்செய்யவானுயர்துறக்கநண்ணி
யென்னரசியற்றியெந்தாயிருத்தியெனகுறையீதென்றான். (க0ச)

இகமொடுபரமும்வீடுமேத்தினர்க்குலப்புறாம
லகனமரருளானல்குமறுமுகத்தவற்குதன்சீர்
மகபதியளிப்பான்சொற்றவர்சகஞ்சுடரொன்றங்கிப்
பகவனுக்கொருவனல்கப்பராவியபோலுமாதோ. (க0ரு)

வானவர்கோனைநோக்கிவறிதுறநகைத்துச்செவ்வே
ணீநமக்களித்ததொல்சீர்நினக்குநாமளித்துநீவிர
சேனைகளாகநாமேசேனையந்தலைவனாகித்
தானவர்கிளையையெல்லாம்வீட்டுதுந்தளரேலென்றான். (க0சு)

கோடலங்கண்ணிவேய்ந்தகுமரவேளினையகூற
வாடியல்கடவுள்வெள்ளையடற்களிற்றண்ணல்கேளா
வீடுறவுணரெல்லாம்வியன்முடிதிருவினோடுஞ்
சூடினனென்னப்போற்றிச்சுரரொடுமகிழ்ச்சிகொண்டான். (க0எ)

அறுமுகத்தேவைநோக்கியமரர்கோனிந்தவண்டத்
துறைதருவரைகணேமியுலகுயிர்பிறவுநின்றன்
முறைபிறழ்ந்தனவாலிந்நாண்முன்புபோலவற்றையெல்லா
நிறுவுதியென்னலோடுநகைத்திவைநிகழ்த்தலுற்றான். (க0அ)

இன்னதோரண்டந்தன்னிலெம்மில்வேறுற்றவெல்லாந்
தொன்னெறியாகவென்றோர்தூமொழிகுமரன்கூற
மூன்றுறுபெற்றித்தானமுறையிறந்திருந்ததெல்லா
மந்நிலையெவருநோக்கியற்புதமடைந்துநின்றார். (௧௦௯)

வேறு.

கிற்குமெல்லையினிலத்திடையாகிப், பொற்கெனதிகழ்பொருப்பிடைமேவுஞ்
சிற்குணக்குரிசில்சேவடிதாழூஉச், சொற்கநாடுளசுரேசனுரைப்பான் (௧௧௦)

ஆண்டகைப்பகவவாரணமெய்ந்நூல், பூண்டநின்னடிகள்பூசனையாற்ற
வேண்டுகின்றும்வினையேமதுசெய்ய, வீண்டுநின்னருளையீகுதியென்றான். (௧௧௧)

என்னலுங்குகனிசைந்துநடந்தே, பொன்னிறனுயர்பொருப்பினைநீங்கித்
தன்னதொண்கயிலைசார்ந்திடுஞாங்கர், மன்னிநின்றதொருமால்வரைபுக்கான். ()

குன்றிருஞ்சிறைகுறைத்தவனேனோ, ரானறியேதொழுதுவப்புளமெய்தி
யென்றுநல்லிளையனாகியவெங்கோன், பின்றொடர்ந்தனர்பிறங்கலில்வந்தார். ()

சூரல்பம்புதுறுகன்முழைகொண்ட, சாரல்வெற்பினிடைசண்முகன்மேவ
வாரும்விண்ணவரவன்கழறனைச், சீரிதர்ச்சனைசெயற்குமுயன்றார். (௧௧௪)

அந்தவேலையமரர்க்கிறைதங்கண், முந்துகம்மியனைமுன்னுறவன்னான்
வந்துகைதொழலுமந்திரமொன்று, நந்தமாநகரினல்கிவணென்றான். (௧௧௫)

அருக்கர்தந்தொகையனைததையுமொன்றா, வுருக்கியாற்றியெனவொண்மணி
தன்னாற், றிருக்கிளாந்துலவுசெய்யதொர்கோயில, பொருக்கெனப்புனைவாகோன்
புரிகுற்றான். (௧௧௬)

குடங்கர்போன்மகுடங்கெழுவுற்ற, விடங்கொள்கோபுரவிருக்கையினுப்பண்
கடங்கலுழ்ந்திடுகரிக்குருகுண்ணூறு, மடங்கல்கொண்டதொர்மணித்தவிசீந்தான. ()

ஈந்தவெல்லைதனிலிந்திரனேவப், போந்துவானெறிபுகுந்திடுதூநீ
சாந்தமாமலர்தழற்புகையாதி, யாய்ந்துதந்தனர்களண்டர்கள்பல்லோர். (௧௧௮)

வேறு

அன்னகாலையிலண்டாகண்மேலையோன், சென்னியாறுடைத்தேவனைவந்தியா
வுன்னதாளருச்சித்தியாமுந்திட, விந்நிகேதனமேகுதிநீயென்றான். (௧௧௯)

கூற்றமன்னதுட்கொண்டுவிண்ணோரெலாம், போற்றமந்திரம்புக்குநனந்தலை
யேற்றரித்தொகையேந்தெழிற்பீடமேல், வீற்றிருந்தனன்வேதத்தினமேலையோன.

ஆனகாலையமரர்கள்வாசவன, ஞானநாயகநாகனுனக்கொரு
தானையாகுந்தலைவனைநீயென, வானநீத்தததுமஞ்சனமாட்டினார். (௧௨௧)

நொதுமல்பெற்றிடுநுண்டுகில்சூழ்ந்தனர், மூதியசந்தமுதலமட்டித்தனர்
கதிரு * நன்பொற்கலன்வகைசாத்தினர், மதுமலாததொகைமாலிகைசூட்டினா.()

ஐவகைப்படுமொலியும்பாளித, மெய்விளக்கமும்வேறுளபான்மையு
மெவ்வெவர்க்குமிறைவற்குநல்கியே, செவ்விதாசசனைசெய்தனரென்பவே. (௧௨௩)

புரந்தரன்முதற்புங்கவர்தம்முளத், தரந்தைநீங்கவருச்சனைசெய்துபின்
பரிந்துதாழ்ந்துபரவலுமாயிடைக், கரந்துவள்ளல்கயிலையிற்போயினான். (௧௨௪)

---

* கதிரும் - பெயரெச்சம்.

வெற்பின்மிக்குயர்வெள்ளியம்பொற்றையிற், சிற்பரன்மறைந்தேகலுந்தேவரும்
பொற்பின்மேதகுபொன்னகரண்ணலு, மற்புதத்துடனவ்வரைநீங்கினார். (கஉரு)
ஈசன்மைந்தனிலையனிமையவர், பூசைசெய்யப்பொருந்தலினவ்வரை
மாசில்கந்தவரையெனயாவரும், பேசவாங்கொர்பெயரினைப்பெற்றதே. (கஉசு)
ஆனகந்தவடுக்கலைத்தீர்ந்துபோய், வானமன்னன்மனோவதிநண்ணினா
னேனைவானவர்யாவருமவ்வவர், தானமெய்தினர்தொன்மையிற்றங்கினார். (கஉஎ)
உயவ * லூர்திகொண்டொய்யெனமுன்னரே, கயிலையங்கிரியேகியகந்தவேள்
பயிலும்வீரரும்பாரிடமள்ளரு, மயலின்மேவரவாயிடைவைகினான். (கஉஅ)

திருவிளையாட்டுப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம - க,கஎகூ.

## தகரேறுபடலம்.

சூரன்முதலோருயிர்தொலைக்கவருசெவ்வே
ளாருமகிழ்வெள்ளியசலத்தினமர்போழ்தின்
மேருவிலுடைப்பரன்விரும்பவகிலத்தே
நாரதனோர்வேள்வியைநடாத்திடலுற்றான். (க)
மாமுனிவருஞ்சுரருமாகிலவரைப்பிற்
றோமறுதவத்தினுயர்தொல்லைமறையோரு
மேமமொடுசூழ்தரவியற்றியமகத்திற்
றீமிசையெழுந்ததொருசெக்கர்புரைசெச்சை. (உ)
அங்கிதனில்வந்ததகராற்றுமகந்தன்னி
னங்களினமேபலவுமாளுமடுகின்றா
ரிங்கிவரையானடுவெனன்றிசைவுகொண்டே
வெங்கனலையேந்துபரி † மீதெழுதல்போலும். (ங)
மாருதமுமூழிதனில்வன்னியும்விசும்பிற்
பேருமுருமேறுமொருபேருருவுகொண்டே
யாருவதுபோல்விரைவுமத்தொளி ‡ யுமாப்புஞ்
சேரவெழுமேடமடுசெய்கைகிளைந்தன்றே. (ச)
கல்லெனமணித்தொகைகளத்தினிடைதூங்கச்
சில்லரிபெய்கிங்கிணிசிலம்படிபுலம்ப
வல்லைவருகின்றதகர்கண்டுமகத்துள்ளோ
ரெல்லவருமச்சமொடிரிந்தனர்களன்றே. (ரு)
இரிந்தவர்கள்யாவரையுமிப்புவியும்வானுந்
துரந்துசிலர்வீழ்ந்துதொலைவாகனிதாக்கிப்
பரந்ததரைமால்வரைபராகமெழவோடித்
திரிந்துயிர்வருந்தவடல்செய்ததுசெயிர்த்தே. (சு)
எட்டுளதிசைக்கரியிரிந்தலறியேங்கக்
கிட்டியெதிர்தாக்குமுதிகேழ்கிளருமானத்
தட்டிரவிதேரொடுதகர்ந்துமுரிவாக
முட்டுமவர்தம்பரியைமொய்ம்பினொடுபோயும். (எ)

* உயவல்-நினைத்தல். † கனலையேந்துபரி-ஆட்டுக்கடா. ‡ அத்தொளி-செவ்வொளி.

இனையவலகையாற்றகரியாண்டுமுலவுற்றே
சினமொடுயிர்கட்கிறுதிசெய்துபெயர்காலை
முனிவர்களுநாரதனுமொய்ம்புமிகுவானோ
ரனைவர்களுமோடினரருங்கயிலைபுக்கார். (௮)

ஊறுபுகவன்னவுருலைந்துகயிலைக்க
ணேறிவருகாலையிலிலக்கமுடனொன்பான்
வீறுதிறல்வீரரொடுமேவியுலவுற்றே
யாறுமுகவண்ணல்விளையாடலதுகண்டார். (௯)

ஈசனிடைநண்ணுகிலமீண்டுகுமரேச
னேசமொடுநந்துயரநீக்கவெதிர்வந்தா
னுசிறுவனல்லனிவனண்டர்பலரோடும்
வாசவனைவென்றுயிரைமாற்றியெழுவித்தான். (௧௦)

எங்குறைமுடித்திடலிவற்கெளிதுநாமிப்
புங்கவனொடுற்றதுபுகன்றிடுதுமென்னாத்
தங்களிலுணர்ந்துசுரர்தாபதர்கள்யாரு
மங்கவன்முன்னேகினரருந்துதிகள்செய்தே. (௧௧)

வந்துபுகழ்வானவருமாமுனிவர்தாமுந்
தந்திமுகவற்கிளவறன்னடிவணங்கக்
கந்தனவர்கொண்டதுயர்கண்டுமிகநீவிர்
நொந்தனிர்புகுந்ததுநுவன்றிடுதிரென்றான். (௧௨)

கேட்டியிளையோய்மறைகளதனுமொருவேள்வி
வேட்டனமியாங்களதுவேலையிடைதன்னின்
மாட்டுகனலூடொருமறிததகரெழுந்தே
யீட்டமுறுமெம்மையடவெண்ணியதையன்றே. (௧௩)

ஆடெழுகிளர்ச்சியையறிந்துமகம்விட்டே
யோடியிவணுற்றனமுருத்ததுதரந்தே
சாடியதுசிற்சிலவாதம்மையதனாலே
வீடியதளப்பிலுயிர்விண்ணினொடுமண்மேல். (௧௪)

நீலவிடமன்றிதுநிறங்குலவுசெக்கர்க்
கோலவிடமேயுருவுகொண்டதயமேபோ
லோலமிடவெங்குமுலவுற்றதுயிரெல்லாங்
காலமுடிவெய்துமொருகன்னன்முடிமுன்னம். (௧௫)

சீற்றமொடுயிர்க்கிறுதிசெய்துலவுமேடத்
தாற்றலையடக்கியெமதச்சமுமகற்றி
யேற்றகுறைவேள்வியையுமீறுபுரிவித்தே
போற்றுதியெனத்தொழுதுபோற்றிசெயும்வேலை. (௧௬)

எஞ்சுமவர்தம்மையிளையோன்பரிவினோக்கி
யஞ்சல்விடுமின்களெனவங்கையதமைத்தே
தஞ்சமெனவேபரவுதன்பரிசனத்துண்
மஞ்சுபெறுமேனிவிறல்வாகுவொடுசொல்வான். (௧௭)

மண்டேகனல்வந்திவர்மகந்தனையழித்தே
யண்டமொடேபொருலவியாருயிர்கடம்மை
யுண்டுதிரிசெச்சைதனையொல்லைகுறுகுற்றே
கொண்டனைதியென்றுமைகுமாரனுரைசெய்தான். (கஎ)

வேறு.

குன்றெழுகதிர்போன்மேனிக்குமரவேளினையகூற
முன்றலந்தடந்தோள்வீரவாகுவாந்தனிப்பேர்பெற்று
னன்றெனவிசைந்துகந்தனுண்மலர்ப்பாதம்போற்றிச்
சென்றனன்கயிலைநீங்கிச்சினத்தகாதேடலுற்றான். (கசு)

மண்டலநேமிசூழுமாநிலமுற்றுநாடிக்
கண்டிலனுகிச்சென்றேழ்பிலத்தினுங்காணகில்லா
னண்டர்தம்பதங்களூடியயன்பதமுன்னதாகத்
தண்டளிரச்செக்காமேனித்தகர்செலுந்தன்மைகண்டான். (உ0)

ஆடலந்தொழின்மேல்கொண்டேயனைவருமிரியச்செல்லு
மேடமஞ்சுறவேயாததுவிரைந்துபோய்வீரவாகு
கோட்டைவபற்றியீததுக்கொணர்ந்தாய்க்கயிலைநணணி
யேடுறுநீபதத்தண்டாரினையவன்முன்னருய்த்தான். (உக)

உய்த்தனன்வணங்கிநிற்பவுளமகிழ்ந்தருளித்தேவர்
மெய்த்தவர்தொகையைநோக்கியேழகமேவிற்றெம்பா
லெய்த்தினிவருந்தல்லீயாருநீபுவனியேகி
முத்தழல்கொடுமுனைசெய்தவேள்வியைமுடித்திரெனறான். (உஉ)

ஏர்தருகுமரப்புத்தேளிவவகையிசைப்பவன்னோர்
கார்தருகண்டத்தெந்தைகாதலவேள்வித்தீயிற்
சேர்தருதகரினேறறைசகிறியரேமுய்யுமாற்று
னூர்தியதாகக்கொண்டேயூர்ந்திடல்வேண்டுமென்றார். (உ௩)

என்னலுந்தகரையற்றேயானமாக்கொள்வம்பார்மேன்
முன்னியமகத்தைநீவிர்முடித்திரென்றருளயாக்கு
நன்னயமாடல்செய்யுநாரதனமுதலோயாரு
மன்னதோர்குமரனெந்தையடிபணிந்தருளாற்போந்தார். (உச)

நவையில்சீர்முனிவாதேவாநயப்பநாரதனென்றுள்ளோன்
புவிதனில்வந்துமுற்றப்புரிந்தனன்முன்னர்வேள்வி
யவர்புரிதவத்தினீரலன்றுதொட்டமலமூர்த்தி
யுவகையாலனையமேடமூர்ந்தனனூர்தியாக. (உரு)

தகரேறுபடலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - க,உ0ச.

---

## அயவனச்சிறைபுரிபடலம்.

மேடமூர்தியாகவுய்த்துவிண்ணுமண்ணுமுருகவே
ளாடல்செய்துலாவிவெள்ளியசலமீதிலமர்தரு
நீடுநாளிலொருபகற்கணெறிகொள்வேதன்முதலினோர்
நாடியீசனடிவணங்கவவவரைக்கணண்ணினார். (க)

எனாதியானெனுஞ்செருக்கிகந்துதன்னுணர்ந்துளார்
மனாதிகொண்டசெய்கைதாங்கிமரபின்முத்திவழிதரு
மனாதியீசனடிவணங்கியருளடைந்துமற்றவன்
றனாதுமன்றநீங்கிவாயில்சாருகின்றவேலையில். (௨)

ஒன்பதோடிலக்கமானவணிகவீரருண்மகிழ்
தன்பினோடுசூழ்ந்துபோற்றவமலனம்பொனாலய
முன்புநீடுகோபுரத்துண்முழுமணித்தலத்தின்மே
வின்பொடாடிவைகினனிராறுதோள்படைத்துளான். (௩)

அங்கண்வைகுமுருகனம்பனடிவணங்கிவந்திடும்
புங்கவர்க்குளாதியாயபோதனைநோக்குறா
விங்குநம்முன்வருதியாலெனாவிளிப்பவேகியே
பங்கயாசனத்தினான்பணிந்திடாதுதொழுதலும். (௪)

ஆதிதேவனருளுமைந்தனவனுளத்தைநோக்கியே
போதனேயிருக்கெனாப்புகன்றிருத்திவைகலு
மேதுநீபுரிந்திடுமியற்கையென்னநான்முக
னாதனாணையாலனைத்துநான்படைப்பனென்றனன். (௫)

வேறு.

முருகவேளதுகேட்டலுமுறுவல்செய்தருளித்
தரணிவானுயிர்முழுவதுந்தருதியேயென்னிற்
சுருதியாவையும்போகுமோமொழிகெனத்தொல்சீர்ப்
பிரமனென்பவனிததிறம்பேசுதலுற்றான். (௬)

ஐயகேளனையாதிகாலந்தனிலளித்த
மையுலாவருகளத்தினனளப்பிலாமறைகள்
செய்யவாகமம்பற்பலபுரிந்ததிற்சிலயா
னுய்யுமாறருள்செய்தனனவையுணர்ந்துடையேன். (௭)

என்றுநான்முகனிசைத்தலுமவற்றினுளிருக்கா
மொன்றுநீவிளம்புதியெனமுருகவேளுரைப்ப
நன்றெனாமறையெவற்றிற்குமாதியினவில்வா
னின்றதோர்தனிமொழியைமுனோதினனெறியால். (௮)

தாமரைத்தலையிருந்தவன்குடிலைமுன்சாற்றி
மாமறைத்தலையெடுத்தனன்பகர்தலும்வரம்பில்
காமர்பெற்றுடைக்குமரவேணிற்றிமுன்கழறு
மோமெனப்படுமொழிப்பொருளியம்புகென்றுரைத்தா (௯)

முகத்திலொன்றதாவவெழுத்துடையதோர்முருக
னகைத்துமுன்னெழுத்தினுக்குரைபொருளெனநவில
மிகைத்தகண்களைவிழித்தனன்வெள்கினன்விக்கித்
திகைத்திருந்தனன்கண்டிலனப்பொருட்டிறனே. (௧௦)

ஈசன்மேவருபீடமாயனையோர்தோற்றும்
வாசமாயெலாவெழுத்திற்குமறைகட்குமுதலாய்க்
காசிதன்னிடைமுடிபவர்க்கெம்பிரான்கழறு
மாசிறாகப்பிரமமாமதன்பயனாய்ந்தான். (௧௧)

தெருளதாகியகுடிலையைச்செப்புதலன்றிப்
பொருளறிந்திலனென்செய்வான்கண்ணுதற்புனித
னருளினாலதுமுன்னரேபெற்றிலனதனான்
மருளுகின்றனன்யாரதன்பொருளினைவகுப்பார். (௧௨.)

தூமறைக்கெலாமாதியுமந்தமுஞ்சொல்லு
மோமெனப்படுமோரெழுத்துண்மையையுணரான்
மாமலர்ப்பெருங்கடவுளுமயங்கினனென்று
ணுமினிச்சிலவறிந்தனமென்பதுநகையே. (௧௩.)

எட்டொணாதவக்குடிலையிற்பயனினைதெென்றே
கட்டுரைத்திலன்மயங்கலுமிதன்பொருள்கருதாய்
சிட்டிசெய்வதித்தன்மையதோவெனாச்செவவேள்
குட்டினனயனான்குமாமுடிகளுங்குலுங்க. (௧௪)

மறைபுரிந்திடுஞ்சிவனருண்மதலைமாமலர்மே
லுறைபுரிந்தவன்வீழ்தரப்பதத்தினாலுதைத்து
நிறைபுரிந்திடுபரிசனரைக்கொடேகிகளச்
சிறைபுரிந்திடுவித்தனன்கந்தமாஞ்சிலம்பில். (௧௫)

அல்லிமாமலர்ப்பண்ணவன்றனையருஞ்சிறையில்
வல்லிபூட்டுவித்தியாவையும்புரிதரவல்லோ
னெல்லைதீர்தருகந்தமால்வரைதனிலேகிப்
பல்லுயிர்த்தொகைபடைப்பதுநினைந்தனன்பரிவால். (௧௬)

ஒருகரந்தனிற்கண்டிகைவடம்பரித்தொருதன்
கரதலந்தனிற்குண்டிகைதரித்திருகரங்கள்
வரதமோடபயந்தரப்பரம்பொருண்மகனோர்
திருமுகங்கொடுசதுர்முகன்போல்விதிசெய்தான். (௧௭)

உயிரினுக்குயிராகியேபரஞ்சுடரொளியாய்
வியன்மறைத்தொகைக்கிறதாய்விதிமுதலுரைக்குஞ்
செயலினுக்கெலாமாதியாய்வைகியசெவவே
ளயனெனப்படைக்கின்றதுமற்புதமாமோ. (௧௮)

தன்னெனம்புயத்தவிசினோன்சிறைபுகத்தானே
யெண்ணிலாவுயிர்த்தொகையளித்தறுமுகனிருந்தா
னண்ணலந்திசைமுகனொடுவந்துசூழமர
ருண்ணடுங்கியேதொழுதுதம்பதங்களினுற்றார். (௧௯)

அயனைச்சிறைபுரிபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧,௨௨௩.

---

## அயனைச்சிறைநீக்குபடலம்.

---

ஆலமாமிடற்றண்ணல்சேயித்திறமளப்பில்
காலம்யாவையுமளித்தனனிருத்தலுங்கரியோ
னூமாமுகனுவளகிக்குவானுடிச்
சீலவானவர்முனிவரைச்சிந்தனைசெய்தான். (௧)

சீதரத்தணிப்பண்ணவன்சிந்தனைதேறி
யாதபத்தினர்பரிமுகர்வசுக்களன்னையர்க
ளேதமற்றிடும்விஞ்சையருவணரோடியக்கர்
மாதிரத்தவர்யாவரும்விரைந்துடன்வந்தார். (உ)

மதியுமேனையகோள்களுங்கணங்களும்வான்றோய்
பொதியமேயவனுதியாம்பொருவினமாதவரும்
விதிபுரிந்திடுபிரமரொன்பதின்மரும்வியன்பா
ரதனையேந்தியசேடனுமுரகருமடைந்தார். (ங)

இன்னதன்மையிலமரருமுனிவருமெய்த
வன்னர்தமமொடுஞ்செங்கண்மால்கயிலையையடைந்து
முன்னர்வைகியநந்திகண்முறையினுய்ததிடப்போய்த்
தன்னையேதனக்கொப்பவன்பொற்கழறுழ்ந்தான். (ச)

பொற்றிருப்பதமிறைஞ்சியேமறைமுறைபோற்றி
நிற்றலுஞ்சிவனருள்கொடேநோக்குறீஇநீவி
ரெற்றைவைகலுமில்லதோர்தளாவொடுமெமபா
லுற்றதென்கொலோவென்றலுமாலிவையுரைப்பான். (ரு)

வேறு

இறைவநின்மகனீண்டுறுபோதனை, மறைமுதற்பதவான்பொருள்கேட்டலு
மறிகிலானுறவன்னவன்றன்னைமுன், சிறைபுரிந்தனன்சிட்டியுஞ்செய்கின்றான். ()

கந்தவேளெனக்கஞ்சனுமையநின், மைந்தனுமவன்வல்வினையூழினு
லந்தமில்பகலாழ்சிறைப்பட்டுள, னொந்துவாடினனேவுழந்தானரோ. (எ)

ஆக்கமற்றவயன்றன்சிறையினை, நீக்குகென்றுநிமலனைவேண்டலுந்
தேக்குமன்பிற்சிலாதனற்செம்மலை, நோக்கியொன்றுநவலுதனமேயினன். (அ)

குடிவைச்செமகையினுனைக்குமரவே, ளிடுவிததான்சிறையென்றனராண்டுநீ
கடிதிற்சென்றுநங்கட்டுரைகூறியே, விடுவிததேயிவண்மீள்கெனச்சாற்றினன். ()

எந்தையன்னதிசைததலுநன்றெனு, நந்தியககணநாதனைததாழ்ந்துபோ
யந்தமற்றவடற்கணனுசூழ்தரக், கந்தவெற்பிற்கடிநகரெய்தினன். (கo)

எறுமுடைத்தனியேற்றுமுகத்தினு, னறுமுகத்தனமர்ந்தநிகேதனங
குறுகிமற்றவன்கோலமலர்ப்பத, முறைதளிற்பணிந்தேத்திமொழிகுவான். (கக)

கடிகொள்பங்கயன்காப்பினையெம்பிரான், விடுதல்கூறிவிடுத்தனனீங்கெனைத்
தடைபடாதவன்றன்சிறைநீக்குதி, குடிலையன்னவன்கூறற்கெளியதோ. (கஉ)

என்னுமுன்னமினையவன்சீறியே, யன்னலூர்தியருஞ்சிறைநீக்கல
னின்னையுஞ்சிறைவீட்டுவனிற்றியே, லுன்னியேகுதியொல்லையிலென்றலும். ()

வேறதொன்றும்வினம்பிலனஞ்சியே, யாறுமாமுகத்தண்ணலைவந்தியா
மாறிலாவெள்ளிமால்வரைசென்றன, னேறுபோன்முகமெய்தியநந்தியே. (கச)

மைதிகழ்ந்தமணிமிடற்றண்ணன்முன், வெய்தெனச்சென்றுமேவியவன்பதங்
கைதொழூஉநின்றுகந்தன்மொழிந்திடுஞ், செய்திசெப்பச்சிறுநகையெய்தினன். ()

கெழுதகைச்சுடர்க்கேசரிப்பீடமேல், விழுமிதுற்றவிமலன்விரைந்தெழீஇ
யழகுடைத்தனதாலயநீங்கியே, மழவிடைத்தனிமால்வரையேறினன். (கசு)

முன்னர்வந்தமுகில்புரைவண்ணனுங், கின்னரம்பயில்கேசரராதியோர்
நன்னர்கொண்டிடுகோகருகற்றவ, ரென்னருந்தொழுதெந்தைபின்னேகினார். (கஎ)

படைகொள்கையினர்பன்னிறக்காழக,வுடையர்தீயினுருகெழுசென்னிய,ரிடிகொ
ள்சொல்லினரெண்ணரும்பூதர்கள், புடையிலீண்டினர்போற்றுதன்மேயினார். ()

இனையகாலையினையவர்தம்மொடும், வனிதைபாதியன்மால்விடையூர்ந்துராய்ப், பு
னிதவெள்ளியம்பொற்றைதணந்துபோய்த், தனதுமைந்தன்றடவரையெய்தினான்

சாற்றருந்திறற்சண்முகவெம்பிரான், வீற்றிருந்தவியனகர்முன்னுறா
வேற்றினின்றுமிழிந்துவிண்ணோரெலாம், போற்றமுக்கட்புனிதனுட்போயினான்.

அந்திபோலுமவிர்சடைப்பண்ணவன், கந்தன்முன்னர்க்கருணையொடேகலு
மெந்தைவந்தனனென்றெழுந்தாங்கவன், வந்துநேர்கொண்டடிகள்வணங்கியே.()

பெருத்ததன்மணிப்பீடிகைமீமிசை, யிருத்திநாதனையேழுலகீன்றிடு
மொருத்திமைந்தனுயிர்க்குயிராகிய, கருத்தநீவந்தகாரியம்யாதென்றான். (உஉ)

மட்டுலாவுமலரயனைச்சிறை, யிட்டுவைத்தனையாமதுநீக்குவான்
சுட்டிவந்தனமாற்சுரர்தம்முடன், விட்டிடையவென்றெந்தைவிளம்பினான். (உங)

நாட்டமூன்றுடைநாயகனிவ்வகை, யீட்டுமன்பொடிசைத்திடுமின்சொலைக், கேட்
டகாலையிற்கேழ்கிளர்சென்னிமேற், சூட்டுமௌலிதுளக்கினன்சொல்லுவான். ()

உறுதியாகியவோரெழுத்தின்பய, னறிகிலாதவனுவிகள்வைகலும்
பெறுவனென்பதுபேதைமையாங்கவன், மறைகள்வல்லதுமற்றதுபோலுமால். ()

அழகிதையநின்னாருள்வேதமுன், மொழியநின்றமுதலெழுத்தோர்கிலா
னிழிவில்பூசையியற்றலுநல்கிய, தொழில்புரிந்துசமத்தினையோர்பரம். (உசு)

ஆவிமுற்றுமகிலமுநல்கியே, மேவுகின்றவியன்செயல்கோடலாற்
றேவில்கஞ்சத்தவிசுறைநான்முக, னேவாதயமையுமெண்ணலன்யாவதும். (உஎ)

நின்னைவந்தனைசெய்யினுநித்தலுந், தன்னகந்தைதவிர்கிலனாதலா
லன்னவன்றனருஞ்சிறைநீக்கல, னென்னமைந்தனியம்பியவேலையே. (உஅ)

வேறு.

மைந்தநின்செய்கையென்னேமலரயன்சிறைவிடென்று
நந்திநம்பணியாலேகிநவின்றதுங்கொள்ளாய்நாமும்
வந்துரைத்திடினுங்கேளாய்மறுத்தெதிர்மொழிந்தாயென்னாக்
கந்தனைவெகுள்வான்போலக்கழறினன்கருணைவள்ளல். (உகூ)

அத்தனதியல்புநோக்கியறுமுகத்தமலனைய
சித்தமிகதுவேயாகிற்றிசைமுகத்தொருவன்றன்னை
யுய்த்திடுசிறையினீக்கியொல்லையிற்றருவனென்னாப்
பத்தியினிறைஞ்சிக்கூறப்பராபரன்கருணைசெய்தான். (ங0)

கன்சிறையெனமேனாடுவானருளோநல்கத்
தன்சிறைநின்றோர்தம்மைச்சண்முகக்கடவுணோக்கி
முன்சிறையொன்றிற்செங்கேழ்முண்டகத்தயனைவைத்த
வன்சிறைநீக்கிநம்முன்வல்லைதந்திடுதிரென்றான். (ஙக)

என்றலுஞ்சாரதர்க்குட்சிலவர்களேகியங்க
ணொன்றொருபூழைதன்னுளொடுங்கினனுறையும்வேதா
வன்றனைவிடுத்தல்செய்துமற்றவன்றனைக்கொண்டேகிக்
குன்றுதொளுடல்செய்யுங்குமரவேண்முனனருய்த்தார். (கஉ)

உய்த்தலுங்கமலத்தண்ணலொண்கரம்பற்றிச்செவ்வே
ளத்தன்முன்விடுத்தலோடுமாங்கவன்பரமன்றனை
மெய்த்தகுமன்பாற்றாழ்ந்துவெள்கினனிற்பநோக்கி
யெய்த்தனைபோலும்பன்னாளிருஞ்சிறையெய்தியென்றான். (கங)

நாதனித்தன்மைகூறிநல்லருள்புரிதலோடும
போதினனையவுன்றனபுதல்வனாற்றியவித்தண்ட
மேதமன்றுணர்வுநல்கியாளெனுமகந்தைவிட்டித்
தீதுசெய்வினைகண்மாற்றிச்செய்ததுபுனிதமென்றான (கச)

அப்பொழுதயனைமுக்கணிறையபரமன்காணூஉ
முப்புவனத்தின்மேவுமுழுதுயிர்தொகைக்குமேற
துப்புரவதனைநன்றுதூக்கினைதொன்மையேபோ
லிப்பகலொட்டுநீயேயிந்தனையிருத்தியெனறான். (கரு)

அருளுருவாகுமீசனயற்கிதுபுகனறபின்னா
முருகவேண்முகத்தைநோக்கிமுறுவல்செய்தருளைநல்கி
வருதியாலையவென்றுமலர்க்கையுய்த்தவனைப்பற்றித
திருமணிக்குறங்கின்மீதுசிறந்துவீற்றிருப்பச்செய்தான். (கசு)

காமருகுமரன்சென்னிகதுமெனவுயிர்ததுச்செக்காத்
தாமரைபுரையுங்கையாற்றழுவியேயயனுநதேற்று
வோமெனவுரைக்குளுசொல்லினறுபொருளுனகருப்போமோ
போமெனிலதனையினனேபுகலெனவிறைவன்சொற்றான. (கஎ)

முற்றொருங்குணருமாதிமுதல்வகேளுலகமெலலாம
பெற்றிடுமவட்குநீமுன்பிறருணராதவாற்றாற்
சொற்றதோரினையமூலததொல்பொருள்யாருங்கேட்ப
விற்றெனவியம்பலாமோமறையினுவிசைப்பதல்லால். (கஅ)

என்றலுநகைத்துமைந்தவெமக்கருண்மறையினென்னாத்
தன்றிருச்செவியைநலகச்சண்முகன்குடிலையெனு
மொனரொருபதத்திணுண்மையுரைத்தனனுரைத்தல்கேளா
நன்றருள்புரிந்தானெனபஞானநாயகனெண்ணல். (கக)

அன்னதோரையமாற்றியகமகிழ்வெய்தியங்கட்
டன்னிளங்குமரன்றனைத்தலைமையோடிருப்பநல்கி
யென்னையாளுடையநாதனயாவரும்போற்றிச்செல்லத்
தொன்னிலையமைந்துபோந்துதொல்பெருங்கயிலைவந்தான். (சo)

முன்புறுமயன்மாறேவாமுனிவரைவிடுத்துமுன்னோன்
றன்பெருங்கோயில்புக்கான்றவில்சீர்க்கந்தவெற்பிற்
பொன்புனைதவிசினேறிபபுடைதனில்வயவர்போற்ற
வின்பொடுகுமரமூர்த்தியினிதுவீற்றிருந்தானன்றே. (சக)

ஆங்குறுகுமரப்புத்தேளருமறைக்காதியாகி
யோங்குமெய்ப்பொருட்குமேலாமோரெழுத்துரையினுண்மை
தீங்கறவணங்கிக்கேட்பச்சிறுமுனிக்குதவிமற்றும்
பாங்குறுமிறைவனூழும்பரிவினுலுணர்த்தினுனால். (சஉ)

அயனைச்சிறைநீக்குபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - க,உசுரு.

# விடைபெறுபடலம்.

எல்லையன்னதின்மாலருள்கனனியரிருவா
சொல்லருமபெருவனப்பினர்சுந்தரியமுத
வல்லியென்றிடும்பெயரினர்கந்தவேள்வரைத்தோள்
புல்லுமாசையாற்சரவணத்தருந்தவம்புரிந்தார். (க)

என்னையாளுடைமூவிருமுகத்தவனிரண்டு
கன்னிமாரும·யொன்றிநோ்ற்றிவெதுகருததி
துன்னியேயெழீஇக்கந்தமால்வரையினையொருவி
யன்னதோனறியவிமகிரிச்சாரலையடைந்தான். (உ)

பொருவில்சீருடையிமையமால்வரைக்கொருபுடையாஞ்
சரவணத்தனிற்போதலுந்தவம்புரிமடவா
ரிருவரும்பெரிதஞ்சியேபணிந்துநினறேதத
வரமளிப்பதெ்ன்கூறுதிரென்றனன்வள்ளல். (ங)

மங்கைமார்தொழுதெம்மைநீவதுவையான்மருவ
விங்கியாந்தவம்புரிந்தனங்கருணைசெய்யென்ன
வங்கவவாசகங்கேட்டலுமாறுமாமுகத்துத்
துங்கநாயகனவர்தமைநோக்கியேசொல்வான். (ச)

முந்துமின்னமுதக்கொடிமூவுலகேத்து
மிந்திரன்மகளாகியேவளாந்தனையிருததி
சுந்தரிப்பெயரினையவடொல்புவிதன்னி
லந்தண்மாமுனிபுதல்வியாய்வேடர்பாலமாதி. (ரு)

நன்றுசீவிாகள்வளர்ந்திடுக·லையாநண்ணி
மென்றனீர்மையாலுங்கனைமேவுதுமனததி
லொன்றுமெண்ணலிர்செல்லுமென்றெம்பிரானுரைப்ப
நின்றகன்னியர்கைதொழுதேகினர்நெறியால். (சு)

ஏகுமெல்லையிலமுதமாமென்கொடியென்பாள்
பாகசாதனன்முன்னமோர்குழவியாய்ப்படர்ந்து
மாகமன்னவனுடன்வருமுபேந்திரன்மகள்யா
னகையாலெனைப்போற்றுதிதந்தையென்றடைந்தாள். (எ)

பொன்னின்மேருவிலிருந்தவன்புதல்வியைநோக்கி
யென்னையீன்றயாயிங்ஙனமவருகெனவிசைத்துத்
தன்னதாகியதனிப்பெருங்களிற்றினைத்தனது
முன்னராகவேவிளித்தனனித்திறமொழிவான். (அ)

இந்தமங்கைநந்திருமகளாகுமீங்கிவளைப்
புந்தியன்பொடுபோற்றுதியீனையவள்பொருட்டா
லந்தமில்சிறப்பெய்துமேலென்றதுமவளைக்
கந்த * மேற்கொடுநன்றெனப்போயதுகளிறு. (௯)

கொவ்வைபோலிதழ்க்கன்னியைமஞ்ஞைவதிகொடுபோ
யவ்வியானையேபோற்றியதனையகாரணத்தாற
றெய்வயானையெனவொருபெயரெய்தியேசிறிது
நொவ்வுறாதுவீற்றிருந்தனள்குமரனைநுவனறே. (௧௦)

பெருமைகொண்டிடுதெண்டிரைப்பாற்கடல்பெறறுத
திருமடந்தையையன்புடன்வளர்த்திடுதிறயபோற
பொருவில்சீருடையடலயிராவதமபோறற
வரிசைதன்னுடனிருந்தனடெய்வதமடநதை. (௧௧)

முற்றுணர்ந்திடுசுநதரியெனபவண்முருகன
சொறறதனமையையுளங்கொடுதொணடைநனறுட்டி
லுற்றவளளியஞ்சிலம்பினைநோக்கியாஙகுறையு
நற்றவச்சிவமுனிமகளாகவேநடநதாள (௧௨)

இந்தவண்ணமிவ்விருவர்க்குமவரநதனையநது
கந்தமால்வரையேகியேகருணையோடிருநதான
றந்தையிலலதோாதலைவனைததாதையாயபெறறு
முந்துபற்பகலுலகெலாமபடைததவோாமுதலவன. (௧௩)

வேறு.

இத்திறஞ்சிலபகலிருந்துபனனிரு, கைததலமுடையவன்கயிலைமேலுறை
யததனொடனையனனடிபணிநதிடச், சிததமதனனினனருளின்செய்கையால். ()

எள்ளருந்தவிசினினறிழிந்துவீரரா, யுளளுறுமபரிசனமொருங்குசென்றிடக்
கொள்ளையஞ்சாரதாகுழாமுமபாறபட, வளளலஙகொருவியேவல்லையேகினன். ()

ஏயெனவெள்ளிவெறபெயதியாஙகணங, கோயிலினவைக்களஙகுறுகிக்கந்தவே
டாயொடுதநதையைததாழ்நதுபோறறியே, யாயவாநடுவுறவருளின்வைகினன். ()

அண்ணலங்குமரவேளஙகண்வைகலும, விணணவாமகபதிமேலைநாண்முத
லுண்ணிகழ்தஙகுறையுரைததுநான்முகன, கணணனைமுனகொடுகயிலையெய்தினர்

அடைதருமவர்தமையமலனுலய, நடைமுறைபோறறிடுநந்திநின்மெனத்
தடைவினைபுரிதலுநதளாந்துபற்பக, னெடிதுறுதுயரொடுநிறறன்மேயினர். (௧அ)

அளவறுபற்பகலங்கணின்றுளார், வளனுறுசிலாதனனமதலைமுன்புதம், முளமலி
யின்னலையுரைத்துப்போற்றலுந், தளர்வினிவிடுமினென்றிதனைச்சாற்றினன். ()

தங்குறைநெடும்புனற்சடிலமேன்மதி, யங்குறைவைத்திடுமாதிமுன்புபோய்
நுங்குறைபுகன்றவனுய்தினுய்ப்பனு, லிங்குறைவீரெனவியம்பிப்போயினன். ()

போயினனந்தியம்புனிதன்கண்ணுதற், றூயனைவணஙகினன்றொழுதுவாசவன்
மாயவனுன்முகன்வானுளோரெலாங், கோயிலினமுதறகடைகுறுகினரென்றான்.

அருளுடையெம்பிரானனையர்யாரையுக், தருதிநம்முன்னரேசாரவென்றலும்
விரைவொடுமீண்டனன்மேலையோர்களை,வருகெனவருளினன்மாசில்காட்சியான்

* கந்தம - கழுத்தினடி.

விடைமுகனுரைத்தசொல்வினவியாவருங், கடிதினிலேகியேகருணைவாரிதி
யடிமுறைவணங்கினரதற்குள்வாசவ, னிடருறுமனத்தினனினையகூறுவான். ()

பரிந்துலகருள்புரிபரையொடொன்றியே, யிருந்தருண்முதல்வகேளெண்ணிலாவுக
மருந்திறற்சூர்முதலவுணர்தங்களால, வருந்தினமொடுங்கினம்வன்மையின்றியே. ()

அந்தமிலழகுடையரம்பைமாதரு, மைந்தனுமளப்பிலாவானுளோர்களும், வெந்தொ
ழிலவுணர்கள்வேந்தனமேவிய, சிந்துவினகரிடைச்சிறைக்கண்வைகினர். (௨௫)

இழிந்திடுமவுணராலியாதொர்காலமு, மொழிந்திடலின்றியேயுறைந்தசீரொடு
மழிந்ததென்கடிநகரதனையானிவண், மொழிந்திடல்வேண்டுமோவுணர்திமுற்றுநீ.

முன்னுறயான்றவமுயன்றுசெய்ததுழித், துன்னினைநங்கண்முன்தோன்றலெய்துவா
னன்னவனைக்கொடேயவுணர்ச்செற்றுநம், மின்னலையகற்றுதுமென்றியெந்தைநீ

அப்படிக்குமானுமவதரித்துள, னிப்பகல்காறுமெம்மின்னறீர்த்திலை
முப்புவனந்தொழுமுதலவந்தியரேந், துப்புறுபவப்பயனொழிந்ததில்லையோ. (௨௮)

சூருடைவன்மையைத்தொலைக்கத்தக்கதோ, பேருடையாரிலைபின்னையானினி
யாரொடுகூறுவனுரைநோகுவ, னீருடைமுடியினோய்நினதுமுன்னலால். (௨௯)

ஈகரமறிகடற்சென்றுநவவிசோ, காகமதென்னவுன்கயிலையன்றியே
யேகவேரிடமிலையெமக்குநீயலாற், சோகமதகற்றிடுந்துணைவரிலலையே. (௩௦)

ஏற்றெழுவன்னிமேனிதுஞ்சலா, தோற்றியவெவ்விடமெனினுந்துய்க்கலா
மாற்றலரலைத்திடவந்தவெந்துய, ராற்றிடாற்றரிதலமிப்புன்மையே. (௩௧)

நீதினையகற்றவுந்திருவைநல்கவுந், தாதையாலலதுதனயர்க்காருள
ராதலினமையினியளித்தியாலென, வோதினன்வணங்கினனும்பர்வேந்தனே. ()

அப்பொழுதரியயனையவெய்யசூர், துப்புடனுலகுயிர்தொகையைவாட்டுதல்
செப்பரிதின்னினிச்சிறுதுந்தாழ்க்கலை, யிப்பொழுதருள்கெனவியம்பிவேண்டினார்.

இகபொழுதவுமேவனிவற்றைக்கேட்டனு, மிகவருளெய்தியேவிடுமினீரினி
யகமெலிவுறலெனவருளியாங்கமா, குகனமுகநோக்கியேயினையகூறுவான். (௩௪)

வேறு.

பாரினையலைத்துப்பலுயிர்தமக்கும்பருவரலசெய்துவிண்ணவர்த
மூரினைமுருக்கித்தீமையேயியற்றியுலப்புறுவலமைகொண்டுற்ற
சூரனையவுணர்குழுவொடுந்தடிந்துசுருதியின்னெறிநிறீஇமகவான்
பேரரசளித்துச்சுரர்துயரகற்றிப்பெயர்தியென்றனனெந்தைபெருமான். (௩௫)

அருத்திகொள்குமரனினையசொல்வினவியப்பணிபுரிகுவனென்னப
புரத்தினையட்டகண்ணுதல்பின்னர்ப்பொள்ளெனவுள்ளமேற்பதினோ
ருருத்திரர்தமையுமுன்னமன்னோருற்றிடவினைகையிற்படையா
யிருத்திரெனவவரைப்பலபடையாக்கியீந்தனனெம்பிரான்கரத்தில். (௩௬)

பொன்றிகழ்சடிலத்தண்ணறன்பெயரும்பொருவிலாவுருவமுந்தொன்று
மன்றுபெற்றுடையவுருத்திரகணத்தோர்நவிலருந்தோமரங்கொடிவாள்,
வன்றிறற்குலிசம்பகழியங்குசமுமணிமலர்ப்பங்கயந்தண்டம்
வென்றிவின்மழுவுமாகிவீற்றிருந்தார்விறன்மிகுமறுமுகன்கரத்தில். (௩௭)

ஆயதற்பின்னரேவின்மூதண்டத்தைம்பெரும்பூதமுமவை
தேயபல்லுயிரும்மொருதலைமுடிப்பதேவாமேல்விடுக்கினுமவர்தம்
மாயிருந்திறலும்வரங்களுஞ்சிந்திமன்னுயிருண்பதெப்படைக்கு
நாயகமாவதொருதனிச்சுடர்வேனல்கியேமதலைக்கொடுத்தான். (ஙஅ)

அன்னதற்பின்னரெம்பிரான்றன்பாலாகினின்றேவினைபுரிந்து
மன்னியவிலக்கத்தொன்பதுவகைத்தாமைந்தரைநோக்கியேயெவர்க்கு
முன்னவனுமிக்குமரனோடேகிமுடிக்குதிரவுணரையென்றுத்
துன்னுபல்படையுமுதவியேசெய்க்குத்துணைப்படையாகவேகொடுத்தான். (ஙகூ)

நாயகனதற்பினண்டவாபரணனந்தியுக்கிரனொடுசண்டன்
காயெரிவிழியன்சிங்கனேமுதலாங்கணப்பெருந்தலைவரைநோக்கி
யாயிரவிரட்டிபூதவெள்ளத்தோடறுமுகன்சேனையாய்ச்சென்மி
னீயிரென்றருளியவர்தமைக்குகற்குநெடும்படைத்தலைவராவளித்தான். (சO)

ஐம்பெரும்பூதவன்மையுமங்கணமர்தருமப்பொருள்களினவலியுஞ்
செம்பதுமத்தோனுதியாமமராதிண்மையுங்கொண்டதோர்செழுந்தேர்
வெம்பரியிலக்கம்பூண்டதுமனத்தின்விரைந்துமுனசெல்வதொன்றதனை
யெம்பெருமுதல்வனசிந்தையாலுதவியேறுவான்மைந்தனுக்களித்தான். (சக)

இவ்வகையெல்லாம்விரைவுடனுதவியேகுதிநீயெனக்குமரனை
மைவிழியுமையோடிறைவனைத்தொழுதுவலங்கொடேமும்முறைவணங்கிச்
செவ்விதினெழுந்துபுகழ்ந்தனனிற்பத்திருவுளத்துவகையாற்றழுவிக்
கைவருகவானுய்த்துச்சிமேலுயிர்த்துக்கருணைசெய்தமலைக்கொடுத்தான். ()

கொடுத்தலுமவ்வினைவைத்தருளினாற்புல்லிக்குமரவேள்சென்னிமோந்தன்பா
லடுத்திடுமிலக்கத்தொன்பதுவகையோரணிகமாய்ச்சூழ்ந்திடப்போந்து
கடக்கருமாற்றலவுணர்தங்கிளையைக்காதியிக்கடவுளர்குறையை
முடித்தனைவருதியென்றருள்புரிந்தாண்மூவிருசமயத்தின்முதல்வி. (சங)

அம்மையித்திறத்தாலருள்புரிந்திடலுமறுமுகன்றொழுதெழீஇயனையோர்
தம்விடைகொண்டுபோந்தனன்றனைத்தலைவராமிலக்கமேலானபான
மெய்ம்மைகொள்வீரராயவருங்கணங்களவியன்பெருந்தலைவருமிருவர்
செம்மலரடிகளுமும்முறையிறைஞ்சிச்சேரவேவிடைகொடுசென்றார். (சச)

நின்றிடுமயன்மான்மகபதியெந்தாய்நீயெமையளித்தனைநெஞ்சத்
தொன்றொருகுறையுமில்லையால்நாளுய்ந்தனமுய்ந்தனமென்று
பொன்றிகழ்மேனியுமையுடனிறைவன்பொன்னடிபணிந்தெழுநமக்கு
நன்றிசெய்குமரன்றன்னுடனீருநடமெனவிடையதுபுரிந்தான். (சரு)

விடைபெறுபடலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - க,ஙகO.

---

# படையெழுபடலம்.

கண்ணுதல்விடைபெற்றரியயன்மகவான்கடவுளர்தம்மொடுகடிதி
னண்ணலங்குமரன்றனொடுசென்றேயயல்வருமருத்தினைநோக்கித்
தண்ணளிபுரியுமறுமுகத்தெந்தைதனிப்பெருந்தேர்மிசைநீபோய்ப்
பண்ணுறுநெடுமுட்கோன்மதிகைபரித்துப்பாகனாய்த்தூண்டெனப்பணித்தான். (க)

மன்புரிதிருமாலினையனபணிப்பமாருதனிசைந்துவான்செல்லும்
பொன்பொலிதேரின்மீமிசைப்பாய்ந்துபொருக்கெனமருத்துவர்நாற்பா
னொன்பதுதிறத்தார்புடைவரத்தூண்டியுவகையோடறுமுகத்தொருவன்
முன்புறவுய்த்துத்தொழுதுமற்றிதன்மேன்முருகநீவருகெனமொழிந்தான். (௨)

மாருதனினையபுகன்றுகைதொழலுமற்றவன்செயற்கையைநோக்கிப்
பேரருள்புரிந்துகதிரிளம்பரிதிபிறங்குசீருதயமால்வரைமேற்
சேருவதென்னக்குமரவேளினையசெழுமணியிரதமேற்செல்லச்
சூரினியிறந்தானென்றுவாசவனுஞ்சுரர்களுமார்த்தனர்துள்ளி. (௩)

வேறு

ஓங்குதேர்மிசைக்குமரவேண்மேவலுமுவப்பா
லாங்கவன்றனதருள்பெறுந்திறலினோரணுகிப்
பாங்கர்நண்ணினார்முனிவருந்தேவர்கள்பலரு
நீங்கலின்றியேயவர்புடைசூழ்ந்தனர்நெறியால். (௪)

இனந்தனோடவர்முருகனையடைதலுமிருநீர்
புனைந்தசென்னியனகயிலையிலிருந்தவெம்பூத
ரனந்தவெள்ளத்திலிராயிரமாகும்வெள்ளத்தர்
வனைந்தவார்கழற்றலைவர்தம்முரைகொடுவந்தார். (௫)

எழுவியன்கதைகேடயவெஞ்சூலம்வாளெறிவேன்
மழுமுதற்படையவையுமேந்தியவலியோர்
நிழன்மதிப்பிறைஞெலிந்தனிலாவுமிழெயிற்ற
ரழலுகுத்திடுவிழியினரசனியினறைவார். (௬)

கெடியர்சிந்தினர்குறியினரைம்பெருநிறனும்
வடிவில்வீற்றுவீற்றெயதினர்வார்சடைக்கற்றை
முடியர்குஞ்சியர்பலவதனத்தரோர்முகத்தர்
கொடியரெனினுமடைந்தவர்க்கருள்புரிகுணத்தோர். (௭)

நீறுகண்டிகைபுனைதரும்யாக்கையர்நெடுநஞ்
சேறுகண்டனையன்றிமற்றெவரையுமெண்ணார்
மாறுகொண்டவருயிர்ப்பலிநுங்குவோர்மறலி
வீறுகொண்டதொல்படைதனைப்படுத்திடுமேலோர். (௮)

அண்டம்யாவையுமாண்டுறையுயிர்த்தொகையனைத்து
முண்டுமிழ்ந்திடவல்லவரனறியுமுதாச்
சண்டவங்கியாலடுபவரட்டவைதம்மைப்
பண்டுபோற்சிவனருளினால்வல்லையிற்படைப்போர். (௯)

முன்னைவைகலினிறந்திடுமிந்திரன்முதலோர்
சென்னிமாலைகந்தரத்தினிலுரத்தினிற்சிரத்திற்
கன்னமீதினிற்கரத்தினின்மருங்கினிற்கழலிற்
பொன்னினமாமணிக்கலனொடும்விரவினர்புனைவார். (௧௦)

இத்தவண்ணமாஞ்சாரதப்படையினரீண்டித்
தத்தம்வெஞ்சமாத்தலைவர்களோடுசெண்முகன்பால்
வந்துகைதொழுதேத்தியேயிறுதிசேர்வைக
லந்தமில்புனலண்டமதுடைந்தெனவார்த்தார். (௧௧)

ஆர்த்தசாரதரெந்தைபாலாயினரதுகாற்
பேர்த்துமாயவரிடித்தெனப்பூதரிற்பெரியோர்
வார்த்தயங்கியதண்ணுமைதிமிலைவான்படகஞ்
சீர்த்தகாளமுதலியவியம்பினர்சிலரே. (கஉ)

ஆனகாலையிலதுதெரிந்தறுமுகத்தொருவன்
வானளாவியபுணரிகள்சூழ்ந்திடவயங்கும்
பானுநாயகன்வந்தெனப்பரந்துபாரிடத்துச்
சேனைசூழ்தரக்கயிலைநீத்தவனிமேற்சென்றான். (கங)

கொள்ளைவெஞ்சினச்சாரதரிராயிரங்குணித்த
வெள்ளம்வந்திடக்கந்தவேளவனிமேன்மேவக்
கள்ளவான்படையவுணர்கள்கலந்துசூழ்ந்தென்னப்
பொள்ளெனத்துகளெழுந்ததுவலைந்ததுபுவியை. (கச)

எழுதருந்துகண்மாதிரவரைப்பெலாமேகி
யொழியும்வான்பதஞ்சென்றதாலாங்கவையுறுதல்
குழுவின்மல்கியசாரதரார்ப்புமுனைகுறுகி
மொழிதல்போன்றனவிண்ணுளோரிமைப்பில்கண்மூட. (கரு)

கழியடைத்திடுநேமிகள்பலவொடுககன
வழியடைத்திடுபூழியுமொலியுமன்னுயிர்கள்
விழியடைத்தனநாசியையடைத்தனவிளம்பு
மொழியடைத்தனவடைத்தனகேள்வியின்மூலம். (கசு)

பேரிடங்களாந்தனுவுடைப்பூதர்கள்பெயரப்
பாரிடங்கடாமிடம்பெறுவாதலிற்பல்லோர்
காரிடங்கொளும்வான்வழிச்சென்றனர்கண்டோ
ரோரிடங்களும்வெள்ளிடையிலதெனவுரைப்ப. (கஎ)

அவனிவானெலாம்பூழியானமறைத்தலுமதனைச
சிவனமகன்றனதொளியினுலகற்றினன்செல்வான்
கவனவாம்பரியிரதமேற்பணிபடுங்காலைத்
தவனநாயகனதுதடிந்தேகுதன்மையைப்போல். (கஅ)

படையெழுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - க,கஉஅ.

---

# தாரகன்வதைப்படலம்.

வெம்மைதீர்ந்திடுமெய்ப்பெருநெறியிடைவிரைந்து
செம்மைசேர்தருகுமரவேள்படையொடுசெல்ல
வம்மசேர்ந்ததுதாரகற்குறையுளாயுடைந்தோர்
தம்மைவாட்டியேயமர்கிரவுஞ்சமாஞ்சைலம். (க)

விண்டுலாய்நிமிர்கிரவுஞ்சகிரியினைவிண்ணோர்
கண்டுளம்பதைபதைத்தனர்மகபதிகலக்கங்
கொண்டுநின்றனனாதனையுறுகியேகுமரன்
புண்டரீகநேர்பதந்தொழுதின்னனபுகல்வான். (உ)

தூயகான்மறையந்தணர்முனிவரிச்சரத்திற்
போயவெல்லையினெறியதாய்வரவரப்புணர்த்து
மாய்வுசெய்துபின்குறுமுனிகூளினிவவடிவா
யேயதொல்பெயர்க்கிரவுஞ்சமால்வரையிதுகாண். (௩)

கேரிலிக்கிரிக்கொருபுடைமாயமாநகரிற்
சூரெனப்படுமவுணனுக்கிளவலாந்துணைவன்
போரிலச்சுதனேமியையணியதாப்பூணுதோன்
ருரகப்பெயராவெய்யவன்வைகினனசயத்தால். (௪)

இன்னவனறனையடுதியேலெளிதுகாணினையோன்
முன்னவன்றனைவென்றிடலெனமுனிமொழிய
மின்னுதண்சுடாவேலவனவற்றினைவினவி
யன்னவனறனைமுடிக்குதுமெனவறைந்தான். (௫)

வேறு

சிறந்திடுமுருகவேளினையசெப்பலு, நிறைந்திடுமமருமிறையுநெஞ்சினி
லுறைந்திடுகவலைதீர்இயுவகையெய்தினு, ரிறந்தனனாரகனினவென்றேயென. (௬)

ஐயர்கள்பெருமகிழ்வடையவாறிரு, கையுடைமுருகனக்காலைதன்புடை
மெய்யருளெய்தியவீரவாகுவாந், துய்யனைநோக்கியேயினையசொல்லுவான். (௭)

உற்றவக்கிரிகிரவுஞ்சமாகுமான், மற்றதனொருபுடைமாயநோச்சியுட்
செற்றியவசுராதனுசேனைதன்னுட, னற்றமிற்ுரகனபாதனமேயினன். (௮)

ஏயநின்றுணைவர்களிலக்கத்தெண்மாக, ளாயிரவெள்ளமாமடலகொள்பூதர்கள
சாய்வறுதலைவாகடம்மொடேகியே, நீயவனபதியினைவளைதிநேரிலாய். (௯)

தடுத்தெதிர்மலைநதிடுமவுணர்தானையைப், படுத்தனைதாரகப்பதகனெய்துமே
லடுத்தமரியற்றுதியரியதேலியா, முடிதிடவருகுதுமுந்துபோவென்றனன். (௧௦)

நலமிகுகுமாரவேணவிலலினனனம, வலமிகுசிறப்புடைவாகுநன்றெனுத், தலைமி
சைகூப்பியகரத்தன்றாழ்ந்துமுன, னிலமிசையிறைஞ்சினனேர்ந்துநிற்பவே. (௧௧)

ஏந்தலுந்துணைவராமிலக்கத்தெண்மரை, யாய்ந்திடுபூதரையாதிநோக்கியே, வாய்ந்
திடுபெருந்திறல்வாகுதனனுடன, போந்திடுமவுணரைப்பொரவென்றேவினன. ()

ஏவலுமனையவாயாருமெம்பிரான், பூவடிவணங்கியேபோதருனனலு
மாவிபுளாவியாழமலன்பாங்குறுந், தேவர்கள்கமமியறகிதனைச்செப்புவான். (௧௩)

மேதகுபெருந்திறல்வீரவாகுவை, யாதியர்தமக்கெலாமளிக்கும்பான்மையா
லேதயிலாதபல்லிரதநலகெனு, வோதினனுலகெலாமுதவுந்தொன்மையோன. ()

அத்திறங்கேட்டதோரமராகம்மிய, னுத்ததேரமாதிரையொடுங்குமுன்னரே
சித்திரவயப்பரிசியங்கூளிக, ளித்திறம்பூணடபல்லிரதநல்கினன். (௧௫)

வேறு.

அன்னதேர்த்தொகையதனையெம்பிரான், மின்னுகாலவேல்வீரவாகுவும்
பின்னரெண்மரும்பிறருஞ்சாரத, மன்னரும்பெறவழங்கினனரோ. (௧௬)

பாகர்தூண்டிடப்படருநதேர்கண்மேல், வாகைசேர்தருமவாகுவேமுத
லாகினோரடைந்தம்பொனமால்வரைத,தேர்கைமைந்தனைத்தொழுதுபோற்றினா

தொழுதுவள்ளலைச்சூழ்ந்துமும்முறை, விழுமிதாகியவிடைபெற்றேகினர்
பழுதினீத்தமோர்பத்துநூறெனக், குழுமிப்பாரிடங்குலவிச்செல்லவே. (கஅ)

பாயபூதர்தம்படைக்குவேந்தரா, யேயினார்க்குவீறிலக்கத்தெண்மராய்
மேயினார்க்கெலாம்வீரவாகுவோர், நாயகம்பெறீஇநடவட்போயினன். (க௯)

அமர்வினைக்கமுந்தவனையேவியே, தமரவேலையிற்றானைசூழ்தர
விமையவர்க்கிறையேனையோர்தொழுக, குமரவேள்கடைக்கூழையேகினன். (உ0)

வேறு.

பிற்படவெம்பிரான்பெயரவேவலான
முற்படுவீரனைமுயங்கிப்பாரிடச்
சொற்படைபடர்வனதூமந்தனனொடு
சிற்பரனகையழல்புரத்துச்சென்றபோல. (உக)

அரிநிரைபூண்டதேரலகைபூண்டதேர
பரிநிரைபூண்டதேர்படைக்குளேகுவ
விரிகடல்வரைப்பினின்மேகராசியுங்
கிரியுறழ்கலங்களுங்கெழுமிச்செல்வபோல. (உஉ)

இடையகலிரதமோடிரதந்தாக்கிய,
படையொடுபடைவகைசெறிந்தபல்வகைக்
கொடியொடுகொடிநிரைதுதைந்தகூளிய
ரடுசமர்பயின்றிடுமமைதிபோலவே. (உங)

சங்கொடுபணைதுடிதடாரிகாகளம்
பங்கமிறண்ணுமையாதிபல்லிய
மெங்கணுமியம்பினவெழுந்தபூழிபோய்ச்
செங்கமலத்தவன்பதத்தைச்செம்மிற்றே. (உச)

சாற்றுமிவ்வியல்புறத்தானைவீரரும்
சீற்றவெம்பூதருஞ்செல்லவாகையன்
கோறவெறுழிலகறியகோட்டுமாமுகன்
போற்றியமாயமாபுரியைச்சேர்ந்தனன். (உரு)

வேறு.

சோர்ந்திடுமெல்லைபூதசேனைபோய்நகரம்புக்கு
நேர்ந்திடுமவுணரோடுநிணறமாவினைத்துநின்று
ரோர்ந்தனரதனைத்தூதரோடித்தங்கோயில்புக்குச்
சார்ந்திடுதிருவில்லைவகுந்தாரகற்றொழுதுசொல்வார். (உசு)

எந்தைபூழ்றிதுகேளும்முனிமையவர்தொகையையிட்ட
வெந்துயர்ச்சிறையைநீக்கவிரிசடைக்கடவுண்மைந்தன்
கந்தனென்றொருவன்வந்தானவுணரைக்கடக்குமென்று
வந்தரநெறிசெல்விண்ணோரறைந்திடக்கேட்டுமன்றே. (உஎ)

எனவிவர்மாற்றமென்னுயாந்தெரிகுற்றேமாக
வன்னவரியம்பியாங்கேயாயிரத்திரட்டியெனப்
பன்னுறுபூதவெள்ளம்படாந்திடக்குமரன்போந்தான்
முன்னுறுஞாசிரந்தழுதுநகரலைத்ததென்றார். (உஅ)

என்றலும்வடவைத்தீயிலிழுதெனுமளக்கர்வீழ்த்
துன்றியவெழுச்சிமானத்துண்ணெனச்செற்றந்தூண்ட
மின்றிகழரிமானேற்றுவியன்றவிசிருக்கைநீங்கிக்
குன்றுறழ்மகுடமண்டகோளகைதொடவெழுந்தான். (௨௯)

எழுந்துதன்மருங்குநின்றவொற்றரைநோக்கியிந்தச்
செழுந்திருநகர்மேல்வந்தசேனையைமுளிபுற்கானிற்
கொழுந்தழல்புகுந்ததென்னக்கொல்வனந்தானைமுற்று
முழுந்துருள்கின்றமுன்னரொல்லைதந்திடுதிரென்றான். (௩௦)

வேறு.

அன்னபணிமுறைபுரிவானொற்றுவர்கள்போயிடலுமவுணனின்ற
கொன்னுறுவேற்பரிசனரைக்கொடுவருதிரிரதமெனக்கூறலோடு
முன்னமொருகொடிவரையிற்றந்திடலுமதனிடையேமொய்ம்பிற்புக்குப்
பின்னர்வருமமைச்சர்கடந்தொகைபரவமதாப்பினொடுபெயாதலுற்றான. (௩௧)

வீடுவான்போலுமினித்தாரகனென்றவன்சீரதிவிரைவில்வந்து
கூடியேபுரளவதுவுமாற்றுவதுங்காப்பதுமாங்கொள்கைதமென்ன
நீடுசாமரத்தொகுதிபலவிரட்டிவெள்ளொலியனிமிர்ந்துவீசப்
பீடுசேர்தவளமதிக்குடைநிழற்றவலம்புரிகளபெரிதுமார்ப்ப. (௩௨)

ஈமதத்தேநடம்புரியுங்கண்ணுதலோனெடாதசிலையெனனமாலோன்
மாமத்தேயெனக்கிடந்தமுழுவயிரத்தண்டமொன்றுவயிரக்கண்டைத்
தாமத்தேர்பெறுகின்றமடங்கல்பலவீர்த்துவருஞ்சகடத்திண்காற்
சேமத்தேர்மிசைப்போதவேனையபல்படைக்கலமுஞ்செறிந்துநண்ண. (௩௩)

ஒற்றர்கூவியவேலையேறவெழுந்தவுணர்கடலொருங்குசெல்லக்
கொற்றமால்கரிபரிதேரினத்தினொடுவந்தீண்டக்குழவித்திங்கட்
கற்றைவார்சடைக்கடவுள்யாங்கியபொன்மால்வரையைக்காவலாகச்
சுற்றுமால்வரையென்னப்படைத்தலைவர்பன்றேரிறவன்றிசைசூழ. (௩௪)

மொய்யமாசெய்கோலமொடுமுப்புரமேனடந்தருளுமுக்கண்மூர்த்தி
பையரவின்றலைத்தாங்குங்களைதுணடூண்டதழலபதகரானோர்
மெய்யுடலமுழுதுநீங்கித்தலைகொள்ளப்பெருந்தூமமிசைக்கொண்டென்னச்
செய்யமுடியவுணர்பெருங்கடலினிடையெழுமூழிசேடசென்றோங்க. (௩௫)

காரகுன்றமன்னதிறற்கரிமீதும்பரிமீதுங்கடிதிறற்றூண்டுந்
தேர்க்குன்றமதனமீதுமலையவாகடங்கரங்களினுஞ்செறிபதாகை
யார்க்கின்றதுயர்ந்தோங்கியசைகின்றதெம்மருங்குமப்பொனாட்டிற
றூக்கின்றபூழியினைத்துடைக்கின்றபரிசேபோற்றுவன்றித்தோன்ற. (௩௬)

வாகையுளபல்லியமுமியம்பதன்னகாநீங்கியன்னாமன்ன
னேகியதோர்படிநோக்கியுவரிமிசைக்கங்கைகளயாதெய்துமாபோற
சாகையுளபன்மரனும்பலபடையுங்குன்றுகளுந்தடக்கையேந்திச்
சேகுடையபெருஞ்சிறப்பூதப்படையாதமெதிர்ந்துசென்றதன்றே. (௩௭)

எல்லோருந்தொழுதகையகுமாரனடியிணைவழுத்தியிகல்வெம்பூதர்
கல்லோடுமரனோடுங்கதையோடுங்கணிச்சியொடுகழுமுள்வீச
வில்லோடுங்கணையோடுமேலோடுநேமியொடுமிக்கவெல்லா
மல்லோடிப்புரையுமனத்தவுணர்படையெதிர்சிதறியாலசப்பின் (௩௮)

துன்னலராகியதொல்கையினோர்தலைத்
தன்னிடைவைத்தெனைத்தளர்வுகண்டதா
லன்னதுமன்றியின்றூவிகொள்ளவு
முன்னியதோகடனுறங்கலாதென்பான். (ருஉ)

இவ்வகையாமினியெல்லைமுற்றவும்
வெவ்வழல்சுட்டிடும்விரகநோய்தெற
வுய்வகையொன்றிலனுயங்கலல்லது
செய்வதுபிறிதிலன்றெருளில்சிந்தையான். (ருங)

வேறு.

ஆக்கமித்திறமடைவுழிப்பதநூறடுத்த
நோக்கமுற்றவனசசிபொருட்டுற்றநோயதனை
நீக்குகின்றனன்யானெனுநினைந்துளானென்ன
மாக்கள்பூண்டதேர்வெய்யவனகுணதிசைவந்தான். (ருச)

வெம்புதொல்லிருளவுணர்தங்குழுவினைவீட்டி
யும்பாமேற்செனுமதியெனுமடங்கலையுருத்துப்
பைம்பொன்வெஞ்சுடர்க்கரங்களாலதன்வலிபடுக்குஞ்
சிம்புளாமெனத்தோன்றினன்செங்கதிர்க்கடவுள். (ருரு)

தொடர்ந்தஞாயிறுவிடுத்திடுங்கதிர்களாந்தூசி
படர்ந்தகாலையினிலவெனுமணிகமுன்பட்ட
வடைந்தமீனெனுந்துணைவரும்பொன்றினராமாசெய்
துடைந்தமன்னரிறபோயினனுடுபதிக்கடவுள். (ருசா)

விரிந்தபல்கதிரணிகத்தைவெய்யவன்விடுப்பத்
துரந்தசோமனையவன்புறங்காட்டினன்றொலைந்து
கரந்துபோதலும்பின்னுறசசெனநிலைகளதி
விரிந்துளோரையுந்தொடாவரோசூரர்தமினத்தோர். (ருஎ)

திங்கடனகுறையுணாததவாய்திறந்தெனச்செய்ய
பங்கயங்கள்போதவிழ்ந்தனகுமுதங்கள்பலவுந்
தங்கணாயகனுடைந்ததுநோக்கியேதபனற்
கங்கைகூப்பியதிறனெனவொடுங்கியவன்றே. (ருஅ)

வனமெழுந்தனவனசமுமெழுந்தனவரியி
னினமெழுந்தனமாக்களுமெழுந்தனவெழிலசே
ரனமெழுந்தனபுள்ளெலாமெழுந்தனவவற்றின்
மனமெழுந்தனவெழுந்தனமக்களின்றொகையே. (ருகூ)

ஞாயிறுற்றவவ்வளவையினனந்தலையுலகி
லேயெனச்செறியிருளெலாமறைந்திருந்தென்னச்
சேயரிக்கணிதந்திடுதெளிவில்காமதது
மாயிருட்டொகையொடுங்கியதிந்திரனமனத்துள். (சுo)

கையிகந்துபோய்த்தன்னுயிரலைத்தகாமத்தீப்
பையவிந்திடுந்தள்போற்றணிதலும்பதைப்புற்
றுய்யெனக்கடிதெழுந்தனனகைத்துவெள்குற்று
னையகோவிதுவருவதேயெனக்கெனவறைந்தான். (சுக)

தீமையுள்ளனயாவையுந்தந்திடுஞ்சிறப்புந்
தோமில்செல்வமுங்கெடுக்குநல்லுணர்வினைதடுதொலைக்கு
மேமகன்னெறிதடுத்திருளுய்த்திடுமிதனாற்
காமமன்றியேயொருபகையுண்டுகொல்கருதில். (சுஉ)

என்பதுன்னியேயிரதிரனுண்டைவைப்பிகந்து
தன்புறந்தனிற்கடவுளர்குழுவெலாஞ்சார
வன்பொடேபடர்ந்தறுமுகனடிகளையடைந்து
முன்புதாழ்ந்தனனுரோமமுஞ்செஙகையுமுகிழ்ப்ப. (சுங)

தொழுதகையினன்கோட்டியமெய்யினன்றுகிலத்
தெழுதுபாவையிலானறமைபுலததினனிறைஞ்சிப்
புழுதிதோய்தருமுறுப்பினன்சுருதியின்பொருண்மை
முழுதுமூறியதுதியினனுகிமுனனின்றான். (சுச)

கரியவன்றனைச்செய்யவன்கருணைசெய்தருளி
வருதியென்றுகூய்மறைகளுமவரமபுகாண்கில்லா
வரனதாள்களையருச்சனைபுரிதிநாமதனுக்
குரியவாயபல்கரணமுந்தருதியெனறுரைததான். (சுரு)

உரைத்தவெல்லையிற்ருெழுதுபோயுழையரிறபலரைக்
கரைத்துவீற்றுவீற்றேவியேகடிமலாக்கண்ணி
திரைத்துகிற்படாநறும்புனலவிபுகைதீபம
விரைததகந்தஙகளேனவுநதந்தனனவிரைவில். (சுசு)

அவவக்காலையிலாறுமாமுகனுடையடிக
டெய்வக்கமமியற்கொணடொருசினகரமியற்றிச்
சைவததந்திரவிதியுளிநாடியேதாதை
யெவவெக்காலமுநிலையதோருருவுசெய்திட்டான. (சுஎ)

தேவுசான்மணிப்பீடத்திலிசனைச்சோததி
யாவினைரைநதுமமுதமும்வரிசையாலாட்டித
தாவிலாததோர்வாலிதாமணிததுகில்சாத்திப்
பூவின்மாலிகைசெய்யசாந்தத்தொடுமபுனைந்தான். (சுஅ)

மருந்திறைற்றவுஞ்சுவையனவாலுவநூல்போய்த
திருந்தினாகளும்வியப்பனதிறம்பலவாகிப்
பொருந்துகினறனநிரலமைகருனையமபுழுக்கல்
சொரிந்துபொற்கலத்தருத்தினனமந்திரதொடாபால். (சுகூ)

கந்தம்வெளளிலைபூகநற்காயிவைகலந்து
தந்துபினமுறையருததினன்புகைசுடர்தலையா
வந்தபான்மைகளியாவையும்வரிசையானுதவி
முந்துகைதொழூஉப்போற்றினனமும்முறைவணங்கி. (எ0)

வே று.

இருவருமுணர்கிலாதிருந்ததாள்களைச்
சரவணமிசைவருதனயன்பூசனை
புரிதலுமுமையொருபுடையிற்சேர்தர
வருள்விடைமீமிசையண்ணறோன்றினன். (எக)

கார்த்திகைகாதலன்கீறைமிடற்றுடை
மூர்த்திநல்லருள்செயமுன்னிவந்தது
பார்த்தனனெழுந்தனன்பணிந்துசென்னிமேற்
சேர்த்தியகரத்தொடுசென்றுபோற்றினன். (எ௨)
செயிர்ப்புறுநந்திதன்றிறத்தில்வீரரும்
வியர்ப்பினில்வந்தெழுவீரருங்குழீஇக்
கயற்புரைகண்ணுமைகணவறகாணுறீஇ
மயிர்ப்புறம்பொடிப்புறவணங்கியேத்தினர். (எ௩)
முண்டகனமுதல்வருமுரணகொள்பூதருங்
கண்டனரனையதுகரங்கள்கூப்பியே
மண்டனின்மும்முறைவணங்கிவானக
மெண்டிசைசெவிடுறவேத்தனமேயினார். (எ௪)

வேறு

ஆயதுகாலைதனனிலருவுருவாகுமணணல
சேயினைநோக்கியுனறனவழிபடற்குவகைசெய்தே
நீயிதுகோடியெனனுநிரந்தபலபுவனமுறறு
மேயெனமுடிவுசெய்யும்படைக்கலத்திறையையீந்தான். (எ௫)
மற்றிதுநமபாற்சேறனறுமவானபடைமாயனவேதாப்
பெற்றுளதன்றியாரிப்பெருமபடைபரிக்குநீரார
முற்றுயிருண்ணுமவெஞ்சூர்முரட்படைதொலைப்பானீது
பற்றுதிமைநதவெனனுப்பராபரனருளிப்போனான். (எ௬)
கருணைசெய்பரமனசேணிறகரந்தனன்போனகாலை
யருள்பெறுநெடுவேலண்ணலனனவறபோற்றிப்பினனை
விரவியவிலககதொனபானவீரருமயனுமேனைச்
சுராகளுமவழுததிசெல்லததூயதன்றேரிற்புக்கான. (எஎ)
சிலவியநதோமேறசெவவேள்சோதனுமுலவைவேந்தன
வல்லைதனறமாகளோடுமவாமபரிகடாவியுயப்ப
வெலலையிறபரிதிதோன்றவெழுதருமுயிாகளேபோ
லொல்லெனவெழுந்ததம்மாவுருகெழுபூதவெள்ளம். (எ௮)
சாரதீததமலலாநதரையினினறெழுநதுசூழ்ந்து
போரணியணிந்துபோந்தபுடைதனிவிலக்கத்தொனபான்
வீரருஞ்சுரர்கள்யாருமேவினாவநதாவானறேய்
தேர்மிசையவர்க்குநாப்பட்செனறனன்குமரசெம்மல். (எ௯)
மண்ணியங்கரையிறறெண பால்வகுததசேய்ஞலனூர்நீங்கி
யெண்ணியவுதவுமபொன்னியிகநிடைமருதிறேடு
தண்ணியன்மஞ்ஞையாடுநதணடுறைபறியலூருங
கண்ணுதலிறைவனறனமேனவுங்கண்டுபோனான். (அ0)
எழில்வளஞ்சுரக்குந்தொலலையிலஞ்சியங்கானநோக்கி
மழவிடையிறைவன்பொற்றுள்வணங்கியேமலர்மென்பாவை
முழுதுளதிருவுமென்றுமுடிவினமங்கலமுமெய்த
விழுமிதினேற்றுப்பெற்றவியன்றிருவாரூர்கண்டான். (அக)

குமாரபுரிப்படலமுற்றிற்று.

ஆ திருவிருததம் - க,எ௨௫.

---

# சுரம்புகுபடலம்.

புற்றிடங்கொண்டபுத்தேள்புரந்தரற்கருள்செய்திட்ட
நற்றலந்தன்னைச்சேர்ந்தநகரமுள்ளனவுங்காணூஉக்
கொற்றவெங்கதிர்வேலண்ணல்கொல்லுலையுழலிற்செக்கர்
பற்றியவிரும்புபோலுமபாலையங்கானதுற்றான். (௧)

வேறு.

எழுநேமியும்பெரும்புறக்கடலுமெண்டிசையுஞ்
சூழவன்னதாலழிவின்றித்தொன்மைபோலாகி
யாழியுள்ளுறும்வடவையினவற்றினைப்பருகி
யூழிதன்னினுமிருப்பதவ்வுயர்பெரும்பாலை. (௨)

அண்டாநாயகனுலகடுமகந்தனக்காகும
பண்டமேசெறிபல்வளமாருயிர்பசுக்கண்
மண்டுநேமிநெய்நிலங்கலமாயுறமலர்தீக்
குண்டமாயதுகள்ளிசூழ்கொடியவெம்பாலை. (௩)

வண்ணவொண்சுதைமெய்யுடைவல்லிநதிகேள்வ
னண்ணுதொல்லுலகாகியேநரலையுற்றென்னத
தண்ணிலாவெழுநாததலையிரண்டுடைததழலின்
பண்ணவற்குலகாய்துமுதுபெரும்பாலை. (௪)

உடையதொல்குலக்கேண்மையாலவ்வனத்துறையுங்
கொடியவனணிபாற்சென்றதோவெப்பமேல்கொண்டு
நடுநடுங்கிவெம்புகையுமிழ்ந்தாற்றிநாவுலர்ந்து
கடல்படிந்துநீர்பருகுமால்வடவையங்கனலே. (௫)

கற்றையங்கதிர்ப்பரிதியுமதியுமக்கானஞ்
சுற்றியேகுவதல்லதுமிசைபுகா;சுரரு
மற்றுளார்களுமனையரேயெழிலியுமருத்து
மெற்றைவைகலுமதன்புடைபோகவுமிசையா. (௬)

சேனம்வெம்பணியொண்புறாவிரலைமானசெந்நா
யானையாதிகளவ்வனத்திருக்கவுமாவி
போனதில்லையாலங்கியிற்றோன்றியபொருள்கண்
மேனிகன்றுவதன்றியேவிளியுமோவதனால். (௭)

எண்ணினுஞ்சுடும்பாலையங்கானிடையெழுந்த
கண்ணகன்புகையழல்படுகின்றகாட்சியவே
விண்ணினீலமுஞ்செக்கருமவற்றினால்வெடித்த
புண்ணுமொக்குளுங்கதிர்களுமுடுக்களும்போலாம். (௮)

வேகவெய்யவன்புடையுறுதவ்வனமிசையே
போகவோரிறையெழுந்தழல்சுட்டதுபோலு
மேருதேரொருகாலிலாதிழந்ததாலிருகால
பாகிழந்தனனவன்கதிரங்கிபட்டனவே. (௯)

தங்கடொல்பவமகன்றிலாவிண்ணவர்தம்மைத்
துங்கமுத்தியின்பொருட்டினாலடைபவர்தொகைபோ
லங்கொணர்ந்ததம்போலவேவெப்பமுற்றயருங்
கனகநாடியேநீழலுக்கடைவனகலைகள். (௧௦)

கோலவெங்கதிர்மதியிவர்வைகலுங்கொடிய
பாலைவெஞ்சுரத்தாரழல்வெம்மைபட்டனரோ
காலைதனனினுமாலையம்பொழுதினுங்கங்குல்
வேலைதனனிலும்பிறவினும்வேலைநீர்படிவார். (௧௧)

தொடரும்வானவர்யாவருமையைதாடொழுவார்
கொடியபாலைமுன்னுணர்கிலாதனுகினாகொல்லோ
வடிசிவந்தகம்வெமபியேயமுதமுண்டதற்காப்
படியின்மேலென்றுஞ்செல்கிலர்விண்மிசைப்படர்வார். (௧௨)

ஒள்ளிதாகியதலைமையிற்பிறந்துளோருலக
மெள்ளுநல்குரவெய்தலாலிழிந்தவர்கண்ணுங்
கொள்ளுமாறொருபயன்குறித்தேகல்போற்கொடிய
கள்ளிதன்புடைநீழலுக்கொதுங்குவகரிகள். (௧௩)

இரவிகம்மியன்சுட்டுறுகோல்கதிரெரிதீ
மருவுசெந்தரைபொறிமணிகொள்கலம்வறுங்கான்
கரிகளேகரிகாற்குழறுதிக்கைநீர்கானல்
புரிதரும்பணிவெந்திடும்பணிக்குலம்போலும். (௧௪)

ஆன்றவான்புவிநதிப்புனல்பாதலமதன்கட்
டோன்றுநீத்தநீர்யாவையுமொருங்குறத்தூற்றுச்
சான்றபாலையஞ்செந்தழலப்புனறன்னைக்
கான்றவாறெனக்கிளர்வனவங்கிலக்கானல். (௧௫)

விஞ்சுகானல்வெண்டேரினையாறெனவிரும்பி
நெஞ்சிலுன்னியேயிரலைமான்மடப்பிடிநெடுந்தாட்
குஞ்சரந்திரிந்துலைவனகொடியவெம்பணிகா
னஞ்சுதன்னையுமருந்துவளுமலிநீர்நசையால். (௧௬)

செய்யமண்மகளுலப்புறுவுந்தியந்தீயாய்
வெய்யவன்செலற்கரியவப்பாலைமேவுதலான்
மொய்யில்வெம்பணிபுகையழலுமிழ்வனமுரணு
மையுறுங்கொடுநஞ்சொடுகான்றசெம்மணிகள். (௧௭)

மூளையினஞ்சொரிமுத்தமுமுந்துசெம்பரலு
மளவில்பாந்தளின்மணிகளுமீண்டியேயமர்தல்
விளிவிலவவனத்தீச்சுடததனதுமெய்வெடித்தே
யுளையுமண்மகண்மொக்குளுற்றிடுதிறனொக்கும். (௧௮)

கள்ளிபட்டனபாலையுந்தீந்தனகரிந்து
முள்ளிபட்டனவெரிந்தனகுராமரமுளிந்து
கொள்ளிபட்டனகாரகிலன்னதாற்கொடுந்தீப்
புள்ளிபட்டதுபோன்றதுபாலையம்புவியே. (௧௯)

இன்னதாகியபாலையஞ்சுரத்திடையிறைவன்
றன்னதாகியதானைகளோடேந்தலைப்பட்டது
மின்னுமாமுகில்பொழிந்தபின்றண்ணளிமிக்கு
மன்னுகின்றபூங்குறிஞ்சிபோலாயதவ்வனமே. (௨0)

ஆற்றருந்திறலங்கிதன்னரசியன்முறையை
மாற்றியெம்பிரான்வருணற்குவழங்கினுனென்ன
வேற்றமாகியவெம்மைபோய்நீங்கியேயெவரும்
போற்றுநீரொடுதண்ணளிபெற்றதப்புவியே. (௨௧)

காதனீங்கலாதலமருமாருயிர்க்கரண
மாதியீசனதருளினுலவனதாகியபோ
லேதுநீரிலாதழல்படுவெய்யகானிளையோன்
போதலாற்குளிர்கொண்டதுநறுமலாப்பொழிலாய். (௨௨)

புறநெறிக்கணேவீழ்ந்துளோர்சிவனருள்புகுங்கா
லறிவுமாற்றலுங்குறிகளும்வேறுபட்டனபோல்
வறியசெந்தழல்வெவ்வனம்வேலவன்வரலா
னறியதண்மலர்ச்சோலையாயுவகைநல்கியதே. (௨௩)

வேறு.

நீறுமுரம்பின்றன்மைநீங்குமச்சுரத்தின்றன்பா
லீராறுபுயத்தன்செல்லவெழில்கெழுபரங்குன்றத்திற்
பாராறுதவம்பூண்டுள்ளபராசரன்சிறுர்களாய
வோராறுவகைமையோருமோதியாலதனைக்கண்டார். (௨௪)

தத்தனேயனந்தனந்திசதுர்முகனபரிதிப்பாணி,
மெய்த்தவமாலியெனனமேவுமூவிருவாதாமு
மத்தனதருளைமுன்னியடுக்கலினிருக்கைநீங்கி
யுத்தரநடவையெய்தியோய்யெனப்படாதனுற்றூா. (௨௫)

ஆர்வலராகுமைந்தராறுவருமளகைநேடிப்
பார்வலவந்தணையுமாபோறபாலையென்றுரைக்குமெல்லை
நேர்வருகின்றகாலைநெடும்படைநீததஞ்சூழச்
சூர்விளைமுடிப்பான்செல்லுந்தோன்றல்வந்தணியனுனன். (௨௬)

அணிமையிறசேயோனண்ணவாறுமாமுகமும்பன்னீ
ரிணைதவிர்புயமுங்கையுமேந்தெழிற்படையின்சீரு
மணியணிமார்புஞ்செங்கேழ்வானறுகின்மருங்கும்பாதத்
துணையுமததுணையிற்கண்டுதொழுதுகண்களிப்புக்கொண்டார். (௨௭)

மூவிருதிறத்திேனருமுற்றெருங்குணர்ந்தவள்ளல்
பூவடிவணங்கித்தேனீப்புதுநறுவருந்தியார்த்து
மேவருந்தன்மைத்தென்னவியப்பொடுவழுத்திநின்று
தேவர்கடேவவெம்பாற்றிருவருள்செய்தியென்றூர். (௨௮)

என்றிவையிருமூவோருமிசைத்துழியுயிர்கட்கெல்லா
மொன்றியவுயிருமாகியுணர்வுமாயிருந்தமூர்த்தி
தன்றிருமலர்த்தாண்முன்னந்தலையளியோடுதாழ்ந்து
நின்றுகைதொழுதிட்டன்னோர்நிலைமையைமகவான்கூறும். (௨௯)

மறுவறுபராசரன்றன்மதலைகளாகுமின்னோ
ரறுவருஞ்சிறுரேயாகியாடுறுசெவ்விதன்னி
னிறைதருசரவணத்துநெடுந்தடம்புனலிற்பாய்ந்து
முறைமுறைபுக்குமூழ்கிமூகேறெனவலைக்கலுற்றார். (௯௦)

உலைத்தலையுணர்ச்சிகொள்ளவுள்ளுயிர்திரியுமாபோ
னிலைத்தலையின்றியார்க்குநீந்தல்செய்குண்டுநீத்த
மலைத்தலையடையுமெல்லையாயிடைவதிந்தமீன்க
டலைத்தலையிரியவின்னோர்தன்மையங்கதனைக்கண்டார். (௯௧)

அங்கதுதெரிந்துநின்றோராண்டுறுமீன்கள்பற்றித்
துங்கமதுடையகோட்டின்குழலுய்த்துலவுமெல்லைச்
செங்கதிருச்சிவேலைச்செய்கடனிரப்பவுன்னிப்
பங்கமினேன்மைபூண்டபராசரனங்கண்வந்தான். (௯௨)

வள்ளுறைகொண்டதெய்வவானசரவணத்துவந்தோன்
பிள்ளைகளாகுமின்னோர்பிடித்தபுன்றொழிலைநோக்கித
தள்ளருஞ்சினமேல்கொண்டுதனயாகாணீவிரீண்டே
துள்ளுறுமீனமாகிசசுலவுதிரென்றுசொற்றான். (௯௩)

அவவுரையிறுக்குமுன்னரறுவருமேனாற்றும்
வெவவினையூழின்பாலான்மீனுருவாகியஞ்சி
யெவவமிதகலுகினறதெபபகலுரைததியென்னச்
செவவிதினுணாந்துமேலைத்திருமுனிபுகலலுற்றான். (௯௪)

இத்தடந்தன்னின்மேனாளிராறுதோளுடையவண்ண
லததனதருளால்வைகவனையனையெடுகேகுமமமை
மெய்ததனமுருக்குநதீமபால்வெள்ளமாமதனைநீவிர்
துய்ததிடுமெலலைதனனிறவொலலுருவாதிரெனறான். (௯௫)

என்றிவைமுனிவனகூறியிருமபகறகடனையாறறிச்
சென்றனனதற்பினமீனின்றிருவுருவமைந்தவினனோ
ரன்றுதொட்டளப்பிலகாலமலமருமுணர்சசியெய்தி
மனறலஞ்சரவணததுமாண்பெருந்தடாகததுற்றா. (௯௬)

ஐயநீயனையபொய்கையமர்தலுமவவைகண்டாங்
கொய்யெனவெடுப்பக்கொங்கையுகளநின்றிழிந்ததீம்பா
றுய்யதோாநீததமாகிததுறுமலுமதனைததுய்தது
மையனீஙகுற்றுத்தொல்லைவாலியவடிவமபெற்றார். (௯௭)

தொல்லுருவடைந்தவினனோர்தூமதிவேணியண்ண
னல்லருளதனால்வந்துநவையகல்பரஙகுன்றத்தி
னெல்லையில்விரதம்பூண்டாங்கிருந்தனரெந்தையீண்டுச்
செல்லுவதுணர்ந்துபோந்தாரென்றனன்றேவாசெம்மல். (௯௮)

தம்மகவுரைக்குங்கூற்றந்தாதையர்வினவுமாபோ
லம்மகபதிசொற்கேளாவருள்செய்துபராசரன்றன்
செம்மல்கடம்மைநோக்கிச்செயிரறுகுணத்துநீவி
ரெமமொடுசெல்வீரென்றான்யாவையுமுணர்ந்தபெமமான். (௯௯)

பராசரன்மைந்தரன்னபான்மையைவினவிச்செவ்வேற்
காரசரணடைந்தேமென்றுகட்டுரைத்திறைஞ்சிச்செல்லச்
சராசரம்யாவுந்தந்தசண்முகன்றழல்கட்கெல்லா
மிராசர்தந்தன்மையெய்துமிருஞ்சுரங்கடந்துபோனான். (சூ௦)

சுரம்புகுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம - க,எசுரு.

# திருச்செந்திப்படலம்.

சுரமதுகடந்துநீங்கிச்சோதிவேலுடையவள்ளல்
விரிபுனற்சடிலத்தண்ணன்மேவுசெங்குன்றூரநோக்கிப்
பருமணிவயிரமுத்தம்பலவளம்பிறவுமாழித
திரையெறியலைவாயாகுஞ்செந்திமாநகரமபுக்கான். (க)

அறுமுகனங்கணேகியகிலகம்மியனைநோக்கி
யிறையிலோர்சினகரததையியற்றுதியீண்டையெனத
திறனுணர்புனைவர்செம்மல்சிந்தையினுடிததேவ
ருறைதிருநகரம்வெஃகவொருதிருக்கோயில்செய்தான. (உ)

பொன்னுறுமிரதநீங்கிப்புறனெலாந்தானைநண்ண
வந்நகரதனுளேகியருமபெருந்துணைவாபூதர்
மன்னவரயன்மாலாதிவானவர்யாருமபோற்ற
மின்னுபொற்பீடத்தையன்வீற்றிருந்தருளினானே. (ங)

வேறு.

பாணியிர்மென்குரற்பாற்படுநல்யாழ், கானமிசைததனாகந்தருவத்தோ
ரானபல்சட்டுவமஙகைதொறேந்தி, வானமிரதைச்செவிவாக்குறுமாபோல். (ச)

சுருதியெலாமுணாதூயவனவாறோ, புரவலனமாமுனிபுங்கவாயாரு
மருமலர்மாரிவழுததினாவீசி, யிருபுடைதனனினுமெய்தினரீணடி. (ரு)

வாலியதூயொளிவானதியாவும, பாலகன்மெய்யணிபாாத்தனராடி
யேலுறுபாங்கரினீணடியவாபோற, காலினர்சாமரைகைக்கொடசைததார். (சு)

ஓண்ணிழன்மாமதியோரிருவடிவா, யண்ணன்முகததெழிலார்ந்திடநண்ணி, விண
ணிடைநின்றெனவெங்கனல்வருணன், றண்ணிழலவெண்குடைதாங்கினாநின்றார்.

கட்டழல்கானறிடுகாமருநாக, மெட்டுமெலாதனயாவையுமீணடி
யுட்டெளிவாற்பணிவுற்றெனவால, வட்டமசைததனர்வானவர்பல்லோா. (அ)

வானுயர்தோள்விறல்வாகெனுமண்ண, ரூனுடைவாள்கொடுசோர்ந்தயனிற்ப
வேனையதம்பியரெண்மரிலக்க, ரானவாபோற்றியகன்கடைநின்றா. (கூ)

வேறு.

பொருந்தியின்னவர்புறத்துறவங்க, ணிருந்தஞானமுதலெல்லையில்காலம
வருந்துகின்றமகவான்முகநோக்கித், தெரிந்திடாதவரினின்னனசெப்பும். (க௦)

துறந்துநீதியமர்சூர்முதலானோர், பிறந்தவாறுமவர்பேணியநோன்பு
மிறந்தசெய்யவரமெய்தியவாறுஞ், சிறந்துபின்னாசுசெய்திமொறும. (கக)

மற்றவெய்யவர்தமாயமுமுற்கொள், வெற்றியும்வலியுமேன்மையுநம்பா
விற்றைநாள்வரையியற்றிய துன்பு, முற்றுமொன்றறமொழிந்திடுகென்றான். (கஉ)

கோக்குமாரனிவைகூறவிசைந்தே, மீக்கொள்பொன்னுலகவேந்தயனின்ற
வாக்கின்வல்லகுரவன்றனையன்பா, னோக்கிநீயிவைநுவன்றருள்கென்றான். (கங)

வச்சிரங்கொள்கரன்மற்றதுசெப்ப, வச்செனக்குரவனன்னதிசைந்தே, செச்சை
மொய்ம்புடையசேயிருபொற்றா, ளுச்சிகொண்டுதொழுதின்னதுரைப்பான். (கச)

அறிதியெப்பொருளுமாவிகடோறுஞ், செறிதியெங்கடியர்சிந்தைதன்முன்னிக்
குறியசேயுருவுகொண்டனையார்க்கு, மிறைவநினசெயலையாருணர்கிற்பார். (கரு)

எல்லையில்புவனம்யாவையும்யாண்டு, மொல்லுமூவருமுயிர்த்தொகையாவுந்
தொல்லைமேனிகொடுதோன்றினையானீ, வல்லமாயவியன்மற்றெவர்தேர்வார். ()

வெய்யர்தன்மையைவினவியதன்மை, யையவன்னதையறிந்திடவன்றே
கையரேந்துயர்களைந்துளமீதிற், செய்யவின்புதவுசீரருளாமால். (கஎ)

ஆகையாலவுணர்தன்மைகளெல்லாம், போகுமெல்லைபுகல்கின்றனனென்று
வாகைசேர்குமரவள்ளலைநோக்கி, யோகையோடரசனோதிடுகின்றான. (கஅ)

திருசசெசந்திப்படலமுற்றிற்று.

ஆக திருவிருததம - க,எஅங.

---

உற்பத்திகாண்டமுற்றுப்பெற்றது.

கச்சியப்பசிவாசாரியர்திருவடிவாழ்க.

---

திருச்சிற்றம்பலம்.

இரண்டாவது

# அசுரகாண்டம்.

## மாயைப்படலம்.



ஊரிலான்குணங்குறியிலான்செயலிலானுரைக்கும்
பேரிலானொருமுன்னிலன்பின்னிலான்பிறிதோர்
சாரிலான்வரல்போக்கிலான்மேலிலான்றனக்கு
நேரிலானுயிர்க்கடவுளாயென்னுளேநின்றான். (க)

வீறுகாசிபன்சிறார்களாய்மேவியவறுபா
னாறுகோடியதாகியவவுணருக்கரசன்
மாறின்மங்கலகேசியாமரக்கியைமணந்து
பேறதாகவேசுரசையென்றொருமகட்பெற்றான். (உ)

தூயவம்மகள்வளர்ந்தபின்புகரெனுந்தொல்லோன்
றீயமாயையின்கல்விகள்யாவையுந்தெருட்டி
யாயவிஞ்சையின்வல்லபநோக்கியேயவட்கு
மாயையென்றுபேர்கூறினன்மனத்திவைமதிப்பான். (௩)

இன்னலெய்தியவ்வுணர்கள்சிறுமையுமிமையோர்
மன்னனாதியாபெருமையுமவானநாட்டுறைவோர்
நன்னலந்தொலைந்தசுரரான்மெலிந்திடநத்தி
சொன்னவாய்மையுங்கருதினன்புகரெனுந்தூயோன். (௪)

கருதியின்னணமேல்வருந்தன்மையுங்கண்டு
குருதிதோயும்வேலவுணர்கோன்பயந்தகோற்றொடியை
வருதியென்றுகூய்வரம்பறுபேரருள்வழங்கி
யொருதிறந்தனைக்கேளெனத்தேசிகனுரைப்பான். (௫)

வனசமங்கைதன்கணவனால்வாசவன்றன்னான்
முனிவர்தேவராலளப்பிலாவவுணர்கண்முடிந்தா
ரனையர்மேன்மையையாவருமுணர்குவரதனா
லுனதுதந்தையும்வலியிழந்தேயொடுங்குற்றான். (௬)

மின்பொருட்டினாற்கேதகைமலர்ந்திடும்விளங்கு
மென்பொருட்டினான்மாமழைசொரிந்திடுமீட்டும்
பொன்பொருட்டினால்யாவுமுண்டாமதுபோல
வுன்பொருட்டினாலவுணர்க்குமேன்மையதுளதாம். (௭)

வாசமாமலர்மடந்தையும்வந்தடிவணங்கப்
பேசொணாதோர்பேரழகுருக்கொடுபெயர்ந்து
காசிபன்றனையடைந்தினின்வல்லபங்காட்டி
யாசைபூட்டியேயவனொடும்புணருதியல்லில். (அ)

அல்லிடைப்புணர்ந்தசுரர்கடம்மையுண்டாக்கி
மெல்லவங்கவர்தங்கட்குநாமமும்விளம்பி
யெல்லையில்வளம்பெற்றிடவுணருக்கியலூர்
தொல்லைவேள்வியும்விரதமுமுணர்த்துதிதோகாய். (கூ)

இன்னதன்மைகண்முடிந்தபினின்சிறாரெவரு
நன்னலந்தனையடையவுநண்ணலரெல்லாம
பன்னரும்பழிமூழ்கவுமருந்தவம்பயில
வன்னைமீளுதியென்றனனபுகரெனுமாசான். (க0)

குரவன்வாய்மையைவினவியேகோதில்சீரவுணர்
மரபுமேமபடுதனமையான்மறநிவையெல்லா
மருளுகின்றனையாதலாலிபபணியடியேன
புரிகுவேனெனவவனடிவணஙகியேபோனாள். (கக)

மயிலையன்னவளவுணாதமன்னற்குமினைய
செயலையோதியேயவனவிடையுங்கொடுசென்று
கயிலையெனனநீருடியேகாசிபனிருந்து
பயிலுநோன்புடையெல்லையைநாடியேபடாந்தாள். (கஉ)

திருவுமாரவேளிரதியுந்திலோத்தமையென்ன
மருவுதையலுமோகினியென்பதோர்மாது
மொருதனிததிருவடிவுகொணடாலெனவுலகிற்
பொருவினமாயவள்பேரழகுருக்கொடுபோனாள். (கங)

மண்ணுற்றோர்களுமாதிரததோர்களுமதிதோய்
விண்ணுற்றோர்களுமன்னவளெழினலமவிரைவிற
கண்ணுறறோர்கிலரனுகினர்காமவேள்கணையின்
புண்ணுற்றோர்விளககழலுறுபறவையிறபுலர்ந்தாா. (கச)

மதியுஞாயிறுஞ்சூழ்தருமேருவின்வடபால்
விதிமகன்றவமபுரிதருமவியணிலைமருஙகி
னதிாசிலம்பொடுமேகலைபுலம்புறவனையா
டிதிகொலென்றெலாத்தேவருமையுறச்சென்றாள். (கரு)

சென்றமாயையககாசிபனிருக்கையிற்றிருவாழ்
மன்றலவாவியுந்தடங்களுஞ்சோலையுமணிசெய
குன்றுமாமலர்ப்பள்ளியுமண்டபக்குழாமுந்
தன்றனுணையாற்றுண்ணெனச்சூழ்தரச்சமைத்தாள். (கசு)

இனைதெலாமவண்வருதலுமெந்தைதன்னடியை
மனத்தினிற்கொடுபொறியினையுரத்தினால்வாட்டித்
தனித்துநோற்றிடுங்காசிபன்புகுந்தவத்தலைகமை
யனைத்துநோக்கியீதென்கொலென்றதிசயமடைந்தான். (கஎ)

முற்றுமாங்கலையாசையினெடிதுபன்முறையா
லுற்றுநாடியேமாயைதன்செயலெனவுணரா
னிற்றெலாமிவணியற்றினர்யாரெனவெண்ணிச்
சுற்றுநோக்கினன்யாரையுங்காண்கிலன்றூயோன். (கஅ)

வேறு.

மெய்த்தவவுணர்ச்சியைவிடுத்துமேலையோ
னத்தனதருளினாலணங்குமாயையால
வைத்தனகண்ணுறுமனங்கொள்காதலாற்
சித்திரமெனவெரீஇயினையசெப்புவான். (ககூ)

வானநாடிழிந்ததோமகத்தின்வேந்துறை
தானநாடிழிந்ததோதனதனுதியோ
ரேனநாடிழிந்ததோவிதுவன்றேலிவை
யானவாறுணாகிலேனழுங்குசிந்தையேன். (உ0)

ஆரணன்செய்கையோவகிலமுண்டுமிழ்
நாரணன்செய்கையோவவாக்குநாடொணாப்
பூரணன்செய்கையோபிறர்புரிந்ததோ
காரணந்தோகிலேன்கவலுநெஞ்சினேன். (உக)

புனனெறிக்கானிடைப்புகுந்தவித்திரு
நன்னெறிக்கேதுவோநலந்தவிர்ந்திடுந்
துன்னெறிக்கேதுவோதொல்லைஞாலமே
லென்னெறிக்கேதுவென்றிதுவுந்தோகிலேன். (உஉ)

என்றிவைசொற்றிவண்யாவதாயினு
நன்றதனியற்கையுநமக்குமுன்னரே
யொன்றறத்தெரிவுறுமுணர்ச்சியிங்ஙனஞ்
சென்றதுபழுதெனச்சிந்தித்தானரோ. (உங)

தெற்றெனத்தன்மனந்தேற்றித்தொன்மைபோ
னற்றவமியற்றுவானணுகுமவேலையின்
மற்றதுதெரிந்திடுமாயைதூமணிப்
பொற்றையிற்றமியளாய்ப்பொலிந்துதோன்றினாள். (உச)

தோன்றினணிற்றலுந்தொல்லைநான்முகற்
கான்றதொர்காதலனவளைநோக்கினான்
வான்றிகழ்கற்பகவல்லிசெய்தவத்
தீன்றதொர்கொடியிவணெய்திற்றோவென்றான். (உரு)

நாற்றலையான்மகனம்முனிக்கொடி
தோற்றியதற்புதச்சூழ்ச்சிக்கேதுவென்
றூற்றுறுதவத்திறனகற்றியாயிடை
வீற்றிருந்திடுவதுவிடுத்துப்போயினான். (உசா)

கண்ணகன்வரைமிசைக்கடிதுபோயுறீஇ
யண்ணியனுதலுமரிவையாயுறப்
பெண்ணுருவேகொலிப்பெற்றித்தாலென
வெண்ணினன்மையலுக்கெல்லைகாண்கிலான். (உஎ)

புண்டரீகத்திகொல்பொன்னம்பாவைகொ
லண்டர்தமனைக்குகொலென்னினென்னரைக்
கண்டறிவேனெனக்காதல்பூட்டிய
வொண்டொடியினையனென்றுணர்கிலேனரோ. (௨௮)

சேயிருங்கமலமேற்செம்மல்செய்கையா
லாயவளென்னிலிவ்வழகுபெற்றிடா
ளேயதுதேறினனெல்லையில்லதோர்
மாயையேபெண்ணெனவந்தவாறெனபான். (௨௯)

புகன்றிவைபற்பலபொருவினான்முகன
மகன்றனதருந்தவவலியும்போதமு
முகன்றனன்புணர்ச்சிவேட்டமூழ்கிநைவதோர்
மகன்றிலின்பரிசெனவருத்தமெய்தினான். (௩௰)

உண்ணிகழ்ந்பொருட்டுயிர்கொல்வேட்டுவா
கண்ணியுட்பட்டதோர்கலையின்மாழ்குவான்
பெண்ணரசாயவிப்பேதைக்கென்கொலோ
வெண்ணமென்றிடருழந்திரங்கியேங்கினான். (௩௧)

அதுபொழுதவுணரையளிக்கவந்திடுந்
திதிநிகர்மடமகள்சிறந்தகண்களாற்
பொதுவியனோக்கொடுபுணர்ச்சிநோக்கினைக்
கதுமெனக்காட்டினள்முனிவன்காணுற. (௩௨)

கண்டனன்முனிவரன்கலங்கினான்பொதுக்
கொண்டதோர்நோக்கியல்குறித்துக்கூடுதெ
லெண்டருநோக்கினாலிவளையெய்துமா
றுண்டெனநினைந்தனனுவப்பினும்பரான். (௩௩)

பெருந்துயருதவுவெம்பிணியுந்தீர்ப்பதோர்
மருந்துமற்றுதலுமையன்மேதகு
மருந்தவமுனிவரனனையமாதுதன்
றிருந்தியநோக்கியறெளிந்துசெப்புவான். (௩௪)

கற்பனைமுதலியகடந்தகண்ணுதற்
சிற்பரன்யாவையுஞ்சிதையவீறுசெ
யற்புதமுமவனருளும்போன்றதாற்
பொற்புறுகின்றவிப்பூவைகாட்டமே. (௩௫)

மாயையுங்கொலையுமேமருவிவைகலு
மாயதோருலகினையளிக்குநீர்மையாற்
பாயிருந்திரைக்கடனடுவட்பள்ளிகொ
ணேயனைநிகர்த்ததித்தோகைநோக்கமே. (௩௬)

இயலிருண்மேனியாலிடியினார்ப்பினால்
வியனுயிர்முழுவதும்வெருவச்செய்துடன்
பயனுறுநீம்புனல்பரிவினீதரு
புயலையுநிகர்த்தனபூவைபார்வையே. (௩௭)

என்பனுபலபலவெண்ணியன்னவ
டன்படிவத் தாருத்தகைகமைகாணுறீஇ
யன்பினில்வியந் துநின்றழுங்குநெஞ்சொடு
நன்பெருநயப்பினனவிறன்மேயினன். (கஅ)

வேறு.

வானுறுபுயலின்றோற்றம்வரம்பில்சீர்க்கங்குல்வண்ண
மேனையகருமையெல்லாமிலக்கணத்தொருங்கேயீண்டி
மீனுறழ்தடங்கணாள்பான்மேவியவென்பதல்லா
ஞனமார்கூந்தற்கம்மாநாம்புகலுவமையாதோ. (கஅ)

கோட்டுடைக்குழவித்திங்கள்குனிசிலையிரண்டுமானின்
சூட்டுடை நுதற்கொவ்வாதுதொலைந்துபோய்த்தொல்லைவான
நாட்டிடைக்கரந்துந்தோன்றநணுகியுந்திரியுமென்னின்
மீட்டிதற்குரைக்கலாகுமுவமைகள்வேறுமுண்டோ. (சo)

அருவத்திற்றிகழுங்காமனுடலஞ்சிலையுநெற்றி
யுருவத்துக்குடைந்துவான்புக்கொதுங்கியமகவான்வில்லு
மருவத்தந்துரைத்துமென்னின்மற்றவையிரண்டுமாதின்
புருவத்தைப்போலாதம்மின்மீமிசைப்பொருந்துமன்றே. (சக)

வண்ணமாவடுக்கோனீலம்வாளயில்கயல்சேலென்றே
யெண்ணினவவற்றிலொன்றும்யாவதுமியல்புற்றன்றாற்
கண்ணிணைக்கிணையேதெனனிற்காமர்பாற்கடலுளெங்கோ
னுண்ணியவெழுநஞ்சென்னிலொருசிறிதொப்பதம்மா. (சஉ)

எள்ளென்றுமோத்தியென்றுமேர்கொள்சம்பகப்போதென்றுந்
தள்ளருங்குமிழதென்றுஞ்சாற்றினரவைகணுடிற்
றெள்ளிதுமன்றுவேறுசெப்பவோர்பொருளுமில்லை
யுள்ளதொன்றுரைககவேண்டுந்துண்டததுக்குவமைதேரின். (சங)

கெண்டையந்தடங்கட்பாவைகேழ்கிளரிதழ்க்கொப்புன்னிற்
றொண்டையங்கனியுண்டென்றுசொல்வனேலதுவுந்துபபா
லுண்டிடும்விருப்பினேருக்குலப்புறுவமிதாதல்கிக்
கொண்டிருந்திடினேயொபபாமில்லையேற்கூடாதன்றே. (சச)

முகையுறுதளவும்புள்ளின்முருந்தமுங்குருந்துமுத்து
மகையுறுமுடுவுஞ்சாற்றினணிமெயிறதற்கொவவாவா
னகையதுதெரிந்தோர்வெஃகனனலம்புரியுநீரா
ணிகர்பிறிதில்லைதிங்கணிலாவெனிலாகுமன்றே. (சரு)

மயிரெறிகருவிவள்ளைதோரணமணிப்பொன்னூசல்
பெயர்வனநிகர்க்குமென்றுபேசுதல்பேதைநீர்த்தாஞ்
செயிர்றவுலோகமாக்குந்திசைமுகக்கொல்லன்செய்த
வுயிரெறிகருவிபோலுமொண்குழைக்காதுமாதோ. (சசு)

கொங்குறுகூந்தலாடன்கோலவாண்முகத்துக்கொப்பாந்
திங்களென்றுரைக்கிற்றேயும்வளர்வுறுஞ்சிறப்பதன்றாற்
பஙகயமெனினுமுணடோர்பழுதுமற்றதற்குமென்னி
லங்கதற்கதுவேயல்லாலறையலாம்படிமற்றுண்டோ. (சஎ)

சரந்தெறுவிழியினுடன்களத்தினைதெழிலேச்சங்கம்
கரத்தனகழுகுமற்றேயன்ன துகண்டுகோர
வரந்தருபுலவர்சொற்றூர்மற்றவரதற்கோநாளு
மிரந்திடுதொழிலராகியிழுக்கமுற்றூர்களன்றே. (௪௮)

மாயவனதாஞ்சேர்த்திவரன்முறையிசைத்தபச்சை
வேயெனுமதுவும்யான்செய்மெய்த்தவமனையநீரா
யேபொற்றேள்கண்டஞ்சித்தோற்றதாலென்னிலன்னூன்
சேயவன்வணக்காதேந்துஞ்சிலைகொலோங்கர்ப்பதம்மா. (௪௯)

பூந்தளவனையமூரற்பொற்கொடிகரத்துக்கொவ்வா
காந்தளுநறியசெய்யகமலமாமலருமென்னின்
மாந்தளிர்பொருவதுண்டோவள்ளுகிர்கிள்ளைநாசி
யேய்ந்தளவற்றுக்காமரிலேச்சினையாயதன்றே. (௫௦)

பொருப்பெனவெழுந்துவல்லின்பொற்பெனத்திரண்டுதென்னந்
தருப்பயிலிளநீரென்னததண்ணெனுவமுதுட்கொண்டு
மருப்பெனக்கூர்த்துமாரன்மகுடததில்வனப்புமெய்தி
யிருப்பதோர்பொருளுண்டாமேலிணைமுலைக்குவமையாமே. (௫௧)

அந்திருவன்னூண்மேனியமைத்துவெம்முலைக்கண்செய்வான்
சுந்தரவள்ளநீலுண்டுகிலிகைவிதிகொள்போழ்திற்
சிந்தியதுள்ளியொன்றினொழுக்கங்கொல்சிறப்பின்மிக்க
வுந்தியின்மீதுபோயவுரோமததினொழுக்கமன்றே. (௫௨)

மாசடையாதநீலமணியுறழ்வண்ணமாலோன்
காசடையகலந்தாங்குங்கனங்குழைத்திருவும்போற்றுந்
தேசுடைமாதினுந்திசசீரினுக்கனையன்றுஞ்சும
பாசடைநோவதாமோபகரினும்பழியதனரே. (௫௩)

கண்டுழிமாயுமன்றேமின்னெனிற்ககனமாகக்
கொண்டிடினுருவின்றுகுஙகொடியெனிற்றுடியதென்னிற்
றிண்டிறனுகமென்னிற்சீரிதன்றணங்கினும்ப
னுண்டிலேயென்றுமானுமுண்மைக்கோருவமையுண்டோ. (௫௪)

மயனுடைப்பணியுமாலவட்டமும்வனப்புச்செய்த
வியனுடைதேருமச்சுற்றிரங்கியேயுயிர்க்குமென்றூற்
கயனுடைக்கண்ணாளல்குற்கொப்பவோகாமாவீடவ
வியனுறப்பென்பர்யாருமேலதுகாண்டுமன்றே. (௫௫)

கோழிலையரம்பையீனுங்குருமணித்தண்டைவேழத்
தாழிருந்தடக்கைதன்னைநிகரெனிற்றகுவவன்றூன்
மாழையுண்கருஙகண்மாதின்மகரிகைவயங்குபொற்பூண் *
சூழுறகவானேபோலுமவையெனிற்சொல்லலாமோ. (௫௬)

---

* மகரிகைவயஙகுபொற்பூண - ஒருகூறு இமபுரிவடிவாயிருக்குங் குறங்குசெறியென்னுமணி. “மகரிகைவயங்குபொற்பூண்” என்பதற்கு மகரிகைபோல விளங்குமாபரணம் எனப் பொருள்கொள்க. குறங்குசெறி - தொடையிலணியப்படுமாபரணம்.

அலவனுறெனுண்டையன்னுளணிகெழுமுழந்தாட்கொப்பாப்
புலவர்கள்புகலாநின்றவழக்கலாற்பொருந்திற்றன்றாற்
றிலகநன்மணியேபோல்வாடெய்வதவடிவுக்கிந்த
வுலகினுளிழிந்ததொன்றையுரைக்கினஃதுவமையாமோ. (ருஎ)

தமனியத்தியன்றபொற்பிற்றுவிலாவாவந்தானுஞ்
சிமையநேர்கொங்கைமாதின்றிகழ்கணைக்காலுந்தூக்கிற்
சமமிதுபொரு*ளிதென்றேதமியனேன்றுணிந்துசிந்தை
யமைவுறவறிதறேற்றேனையமுற்றிலேன்யானே. (ருஅ)

அரும்புறுகாலைக்கொங்கைக்கழிவுற்றுமுகமொவ்வாது
சுரும்புறமலர்ந்தபின்னுந்தொலைந்துகையினுக்குந்தோற்றுத
திரும்பவுமடிக்குழஞ்சிச்சிதைந்ததுகமலமென்றாற்
பெரும்பயமுற்றுநோற்றும்பிழைததுபோலுமன்றே. (ருகூ)

மேக்குயர்கூனலாமைவிரைசெறிகுவளைததோடு
தாக்குறுபந்துபிண்டித்தண்டளிர்சார்புகூறிற்
றாக்குறுதுலையினறட்டுதொகுத்தொருவடிவில்வேதா
வாக்குறின்மாதின்றாளுக்கதுநிகராகும்போலும். (சுo)

ஆவியினொய்யபஞ்சுமனிச்சமாமலருமன்னத்
தூவியுமிதிக்கிற்சேந்துதளங்குறுமடிகளென்றா
னாவியங்குழலின்மாதுநடந்திடஞாலமாங்கோர்
பூவதோவதுவன்றேற்பொன்னடிபொருந்துமோதான். (சுக)

கயலுறழ்கருங்கட்செவ்வாய்க்காரிகைதனதுசாயன
மயிலெனக்கூறினல்லானமற்றதற்குவமையில்லை
யியலுறுவடிவிற்கொப்பதேதுளதிவளேபோலச்
செயலுறத்தெழுதிற்றுண்டேற்சித்திரமஃதேபோலும். (சுஉ)

ஆனனநான்குசெய்தாடகாயிரமடங்கோகொண்ட
மானினிதன்னைவேதாவகுததிலன்கொலலோவனனை
றானமைத்துளனேயென்னிறறலைபலதாங்கியிந்தத
தூநிலாநகையினாளைதொடர்ந்துபின்றிரிவனன்றே. (சுங)

மையறுபுவியில்வந்தமாதிவளடியினுள்ள
துய்யதோர்குறிகள்வானிற்றொல்பெருந்திருவில்வைகுஞ்
செய்யவன்றனதுதேவிசிரத்தினுமிலலையென்றான
மெய்யுறுகுறிகளெல்லாமினைதெனவிளம்பற்பாற்றே. (சுச)

வேறு.

என்றுமுன்னியவவேந்திழைதன்முனஞ், சென்றுகாமர்திருவினுஞ்சீரியோய்
நன்றுநன்றுநினல்வரவேயெனா, நின்றுபின்னுநெறிப்படவோதுவான. (சுரு)

யாதுநின்குலம்யாதுநின்வாழ்பதி, யாதுநினபெயர்யாருனைத்தந்தவ
ரோதுவாயென்றுரைததனனுள்ளுறு, காதலான்மிக்குகாசிபனென்பவே. (சுசு)

வனிதைகூறுவண்மாதவநீயிது, வினவிநிறறல்விழுமிதன்றென்னிடைத்
தனியனாகியுஞ்சார்ந்தனைநோற்பவர்க், கினியவேகொலினையதோர்நீர்மையே. (சுஎ)

---

* பொருள - உபமேயம்.

எதிரேன்பையிகத்துணர்வில்லதோர், பேதைமார்தீப்பேசிவெற்சார்வது
நீதியேயன்றுகின்கடனுற்றிடப், போதிவென்னமுனிவன்புகலுவான். (கூஅ)

மங்கைகேட்டிவரம்புறுபற்பக, லங்கம்வெம்புலகமெலிவுற்றிடச்
சங்கையின்றித்தவம்பலசெய்திட், லிங்குவேண்டியதெய்துதற்கேயன்றே. (கூக)

பொன்னைவேண்டிக்கொலோபொன்னின்மாநகர், தன்னைவேண்டிக்கொலோ
சசியாம்பெயர், மின்னைவேண்டியேயல்லதுவேறுமற், றென்னைவேண்டியவ்விந்தி
ரனேற்றதே. (எ0)

ஐதின்மேனியலகுறயான்றவஞ், செய்ததிங்குனைச்சேருதற்கித்திற
நொய்தின்மேவினைநோற்றதற்குப்பய, னெய்தியுற்றதினித்தவம்வேண்டுமோ. (எக)

பேருமூரும்பிறவும்வினவினேற், கோரவொன்றுமுரைத்திலையாயினுஞ்
சேரவேபின்றெளிகுவனகாமநோ, யீருகின்றதிரங்குதிநீயென்றான். (எஉ)

மாயைகேட்டுவறிதுநகையளாய், நீயிவவாறுநெடுந்தவஞ்செய்தது, மாயிலென்
பொருட்டோவஃதனறரோ, தூயைவஞ்சஞ்சொலன்முறையோவென்றாள். (எங)

மற்றிவவண்ணமயில்புரைசாயலாள், சொற்றகாலையனையவள்சூழ்ச்சியை
முற்றுமோர்ந்துமுதிர்கலையாவையுங், கற்றுணர்ந்திடுகாசிபன்கூறுவான். (எச)

பொய்ம்மையாதும்புகல்கிலனுன்முகன், செம்மல்யானதுதேருதிபோலுமா
லிம்மையேபரமீந்திடுவோயிவண், மெய்ம்மையேயுரைததேனுளவேட்கையால். ()

பன்னெடுந்தவம்பற்பகலாற்றியான், முன்னரிநினைறதுமுத்திபெற்றுய்ந்திட
வன்னதேயெற்கருள்செயவந்தனை, யுனைமேவலன்றேவுயாமுத்தியே. (எசு)

ஈதலான்மற்றெனக்கொருபேறிலை, யாதலானுனையேயடைந்தேனெனக்
காதன்மாதுமக்காசிபற்கண்ணுறீஇ, யோதலாம்பரிசொன்னறையுணர்த்துவாள். (எஎ)

வேறு.

மங்கலமியைந்திடுவடாதுபுலமுள்ளேன
செங்கனகமேருவரைசோந்ததொருதெனபாற்
கங்கைநதியினகரைகலந்திடநினைநதே
னங்கணுறுகினறதொராருமபயனவிளைநதே. (எஅ)

வல்லையவணேகுறுவனமாதவவலதோய்
நில்லிவணெனப்பகரநீனிறமதாகுஞ்
செல்லுறழுமேனிதருசெம்மலருண்மைந்த
னொல்லையிதுகேண்மெனவுரைக்கலுறுகின்றான். (எகூ)

கங்கைநதியாதியகவின்கொணதியேழு
மங்கணுலகந்தனிலரனபதிகளயாவு
மஙகுறவமமேனியவன்வாழ்பதியுமற்று
மிங்குறவழைப்பனெரிமைப்பொழுதுதன்னில். (அ0)

பொன்னுலகும்விஞ்சையர்கள்போதுலகுமேனோ
மன்னுலகுமாதிரவர்வாழுலகுமங்கட்
டுன்னியதொர்தேவரொடுசூழ்திருவினோடு
மின்னபொழுதேவிரைவினீண்டுதரவல்லேன். (அக)

மூவகைத்தேவரையுமுச்சகமதுள்ளோர்
யாவரையுநீதெரியவெண்ணுகினுமிங்ஙன்
மேவரவியற்றிடுவன்வெஃகல்புரிவாயேற்
காவலுறுபேரமிர்தமுங்கடிதினீவேன். (அஉ)

எப்பொருளைவேண்டினுமிமைப்பினுனவாக
வப்பொருளியாவையுமளிப்பனஃதல்லான்
மெய்ப்புதல்வர்வெஃகினும்விதிப்பனவாதம்மை
யொப்பிலையிவர்க்கெனவுமும்பரிடையுய்ப்பேன். (அங)

அந்தமிகுமேனகையரம்பைமுதலானோர்
வந்தனடியேவல்செயவல்லைபுரிகிற்பேன்
சிந்தைநனிமால்கொடுதியருகுமெனதாவி
யுய்ந்திடநினைந்தருடியொல்லைதனியென்றான். (அச)

வே று.

முனியிதுபுகறலோடுமுற்றிழைமுறுவலெய்தித
தனியினளென்றுகொல்லோசாற்றினையினையநீர்மை
யினியதுதவிர்திமேலோர்க்கிசையுமோயானுமுன்ன
நினைவுழிச்செல்வனேற்றுநீயிவணிருத்தியென்றே. (அரு)

கங்கையின்றிசையைமுன்னிககடிதவட்செல்வாளென்ன
வங்கவள்போதலோடுமருந்தவனொருடாங்குசெல்ல
மங்கையுமருவமெய்திமாயையிற்கரந்துநிற்ப
வெங்கணுநோக்கிக்காணானிடருழந்திரங்கினைவான். (அசு)

மா யை ய ப ப ட ல மு ற் றி ற் று.

---

## காசிபன்புலம்புறுபடலம்.



தேனீர்மையெனப்புகல்வாள்சிறிதுந், தானீரமிலாடனிமாயவளே
மானீருமதாம்வயினுற்றனளோ, வேனீர்மொழியாதிரிகின்றதுவே. (க)

சிலைவாணுதலாடிறன்மாயையெனும், வலைவீசியெனுருயிர்வவ்வினளாற்
கலையீரிவணீரதுகண்டனிரோ, நிலையீர்வெருளாநெடிதோடுதிரால். (உ)

கடிதேர்களிறேகழிகாதலையாய்ப், பிடிதேர்பரிசாற்பெயாவாய்தமியே
னெடிதேதளராநெறிநேடினையக், கொடியாடனையுங்கொணராய்கொணராய். (ங)

அருளாலுனையேயளியென்றனராற், பெரியாரவர்சொற்பிழையாகுவதோ
தரியாவரியேதமியேனுயிரைத், தெரிவானினைவோதிரிகின்றனையே. (ச)

மேவிப்பிரிவாள்விழிபோலவுவா, யாவிக்குறவோவலைமன்மதனப்
பாவிக்குமினிப்படையாய்வருவாய், வாவிக்குவளாயெனைவாட்டுதியோ. (ரு)

செந்தாமரைமேற்றிருவாமெனவே, வந்தாடணியாமயல்செய்தகல்வா
ளந்தோவினவாவவளைக்கொணர்வான், சந்தாகிலையென்சந்தேயுரையாய். (சு)

பொன்னிற்பொலிவுற்றிடுபூங்கமலக், தன்னிற்றுணையோடுதழீஇத்தணவா
வன்னப்பெடைகாளறனோபுகலீ, ரென்னைத்தனிவைத்தவளேகியதே. (எ)

தணியாவகைமாறமியேற்கருளித், துணியாவகல்வாள்படர்தொன்னெறியைக்
குணியாவுரைசெய்குதியென்றிடினுங், கணியாயிதுவோகணிதன்னியல்பே. (அ)

படைவேள்கணையேபரிதிக்குறவே, மடவார்முகமேமதியின்பகையே
விடமேபுரையும்விழிமெல்லியனின், னிடமேவருவாளொளியாதிசையாய். (கூ)

நின்றீர்மிகவுங்கொடியீர்பெரியீ, ரின்றீரமிலாதெனைநீங்கினண்முன்
சென்றீரவள்போஞ்செயல்காணுதிர்செய், குன்றீர்மொழியீர்குறைசெய்துளனோ.

மயிலேரியலாளொருமாயவளே, யியலேதறியேனிவணின்றனளோ
பயிலேசிலநீபகர்வாயதனாற், குயிலேயெனதாருயிர்கொள்ளுதியோ. (கக)

நின்பால்வரவேநினைவாய்மொழிவா, ளென்பாலிலையிவ்வழியேகினளான்
மென்பாலெனமேவியமாருதமே, தென்பால்வருவாய்செயல்கூறுதிநீ. (கஉ)

ஆரத்தடமேயருணீரினையுள், வீரத்தினையென்றெவரும்புகல்வார்
சாரிற்சுடுவாய்தளரேலெனவே, சோராவுற்றிடுமெனறுயர்தீர்க்கிலையே. (கங)

களிசோமயிலேகவிராகியவாய்க், கிளியேகுயிலேகிளைதானலவோ
தளராவகைநீர்தகவேமொழியா, வளியேனுயிருக்கரணாகுதிரால். (கச)

அறவேதுயர்செய்தனுகாதிகலித், துறவேதுணிவாடொடர்புந்தொடர்போ
வுறவேயினிநீருவள்போநெறியைப், புறவேதமியேன்பெறவேபுகல்வீர். (கரு)

எனவேபலவுமியல்சோமுனிவன், மனமால்கொடுசொற்றிடமற்றதனை
வினவாமகிழாவியனமெய்ம்மறையா, வனமேயனையாளவணுற்றிடலும். (கசு)

வேறு.

நோக்குறுமுனிவன்றன்பானொய்தெனமாயையெய்தித்
தீர்க்கலாமையல்பூட்டிச்செய்தவமழிததாளந்தோ
பார்க்கிலனிதனையென்னாப்பரிவுசெய்தகன்றான்போலக்
கார்க்கடல்வரைப்பினேகிக்கதிரவன்கரந்தானன்றே. (கஎ)

தந்தைகாசிபனென்றோதுந்தவமுனியவன்பாற்சார
வந்துளாள்யாயேயன்றோமற்றிவர்தலைப்பெய்கின்ற
முந்துறுபுணர்ச்சிகாண்டன்முறைகொலோபுதல்வற்கென்னாச்
சிந்தைசெய்தகன்றான்போன்றுதினகரக்கடவுள்சென்றான். (கஅ)

அந்தமினிருதரென்னுமளவைதீர்பானுட்கங்குல்
வந்திடுமின்னேயென்னாவல்லையின்மதித்துவானத்
திந்திரனணைபோற்றுமிலங்கெழினேமிப்புத்தேள்
சிந்துவிற்கரததல்போன்றுசெங்கதிர்ச்செல்வன்போனான். (ககூ)

வேலையினிரவிசெல்லவிண்ணவர்யாருங்கொண்ட
வாலியதிருவுஞ்சீரும்வன்மையுமகன்மாயை
பாலுறுமவுணர்தானைப்பல்குழூப்பரவிற்றென்ன
மாலையுமிருளின்சூழ்வும்வல்லைவந்திறுத்தவன்றே. (உ0)

மாகமேனிமிர்ந்தசெக்கர்மாலையம்பொழுதால்கூர்ந்
திகழுவிரக்குநீரார்க்கிம்மி * யின்றுணையதேனு
மோகையால்வழங்காநீதியொன்னலாரொருவன்செல்வம்
போகுமாறென்னவாளாபொள்ளெனப்போயிற்றுமால். (உ௧)

இரும்பிறையுருவினெஃகார்கூர்ங்குயத்தினுமீர்க்கல்லா
வரம்பறுமிருளின்கற்றைகணங்களுமருளுநீராற்
பரம்பியதியாண்டுமோகிப்பாரெனப்பட்டமாது
கரும்படாமொன்றுமேற்கொள்காட்சியைப்போன்றதன்றே. (உ௨)

வண்டுழாய்மோலிமைந்தன்மாலிருட்கங்குல்வேழத்
தெண்டருவதனம்பட்டவிரும்புகார்ப்புள்ளியென்ன
வண்டர்தந்தருக்கள்சிந்துமணிமலரென்னவானறோய்
கொண்டலிற்படுமுததென்னததாரகைகுலவிற்றன்றே. (உ௩)

துண்ணெனவுலகமுற்றுஞ்சூழ்ந்தபேரிருளாநஞ்சைத்
தெண்ணிலவாகியுள்ளசெங்கையால்வாரிநுங்கி
விண்ணவர்புகழநீலவியனிறந்தன்பாற்காட்டுங்
கண்ணுதல்போன்றுமுந்நீ † த்தோன்றினன்கதிர்வெண்டிங்கள். (உ௪)

அழுந்துறுபாலின்வேலையமரர்கள்கடைந்தகாலைச்
செழுந்துளிமணிகளோடுந்தெறிதெனவுடுக்கடோன்றக்
கழுந்துறுமவுணரென்னுங்காரிருடொலையவங்க
ணெழுந்ததோரமுதம்போன்றுமிலங்கினனிந்துவென்பான். (உ௫)

இரவெனும்வல்லோன்ஞாலமென்பதோருலையில்வேலைக்
கரியுறுவடவைத்தீயிற்களங்கொடுவெண்பொன்சோத்தி
விரைவொடுசெம்மைசெய்துமீட்டுமோர்மருந்தாற்றொல்லை
யுருவுசெய்தென்னச்செங்கேழொளிமதிவெளியனானன். (உ௬)

அண்டருங்ககனமென்னுமகலிருந்தடதிற்பூத்த
விண்டதோர்குவளையாம்பல்போலுமான்மீன்கள்,வெள்ளைப்
புண்டரீகத்தைப்போலும்புதுமதியதன்கட்டேனார்
வண்டினமொப்பதன்றேமாசுதோய்களங்கமாதோ. (உ௭)

அலைதருநேமியென்னுமான்றதோர்தடத்தின்பாலா
நிலவெனும்வலையையோச்சிநிழனமதிப்பரதனீததுப்
பலநிறங்கொண்டமீன்கள்பன்முறைகவர்ந்துவான்மேற்
புலருறவிரித்ததேபோற்பொலிந்தனவுடுவின்பொம்மல். (உ௮)

கழிதருமுவரிநீத்தகைகயகப்படுத்துமாந்தி
யெழிலிகள்வானமீப்போயிருநிலத்துதவல்காணூஉப்
பழிதவிர்மதியப்புத்தேள்பாற்கடல்பருகியாண்டும
பொழிதருமமிர்தமென்னப்புதுநிலாப்பூத்ததன்றே. (உ௯)

மலர்ந்திடுங்கடவுட்டிங்கள்வாணிலாக்கற்றையெங்குங்
கலந்தனவுலகில்யாருங்களித்தனர்குமுதமாதி
யலர்ந்தனதளிர்த்தசோலையம்புயப்போதுசெவ்வி
புலர்ந்தனவொடுங்குகின்றபுகைந்தனபிரிந்தோர்புந்தி. (௩௰)

---

* இம்மி - மத்தங்காய்ப்புல்லரிசி.

† முந்நீர் - படைத்தல், காத்தல், அழித்தலாகிய மூன்றுநீர்மையுடைமை பற்றி வந்தபெயர்.

அல்லவைபுரியாரேனுமதியினிற்பெரியாரேனு
மெல்லவர்தமக்குக்கண்பாயினியவேபுரிதற்பாற்றே
பல்லுயிர்த்தொகைக்குமின்பம்பயக்கிமெதிகண்டன்றே
புல்லியகமலமெல்லாம்பொலிவழிந்திட்டவன்றே. (௩௧)

திங்களின்மலர்ந்தசெவ்வித்தேன்முரல்குமுதமெங்கோன்
பங்கமுற்றார்கண்மேவான்பதுமமேனொடுங்கிற்றென்னத்
தங்களிலுரைத்தல்போலாஞ்சசிக்கதுவுண்மையெம்பா
லிங்கிலையென்பபோன்றவிசையளிபொதிந்தகஞ்சம். (௩௨)

கங்குல்வந்திறுத்தகாலைக்கடிமனைக்கதவம்பூட்டிச்
செங்கண்மாறன்னைப்புல்லித்திருமகளிருந்தாளென்னக்
கொங்கவிழ்கின்றசெங்கேழ்க்கோகனதங்களெல்லாம்
பொங்கிசைமணிவண்டோடுமெபொதிந்தனபொய்கையெங்கும். (௩௩)

வேறு.

ஆனதோர்காலையிலமரர்தம்மையுந்
தானவர்தம்மையுந்தந்தகாசிபன்
வானகமெழுதருமதியின்றெண்ணிலா
மேனியதடைதலும்வெதும்பினனரோ. (௩௪)

குலைந்தனன்றன்னுளங்குறைந்தவன்மைய
னலந்தனனுயிர்த்தனனறிவுசோர்ந்தனன்
புலர்ந்தனனொடுங்கினன்புலம்பியங்கண்வா
னிலந்தனிலெழுதருநிலவைநோக்கினன். (௩௫)

காலையிலெழுந்தசெங்கதிரினாயகன்
மாலையம்பொழுதினின்மறைந்துகீழ்த்திசை
வேலையில்விரைவுடன்மீண்டும்வந்துளான்
போலுமந்தோவிதுபுதுமையோவென்பான். (௩௬)

ஞாயிறுமன்றெனினடுவணுகியே
பாயிரும்புணரியுட்பயின்றுதோன்றலா
லேயெனவுலகடவெண்ணியாண்டுறுந்
தீயெனுங்கடவுளேதிங்களன்றென்பான். (௩௭)

இந்துவென்றுலகெலாமிசைப்பகின்றதோர்
செந்தழற்கடவுளித்திசையிற்செல்வுழி
வந்ததோர்சோதிகொல்வானமெங்கணு
மந்தியஞ்செக்கரென்றடைந்தவாறென்பான். (௩௮)

காண்டகுமதியெனக்கழறுஞ்செந்தழன்
மூண்டிடுபுகைகொலோமுன்னம்வானமு
மீண்டுறுதரணியுந்திசையுமெங்குமாய்
நீண்டதோரிருளெனநிமிர்ந்தவாறென்பான். (௩௯)

தெண்டிரைப்பிறந்திடுந்திங்கட்செந்தழல்
கொண்டதுவாலிதாங்கோலங்காரிடைக்
கண்டனனித்திறங்களையிலாவிக
ளுண்டதிற்பெற்றதிவ்வுருவமேயென்பான். (௪௰)

ஊனமில்செக்கராயுதித்துப்பின்னரே
வானிறனுகியமதியத்தீத்தரத்
தாளிறைபுலிங்கமேயலதுதாரகை
மீனெனப்படுவதுவேறுண்டோவென்பான். (சக)

மால்கடலதனிடைவந்தபான்மையா
லாலமிதாகுமாலமரர்க்கன்றெழு
நீலமெய்யுருவினைநீத்துத்திங்களின்
கோலமொடின்றிவட்குறுகிற்றேவென்பான். (சஉ)

இங்கிவையாவுமன்றேர்கொள்வேலையில்
வெங்கனன்முழுவதும்விடமுமாங்கெழீஇ
மங்குலிற்சிதறிடவானிற்புக்கனன்
றிங்களேயாமிதுதிண்ணமென்கின்றான். (சங)

இனையனமருட்கையாலிசைத்தகாசிப
முனிவரனென்பவனமுன்னைமாயையை
நினைபவனாகியேநெடிதுகாதலா
லனையவடனைவிளித்தரற்றன்மேயினான். (சச)

வேறு.

கொங்குண்கோதைத்தாழ்குழனல்லீர்கொடியேன்மு
னெங்குமெங்குங்காணுறுகின்றீரெழின்மின்னின்
பொங்குஞ்சோதிபோலெதிர்புல்லும்படிநில்லீர்
மங்கும்போதோசேருதிரோநெஞ்சம்வலியீரே. (சரு)

முன்னஞ்செய்தீகாதலைநோன்பைமுதலோடும்
பின்னஞ்செய்தீர்மாரனையேவிப்பிழைசெய்தீர்
சின்னஞ்செய்தீநல்லுணாவெல்லாஞ்சிறியேனுக்
கின்னஞ்செய்யும்பெற்றியுமுண்டேவிசையீரே. (சசு)

வாகாய்நின்றகுன்றமும்யாவும்வருவித்தீ
ரேகாநின்றீரிவ்விடைதனிலெனைநீங்கிப்
போகாநின்றீர்வல்லையின்மீண்டும்புவியெங்கு
மாகாநின்றீநுஞ்செயல்யாரேயறிகிற்பார். (சஎ)

பற்றேநும்பாலாயினன்முன்னம்பயில்செய்கை
யற்றேன்வேளாலாற்றவுநொந்தேனஃதாயு
முற்றேனல்லேனும்மொடுமின்னுமுழல்கின்றேன்
பெற்றேன்வாளாமாய்ந்தனனென்னும்பிழையொன்றே. (சஅ)

நேயங்கொண்டீராமெனவந்தீர்நெறியில்லா
மாயங்கொண்டீர்வன்றிறல்கொண்டீர்மயல்செய்யுங்
காயங்கொண்டீராருயிர்நிற்கத்தருதீரேற்
றூயங்கொண்டீர்கூற்றெறுபேர்நுந்தனிவந்தீர். (சகூ)

வேண்டேன்வேறோர்மாதரைநும்பால்வியன்மோகம்
பூண்டேனும்மைமாயவரென்னும்பொருள்கண்டே
னீண்டேசென்றீர்போற்கரவுற்றீரெய்தீரேன்
மாண்டேனின்னேயாருயிர்நிற்பான்வருவீரே. (ருO)

ஒன்றேயாகுமாயமதானீருலகெல்லாம்
வென்றேசெல்வீரென்னுயிர்கொள்வான்விழைவீரே
னன்றேநன்றேகல்குவன்யானேகனிநண்பாற்
சென்றேயோர்கான்மாமயநீரச்சேர்வீரே. (௯௧)

என்றுவென்னுவித்தகைபன்னியிடராழித்
துன்னுமாழ்கிச்சோர்தருமெல்லைத்துகடீரு
மின்னுகின்றமாயவளன்னன்விழிகாண
முன்னுய்நின்றுளெவ்வினைகட்குமுதலானுள். (௯௨)

காசிபன்புலம்புறுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩௩௮.

# அசுரர்தோற்றுபடலம்.

கந்தார்மொய்ம்பிற்காசிபனென்போன்கடிதங்கண்
வந்தான்செய்கைகாணுதலோடுமகிழ்வெய்தி
யந்தாவுய்ந்தேன்யானெனமின்கண்டலர்கின்ற
கொந்தார்கண்டல்போனகையோடுங்குலவுற்றுன். (௧)

ஆடாகின்றான்குப்புறலுற்றுனவடன்மேற்
பாடாகின்றான்யாக்கைபொடிப்பிற்படர்போர்வை
மூடாகின்றானன்னதொர்மாயைமுன்சென்றான்
வீடாகின்றதன்னுயிர்காக்கும்விதிகொண்டான். (௨)

வேறு.

என்னேசெயவேண்டிற்றவையெல்லாமிசைவாலே
முன்னேபுரிகிற்பேனிவண்முனிகின்றதையொருவி
நன்னேயமொடென்னையாளுதிநனிவல்லையிலென்னுப்
பொன்னேரடிமிசைதாழ்தலுமவளின்னதுபுகல்வாள். (௩)

வெருவுற்றிடலிவணின்றவென்வியன்மெய்யினுக்கியையுந்
திருமிக்குறுதகவாகியதிறன்மேனியுமேற்கொ
ளுருவொப்பதொர்வடிவும்முடனுடனெய்திடுவாயேன்
மருவுற்றிடுகின்றேனெனமயில்சொற்றனளன்றே. (௪)

ஏமுற்றிடுமுனிவர்க்கிறையிதுகேட்டலுமுன்னங்
காமக்கடல்படிகின்றவன்களிசேர்தருமுவகை
காமக்கடலிடையாழ்ந்தனனன்றாலிஃதென்றான்
சேமத்திருநிதிபெற்றிடுமிரவோனெனத்திகழ்வான். (௫)

அற்றேமொழிதருதன்மையிலார்வத்தொடுதமியேன்
குற்றேவல்செய்கிற்பேனினங்கொடியேரிடையென்னுச்
சொற்றேதவமுயல்வண்மையிற்றுகடீர்தருமணிலப்
பொற்றேரவற்கிலதென்பதொர்புத்தேளுருக்கொண்டான. (௬)

அன்றயதொருருவெய்தியவறிவன்றனைவியவா
நன்றாலுனதியல்பாமெனநகையாக்கரம்பற்றாக்
குன்றாகியமுலையாளலற்கொடுபோந்தனளங்கட்
பொன்றாழ்கிரியெனவோங்குமொர்பொலன்மண்டபம்புகுந்தாள். (எ)

வேறு.

கற்பனையின்றியேகடிதின்முன்னுறு, மற்புதமண்டபத்தாணையால்வரும்
பொற்புறுசேக்கையிற்பொருந்தினாரரோ, வெற்படுகங்குலின்முதலியாமத்தில். ()

சூருறுவெம்பசிதொலைப்பவைகலு, மாரணுரெய்தினோனரிதின்வந்திடு
பேரமுதுண்குறுபெற்றிபோலவக், காரிகைதனைமுனிகடிதிற்புல்லினான். (கூ)

புல்லலுமெதிர்தழீஇப்புகரில்காசிபன்,றொல்லையிலுணர்வொடுதொலைவில்செய்தவம்,வல்லையில்வாஙகுறுமரபிலன்னவன, மெல்லிதழாயிர்திணைமிசைதன்மேயினாள்.()

பின்னுறமாயவள்பெரிதுஙகாமுறு, மனனவன்புணர்தரவறிவதொனறையுந், தொன்னெறியளித்தெனத்தொண்டைச்சேயிதழ், முன்னுறுமமிர்தினைமுனிக்குநல்கினாள். (கக)

உட்டெளிவின்றியேயுலப்பினறோடிய, மட்டறுகாமமாய்வாரியுற்றுளா, னட்டொளிர்பொன்னனாளல்குலாஞ்சுழிப், பட்டனனின்பமாயபரவைநண்ணுவான். (கஉ)

தோமறுமுனிவரன்சுரதத்தாற்றினாற், காமருமதனநூல்கருததிற்சிந்தியாத்
தேமொழிமயிலொடுசெறிந்துபோகமார், பூமியிறோரெனப்புணர்தன்மேயினான்.()

செம்மயிலன்னவித்தெரிவைதன்னிடை, யெம்மையுமில்லதோரின்பமிங்ஙன, மெய்ம்மையினல்கியவிதியினார்க்கியா, னம்மசெய்கின்றதோரளவுண்டோவென்றான்.

ஆறறிமுனிவரனாங்கதூனமுறை, வீறெ * டுபுணர்தலும்வெய்யமாயவள்
கீறினணகதினாறகீண்டபாறொறு, வூறியகாமநீரொழூகிறறெனபவே. (க௫)

உணர்வுடைமுனிவரனுயாநதவிஞ்சையா, மணமுறையிதுவெனமாயைதனனொடு, புணர்தொழில்புரிந்தனன்போகமுற்றினன, றுணையறுமின்பெனுங்கடலிறதோய் † ந்துளான். (க௬)

வேறு.

அந்தவேலையினமுகுந்தனுமமபுயத்தவனு
மிந்திராதியாயாவருமுனிவரரெவருந
தந்தமுள்ளமேனடுகெகுறமாயவடனபால
வநதுதோன்றினன்சூரபன்மாவெனுமவலியோன. (கஎ)

துயக்கமில்லதோர்சூரன்வந்திடுதலுந்தொல்லை
முயக்கவேலையிலிருவாபான்முறைமுறையிழிநத
வியர்ப்பில்வந்தனர்முப்பதினாயிரவெள்ளம
வயக்கடுந்திறற்றானவாயாரினும்வலியோர். (கஅ)

அன்னார்தம்மையுமுதலவன்றன்னையுமங்க
ணின்மினீரெனநிறுவியேயாயிடைநீங்கி
மின்னுநூலணிமுனியொடுமர்யவள்வேறோர்
பொன்னின்மாமணிமண்டபமதனிடைப்புகுந்தாள். (க௯)

* வீறு - மதனநூலிற்சொல்லப்பட்டவேகம்.
† இன்பெனுங்கடலிற்றோய்தல் - புணர்ச்சிமுடிவிலவசமாய் முலையிடைத்துயிறல்.

மானைநேர்பவளாயிடைத்தொல்லுருமாற்றி
மேனகுரரிப்பிணவுருக்கொள்ளலும்விரைவிற்
றானுமோர்திறன்மடங்கலேறுமெனச்சமைந்தான்
மோனமாய்முனமருந்தவமியற்றியமுதல்வன். (௨௦)

மங்கையோடவன்மடங்கலாய்மகிழ்வுடன்புணரக்
கங்குல்வாயிரண்டாகியயாமமேற்கடிதே
யங்கையோரிரண்டாயிரமாயிரமுகமாய்ச்
சிங்கமாமுகன்றோன்றினன்றிடுக்கிடத்திசைகள். (௨௧)

இத்திறத்திவரிருவரும்புணர்வுழியாக்கை
மெத்திவீழ்தரும்வியர்ப்பினில்விறலரிமுகராய்ப்
பத்துநால்வகையாயிரவெள்ளமாம்படைஞர்
கொத்தினோடெவர்துதித்தனர்கூற்றுயிர்குடிப்பார். (௨௨)

மற்றுமததொகையோரையுமாமகன்றனையு
நிற்றிரீண்டெனமாயவள்வீற்றொருநிலயந்
தெற்றெனப்புகுந்தோர்பிடியுருக்கொடுசேரக்
கொற்றமால்களிற்றுருவினைமுனிவனுங்கொண்டான். (௨௩)

பேருழும்மதமால்களிற்றுருக்கொடுபிடிமேற்
சேர்ந்தின்றுழிமூன்றெனச்செல்லும்யாமத்தி
லீரிரண்டுவாளெயிற்றுடன்யானைமாமுகத்துத்
தாரகாசுரன்றோன்றினனவுணர்கடழைப்ப. (௨௪)

ஏலுமங்கவர்மெய்ப்படுவியர்ப்பினுமிபத்தின்
கோலமானவர்தோன்றினரவர்குழுக்குணிக்கி
னூறுபத்தின்மேலாயிரவெள்ளமாநவின்றார்
மூலநாடியேயிப்பரிசுணர்தகியமுனிவர். (௨௫)

ஆண்டுதாரகன்றன்னையுமவுணர்கடமையு
மீண்டுநிற்றிரென்றோர்மணிமண்டபத்திறுத்து
மாண்டயாமமேற்றகர்ப்பிணவுருக்கொளமாயை
பூண்டவன்பினன்செச்சையினுருக்கொடுபுணர்ந்தான். (௨௬)

புணர்ந்தகாலையிலசமுகிதோன்றினள்புவியோர்க்
கணங்குசெய்தகாமுகவராயங்கவாவியாப்பிற்
கணங்கொண்முப்பதினாயிரவெள்ளமாங்கணிதத்
திணங்குதானவருதித்தனரிமையவர்கலங்க. (௨௭)

மீளமற்றவர்தம்மையுநிறுவிவேறுள்ள
சூளிகைப்பெருமண்டபந்தொறுந்தொறுமேகி
யாளிவல்லியம்புரவிமானேரியெண்கேனங்
கூளி * யாதியாம்விலங்கினதுருவெலாங்கொண்டார்: (௨௮)

இறுதியில்லதோர்விலங்கினதுருவுகொண்டிரவின்
புறமதாகியபுலரிசோலைகளைப்பொழுதின்
முறையின்மாயையுமுனிவனுமாகியேமுயங்கி
யறுபதாயிரவெள்ளமாமவுணரையளித்தார். (௨௯)

* கூளி - இடம்.

மிருதிகொண்டிடுமிரண்டுநூறுயிரவெள்ளந்
தருவர்தம்மையுஞ்சூரனேமுதலினோர்தமையும்
புகலுமோரிராப்பொழுதினிலளித்ததற்புதமோ
வகிலமும்வலமாயவட்கிச்செயலரிதோ. (ந௦)

ஆங்கவெல்லையினண்டமாயிரத்தெட்டினுள்ளுந்
தீங்குகொண்டிடுங்குறிகளுள்ளனவெலாஞ்செறிந்து
நீங்கலின்றியேநிகழ்வனநீமைகணடெவரு
மேங்குகின்றனர்விளைவதென்றேவெனவிரங்கி. (நக)

அல்லெனும்பொழுதிறததலுமாயவளரிவைத்
தொல்லைநல்லுருக்கோடலுமுனியுமததுணையே
வல்லைதன்னுருமுன்னையிற்கொண்டனன்மற்றய
வெல்லைதன்னிடையுதயவாயணுகினனிரவி (ந௨)

நிட்டைக்கேற்றிடுமுனிவனைமாயவணிசியில்
விட்டுப்போந்திலளற்புதமென்விளைந்ததுவோ
கிட்டிக்காண்பனெனறுதயமாநகிரிப்புறததணுகி
யெட்டிப்பார்ததனனென்னவேயுதித்தனனிரவி. (நந)

வேறு

எல்லைவந்திடுதலுமீன்றமாயவள், செல்லுறுமப்புவிசெறிந்துசேணினுஞ்,சொல்லிய
திசையினுந்துவன்றியார்ததிடு, மொல்லெனுஞ்சனததினையுவந்துநோக்கினாள். ()

விண்டுறுதானவர்வெள்ளம்யாவையுங, கணடனனெந்தைதனகருமிச்செயல்
கொண்டிலமாயையிற்கூடிற்றீதென, வண்டருமற்புதமடைகுற்றான்முனி. (நரு)

பற்பகலருந்தவம்பண்ணின்றதூயனும், பொற்புறுமாலையும்புதல்வர்தந்தொகை
யற்புதமோடுகண்டன்பினீரராய், நிற்புழித்தெரிநதனனேரில்சூரனே. (நசா)

இருமுதுகுரவருமீண்டுற்றாரவர், திருவடிவணங்கியாஞ்செயதிறத்தினை
மரபொடுவினவுதுமவமமினீரெனு, வரிமுகன்றாரகனறியக்கூறினான. (நஎ)

அறைகழலிளையவரதனைததோவுறீஇ, யுறுதியிதாமெனவுரைததுப்பின்வரத்
துறுமல்கொண்டிருநததன்றொல்பதாதியை, நிறுவினனவவிடைநினறுநீங்கினான்.

அசுரரேநாற்றுபடலமுற்றிறறு.

ஆ திருவிருததம - களசா.

# காசிபனுபதேசப்படலம்.

நீங்கியசூர்முதனெறியினேகியே, யாங்கவரடிதொழுதருள்செய்மேலையீர், யாங்கள
செய்கின்றதென்னிசைமினீரென, வோங்கியகாசிபனுரைததன்மேயினான். (க)

உறுதியதொன்றினையுணர்த்துகின்றன, னறைகழன்மைந்தர்காளரியமாதவ, நெறி
தனின்மூவிருநிற்றிரன்னதன், முறைதனைவாய்மையானமொழிவன்கேண்மினோ.

சான்றவராய்த்திடத்தக்கவாம்பொருண், மூன்றுளமறையெலாமொழியநின்றன
வான்றதோர்தொல்பதியாருயிர்த்தொகை,வான்றிகழ்தளையெனவகுப்பரன்னவே.

அளித்திடல்காத்திடலடுதன்மெய்யுணர், வொளித்திடல்பேரருளுதவலேயெனக்
கிளத்திடுசெயல்புரிகின்றநீலமாா, களததினன்பதியதுசழறுயவேதமே. (ரு)

பற்றிலவில்லதோர்பரமனீர்மையை, யிற்றெனவுரைப்பரிதேவர்க்குமென்பராற்
சொற்றிடும்வேதமூர்த்துணிலாவவன், பெற்றியையினைத்தெனப்பேசவல்லமோ. ()

மூவகையெனுந்தளைசூழ்கியுற்றிடு, மாவிகளுலப்பிலவநாதியுள்ளன
தீவினைநல்வினைத்திறத்தின்வன்மையா, லோவறமுறைமுறையுதித்துமாயுமே. (௬)

பாரிடையுதித்திடும்பாரைச்சூழ்தரு, நீரிடையுதித்திடும்நெருப்பில்வாயுவிற்
சீருடைவிசும்பிடைச்சேருமன்னவைக், கோரிடைநிலையெனவுரைக்கற்பாலதோ.

மக்களாம்விலங்குமாமாசில்வானிடைப், புக்குலாம்பறவையாம்புல்லுமாமதின்
மிக்கதாவரமுமாம்விலங்கருணுமாங், திக்கெலாமிறைபுரிதேவும்யாவுமாம். (௮)

பிறந்திடுமுன்செலும்பிறந்தபின்னாமெய், துறந்திடுஞ்சிலபகலிருந்துதுஞ்சுமாற்
சிறந்திடுகோளையிற்றேயுமூப்பிணி, லிறந்திடுமதனபரிசியமபலாகுமோ. (௯)

சுற்றுறுகதிரெழுதுகளினும்பல, பெற்றுள்வென்பதும்பேதைநீரதாற்
கொற்றமதுடையதோராகூற்றங்கைக்கொள,விறறவுமபிறந்தவுமெண்ணற்பாலவோ

கலைபடுமுணர்ச்சியுநகற்புமவீரமு, மலைபடுவெறுக்கையும்வலியுமற்றது
மலைபடுபுற்புதமாகுமன்னவை, நிலைபடுபொருளெனநினைக்கலாகுமோ. (௧௧)

தருமமென்றொருபொருளுளதுதாவிலா, விருமையினின்பமுமெளிதினுக்குமா, லருமையில்வரும்பொருளாகுமன்னது, மொருமையினோக்கலாலுணர்தற்கொண்ணுமோ. (௧௨)

தருமமேபோற்றிடினனபுசாரநிடு, மருளெனுங்குழவியுமணையுமாங்கவை
வருவழிதவமெனுமாட்சியெய்துமேற், றெருளுறுமவவுயிர்சிவனைச்சேருமால். ()

சேர்ந்துழிப்பிறவியுந்தீருந்தொன்மையாய்ச், சார்ந்திடுமூவகைத்தளையுநீங்கிடும்
பேர்ந்திடலரியதோர்பேரினபந்தனை, யாரநிடுமதன்பரிசறைதற்கேயுமோ. (௧௪)

ஆற்றலையுளதுமாதவமதன்றியே, வீறறுமொனறுளதெனவிளம்பலாகுமோ
சாற்றருஞ்சிவகதிதனையுநலகுமாற, போற்றிடினனயதேபோற்றல்வேண்டுமால்.

அத்தவம்பிறவியையகற்றிமேதகு, முதலியைநல்கியேமுதன்மையாக்குறு
மித்துணையன்றியேயிமமையின்பமு, முய்ததிடுமுளந்தனிலுனனுந்தன்மையே. ()

ஆதலிற்பற்பகலருமையாற்புரி, மாதவமிம்மையுமறுமையுந்தரு
மேதுவதாகுமாலிருமையும்பெற, லாதியமபகவனதருளினவண்ணமே. (௧௭)

ஒருமைகொண்மாதவமுழந்துபினமுறை, யருமைகொள்வீடுபேறடைந்துளோர்சிலர், திருமைகொளின்பினிற்சோகினரோசில, ரிருமையுமொருவரேயெய்தினோர்சிலர். (௧௮)

ஆற்றலிற்றம்முடலலசப்பற்பக, ஞற்றவரல்லரோநுவலல்வேண்டுமோ
தேற்றுகிலீர்கொலோதேவராகியே, மேற்றிகழ்பதந்தொறுமேவுற்றோரெலாம். ()

பத்திமைநெறியொடுபெயிற்றிமாதவ, முத்திபெற்றனடிமுன்னுற்றோர்தமை
யித்துணையெனலரிதிருமையும்பெறு, மெய்த்தவர்மாலொடுவிரிஞ்சனாதியோர். ()

பல்லுயிர்தன்னையுமாய்த்துப்பாரினுக், கல்லல்செய்தருந்தவமாற்றிடாதவர்க்
கில்லையேயிருமையுமின்பமாநகவா, சொல்லரும்பிறவியுட்டுன்பத்தாழுவார். (௨௧)

அறிக்கிலைவயுரைப்பினுமவணிமாக்கடா, மறங்கொலைகளவொமெய்க்கனிங்கலர்
றுறந்திடுகின்றிலர் துன்பமற்றிலர், பிறந்தனரிறந்தனர்முத்திபெற்றிலார். (உஉ)

தவந்தனின்மிக்கதொன்றில்லைதாவில்சீர்த், தவந்தனைநேர்வதுதானுமில்லையாற்
றவந்தனினரியதொன்றில்லைசாற்றிடிற், றவந்தனக்கொப்பதுதவமதாகுமே. (உங)

ஆதலின்மைந்தர்காளறத்தையாற்றுதிர், தீதினைவிலக்குதிர்சிவனையுன்னியே
மாதவம்புரிகுதிர்மற்றதன்றியே, யேதுளதொருசெயலியற்றத்தக்கதே. (உச)

வேறு.

உடம்பினையொறுத்துநோற்பாருலகெலாம்வியப்பவாழ்வ
ரடைந்தவர்க்காப்பரொல்லார்க்கழிவுசெய்திடுவர்வெஃகு
நெடும்பொருள்பலவுங்கொள்வர்நிதராயுறைவரீது
திடம்படவுமக்கோர்காதைசெப்புவனென்றுசொல்வான். (உரு)

காசிபனுபதேசப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௦௧.

## மார்க்கண்டேயப்படலம்.

நச்சகவமிர்தமன்னநங்கையாநாட்டவைவே
றைச்சகமயக்கல்செயயாத்தடுப்பருந்தவத்தின்மிக்கா
னிச்சகம்புகழுகின்றவிருபிறப்பாளர்கோமான்
குச்சகனென்னும்பேரோன்கொடிமதிற்கடகம்வாழ்வோன். (க)

அவற்கொருபுதல்வனுண்டாலருமறைபயின்றநாவான்
கவுச்சிகனென்னும்பேரோன்கரையொருசிறிதுங்காணாப்
பவக்கடல்கடக்குமாற்றூற்பராபரமுதல்வற்போற்றித
தவத்தினையிழைப்பவாங்கோர்தண்புனற்றடாகஞ்சார்ந்தான். (உ)

அத்தலையொருசாரெய்தியானினந்தீண்டுகுற்றி
யொத்தெனவசைதலின்றியுயிர்ப்பொரீஇயுலகமெல்லாம்
பித்தெனவுன்னிமாயாப்பேரின்பவளக்கர்மூழ்கி
நித்தனையெழுத்துமனனுணிலைமையுநினைந்துநோற்றான். (ங)

ஓவியமவனமூற்றூங்குணவொடுமுறக்கநீங்கித்
தாவறநோற்கும்வேலைத்தடமரைகடமையாதி
மேவியவிலங்குதத்தமெய்யுகண்டேயமயாவும்
போவதுகருதியன்னான்புரத்திடையுரைத்துப்போமால். (ச)

இப்பரிசியன்றபோழ்தும்யாவதுமுணரானாகி
யொப்பறநோற்குமவேலையொல்லையிலதனைநாடி
முப்புரஞ்சிதையமேனுண்முனிந்தவனருளிதென்னுச்
செப்பினனிமையோர்சூழச்சேணிடைத்திருமால்சேர்ந்தான். (ரு)

அற்புதமெய்திமைந்தனருந்தவம்புகழ்ந்துமுன்போ
யெற்படுமவன்றன்மேனியெழின்மலர்க்கரத்தானீவி
வெற்பனமுனிவநின்பேர்மிருகண்டேயனென்னுச்
சொற்பயினுமஞ்சாத்தவெழுந்துணைதொழுதுநின்றான். (சு)

தொழுதெழுமுனிவனைநோக்கித்துமதிச்சென்னியோன்றன்
முழுதருகருணைநின்பான்முற்றுகமுன்னஞ்செய்த
பழுதவைநீங்கவென்னப்பரிவுசெய்தருளிவானோர்
குழுவுடனுவணவூர்திகொம்மெனமறைந்துபோனான். (எ)

போனபின்முனிவர்மேலோன்புரமெரிபடுத்தமுக்கண்
வானவனருளினாலேவல்விரைந்தேகித்தாதை
யானவன்முன்னரெய்தியடிமுறைவணங்கவன்னான்
றானுளமகிழ்ந்துகண்டாங்கெடுத்தனன்றழுவிக்கொண்டான். (அ)

தவத்திடையுற்றதன்மைமொழிகெனத்தனயன்றானு
முவப்புறுதாதைகேட்பவுள்ளவாறுரைத்தலோடு
நிவப்புறுமுவகைமிக்குநின்குலத்தவர்க்குநின்போ
லெவர்க்குளதினையநோன்மையர்துநிற்கரியதொன்றே. (கூ)

பாருளார்விசும்பின்பாலார்பயனுகாதுறக்கமென்னு
மூருளாரல்லாவேனையுலகுறுமுனிவர்தம்மி
லாருளார்நின்னையொப்பாரையநீபுரிந்தநோன்மை
காருளார்கண்டதெந்தையன்றிமற்றெவரேகாண்பார். (க0)

எனப்பலபுகழ்தலோடுமிவன்வழிமரபுதன்னின்
மனப்படுமொருசேய்பின்னாண்மறலியைக்கட்க்குங்கூற்றால்
வினைப்பகையியல்புநீக்குமவிமலனதருளால்வேறோர்
நினைப்பதுவரலுந்தாதைநெடுமகற்குரைக்கலுற்றான். (கக)

இளத்துவதனக்கொன்றுண்டாற்கேண்மதியையமேனா
ளளப்பருமறைகளாதியறைந்தனயாவரேனுந்
தளத்தருபரிசுமன்றூற்சால்புடையநதனாளர்
கொளப்படுகடனேயாகுநாற்பெருங்கூற்றதன்றே. (க௨)

உனற்கரும்பிரமந்தன்னிலொழுகலில்லறத்தினிற்றல்
வனத்திடைச்சேறல்பின்னர்மாதவத்துறவில்வாழ்த
லெனப்படுமவற்றினாதியிற்றினையின்றுகாறு
நினக்கதுபுகல்வதென்னேநீயவையறிதியன்றே. (கங)

பின்னவையிரண்டும்பின்னர்ப்பேணுதல்பேசவொண்ணு
முன்னதுமியற்றலாலேமுற்றியநிடையின்வைத்துச்
சொன்னதோர்கடனிஞ்ஞான்றுதொடங்கியவேண்டுந்தூயோ
யன்னதனிலைமைதன்னையாற்றினைகோடியென்றான். (கச)

முனிவரனிதனையாங்கண்மொழிதலுமிதனைக்கேளா
வினியதோருறுதிசொற்றாயெந்தையாரெனக்கீண்டென்னா
மணமுறமுறவல்செய்துமதலையாமொருவற்கீது
விளைவுறுதவத்தினீரும்விளம்புதன்மரபோவென்றான். (கரு)

வேறு.

பேதைப்படுக்கும்பிறவிக்கடனீந்து
மோதித்திறத்தையுணர்ந்துடையோனாதவினாற்
காதற்புதல்வன்கவுசிகனென்போன்றனது
தாதைக்கினையபரிசுதனைச்சாற்றுகின்றான். (கசு)

முன்னருளபாசமுழுக்கறுக்கவேண்டியநான்
பின்னுமொருபாசம்பிணிக்கப்படுவேனேற்
றன்னிகரிலீசன்றனையெவ்வாறெய்துவன்யா
னின்னலெனுமாழியிடைப்பட்டுழல்வேனே. (௧௭)

மொய்யானதில்லாமூடவனொருவன்றனது
கையானவையிரண்டுங்கந்தூரத்தவழ்தருவா
னையாவதற்குமரும்பிணியொன்றெய்தியக்கா
லுய்யானேயானுமுவன்போற்றளர்வேனே. (௧௮)

மொய்யுற்றிடவேமுயலுந்தவத்தினன்றிப்
பொய்யுற்றவில்லொழுக்கம்பூண்டுவினைபோக்குவது
மெய்யுற்றிடுதுகளைமிக்கபுனலிருக்கச்
செய்யற்சின்னீரிடத்துத்தீர்க்குஞ்செயலன்றே. (௧௯)

மண்ணுலகிலுள்ளவரம்பில்பெரும்பவத்தைப்
பெண்ணுருவமாகப்பிரமன்படைத்தனனா
லண்ணலஃதுணர்தியன்னவரைச்சிந்தைதனி
லெண்ணவரும்பாவமெழுமையினுநீங்குவதோ. (௨௦)

ஆதரவுகொண்டேயலமந்தவைம்புலமாம்
பூதவகையீக்கப்புலம்புற்றபுன்மையினேன்
மாதரெனுங்கணமும் * வந்தென்னைப்பற்றியக்கா
லேதுசெய்கேனந்தோவெனககோவிதுவருமே. (௨௧)

பன்னாளும்பாரிற்பருவரலின்மூழ்குவிக்கும்
பின்னாணிரயப்பெரும்பிலத்தினூடுய்க்கு
மென்னாளிலாண்டகையோர்க்கின்பம்பயந்திடுமோ
மின்னார்கடம்மைவிழைவுற்றவேட்கையதே. (௨௨)

துன்பநுகரும்வினையின்றொடர்ச்சியினோ
ரின்பநுகர்வார்போலேந்திழையார்கட்பட்டா
தன்பன்மிகநடுங்கஞாளிதசையில்லா
வென்புகறித்திட்டாலிருஞ்சுவையும்பெற்றிடுமோ. (௨௩)

அஞ்சனவைவேற்கணரிவையர்தம்பேராசை
நெஞ்சுபுகினொருவர்நீங்குநிலைமைத்தோ
வெஞ்சல்புரியாதுயிரையெந்நாளுமீர்ந்திடுமா
னஞ்சமினிதம்மவோர்நாளுநலியாதே. (௨௪)

கள்ளுற்றகூந்தற்கனங்குழைநல்லார்கருத்திற்
கொள்ளப்படுமெண்குணிக்குந்தகைமையதோ
தள்ளற்கரிதாகித்தம்மொடுபன்னாட்பழகி
யுள்ளுற்றதேவுமுணர்தற்கரிதன்றே. (௨௫)

ஓதலுமொன்றாவுளமொன்றாச்செய்கையொன்றாப்
பேதைநிலைமைபிடித்துப்பெரும்பவஞ்செய்
மாதர்வலைப்பட்டுமெயக்குற்றாரல்லரோ
சாதல்பிறப்பிற்றடுமாறுகின்றாரே. (௨௬)

---

* கணம் - பிசாசு.

ஆறுநூலிலருங்கற்பினையுடைய
மாதரிலரோவெனவேவருப்பீரேற்
கோதைதங்கள்கொழுநனியல்வழுவாத்
தேனார்மொழியாருமுண்டுசிலர்தாமே. (௨௭)

உற்றவுலவைவயினட்டயோர்புலிங்கமூட்டியக்காற்
கற்றைவிடுசுடர்மீக்கான்றுகனன்மிக்குப்
பற்றுதல்செல்லாதபலவினும்போய்ப்பற்றிடுமோ
வுற்றெனலாமீங்கோரரிவைமுயங்காதரமே. (௨௮)

சந்திரற்குநேருவமைசானுந்திருமுகத்துப்
பைந்தொடிக்கைநல்லார்பலரும்புடைசூழக்
குந்தமொத்தநாட்டத்துக்கோதமனார்பன்னியினு
லிந்திரற்குநீங்காவிடர்ப்பழியொன்றெய்தியதே. (௨௯)

வேறு.

கூன்முகத்திங்கணெற்றிக்கோதையாகுழுவுக்கெல்லாந்
தான்முதலிறைவியாகத்தன்கையாற்சமைக்கப்பட்ட
மான்முகநோக்கிமுன்னோர்மலரயன்மையலெய்தி
நான்முகனுனென்பநாமுணராததன்றே. (௩௦)

மற்றுளமுனிவர்தேவர்மாயமாங்காமந்தன்னு
லுற்றிடுசெயற்கையெல்லாமுரைப்பினுமுலப்பின்றாமா
லற்றெலாநிற்கயானவ்வாயிழைமடந்தைகூட்டம்
பெற்றிடுமொழுக்கந்தன்னைப்பேணலன்பிறப்புநீப்பேன. (௩௧)

பூண்டகுவிலங்கற்றிண்டோட்புரந்தரன்முதலோர்சீரும்
வேண்டலனில்வாழ்வென்னும்வெஞ்சிறையகத்தும்வீழேன்
மாண்டகுபுலத்தின்மாயுமயக்கொரீஇத்தவமென்றோது
மீண்டியவெறுக்கைமேவியின்பமுறநிருப்பனென்றான். (௩௨)

இவைபலவுரைத்தலோடுமிருந்தகுச்சகன்றானிந்தக்
குவலயமதிக்குமாற்றாற்கூறுமில்லொழுக்கந்தன்னை
நவையெனவிகழாநின்றானென்மறைத்துணிவுங்கொள்ளான்
றவமயல்பூண்டானென்னாத்துயர்கொடுசாற்றலுற்றான். (௩௩)

புலத்தியன்போனுமேலோய்பொருவின்மங்கலஞ்சேர்பொன்னின்
கலத்தியல்வதுவைபூண்டோர்கன்னியைக்கலத்தல்செய்து
குலத்தியன்மரபினோம்பக்குமரரைப்பயந்தேயன்றோ
நலத்தியறவத்தையாற்றிநண்ணருங்கதியிற்சேரல். (௩௪)

மன்பதையுலகமேபோன்மானுருமயங்குகாம
வின்பநீநுகர்தற்கேயோவிசைத்தனனிறந்தமேலோர்
துன்பமுநிரயஞ்சேர்வுந்துடைத்திடுந்தொன்மைநோக்கி
யன்புறுபுதல்வர்க்காகவரிவையைக்கோடியையா. (௩௫)

சித்திரமிலகுசெவ்வாய்ச்சிறடிச்சிறுவர்தம்மைப்
புத்திரரென்னுஞ்சொற்குப்பொருணிலையயர்த்திபோலா
மித்தகவதனைநாடியில்லறம்பூண்டுநிற்ற
லுத்தமநெறியேயாகுந்தவத்தினதொழுக்குமஃதே. (௩௬)

மாண்மதிபெறாதவெய்யோய்மற்றுநின்றன்மைநீங்கி
நீண்மலையாகியீண்டேநின்றுதீயவுணாக்கெல்லா
மேண்மிகுமிருக்கையாகியிருந்தவத்தோர்க்குமேனைச்
சேண்மலிகடவுளோர்க்குந்தித்தொழிலிழைததிபன்றாள். (கக)

மாற்படுமதுபாணிவலிகெழுதண்டாலுன்றன்
பாற்படுபுழைகள்யாவுமபற்பலமாயைக்கெல்லா
மேற்புடையிருக்கையாகவெம்பிரானுதவுஞ்செவவேள்
வேறபடைதனிற்பினறாள்விளிகுதிவிரைவினென்றான். (கஉ)

பழிதருகிளையசாபம்பகர்ந்துதன்சிரகந்தனி
னுழிதருபுனலைவாங்கியுளஙகொண்மந்திரத்தால்வீசி
யழிதரமாயைநீக்கியாண்டொரீஇமீண்டுதென்பால்
வழியதுசெவவனுடிவண்டமிழ்முனிவனபோனான். (கங)

கிரவுஞ்சப்படலமுற்றிற்று.

ஆ திருவிருததம-க,உஉஉ

# விந்தம்பிலம்புகுபடலம்.

அன்னதோரவுணர்கோமானனறுதொட்டசலமாகித்
துன்னெறியவுணர்யாருநதுவனறியவரணமாகி
நென்னலினமுதனாள்காறுநினறனனனையானறன்னை
யென்னையாளுடையநீயன்றியாவரேயடுதற்பாலார். (க)

பைந்தமிழ்முனிவன்வான்றோய்பணிவரையதனைநீங்கிக
கந்தரஞ்செறிபொற்கோட்டுககடவுளாவரைச்சாரெய்தி
யந்தமதடைந்தோர்க்கங்கணருளினுற்றனதுமூல
மந்திரமுணாத்துமுக்கண்வானவனகாசிபுக்கான். (உ)

கங்கைசெனறொழுகுங்காசிக்கறைமிடற்றகிலநாதன்
பங்கயவடிகடாழநதுபரவலசெயதாணடுநீஙகித்
துங்கதைகொணடவிந்ததொல்வரைக்கொருசாரேகி
யஙகதனிலைமைநோக்கியறிவனுனறியமபலுற்றான். (ங)

சேயுயாநிவப்பிறழுகிசேணபுகுமவிநதமென்னு
மாயிருஙகுவடுகேணமோமற்றியாயபொதியவெற்பிற்
போயிருந்திடவேயுன்னிபபோந்தனமதனுக்கின்னே
நீயொருசிறிதுசெல்லுநெறியளிததிடுதியென்றான். (ச)

எறிகதிர்மதியினுக்குமேகருநதிறத்தால்வான
நெறியினையடைத்ததொல்லைநெடியமால்போன்றுநின்றேன்
குறியநிற்கஞ்சியாறுகொடுப்பனோவெனதுதோற்ற
மறிகிலைமீண்டுபோகென்றவவரைமொழிந்ததன்றே. (ரு)

கேட்டலுமதனைச்சீற்றஙகிளர்ந்திடநகைத்துநாதன்
றாட்டுணையுன்னிதொன்றாட்சதமகன்வேண்டவாழி
மாட்டுறச்செறித்தகையைமலரயன்பதத்தின்காறு
நீட்டினன்றவமேயன்றிநெடும்பொருள்பிறவுமுண்டோ. (௬)

அற்புதமமரர்கொள்ளவாற்றவுங்குறியோன்விந்த
வெற்பினதும்பர்தன்னின்மீயுயர்குடங்கைசேர்த்தி
வற்புறலுன்றவல்லேமற்றதுபுவிக்கட்டாழ்ந்து
சொற்பிலம்புகுந்துசேடன்றொன்னிலேயடைந்ததன்றே. (எ)

அள்ளலேயடைகின்றோரிலரமபுகுமடுக்கலஞ்சி
வள்ளலேயருளிக்கேண்மோமற்றுனைவழிபடாம
லெள்ளலேயிழைத்துமேன்மையிழந்தனன்றமியன்குற்ற
முள்ளலேயெழுவதெஞ்ஞான்றுரையெனக்கூறிற்றன்றே. (அ)

அன்னதோர்பொழுதுதன்னிலலேகடல்செறித்தவங்கை
முன்னவனவிந்தவெற்பினமொழியினைவினவியான்போ
யிந்நெறியிடையேமீளினெழுதியாணீயுமென்று
நன்னகையோடுசொற்றுரைதனைசூழ்ச்சிகவொப்ப. (கூ)

வன்புலப்புவிக்குள்விந்தமறைதலுமறிவினீராற்
புன்புலப்பகையைவென்றோனகரததைமுன்போலச்செய்து
துன்புலப்புறறசிந்தைச்சுரர்கள்பூமாரிதூாப்பத்
தென்புலப்பொதியவெற்பிறசெலவதுசிநதைசெய்தான். (௧௦)

ஆயிடைவிந்தம்பாரபுக்கழுந்திடவகல்வானத்துத்
தேயமவெள்ளிடையதாகததினகரன்முதலாந்தேவர்
பாய்சுடர்விளக்கம்யாண்டுமபரந்தனசிறையைநீங்கி
யேயெனவளக்காநீததமெங்கணுஞ்செறியுமாபோல். (௧௧)

அதுபொழுதலரியாதியமராகளகததியன்பாற்
கதுமெனவடைந்துபோற்றிக்கைதொழுதெந்தைசெய்த
வுதவியார்புரிவாரினறுலுமபராறொழுகப்பெற்றோம்
பொதியமேவினிநீநணணியிருததியெமபொருட்டாலென்றார். (௧௨)

என்றலும்விழுமிதெனறுவிசைவுகொண்டமராதம்மைச்
சென்றிடவானிற்றூணடிதகெக்கிணநதொடர்ந்துசெல்லக்
குன்றமாகுடாதுதேயஙகுறுகுமவிலவலனவாதாவி
யன்றுயிரிழப்பநினறாகததியன்வரவுகண்டார. (௧௩)

விநதமபிலமபுகுபடலமுற்றிற்று.

ஆ திருவிருததம் - ௧,௨௩௫.

# வில்வலன்வாதாவிவதைப்படலம்.

கண்டனரிவனேபோலுஙகாய்சினததவுணராவி
கொண்டனன்வேலேமுன்னஙகுடிததுமிழ்கின்றநீரா
னண்டரையருள்வாஞைகொலடைந்தனனவனுக்கின்னே
யுண்டியையுதவியாவிகொள்ளுதுமூறென்றெண்ணார். (௧)

என்றிவைபுகனறபின்னரிளவல்வாதாவியென்போன்
குன்றதன்புடையிலோர்சாரகொறியுருக்கொண்டுபோந்து
மென்றழைபுதலின்மேயவில்வலனென்னுமேலோ
னென்றியபுலத்தினமிக்கோருருவுகொண்டிற்றனன்றே. (௨)

மீதுறுசடையுநீறுவிளங்கியநுதலும்வேடங்
காதணிகுழையின்சீருங்கண்டிகைக்கலனுமேற்கொள்
பூதியுந்தண்டுங்கையும்புனையுரியுடையுமாக
மாதவவேடந்தாங்கிமுனிவனோர்வல்லைசென்றான். (௩)

மெய்தருபுறத்துக்காமர்வியனுருக்கொண்டுதன்னுட்
கைதவங்கொண்டுசெங்கேழ்க்காஞ்சிரங்கனிபோன்மேய
மைதிகழ்மனத்தனோர்போய்வண்டமிழ்முனிவற்போற்றி
யைதெனவணங்கிமுக்காலஞ்சலிசெய்துசொல்வான். (௪)

அடிகணீர்போதவிந்நாளருந்தவம்புரிந்தேனின்று
முடிவுறவந்தீர்யானுமுனிவர்தநிலைமைபெற்றேன்
கொடியனேனிருக்கையீதாற்குறுகுதிர்புனிதமாகும்
படியெனவுரைத்துப்பின்னும்பணிநதனன்பதங்கடம்மை. (௫)

பணிதலுமொருதன்கையிற்பரவையம்புனலைவாரி
மணிபடுபதுமம்போலவாய்க்கொளுமுனிவன்றீயோன்
றுணிவினையுணரானாகித்துண்ணெனவுவகைதோன்ற
வினையறுதவத்தின்மிக்கோயெழுதியென்றிதனைச்சொற்றான். (௬)

ஆறெதிரெண்மராகுமாயிரமுனிவர்தம்பால்
வேறுளதவததர்தம்பான்மிக்கநினனியற்கைதன்னிற்
கூறுசெயணுவின்காறுங்குணமிலசரதமீது
தேறுதியிருக்கையேதுசெல்லுதும்வருகவென்றான். (௭)

என்றருண்முனியைநோக்கியீதெனதுறையுளென்னச்
சென்றனன்முடிவானவந்தீயவனவறகொண்டேகி
மன்றதனிருக்கையுற்றுமரபுறுதவிசிற்சோதிப்
பொன்றிகழடிகட்கேற்றபூசனைபுரிந்துசொல்வான். (௮)

எந்தைநீயானுமேனையென்குலததவருமுயய
வந்தனைபோலுமிந்நாண்மற்றெனதிருகைவைகி
வெந்திடுபுற்கையேனுமிசைந்தனையெனக்குச்சேடந்
தந்தருள்புரிந்துபோதிதவத்தரிறறலைவவெனறான. (௯)

சொல்வலமுனிவாமேலோனசூரமுதனமருகாயுளள
வில்வலனமாற்றங்கேளாவிழுமிதுபரிவின்மிக்கோ
யொல்வதோருணவுநின்பாலுவநதியாமருநதிப்பின்னாச்
செல்வதுகடனுமென்றுசெப்பினன்றீமைதீர்ப்பான். (௧௦)

மேலவனிதனைக்கூறவில்வலன்வணங்கியெந்தாய்
சீலமோடடிசில்செய்வனசிறிதுபோதிருததியெனறு
காலையங்கதனிலாண்டோராகயப்புனலபடிந்தமூழ்கிச்
சாலவும்புனிதனாகியடுவதோர்சாலைபுக்கான். (௧௧)

அத்தலைநிலத்தைநீராலாமயம்பூசியாண்டுஞ்
சித்திரமுறுத்தியாவுந்தேடிவால்வளையின்சின்ன
மொத்ததண்டுலமாசேகவொண்புனலிடையேயிட்டு
முத்திறமண்ணிமற்றோர்முழுமணிக்குழிசியுய்த்தான். (௧௨)

தாக்குறுதிறலின்வெய்யதழல்பொதிகருவியான
வாக்கியசெய்ததொன்றிலழலினையதனுண்மூட்டித்
தேக்கிலாரமாட்டிச்சீருணத்தசும்பரோன்றில்
வாக்கியவுலைப்பெய்தேற்றிமரபில்வாலரியுள்ளிட்டான். (கரு)

பதனறிந்துண்டியாக்கிப்பாலுறவைத்துப்பின்னர்
முதிரையினடிசிலட்டுமுன்னுறுதிம்பால்கன்னல்
விதமிகுமுணுக்கள்யாவுமேவுறவமைத்துக்கொண்டு
புதுமணங்கமழுந்தெய்வப்புனிதமாங்கறியுஞ்செய்தான். (கசா)

ஆற்றலான்மேடம்போலாயாரிடருயிரையெல்லா
மாற்றுவானமைந்துநின்றவிளவலைவலிதிற்பற்றிக்
கூற்றமேபோலமேவுமுனிவன்முற்கொணர்ந்துகையி
லேற்றகூர்ஙகுயததாற்காதியிருதுணியாக்கினுனே. (கரு)

அணிப்படுபோாவைநீக்கியங்கமுமகற்றிவாளாற்
றுணிப்பனதுணிததுமீாந்துஞசுவைததிடுமுறுப்பூனெல்லாங்
குணிப்பொடுகுட்டமிட்டுக்குழிசிகள்பலவிற்சோததி
மணிப்புனல்கொண்டுமுக்கானமரபினுன்மண்ணல்செய்து. (கசு)

உரைத்தவக்கறிக்குவேண்டுமுவர்முதலமைந்தநல்கி
வருத்துறுகனன்மேற்சோததிவாலிதிற்பழுக்கல்செய்தே
யரைத்திடுகறியினுண்ளோதிதூயிழுதுபெய்து
பொரிப்பனபொரித்திட்டாவிபோந்திடாவண்ணம்போற்றி. (களஎ)

கறியினுண்பொடியுமேனைக்கந்தமார்துகளுமந்நாள்
வறையல்போகுற்றதூயவாலரிபபொடியுநீவி
யுறைகெழுதுப்பும்வாக்கியொழுகுபல்காயங்கூட்டித்
திறனுடமெளாவியாங்கோர்சிற்சிலபாகுசெய்து. (கஅ)

பின்னரும்பலகால்வேண்டுமெபெறறியிற்கரிததுச்செம்மி
முன்னுறவளிக்கநின்றமுதிரையினபுழுக்கலட்டுச்
செந்நலநீடுகன்னறறிமபுளிஙகறியஞ்செய்யா
வன்னதோர்தொடக்கம்யாவுமருளினனருளிலாதான். (கக)

ஆசினிவருக்கையாதியளவையில்கனிகள்கீறித
தேசமர்கன்னறீந்தேன்சோதரசிலணியேனை
வாசமுமலருமிட்டுவெரமபிலவமைததுப்புததேள்
பூசனைக்குரியவன்பாற்பொருக்கெனக்குவவுசெய்தான். (உ0)

குய்வகையுயிர்ப்பினமாந்திக்குவலயம்விரும்புகின்ற
வைவகையுணவுமாறுசுவைபடவளித்துப்பினனு
மெவவகையனவுந்தானேயிமைப்பினிலமைததுவல்லே
கவவையினோடுஞ்சென்றுகடமுனிகழன்மேற்றுழ்ந்தான். (உக)

எந்தைநீயின்னகாலையிரும்பசியுடற்றவாற்ற
நொந்தனைபோலுமேனிநுணங்கினைதமியேனீண்டுத்
தந்தனனுணவியாவுந்தளர்வறநுகருமாறு
வந்தருளென்றுவேண்டமற்றதற்கியைந்துபோனுன. (உஉ)

அட்டிசொலைமாட்டேயகத்தியற்கொடுபோயாங்க
ணிட்டதோரிருக்கைதன்னிலிருத்தியேமுகமன்கூறி
மட்டுறுதூநீர்கந்தமலர்புகைதீபங்கொண்டு
பட்டிமைநெறியிற்பூசைபுரிந்துபினபதநேர்குற்றான. (௨௩)

வேறு

தெள்ளுஞ்சுடர்ப்பொனியல்கின்றதட்டைதிருமுன்னாவைத்துநிரையா
வள்ளங்கள்வைத்துமிகுநாரமுய்த்துமரபிற்றிருத்திமறையோ
னுள்ளங்குளிர்ப்பவமுதன்னவுண்டியுறுபேதம்யாவுமுதவா
வெள்ளமபடைத்தநறுநெய்யதன்கண்விட்டானதனைுவிவிடுவான். (௨௪)

முறைவைப்புநாடிமுதன்மைக்கண்மேவுமுதிரைப்புழுக்கன்மறியின
கறிவர்க்கமேனையவைசுற்றினமேயகவினுறறங்கண்ணமிசையே
யுறவிட்டுநீடமதரித்தயாவுமுடனுய்த்தொழிந்தவளனுரு
செறிவித்துமேலைமுனிகைக்குநீடுசிரகதினீருதவினான். (௨௫)

பெருநீரடங்குசிறுகையினூடுபெறவுய்த்ததோயமதனை
யிருபான்மையுண்டியதுசூழுமவணமிசையோடுசுற்றியதுதா
னொருகானுகாந்துபலகாலினுக்குமுதவிபரினுள்ளபடியு
மருகாதுசெய்துமிகவேவிருமபியயில்வானறவங்களபயிலவானை. (௨௬)

அடுகின்றவுணடிகறிவாககமேனையவையளபிலாதவசுர
னிடுகினறதேதுமுடிவெயதுகாறுமினிதுணடுபின்றைமுனியன்
கடிகொண்டநாரமனையன்கொணாநதுகரமுயபபருங்கியெழுவான்
பொடிகொண்டுதனகைமலாநீவிமிககடுனலகொணடுமண்ணல்புரியா. (௨௭)

மைக்காரினமெய்யனருளகினறநா மவாயக்கொண்டுமிழ்நதுபலகான
முக்காலினுங்கிவாய்பூசறுதது * முறைநாடியஙகமெவையு
மிக்கானுமூறுபுரியாவதனறிவேறுளளசெய்கைபலவு
மக்காலையங்கொர்புடையுற்றியறியவண்யீற்றிருககுமளவில். (௨௮)

வேதாவளிததவரமுன்னியேவில்வலனென்னுமவெய்யவசுரன
போதாவிருந்தமுனியாவிகோடலபொருளாகநெஞசினினையா
வாதாவிமைந்தவிளையாய்விரைநதுவருகெனறுகூறமுனிவன
றிதாவயிற்றினிடையேயெழுநதுதிறன்மேடமாகிமொழிவான். (௨௯)

வேறு

எண்ணுமலேமுன்புகடலுண்டதேபோலவெனதூனுமுண்டகொடியோ
னுண்ணுடுமூயிர்கொண்டுவலிகொணடுகுறிதானவுதாஙகிழித்துவருவ
னண்ணுவில்வலனேயெனக்கூறியேதமபியரிபோன்முழங்கியிடவு
மண்ணுடாபுகழ்குமபமுனிதீயசெய்திட்டமாயந்தெரிந்துவெகுள்வான. (௩௦)

ஊன்கொண்டகறியாகிநகாவுற்றவாதாவியுயிர்போகியுண்டவியல்பே
தான்கொண்டுமுடிகென்றுசடாததையொருகாலைதமிழ்வல்லமுனிதடவலுங
கான்கொண்டவெரிமண்டுசிறுபுன்புதற்போன்றுகடியோனுமுடிவாகவே
வான்கொண்டலெனவங்கண்முன்னின்றவன்றமபிமாய்வுற்றதுன்னிவருவான். ()

* பூசறுதத்ல - சுத்திசெயதல்.

மெய்க்கொண்டதொன்னொருக்கொண்டுமுனிதன்னைவெகுளுற்றோர்தண்ட மதனைக், கைக்கொண்டுகொலையுன்னிவருபோழ்தின்முனிவன்கரத்திற்றருப்பை யொன்றை, மைக்கண்டர்படையாகநினைகுற்றுவிடவில்வலன்றானுமடிவெய்தலு, மக்கண்டகக்கள்வருறையுற்றவிடநீங்கியப்பாலகன்றனனரோ. (௩௨)

வில்வலன்வாதாவிவதைப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧,௨௬௭.

# காவிரிநீங்குபடலம்.

செங்கைதூங்கியகரத்தநீரொடுங், கொங்கின்பாற்செலக்குறியமாமுனி
மங்குகின்றவம்மைந்தர்நேருறா, வங்கண்மேவினாரருந்தவத்தர்போல். (௧)

நேருமைந்தர்களிருவர்நீணிறக், காரின்மேனியர்கறங்குகண்ணினர்
தீராற்றவுஞ்சினத்தரொலலென, வாரவாரஞ்செய்தணுகினாரரோ. (௨)

அண்மையாகுவரகல்வர்மாமுனி, கண்முனெய்துவாகரந்துகாண்கிலார்
விண்முகிற்குளேமேவியாபபரான, மணமிசைப்பினும்வருவர்சூழ்வரே. (௩)

கோதிலாற்றல்சேர்குமபமாமுனி, யீதுநோக்கியேயிவரைமுன்னமே
காதினாநமைக்கருதிவந்தனா, மாதவத்தினோன்மைந்தராதலால். (௪)

பேர்கிலாதவிப்பிரமகத்திநோய், திருமாற்றினாற்சிவனதாள்களை
யார்வமோடிவணருச்சிப்பாமென, நேரின்மாமுனிநினைந்துநின்றரோ. (௫)

ஆசில்கொங்கினுக்கணித்தினோரிடை, வாசமீதெனமகிழ்ந்துவீற்றிரீஇ
யீசனார்தமையிலிங்கமேனியி, னேசநெஞ்சினானினைந்துதாபிததான். (௬)

தூயகுண்டிகைததோயமன்றியே, சேயமாமலாதீபந்தீம்புகை
யாயபோனகமாதியானவை, யேயுமாறறினாலினிதுதேடினான். (௭)

விழுமிதாகியவிரதாவியமே, வழுவிருநதிடுமெவஞ்சராவிகொள்
பழியகனறிடப்பரமனருணமிசை, யழிவிலனபொடேயருசசிததானரோ. (௮)

மங்கைபாகனைமற்றுமபறபகல், சிஙகலின்றியேசிறநதபூசைசெய்
தங்கண்மேவினானவனகணாகிய, துஙகவெமபவந்தொலைந்துபோயதே. (௯)

அனையகாலையிலரியதீந்தமிழ், முனிவரன்செயன்முற்றுநாடியே
துனியினாதன்றொல்லைவானவாக், கினியகோமகனிருக்கையெய்தினான். (௧௦)

தாணுவின்பதந்தனையுன்னியே, வேணுவாகியேமெய்த்தவஞ்செயுஞ்
சேணின்மன்னவன்செல்லுநாரதற், காணுமெல்லையிற்கழல்வணங்கினான். (௧௧)

எழுதிமன்னவென்றெடுத்துமார்புறத, தழுவிநன்றிவட்சாரதியோவென
வுழுவலன்பினாலுரைப்பவாசவன், றொழுதகையினானினையசொல்லுவான். (௧௨)

இன்றுகாறுநின்னருளின்யாணிவ, ணன்றுமேவினாதன்பூசனைக், கொன்றதுண்
டுதீங்குரைப்பன்கேட்டியாற, குன்றமன்னதோர்குணத்தின்மேலையோய். (௧௩)

கோதின்மாமலாகுழுவுதண்டலைக், கேதுநீலையிறந்துவாடுமாற்
போதுமில்லையாற்பூசைசெய்வதற், கீதரோகுறையென்றியம்பினான். (௧௪)

வேறு

இன்னவைபலவுங்கூறியிந்திரன்றவ்சொன்றிட்டு
முன்னுறவிருத்தித்தானுமுனிவரன்பணியால்வைக
வன்னதோரறிஞனினாராசியல்பிறவுமீசன்
றன்னருளதனைமேனாள்வருவதுதளரேன்மன்றே. (கரு)

ஆறணிசடையினானுக்கருச்சனைபுரிதற்கிங்கோ
ரூறுளதென்றேயையவுரைத்தனையதுவும்வல்லே
மாறிடுங்காலமீண்டுவந்ததப்பரிசையெல்லாங்
கூறுவன்கேட்டியென்னாக்கோமகற்குரைக்கலுற்றான். (கசு)

தன்னிகரிலாதமுக்கட்சங்கரன்பொதியவெற்பின்
முன்னுறைகெனாக்குறும்பமுனிவனைவிடுத்தவாறு
மன்னவன்விந்தந்தனையகன்பிலத்திட்டவாறுந்
துன்னெறிபுரிந்தவெஞ்சூரமருகரைத்தொலைத்தவாறும். (கஎ)

அப்பழிதீருமாறாலைதெனக்கொங்கினண்ணி
முப்புரமெரித்ததொல்லைமுதல்வனையருச்சித்தேத்தி
மெய்ப்பரிவாகியங்கண்மேவியதிறனுமுற்றச்
செப்பினன்பின்னுமாங்கோசெய்கையையுணர்த்தலுற்றான். (கஅ)

அருந்தவமுனிவன்கொங்கினமலனையருச்சித்தங்க
ணிருந்திடுகின்றானடியேகினனவன்பாலாகப்
பொருநதுகுண்டிகையினமன்னும்பொன்னியாறதனையிங்கே
வருமபரிசியற்றினுன்றனமனக்குறைதீருமென்றான். (கக)

குரவனீதுரைத்தலோடுங்குறுமுனிகொணர்ந்துவைத்த
வரநதிதனையிக்காவிலவரவியற்றிடுமாறெனக்கொல
பெருமநீயுரைத்தியென்னப்போமுதருத்தியேத்திக்
கரிமுகத்தேவைவேண்டிறகவிழ்த்திடுமதனையென்றான். (உ0)

குணப்பெருங்குன்றமன்னகோதிலாவறிவனின்ன
புணாப்பினையிசைத்தலோடும்புரந்தரன்பொருமனீங்கிக்
கணிப்பிலாமகிழ்ச்சியெய்திக்காசிபனசிறுவாகொண்ட
வணிபெருந்திருவுநாடியடைந்தனன்போன்றுசொல்வான். (உக)

எந்தைநீயினையவெல்லாமியம்பினையதனால்யானு
முய்ந்தனனகவலையாவுமொருவினன்முனிவன்பாங்கா
வந்திடுமாறுமீண்டுவரவுனதருளாலின்னே
தந்திமாமுகற்குப்பூசைபுரிகுவனறக்கோவென்றான். (உஉ)

அருண்முனியிதனைக்கேளாவன்னதேகருமம்வல்லே
புரிகரிமுகவற்கையபூசனையென்றுகூறிப
பரவியவிமையோர்கோனைப்பாமிசைநிறுவிப்போந்து
சுரரெலாம்பரவுகின்றதொல்லையம்பதத்தினுற்றான். (உங)

சேறலும்புணர்ப்புவல்லோன்றிங்களுமரவுங்கங்கை
யாறுமுடித்தவண்ணலருள்புரிமுதல்வன்றன்னை
மாறகனமேனிகொண்டுவரன்முறைதாபித்தன்னா
சீறடியமராகோமானருச்சனைசெய்துபின்னர். (உச)

இக்கொடுதென்னங்காயுமேனவினிடியுக்கேனு
முக்கனிபலவும்பாகுமோதகமுதலமுற்றுங்
தொக்குறுமதுரமூலத்தொடக்கமுஞ்சுவைத்தீம்பாலு
மிக்கபண்ணியமுமாகவிருப்புறநிவேதித்தானால். (உரு)

இவ்வகைநிவேதித்தபின்னெம்பிரான்றன்னையேத்த
மைவரையன்னமேனிமதகரிமுகத்துத்தோன்றல்
கவ்வையோடனந்தகோடிகணநிரைதுவன்றிச்சூழ
வவ்விடைவிரைவாற்றோன்றலஞ்சினனமரர்கோமான். (உசா)

அஞ்சலைமகவாவென்னவைங்கரக்கடவுள்கூற
நெஞ்சகந்துணுக்கநீங்கிநிறைந்தபேருவகையெய்தி
யுஞ்சனனென்றுவள்ளலுபயமாமலர்த்தாண்மீது
செஞ்செவேசென்னிதீண்டச்சென்றுமுன்வணக்கஞ்செய்தான். (உஎ)

பூண்டிகழலங்கன்மார்பிற்பொன்னகர்க்கிறைவன்முக்க
ணாண்டகைசிறுவன்றன்னைமேலன்பொடுபணிந்துபோற்ற
நீண்டதோரருளானோக்கிநின்பெரும்பூசைகொண்டாம
வேண்டியபரிசென்னென்றான்வேழமாமுகனவென்றான். (உஅ)

இந்திரனதுகேட்டையவெம்பிரார்க்காகவீண்டோ
ரந்தணவனத்தைவைத்தேனன்னதுநாரமின்றிச
செந்தழலுற்றெனத்தினகரன்சுடரான்மாய்ந்து
வெந்துகளானதன்னமேலடுபுரமேயென்ன. (உகூ)

என்னலுமேந்தல்கேளாவேழ்பெருந்தலத்தினீரு
முன்னுறத்தருகோவானமுழுப்பெருங்கங்கைதானும்
பன்னதிபிறவுமங்ஙனவிளித்திடோபரவையாவுந்
துன்னுறவிக்கோவொன்றுசொல்லுதிவேண்டிற்றென்றான். (கூ0)

ஐங்கரக்கடவுளிவ்வாறறைதலுமனைத்துநல்கும்
பங்கயத்தயனுமாலுமபரவுறுபழையோயிங்ங
னங்கவற்றொன்றும்வேண்டேனதுனக்கரிதோயாமொன்
றிங்குனைக்கேட்பனென்னாவிளையவனிசைக்கலுற்றான். (கூக)

சகத்துயாவடபொன்மேருச்சாரலினின்றும்போந்து
மிகத்துயரெவர்க்குஞ்செய்யும்வெய்யவள்சிறுவாச்செற்று
மகத்துபாவிதியின்சேய்க்குவருவித்தநிமலன்பொற்றா
ளகத்தியன்கொங்கின்பால்வந்தருச்சனைபுரிந்துமேவும். (கூஉ)

அன்னவன்றனதுமாட்டோரணிகமண்டலத்தினூடே
பொன்னியென்றுரைக்குந்தீர்த்தம்பொருந்தியேயிருந்ததெந்தாய்
நன்னதியதனைநீபோய்ஞாலமேற்கவிழ்த்துவிட்டா
லின்னதோர்வனத்தினண்ணுமென்குறைதீருமென்றான். (கூகூ)

பாகசாதனனிம்மாற்றம்பகர்தலும்பிறைசேர்சென்னி
மாகயானனத்துவள்ளன்மற்றிதுசெய்துமென்னா
வோகையாலவனையங்கணிறுவிப்போயொல்லைதன்னிற்
காகமாய்முனிபாலானகமண்டலமிசைக்கணுற்றான். (கூச)

கொங்குறுமுனிவன்பாங்கர்க்குண்டிகைமீதிற்பொன்னி
சங்கரனருளின்வந்ததன்மையும்புணர்ப்புமுன்னி
யைங்கரன்கொடியாய்நண்ணவகத்தியனவனென்றோரா
னிங்கொருபறவைகொல்லாமெய்தியதென்றுகண்டான். (௧௫)

கண்டனன்பிள்ளைசெல்லக்கரதலமெடாநின்றோச்ச
வண்டருக்கலக்கண்செய்தகயமுகத்தவுணற்செற்றோன்
குண்டிகையதனைத்தள்ளிக்குளிர்புனற்கன்னியனான்
பண்டையிலிசைவுசெய்தானபாரினீபடாதியென்றான். (௧௬)

என்னலுங்காஞ்சிதன்னிலெம்பிரானுலகமீன்ற
வன்னைதன்னன்புகாட்டவழைத்திடவந்தகம்பை
நன்னதிபோலவிண்ணுஞாலமுநடுங்கவார்த்துப
பொன்னியாறுலகந்தன்னிற்பொள்ளெனப்பெயர்ந்ததன்றே. (௧௭)

பெயர்தலுமுமைதன்பிள்ளைபிள்ளையினுருவநீத்துப்
பயிறருமறைநூல்வல்லபார்ப்பனமகன்போற்செல்லச்
சயமிகுதவத்தின்மேலோனறன்மையங்கதனைநோக்கி
யுயிர்முழுதடவேதோன்றுமொருவன்போலுருத்துநின்றான். (௧௮)

தேவனோவவுணன்றானோவரக்கனோதிறலின்மேலோன்
யாவனோவறிதறேற்றேனீண்டுறுநதியைச்சிந்திப்
போவனோசிறிதுமெண்ணுவகந்தையன்போலுமம்மா
யாவனோவண்மைதன்னையறிகுவன்விரைவினென்றான். (௧௯)

விரைந்தவன்பின்னரேகமெய்வழிபாடுசெய்வோ
ரரந்தையைநீக்குமெங்கோனச்சுறுநீரன்போல
விரிந்தனன்போதலோடுமிருகையுங்கவித்தமாக்கித
துரந்தனன்முனிவன்சென்னிதுளக்குறத்தாக்கவுன்னி. (௨௦)

குட்டுவான்றுணிந்துசெல்லுங்குறுமுனிக்கணியனாகிக்
கிட்டுவானவிசும்பினூடுகிளருவான்றிசைகடோறு
முட்டுவான்பின்புபாரின்முடுகுவானனையன்கைக்கு
மெட்டுவான்சேயனாகியேகுவானெவர்க்குமேலோன். (௨௧)

இப்படிமுனிவன்சீற்றத்தலமரயாண்டுமேகித்
இப்பினன்றிரிதலோடுஞ்சாலவுந்தளர்ச்சியெய்திச்
செப்பரிதிவன்றனமாயஞ்செய்வதெனினியானென்று
வொப்பருந்தவத்தோனுன்னவெந்தையஃதுணர்ந்தானன்றே. (௨௨)

ஓட்டமோடலவுமுன்னோனல்லையிற்றனதுமேனி
காட்டினன்முனிவன்காணுக்கதுமெனக்கலங்கியந்தோ
கோட்டிபமுகனோவீண்டுக்குறுகினனவனையானோ
வீட்டொடுதுரந்தேன்கொல்லென்றேங்கினனிரங்குகின்றான். (௨௩)

இரங்கியமுனிவன்முன்னமேந்தலைப்புடைப்பான்கொண்ட
கரங்களையெடுத்துவாணிற்காருருமேறுவெற்பி
னுரங்கிழிதரவேவீங்காதுரப்பினில்வீழ்வதேபோல்
வரங்கெழுதனதுநெற்றிவருந்துறத்தாக்கலுற்றான். (௨௪)

தாக்குதல்புரிந்தகாலைத்தாரகப்பிரமமான
மாக்கயமுகத்துவள்ளல்வரம்பிலாவருளினோடு
நோக்கியுன்செய்கையென்னைநுவலுதிகுறியோயென்னத்
தேக்குறுதமிழ்தேர்வள்ளலினையதுசெப்புகின்றான். (௪௫)

அந்தணகுமரனென்றேயையநின்சிரமேற்றாக்கச்
சிந்தனைபுரிந்தேன்யாதுந்தெளிவிலேனதற்குத்தீர்வு
முந்தினனியற்றுகின்றேனென்றலுமுறுவல்செய்து
தந்தியின்முகத்துவள்ளலமரலவிர்தியென்றான். (௪௬)

என்றலுந்தவிரநதுமுன்னோனிணையடிமிசையேபல்காற்
சென்றுசென்றிறைஞ்சியன்னோனசீராதியதெவையும்போற்றி
யுன்றிறமுணரேனசெய்ததவற்றினையுளத்திற்கொள்ளே
னன்றருள்புரிதியென்னநாயகனருளிச்செய்வான். (௪௭)

புரந்தரனெந்தைபூசைபுரிதருபொருட்டாலிணடோர்
வரந்தருகாமர்தணகாவைத்தனனதுநீரின்றி
விரைந்துபொலிவுமாழ்கிவெறுந்துகளாதலோடு
மிரநதனனபுனலவேட்டெமமையியல்புடன்வழிபட்டிந்நாள். (௪௮)

ஆதலிறகொடிபோல்யாமுன்னருமபுனற்குடிகை * மீது
காதலிதிருந்துமெல்லக்கவிழ்ததனமதனையீண்டுப்
போதலுற்றிடவுஞ்சொறரும்பொருதுநீசெய்தவற்றில்
யாதுமுட்கொள்ளேமவவாறினிதெனமகிழ்துமன்றே. (௪௯)

ஈண்டுநீபுரிந்ததெல்லாமெமக்கிதோராடலென்றே
காண்டுமாலன்றிநினபாற்காய்சினஙகொண்டேமல்லே
நீண்டசெஞ்சடையெமமையனேயனியெமக்குமற்றே
வேண்டியவரங்களீதுங்கேண்மதிவிரைவினென்றான். (௫௦)

வே று.

என்னாவிதுசெப்பலுமெமபெருமான், முன்னாகியதோர்முனிவன்பணியா
வுன்னாருளெய்தலினுய்ந்தனன்யா, னனாயகனேயெனவோதவில்வான். (௫௧)

நின்பாலினுமந்நெடுமாலுணரான், றனபாலினுமேதமியேன்மிகவு
மன்பாவதொாதனமையளிததருணீ, யின்பாலதுவெஃகுவனெப்பொழுதும். (௫௨)

இன்னேதமியேனெனவேயினிநின், முனனேநுதலின்முறையாலிருகை
கொன்னேகொடுதாக்குநர்தங்குறைதீரத், தன்னேயெனவந்தருள்செய்யெனவே. ()

மூத்தண்டமிழ்தேர்முனியீதறைய, வத்தன்குமரனவைநல்கினமா
வித்தன்மையவேயலதின்னமுநீ, சித்தந்தனில்வேண்டியசெப்பெனவே. (௫௪)

கொள்ளப்படுகுண்டிகையிற்குடினை, வெள்ளப்பெருநீர்மிசையுற்றடிக
டள்ளக்கவிழ்வுற்றதுதாரணிமே, லெள்ளிற்சிறிதுமிலதென்றிடவே. (௫௫)

ஊனாயுயிராயுலகாயுறைவோன், மேனாளருள்செய்வியன்மாநதிதான்
போனாலதுபோற்புனலொன்றுளதோ, நாளாடிடவேநலமானதுவே. (௫௬)

அந்நீர்மையினாலடியேற்கிவணீ, நன்னீர்நவையற்றதுநல்கெனவே
கைந்நீர்மையினாற்கடுகின்றுணையா, மூந்நீரயிலுமுனிவன்மொழிய. (௫௭)

காகத்தியல்கொண்டுகவிழ்த்திடமுன், போகுற்றபுதுப்புனலாற்றிடையே
மாகைத்தலநீட்டினன்வானுலவு, மேகத்திறைமால்கடல்வீழ்ந்தெனவே. (௫௮)

---

* குண்டிகை எனற்பாலது குடிகையென்றாயிற்று.

அள்ளிச்சிறிதேபுனலம்முனிவன், கொள்ளப்படுகுண்டிகையுய்த்திட னு
முள்ளத்தைநிரப்பியொழிந்ததெலாம், வெள்ளத்தொடுபார்மிசைமேவியதே. (௫௯)

முன்னுற்றதுபோன்முனிகுண்டிகைநீர், துன்னுற்றதுமேற்றொலையாவகையா
லென்னிப்புதுமையெனநோக்கினனுற், றன்னுற்றமனத்தவமாமுனியே. (௬௦)

பேருற்றிடுமிப்பெருநீரதனில், வாரிச்சிறிதேவருகுண்டிகையிற்
பாரித்தனனிப்படிமுற்றுறுவா, னுரிப்படிவல்லவராயினுமே. (௬௧)

அந்தத்திருமாலயனேமுதலோர், வந்தித்திடவேவரமீந்தருளி
முந்துற்றிடுமூலமொழிப்பொருளா, மெந்தைக்கரிதோவிதுபோல்வதுவே. (௬௨)

என்றேநினையாவிபமாமுகவற், சென்றேபணியாச்சிறியேன்குறையா
யொன்றேனுமிலேனுதவுற்றனைநீ, நன்றேகவிழுநதிநீரையுமே. (௬௩)

முந்தேமுதல்வாமுழுதுன்னருளா, லந்தேயளவுமளியிற்சிறியே
னுய்ந்தேனினியுமமுனையுன்னுழிநீ, வந்தேயருளகூமறவேலெனவே. (௬௪)

அற்றாகவெனவருள்செய்தயலே, சுற்றாவருதொல்படையோடுமெழாப்
பற்றானவர்நாடுபரம்பொருள்சேய், மற்றாரும்வியப்பமறைந்தனனே. (௬௫)

வேறு

மறைகின்றவெல்லைதனிற்குறுமுனிவிம்மிதமாய்மன்னுயிர்களெனகு
முறைகினறதனிமுதல்வன்புதல்வன்றன்கோலததையுணாந்துபோறறி
யறைகினறகாவிரியைக்கண்ணுற்றுநகைத.துவெகுண்டருள்கைநாடி
யுறைகின்றகொங்குதனையொருவித்தெனறிசைநோக்கியொல்லைசென்றான். (௬௬)

காவிரிநீங்குபடலமுற்றிற்று.

திருவிருததம் - ௧,௩௩௩.

# திருக்குற்றாலப்படலம்.



செற்றாலமுயிரனைததுமுண்டிடவேநிமிாநதெழவுஞ்சிந்தைமேற்கொள்
பற்றாலங்கதுநுகாந்துநான்முகனேமுதலோாதமபாவைமாாகள்
பொற்றாலிதனையளித்தோனபுகழ்போறறிமுகினமேனிப்புததேள்வைகுங்
குற்றாலமாவதொருவளநகரைக்குறமுனிவன்குறுகினனால். (௧)

அப்பதியிலச்சுதனுக்காலயமொன்றுளதமமாவவனிமீதி
லொப்பிலதோர்திருமுற்றமஃதெனபரிமபரெலாமும்பர்தாமுஞ்
செப்புவராயிடைதன்னிலந்தணாகளளப்பிலவோாசெறிவரன்னுர்
மெய்ப்படுநூனமுறைகண்டுமோகததாறறமதுமதமேற்கொணடுள்ளார். (௨)

அன்னவர்களெம்பெருமான்றனனடியாாதமைக்காணினமுன்றுபொங்கி
முன்னுறுதொல்பகைஞரெனமிகவிகழ்ந்துமற்றவர்தமுகநோக்காராய்த
துனனெறியேமேற்கொண்டுமறைபயில்வோரென்பதொருசொல்லேதாங்கித்
தந்நெறியும்புரியாதவகிருந்தனராலஃதுணர்ந்தான்றமிழ்நர்கோமான். (௩)

குறுமுனிவனுங்கவர்தஞ்செயலுணர்ந்துகுற்றாலமென்னுமூதூர்
மறுகினிடையேகடந்துமாயவன்றனலயமுன்வருதலோடு
நெறிவருமவ்வாலயத்திற்செறிகின்றவைணவர்கணெடிதுநோக்கிச் [ர்.
செறுநாதமைக்கண்டுபதைபதைப்பாரபோல்வெய்துயிரததுச்செயிர்ததுச்சொல்வா

ஒல்லாதகண்டிகையுநீறுமணிந்தனையதனானுலகிற்றேவ
ரெல்லாருமறியவையமேற்றானுக்கடியவனீயீண்டுசெல்லச்
செல்லாதுகைத்தலத்திலொருகோலுங்கொண்டனையாற்சிறியைபோலு
னில்லாயெம்பெருமான்றன்மாநகரமணுகாதுநீங்குகென்றார். (௫)

என்றிடலும்வெகுளாதுநகைசெய்துமறைநெறியையிகந்துநின்றீர்
துன்றியிவனுறைகின்றதுணரேனித்திறமெவருஞ்சொன்னாரில்லை
நன்றுநெறியென்றுவந்தேனும்பான்மையுணர்வேனோனானிம்மூதூர்
சென்றிடவுகினையேனான்முனியற்கயான்மீண்டுசெல்வேனென்றான். (௬)

பொதியமலைதனிலேகுமுனிவனிதுபுகன்றிடலும்பொறாதுநீயிப்
பதியதனில்வருவதுவும்பாவமாமீண்டுநீபடர்தியென்ன
விதுசாதமொழிந்தீர்கடொல்லோதநூன்முறையுமீதேயென்னா
விதியருளுந்தக்கனார்வழிமுறையோர்தமைநீங்கிமீண்டுசெல்வான். (௭)

சிட்டர்புகழ்கயிலைமலைகாத்தருளுந்திருநந்திதேவன்செங்கேழ்
மட்டுறுபங்கயத்துறையுநான்முகத்தோன்றருவாசன்மறைநூல்யாவுந்
தட்டறவேயுணர்பிருகுகவுதமன்கண்ணுவமுனிவன்றதீசியினரோ
ரிட்டபெருஞ்சாபமெலாம்பொய்த்திடுமோவெனவுன்னியேகலுற்றான. (௮)

ஏகலுறுகுறுமுனிவனுயிர்க்குயிராய்நின்றானையிகழ்வார்தங்கண்
மோகமுறுமகந்தையினைமுதலோடுங்களைவெனெனமுன்னிமுனனாட்
போகியதன்மாயையினாலிரதத்தினாவிபடுபொன்னேபோலப்
பாகவதமாகுவதோருருக்கொண்டான்கருணையினாற்பரவைபோல்வான். (௯)

ஆளுடையநாயகன்பாலன்புடையான்மாயவன்றனடியனேபோற்
கோளுடையமாயத்தான்மேனிகொண்டுமீண்டுமங்கட்குறுகலோடு
நீளிடையில்வரக்கண்டவயிணவர்களெதிர்சென்றுநெடிதுபோற்றித்
தாளிடையில்வீழ்ந்திடலுநாரணனுக்காகவெனச்சாற்றினான். (௧௦)

அடிமுறையின்வணங்கியெழும்வேதியர்தங்களைநோக்கியரிபாலன்பு
முடிவிலைநுமபாலென்றுமொழிந்தனரங்கதுகாணமுனனிவந்தாம
படியதனிலுமக்குநிகாயாருமிலைநுமைக்கண்டபரிசால்யாமுந்
தொடர்வரியபேருணர்வுபெற்றனமென்றேபினனுஞ்சொல்லலுற்றான். (௧௧)

முத்திதருபேரழகர்திருமலை * யினிடையறறோமுன்னமின்னே
யத்திகிரி † தனில்விருப்பச்செல்கின்றோநமபெருமானமருங்கோயி
லிததலமேலுளதெனபரதுபரவுமவிருப்புடையோமென்னவன்னோர்
கைத்தலத்தோர்விரற்சுட்டியதுதிருமாலிருக்கையெனக்காட்டலுற்றார். (௧௨)

காட்டுதலுங்கைதொழுதுமாலுறையுமந்திரத்தைக்கடிதுநண்ணி
யீட்டமுடன்வலஞ்செய்துகண்ணபிரானடியிணையையிறைஞ்சியேத்திப்
பாட்டிலுறுதொல்லடியார்தமைநோக்கியிவரைவழிபடுதற்குள்ளம
வேட்டனமான்மஞ்சனமேமுதலியனகொணர்மின்கள்விரைவினென்றான். (௧௩)

நன்றெனவேசிலரேகித்தூயதிருமஞ்சனமுநறுமென்போது
மன்றலுறுசெஞ்சாந்துமணிதுகிலுமேலையவுமரபிற்கொண்டு
சென்றுமுனிவரான்முன்னமுய்த்திடலுமனையவர்தந்திறத்தைநோக்கி
யின்றிவரையருச்சனைசெய்விதிமுறையைப்பார்த்திடுங்கள்யாருமென்றே. (௧௪)

---

* முத்திதருபேரழகர் திருமலை என்பது மேருவையும்,
† அத்திகிரி என்பது பொதியத்தையுங் குறிப்பாலுணர்த்தின.

அறுகுமதிநதிபுனையுஞ்செஞ்சடையெம்பெருமானையகத்துட்கொண்டு
சிறுகுமுருவுடையமுனிகாரணனார்திருமுடிமேற்செங்கையோச்சிக்
குறுகுகுறுகெனவிருத்தியொள்ளரக்கிற்புனைபாவைக்கோலமீது
மறுகுதழலுற்றென்னக்குழைவித்தோர்சிவலிங்கவடிவஞ்செய்தான். (௧௫)

அல்லிமலர்ப்பங்கயனுநாரணனுமெந்நாளுமறியொணாத
வெல்லையிலாப்பரம்பொருளைத்தாபித்துமந்திரங்களெடுத்துக்கூறித்
தொல்லையுருக்கொண்டுமலர்மஞ்சனமேமுதலியனதூயவாக்கி
யொல்லைதனிலருச்சிப்பக்கண்டலுமவ்வந்தணர்களுருத்துச்சொல்வார். (௧௬)

காயத்தான்மிகச்சிறியன்முப்புரத்தைநீறாக்குங்கடவுட்காற்ற
நேயத்தானிவ்விடையேமுன்வந்தான்யாமிகழுநில்லாதேகி
யாயத்தான்பாகவதவடிவாய்வந்திச்சமயமழித்தானந்தோ
மாயத்தானைப்பற்றுமினோகடிதென்றுகுறுமுனியைவளைந்துகொண்டார். (௧௭)

பற்றிடுவான்வளைகின்றார்தமைநோக்கியெரிவிழித்துப்பரவைதன்பா
லுற்றவிடமவித்ததெனமுனிவன்றன்வெகுளித்தீயுய்த்தலோடுஞ்
சுற்றியதுசுற்றியவர்தமைப்பின்னும்பொறிபடுத்தித்துரந்துசெல்ல
மற்றவர்களிரிந்தேதம்பதியிழந்துசிதறினரானமண்மேலெங்கும். (௧௮)

அன்னோர்கள்போயிடலுமின்றுமுதற்சிவனிடமீதாயிற்றென்று
முன்னோனையருச்சித்துப்பணிந்துவிடைகொண்டுதென்பான்முன்னிச்சென்று
பொன்னோடுமணிவரன்றியருவியிழிதருபொதியப்பொருப்பினண்ணி
மன்னோமெய்த்தவம்புரிந்துவீற்றிருந்தானப்பரமன்மலர்த்தாளுன்னி. (௧௯)

வேறு

பூவிரிகின்றகாமர்பொதும்பர்சேர்பொதியவெற்பிற்
றாவிரிகும்பத்தண்ணல்வாழ்ந்திடுதன்மைசொற்றாம்
மாவிரிகின்றசாதிவனத்திடைமலர்ப்பூங்காவிற்
காவிரிபோந்தவாறுமேனவுங்கழறுகின்றாம். (௨௦)

திருக்குற்றாலப்படலமுற்றிற்று

ஆ திருவிருத்தம் - ௧,௩௫௫.

---

## இந்திரனருச்சனைப்படலம்.

கொடியுருக்கொண்டுமுன்னங்குண்டிகையிருந்தபிள்ளை
படிமிசையதனைத்தள்ளப்படர்ந்தகாவிரியின்றன்மை
விடலருந்தளையினீக்கிவியனெறிப்படுத்தலோடு
மடிகளினருளாற்செல்லுமாருயிர்போன்றதன்றே. (௧)

பண்டொருதந்தியானோன்படர்சிறைப்புள்ளாய்த்தள்ளக்
குண்டிகையிருந்தநீத்தங்குவலயம்படர்ந்தபான்மை
யெண்டருந்தடையால்வல்லோனிருங்கடத்திட்டபாந்தண்
மண்டலத்தொருவனீப்பவழிக்கொளல்போன்றதன்றே. (௨)

ஏதத்தினொழுக்குநீக்குமிறைவனாலொழுக்குந்தொல்லை
வேதத்தினொழுக்குநோற்றுவீட்டினையடையுநீரார்
போதத்தினொழுக்குமெங்கோன்புரிதருகருணையென்னு
மோதத்தினொழுக்குமென்னக்காவிரியோடிற்றன்றே. (௩)

தள்ளரும்பரவையேழுந்தரணியைச்சூழ்ந்துநின்ற
வள்ளுறுதொடர்புமாடியாலையுமொருங்குநண்ணிப்
பொள்ளெனப்புகுந்ததென்னப்புவியெலாம்பரவியார்த்துத்
தெள்ளிதிற்கலங்கிநீத்தந்தெளிகிலாதொழுகிற்றுமால். (ச)

தெண்டிரைப்புணரியெல்லாந்தினைத்துணையாகவாரி
யுண்டருண்முனிவன்றீர்த்தமொன்றினைவேண்டுமெல்லை
யண்டர்தம்பெருமானல்கவன்னவன்கரத்திலேந்துங்
குண்டிகைப்புனற்குநேராக்கூறுதற்குவமையுண்டோ. (ரு)

தொல்லையிற்குறியோன்வந்தான்றுய்க்குமோவின்னுமென்று
வல்லையிற்றழைகள்பற்றிவாரிதிகூவிப்பாரி
னெல்லையிற்படர்ந்ததென்னவிலைசெறிபொதும்பரீட்ட
மொல்லையிற்பறித்துமேல்கொண்டோடியதொலிகொணீத்தம். (சு)

சந்தமுமகிலுஞ்சங்குந்தரளமுங்கவரிதானுஞ்
சிந்துரதெயிறும்பொன்னுமணிகளுந்திரைமேற்கொண்டு
வந்திழிநதியின்றன்மைவருணனிப்பொருள்களெல்லா
மிந்திரன்றன்பாலோச்சவேகுதல்போன்றமாதோ. (எ)

வரையெனுந்தடம்பொறநேருமதகரிதொகையுமார்ந்தா
நிரைகளுந்தரங்கமாவுநெறிக்கொடுமகவான்றன்பால்
விரைவொடுசேறல்சூரன்விண்ணவாக்கரசன்மீது
பொரவிடுதானைவெள்ளம்போவனபோன்றதன்றே. (அ)

ஆவதோரினையவாற்றாலலையினுலகல்வான்முட்டிக்
காவதம்பலவாயான்றுகாசினியளந்துகீழ்பாற்
போவதோபொன்னிநீத்தம்புரந்தரனிருந்துநோற்குந்
தாவறுவனத்திறபோதாதண்டலைபுகுந்ததன்றே. (கூ)

ஓடுநீர்நீத்தப்பொன்னியொல்லையிற்காமர்காவிற்
பீடுறவருதலோடும்பேதுறுமகவான்காணு
வாடினனகைத்தானெங்கோனருச்சனைமுடிந்ததென்று
பாடினன்முதல்வன்றாளைப்பரவினன்படர்ச்சிதீர்ந்தான். (கO)

சீரினையகற்றிநீங்காத்திருவினைமாற்றிதொல்பே
ரூரினைக்கவர்ந்துதன்னேருயிருக்குமிறுதிநாடுஞ்
சூரனைவென்றாலென்னதொலைவிலாமதர்ப்புமிக்கா
னரவனுளத்திற்கொண்டவுவகையையறைதற்பாலார். (கக)

பாடுறுபொன்னிநீத்தம்பாய்தலுமகவானேபோல்
வாடுறுகின்றதண்காவல்லையிற்கிளர்ச்சியெய்தி
யாடுறுபசிநோயுற்றோரரும்பெறலமிர்தம்வந்து
கூடுறநுகர்ந்தாலெனனக்குளிர்ப்பொடுதளிர்த்ததன்றே. (கஉ)

வானிறைகின்றகொண்மூவார்துளிதலைஇயபின்றைக்
கானிறைமரனும்பூடும்வல்லியுங்கவின்றாலென்ன
மேனிறையடைகண்மல்கிவிரிதருசினையும்போதுந்
தானிறைகின்றதம்மாசதமகன்வளர்த்தபூங்கா. (கங)

வேறு.

வானிலமளவிடவளர்ந்தபுன்னைக, ளானவைமுழுவதுமரும்புகின்றன
ஞானகைதித்திலத்தொடையன்மெய்யுடை, நீணிறமாயவனிலேஇயதொக்குமால். ()

தண்ணுறுபாசடைதயங்குபுன்னைகள், கண்ணுறுவியன்சினைகவினப்பூத்தன, வெ
ண்ணுறுதாரகையீண்டிமொய்த்திட, விண்ணுறுமுகிலினம்விளங்கிற்றென்னவே.()

பண்படுமெளியினம்பயிலுமுருதன, சண்பகவணிமரந்தயங்கிப்பூததன
வெண்படுதபனியததியன்றபோதினை, விணபடுதருக்கொடுமேவல்போன்றவே. ()

புயற்படலந்தொழும்புதுமென்பாடலம, வியற்படமலர்ந்தபூவிழுமென்வண்டின
மயற்படவூதுவான்வயந்தக்கம்மியன, செயறபடுமணிசசிறுசின்னமபோலுமால். ()

விண்டொடர்மதிகதிர்மிளிருந்தாரகை, கணடிடவைகலுங்கணிப்பில்கண்ணடி
மண்டலகிரைத்துமண்மாதுவைததெனக், கொண்டலேயளவியகோங்குபூத்தவே.()

மாமலர்க்கொன்றையுமணிமென்பூவையுந், தாமிருபடையுறத்தளிர்த்தசெய்யமா
வேழுறுமாலயனிடையில்வந்தெழு, தோமறுபரஞ்சுடாததோற்றமபோன்றவே.()

ஆதவன்மீதுபோயசையுநதாழைகண, மேதகுபாளைகண்மிசைதந்துற்றன
பூதலமணங்கினர்புனையசீட்டிய, கோதறுநிதிலகக்கோவைபோனறவே. (உ0)

வச்சிரமேனியவரைகொள்காட்சிய, பசசிளமபூகமம்வெண்பாளைகானறன
நச்சுறுசோலையாநஙகைகடகெண்ணிலா, ரெசசமிசைாமரையிரட்டவேநதல்போல்.

மேற்றிகழ்செஙகரவீரமானவை, யாறறவுஞசினைதொறுமருமபுகின்றன
நாற்றடமபுயமுடைநாதநிகிநதிர, னேறறியமணிசசுடரெனனலாயதே. (உஉ)

அல்லிடையன்றியேயலர்ந்தமாலதி, வல்லிகடருவெனுமகிழ்நாதங்களைப், புல்லுவ
பகலினும்பொருந்துமோவெனு, முல்லேகணமலாந்தனமுறுவல்செய்வபோல. ()

ஆசறுவாவியிலலாந்தகாவிகள், பாசடையிடையிடைபரவுகினறன
தேசுறுதருநிழற்றிருவிறறுஞசிய, வாசவனவிழிகளின்மலருகினறவே. (உச)

தொல்லையின்முறைநெறியொருவிததோயமேல,வலலையிலஙகிகள்வந்துற்றுலென
வல்லியுஞ்சேயனவரததவாமபலும்,புலலியகிடஙகினிறபொலிநதுபூததவே. (உரு)

பாயிரும்புனற்கயம்பரந்தபாசடை, யாயினவிடையிடையவிழ்ந்தபங்கயச்
சேயலர்வண்டினந்திளைப்பசசோவன, காமெரிபுகையொடுகானம்புக்கபோல்.(உசா)

எண்ணுமிததருக்களுஙகொடியுமேனவுங, கண்ணுறமலாவதுமருமபுங்காட்சியும்,வ
ண்ணமதெற்றெனினமாலைசசெக்கரும,விணணுறுமூடிக்களும்விரவிற்றுக்குமால்.

இந்திரன்மகிழ்வுறவிளையபான்மையா, னந்தனவனமெலாநன்றுபூத்தனு
மந்தநன்மலாகொடேயாதிக்கன்பினை, முந்துறுபூசனைமுயலமுன்னினான். (உஅ)

விடியல்வைகறைதனின்மேவிவண்டுதேன, புடையுறுமுன்னரேபுரையிலாத
தோர், கடிமலர்கொய்தனன்கொணர்ந்துகணனுத, லடிகளில்விதிமுறையருச்சித்
தானரோ. (உக)

அப்பெருநாண்முதலாதியண்ணலை, யிபபடியருசசனையியற்றிவைகலு
மொப்பறநோற்றரோவும்பர்கோமகன், வைப்புறுசணபகவனததின்வைகினான். ()

இக்திரனருச்சனைப்படலமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - க,ங-அங.

# தேவர்புலம்புறுபடலம்.

அந்நாளதனிலவுணர்க்கிறையேவ
றன்ஞான்மிகவுந்தளர்ந்துசிலதேவ
ரெந்நாளிப்புன்மையெமைநீங்குமென்றிரங்கிப்
பொன்னாடுவிட்டுப்புவிதன்னிற்போந்தனரே. (க)

தீந்தமிழின்வைப்பானதெக்கிணதேயநண்ணி
மாந்தர்புகழ்காழிவனம்போந்துவானவர்தம
வேந்துதனைக்கண்டுவிரைநாண்மலரடிக்கீழ்ப்
போந்துபணிந்துபுகழ்ந்துபுகல்கின்றார். (உ)

ஒன்றேதருமமொழிந்துபுவனமெலாஞ்
சென்றேயடுகின்றதீயவுணாதந்துடக்கி
லன்றேயெமைவிட்டகன்றாயுனக்கிதுவு
நன்றேயெமையாளுநாயகனுநீயன்றோ. (ங)

கோட்டுக்களிற்றோடுங்கோளரியோடும்புவியை
வாட்டுற்றிடுஞ்சூரவல்லியதின்வனசிறையி
லீட்டுற்றதேவரெனுமபசுக்கடம்மையெலாங்
காட்டிக்கொடுதுக்கரந்தெதன்கொல்காவலனே. (௪)

ஏனம்பசுமானிரலைமரைபடுதத
வூனுமவடியுமொலிகடலினுள்ளபல
மீனுஞ்சுமந்துவிறலசுராக்கேவல்செய்து
மானஙகுலைந்துமறந்தோமறைகளுமே. (ரு)

மையாகளத்தார்வரம்பெற்றசூரனுக்குச்
செய்யாதவேவலெலாஞ்செய்தோநெறிநீதி
யெய்யாதமானமிவையெல்லாந்தாணிழந்தோ
மையாமிகவுமலுததோமலுததோமே (சு)

மூந்நாளுந்தந்திமுகததவுணனேவல்செய்து
பன்னாளுழன்றோம்பரமரதுதீர்ததாா
பின்னாளுஞ்சூரன்பெயாததுமெமைவருத்த
விந்நாடிரிந்தோமினிததானமுடியாதே. (எ)

எந்நாளுமுன்னைப்புகலென்றிருந்தவியாந்
துன்னவவுணராற்சோர்ந்துதுயருழப்ப
வுன்னாருயிர்காத்தொளித்திங்கிருந்தனையான்
மன்னவுனக்குத்தகுமோவசையன்றோ. (அ)

சூரன்முதலாச்சொலப்பட்டவெவவசுரர்
வீரங்குலைந்துவிளிவதற்குமிவவுலகி
லாருமபழிக்கத்திரிகின்றோமாகுலங்க
டீரும்படிக்குஞ்செயலொன்றுசெய்வாயே. (க)

என்றுப்பலவுமியம்பியிரங்குதலு
மன்றகியமகவான்மாற்றமவைகேளா .
வன்றூர்மனங்கொண்டவாகுலத்தைக்கண்டுகொடி
துன்றவயராவுயிராவுரைக்கின்றான். (௰)

மாயையுதவவருகின்றவெஞ்சூரன்
தீயபெருவேள்விசெய்யத்தொடங்குமன்றே
போயநமதுரிமைபொன்றுமெந்தோற்றனமென்
றேயுமுணர்வாலுமக்கங்குரைத்திலனே. (௧௧)

அற்றேமகஞ்செய்தமலன்றருவரங்கள்
பெற்றேநமதுபெரும்பதமுங்கைக்கொண்டு
சற்றேனுமன்பில்லாத்தானவர்கோன்றாழ்வான
குற்றேவலைநம்பாற்கொண்டானகுவலயத்தே. (௧௨)

நீள்வாரிதியினெடுமீன்பலசுமந்து
தாழ்வாம்பணிபிறவுஞ்செய்துந்தளர்ந்துலகில்
வாழ்வாமெனவேமதித்திருந்தோமற்றதன்றிச்
சூழ்வாலொருதீமைசூரபன்மனுன்னினனே. (௧௩)

என்னேயத்தீமையெனவேவினவுங்காற்
பொன்னேயனையபுலோமசையைப்பற்றுதற்குங்
கொன்னேயெனையுங்கொடுஞ்சிறையில்வைப்பதற்கு
முன்னேநினைந்தானமுறையில்லாத்தீயோனே. (௧௪)

ஆனசெயலுன்னியனிகந்தனைநம்பால்
வானுலகிலுய்ப்பமதியாலஃதுணர்ந்து
நானுமிவளுநடுநடுங்கியச்சுற்று
மேனிகரந்துவிரைந்துவிண்ணைநீங்கினமால். (௧௫)

மீனும்வடியும்வியன்றசையுந்தான்சுமந்த
வீனமதுவன்றியீதோர்பழிசுமக்கின்
மானமழியவருமேயதுவன்றித்
தீனமுறுசிறையுந்தீராதுவந்திடுமே. (௧௬)

வெய்யவர்தம்வன்சிறையின்வீழின்முடிவில்லா
வையனடிகளருச்சித்தியாமெல்லா
முய்யவவுணருயிரிழப்பமாதவத்தைச்
செய்யுநெறியுண்டோவெனச்சிந்தைசெய்தனனே. (௧௭)

சிந்தையதனிலினையசெயலுன்னி
யந்தமறுதுயரத்தாழுநுமைவிட்டு
வந்துபுவியின்மறைந்துதவஞ்செய்துமுக்க
ணெந்தையடிகளருச்சித்திருந்தனனே. (௧௮)

அல்லல்புரியுமவுணர்பணியால்வருந்தித்
தொல்லையுளமேன்மையெலாந்தோற்றனமேமற்றினிநா
மெல்லவரும்வெள்ளிமலைக்கேகியிறைவனுக்குச்
சொல்லிநமதுதுயரகற்றிக்கொள்வோமே. (௧௯)

வம்மினெனவுரைப்பவானோரதுகேளா
வெம்மினதுகண்டவியன்கண்டகியெனவு
மம்மென்மயிலெனவுமாடிநகைசெய்து
தம்மின்மகிழ்ந்துமதர்ப்பினொடுசொற்றனுற்றார். (௨௦)

கோவுநீயெங்கள்குரவனுநீதேசிகனீ
தேவுநீமேலார்திருவுநீசெய்தவநீ
யாவிநீமற்றையறிவுநீயின்பதுன்பம்
யாவுநீயாகிலெமக்கோர்குறையுண்டோ. (உக)

பார்த்துப்பணித்தபணிசெய்துநின்றன்னை
யேத்தித்திரிதலெமக்குக்கடனுரு
நீத்துத்துயரநெறியுறுதகியெம்மையென்றுங்
காத்துப்புரத்தலுனக்குக்கடனையா. (உஉ)

தேராவவுணர்திறந்தன்னைமுன்றடிந்தாய்
சூராதியருயிருங்கொள்ளுநெறிசூழ்கின்றாய்
பாராளவாக்குமபலமுனிவாக்குஞ்சுராக்கு
மாராயினீயன்றியாரேதுணையாவார். (உங)

ஆதலாமலங்களலககணகறறுவான
காதலாயததனகயிலைகெகைமககொணடு
போதுநீயெனனப்புரந்தரனுநனறெனறு
கோதிலாவுள்ளதொருசூழ்சசிகொணடனனே. (உச)

ஆவதொருகாலையமரர்கோன்றனெழுந்து
தேவாதமைநோக்கிச்சிறிதிங்கிருததிரென
வேவரையுமஙகணிருததியொருதானேகிப்
பாவையயிராணிபாஙகரணுகினனே. (உரு)

தேவர்புலமபுறுபடலமுற்றிற்று.

ஆ திருவிருததம - க,சoஅ.

# அயிராணிசோகப்படலம்.

அன்னம்பொருவுநடையாளவன்வரனு
முனனங்கெதிராமுறையாற்பலமுறையும்
பொனனஙகழலிணையைப்பூண்டுவணங்கியெழீஇ
யென்னிங்கொரெண்ணமுடனேகிறறிறையெனறாள். (க)

அம்மொழியைக்கேளாவரசனுரைசெய்வான்
வெம்மைபுரிசூரன்வியன்பணியாலேவருந்தி
யெமமையடைந்தாரிணையசிலதேவா
தம்முனிடர்பலவுஞசாற்றியிரஙகினரே. (உ)

அன்னார்மனங்கொண்டவாகுலமுநந்துயரும்
பொன்னார்சடைமுடியெம்புண்ணியற்குததாம்புகலி
னிந்நாளவுணர்க்கிறுவாய்தலைப்புரிந்து
தொன்னாளுரிமையளிப்பனெனுந்துணிவால். (ங)

ஆகின்றதன்பத்தழலாற்பதைபதைத்து
வேகின்றசிந்தைவியனமரர்தம்முடன்யான்
பாகொன்றுதீஞ்சொலுமைபாகன்பணிவரைக்குப்
போகின்றேனீதுபுகலுதற்குவநதனனே. (ச)

என்னும்பொழுதிலிடருற்றிகல்வாளி
தன்னங்கமூழ்கத்தளர்ந்துவீழ்மஞ்ஞையென
வன்னம்பொருவுநடையாளயிராணி
மன்னன்றிருமுன்மயங்குற்றுவீழ்ந்தனளே. (௫)

வீழ்ந்தாடரிக்கரிதாம்வெய்யதுயர்க்கடலி
லாழ்ந்தாடனதறிவுமற்றாள்பிரியாது
வாழ்ந்தாளென்செய்வாண்மகவானதுகண்டு
தாழ்ந்தாகுலத்தோடெடுத்தான்றடக்கையால். (௬)

ஆர்வமொடுகையாலணைத்தேயவளைத்தன்
னூருமிசையேற்றியுணர்ச்சிவரும்பான்மையெலாஞ்
சேரவொருங்காற்றச்சிறிதேதெளிவுற்றாள்
காரின்மலிகின்றமின்போலுங்காட்சியினாள். (௭)

சிந்தைமயக்கஞ்சிறிதகன்றுதேற்றமவர
முந்தையிடர்வந்துமுற்றுந்தனைச்சூழ்ந்த
வந்தமடமானதுபோழ்திற்றன்னுள்ள
நொந்துநடுங்கியினையநுவல்கின்றாள். (௮)

பொன்னாடுவிட்டுப்புவியின்வனத்திருந்து
முன்னாருள்கொண்டுவப்பற்றுமேவினனா
லெனனாருயிரேயெனைநீபிரிவாயேற
பின்னார்துணையான்பிழைக்குநெறியுண்டோ. (௯)

வாகததுநேமிக்கும்வான்பாடுபுள்ளினுக்கு
மேகதிறமுமவியன்மதியுமாவதுபோ
னாகத்துறைவோர்க்குநாயகமேநீயலதென்
சோகத்தைநீக்கித்துணையாவாரவேறுண்டோ. (௧௦)

அன்றியுனைப்பிரிந்துமாவிதனைத்தாங்கவல்லே
னென்றிடினும்யானொருத்தியாருந்துணையில்லை
யொன்றுநெறிநீதியுணராததீயவுணா
சென்றிடுவர்நாளுமவர்கண்டாற்றீங்கன்றோ. (௧௧)

நீடுபுகழ்சோகிருதாகோன்சூழ்ச்சியினாற்
றேடரியபொன்னுலகச்செல்வத்தைவிட்டிந்தக்
காடுதனில்வந்துகரந்துதவம்புரிந்து
பாடுபடுமாறும்பழிக்கஞ்சியேயன்றோ. (௧௨)

தீயவவுணர்திரிவரவர்சிறியர்
மாயைபலபலவும்வல்லாபவமல்லா
லாயதருமமறியார்பழிக்கஞ்சார்
நீயுமஃதுணராயன்றேநெடுந்தகையே. (௧௩)

உன்னன்புடையவொருமகனுமிங்கில்லை
துன்னுஞ்சுரருமில்லைதொல்களிற்றின்வேந்துமில்லை
பின்னிங்கொருமாதருமில்லைபெண்ணொருத்தி
தன்னந்தனியிருக்கவஞ்சேனோதக்கோனே. (௧௪)

பல்லாறெழுகிப்பவஞ்செய்யவுணரொனு
மொல்லாரெனைக்காணிறேடுவந்துபற்றினர்போ
யல்லாதனபுரிவராலனையபழி
யெல்லாமுன்பாலன்றியார்கண்ணேசென்றிடுமே. (௧௫)

மன்னேயிதுவோர்துணிவுரைப்பன்மன்னுயிர்கொண்
டின்னேதமியேனிரேனுலகில்யாவரையு
முன்னேபடைத்தளிக்குமுக்கணர்தம்வெற்பினுக்குன்
பின்னேவருவேன்பெயர்வாயெனவுரையா. (௧௬)

பின்றாழ்குழலிபெருந்துயரத்தோடெழுந்து
நின்றாளிறையுன்னிநேயத்தொடுநோக்கி
நன்றாலுனதுதிறனென்றுநாகரிறை
சென்றாவமோடவளைப்புல்லியிதுசெப்புகின்றான். (௧௭)

வாராய்சசியேவருந்தேலமரருடன்
காரார்களதேதோன்கயிலைக்கியான்போனு
லாராய்ந்துநின்னையளிப்பவரற்றலன்றே
பேரார்வமோடெனதுபின்னீவருவதுவே. (௧௮)

செய்யசடைமேற்சிறந்தமதிக்கோடுபுனை
துய்யவனும்வேலைத்துயின்றோனுஞ்சேர்ந்தளித்த
வையனெமக்கோரரணுகியேயிருக்க
நையன்முறையாமோநங்காய்நவிலுதியால். (௧௯)

ஏவென்றகண்மடவாயீசனருளன்றோனை
வாவென்றளியால்வழுத்திமனத்துன்னினிங்கே
மேவுங்கயிலையில்யான்மீண்டுவருந்துணையுங்
காவென்றுனையவன்பாற்கையடையாநல்குவனால். (௨௦)

ஆற்றல்பெரிதுடையவையனேநின்றனைப்
போற்றியருள்செய்யும்பொருந்துதியாலீண்டென்று
தேற்றுதலுமன்னனசிறப்பெவனகொல்செப்புகெனக்
கோற்றொடிகேளென்னுவமரேசனகூறுகின்றான். (௨௧)

அயிராணிசோகப்படலமுற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - ௧,௪௨௬.

---

# மகாசாத்தாப்படலம்.

முன்னம்பரமனருளின்றிமுருகுந்தனுதி
மன்னுஞ்சுரர்தானவர்வேலைமதித்தவேலைக்
கன்னங்கரியவிடம்வந்துழிக்காரினங்க
டுன்னும்பொழுதிற்குயில்போற்றுணுக்குற்றிரிந்தார். (௧)

அண்ணற்கயிலைக்கிரிதன்னிலடைந்துசெந்தி
வண்ணத்தமலனடிபோற்றவருந்தலென்றே
யுண்ணற்கரியபெருநஞ்சினையுண்டுகாத்துக்
கண்ணற்குமேனையவர்க்கும்மிலைகட்டுரைப்பான். (௨)

இன்னுங்கடைமினமுதம்மெழுமென்றுகூற
வந்நின்றவர்பாற்கடலின்கணடைந்துமுன்போற்
பின்னுங்கடைந்தாரிபமாமுகப்பிள்ளைதன்னை
முன்னம்வழிபட்டிலர்வந்துமுடிவதோரார். (௩)

என்னுயகற்குவழிபாடியற்றுதீராற்
கொன்னாகடலினடுமெத்தவகுலைந்துவீழ்ந்து
பன்னாகர்வைகுமிடஞ்செல்லவப்பானைமைநோக்கி
யன்னானையர்ச்சித்தனரச்சுதனாதியானோர். (௪)

ஆராதனைசெய்துழிமந்தரமாதிமைந்தன்
பேராவருளாற்பிலநின்றுபெயர்ந்துமுனபோல
வாராநிலைபெற்றிடலோடுமகிழ்ந்துபோற்றிக
காரார்திருமான்முதலோர்கடலைக்கடைந்தார். (௫)

கடைகின்றுழிசசெமமதியாமெனக்காமர்செம்பொ
னடைகின்றகும்பத்தெழுந்திட்டதமுதமங்கண
மிடைகின்றதொலலைச்சுராதானவாயாருமெஃகி
யுடைகின்றவேலையெனவார்த்தனரொல்லைசூழ்ந்தார். (௬)

எமமாலிதுவந்துளதாலெமக்கேயிதென்றே
தம்மாசையினாற்சுராதானவர்தம்மினமாறுய்த்த
தெம்மானமுடனபொரவுன்னலுந்திருவுநோக்கி
யமமால்விரைவினொருமோகினியாயினானே. (௭)

மூலம்பிறந்தவிடம்போலமுன்மூண்டிடாம
னீலம்பிறந்துபிறாச்சுறநோக்கிடாமன
ஞாலமபிறந்தோர்சுராதானவர்நச்சவாங்கோ
ராலமபிறந்ததெனமோகினியாகினின்றான். (௮)

சேணாருலகிற்புவிதன்னினிற்றிசையிலெங்குங
காணாதவப்பெண்ணுருக்கண்டனராகாதலகைமிக
கூணாரமுதந்தனைவிட்டுமுனனென்றுகணடோர
மாணாகியபலபொருள்கண்டெனவந்துசூழ்ந்தார். (௯)

மெய்த்தாமரையேமுதலாயவிசிகநானகு
முயத்தானமதவேளதுகாலையுலப்பில்காமப
பித்தாயுணர்வுபிழையாகிப்பெரிதுமாலா
யத்தாருகமாமுனிவோரினுமாரவமிக்கார். (௧௦)

எண்ணுவவுணர்தொகையல்லதையெனைதமாய
முண்ணுமவானோர்களும்பெண்மயலுற்றுநின்றார்
மண்ணாசைதன்னிற்பொருளாசையினமாயவாழ்க்கைப்
பெண்ணாசைநீங்கலெளிதோபெரியோர்தமக்கும். (௧௧)

பூண்டுற்றகொங்கைப்பொலன்மோகினியானபுத்தே
ளாணடுற்றவர்தங்களைநோக்கியமரைநீங்கு
மீண்டுற்றனன்யானமுதும்முளதேதுநீவிர்
வேண்டுற்றதும்பாலுறக்கொண்மின்விரைவினென்றான். (௧௨)

மாலானவனங்கதுகூறமனக்கிரிந்து
னோலாமையினுலிறக்கின்றவர்நோக்கியெங்கள்
பாலாவதுநீயெனமுன்வரும்பான்மைநாடி
மேலாமமுதேயெமக்கென்றனர்விண்ணுளோர்கள். (கங)

வானுடவர்நல்லமுதங்கொடுமாலையீங்கிப்
போனுரொருசாரவரோடுபொருததியோர்
தேனூர்மொழிமோகினியாகியசெங்கண்மாலை
யானுவிருப்பிற்கொடுபோயினராங்கொர்சாரில். (கச)

கொண்டேகியதானவர்தங்கள்குழுவைநோக்கித்
தண்டேன்மலர்ப்பாயலினென்னைததழுவவல்லா
னுண்டேயிதனிலொருவீரனுவனையின்னங்
கண்டேனிலையென்றனன்பெண்ணுருக்கொண்டகள்வன். (கரு)

ஈறுமவுணர்பலரும்மிதுகேட்டெனக்கு
மாறுயொருவரிலையாரினும்வன்மைபெற்றேன்
வீறுகியவீரனும்யானெனவீற்றுவீற்றுக்
கூறுவெனையேபுணரென்றுகுழீஇயினுரே. (கசு)

கொம்மைத்துணைமெனமுலையண்ணலைக்கூடயாரும்
வெம்மைப்படல்ரலிகல்கொண்டனர்வேறுவேறு
தம்மிற்பொருதுமுடிந்தாகினைதம்மிலுற்ற
செம்மைக்கனலான்முடிவுற்றிடுஞ்செய்கையேபோல். (கஎ)

அன்னூர்தொகையிலிருவோரரிமாயையுன்னி
யென்னுமிவரோடிறக்கின்றனமென்றுநீங்கித
தொன்னுளுருவநதனைமாற்றிச்சுரர்கள்போலாய்ப்
பொன்னுடவாதங்குழுவோடுபுகுந்துநின்றுர. (கஅ)

மாண்டாரவுணாதுநோக்கிவரம்பின்மாயம்
பூண்டாரும்வெஃகமடமாதெனப்போந்தகள்வன்
மீண்டானமரர்பலருமவிருப்புற்றுமேவ
வீண்டாழிதனனிலமுதந்தனையீதலுற்றுன். (ககூ)

ஈயும்பொழுதினிமையோர்களினத்தினூடு
போயஙகிருநதவிருகள்வரும்பொற்புமிக்க
மாயன்பகிருமமிர்தந்தனைமந்திரததா
லாயுமபடிகொண்டிலர்வல்லையினுர்தலுற்றுா. (உ0)

தண்டாமரைக்குப்பகைநண்பெனச்சாருநீரார்
கண்டாாபுடையுற்றவரிஙகிவர்களவரேயா
முண்டாரமுதங்கடிதென்றுளத்துனணியஙகண்
விண்டானவற்குக்குறிப்பால்விழிகாட்டினுரால். (உக)

காட்டுற்றிடலுமரிநோக்கியிக்கள்வரேயோ
வீட்டுற்றவானேருடனுண்குவரென்றுதன்கை
நீட்டுற்றிடுசட்டுவங்கொண்டிருதர்சென்னி
வீட்டிச்சுரருக்கமுதூட்டிவிருந்துசெய்தான். (உஉ)

அண்டத்தவர்முன்னருந்துற்றவமுதமன்னோர்
கண்டத்திடையேவருமுன்னதுகண்டுமாயன்
றுண்டித்தசென்னியழிவற்றதுணிந்தயாக்கை
முண்டத்துடனேதுணிபட்டுமுடிந்தவன்றே. (௨௩)

மாளாதசென்னியுடைத்தானவர்மாண்புநோக்கி
நீளாரமுதுண்டவர்விண்ணிடைநிற்பரென்னாத
தாளாலுலகமளந்தோனவாதங்களுக்குக்
கோளாநிலையையிறையோனருள்கொண்டுநல்க. (௨௪)

புன்னாகநாகமணிவானடிபோற்றிநோற்றுச்
செந்நாகமோடுகருநாகத்தின்செய்கைபெற்றுப்
பின்னாகமுன்னந்தமைக்காட்டியபெற்றியோரை
யந்நாகமீதுமறைப்பாரமுதுண்டகளவா. (௨௫)

வேறு

கெழியராகுவுங்கேதுவுமேயென, மொழியநின்றமுதற்பெயர்தாங்கியே
விழுமிதாகியவெய்யவனுதியா, மெழுவர்தம்மொடிருவருமீண்டினார். (௨௬)

ஈதுநிற்கமுன்னின்னமுதந்தனை, யாதரத்தொடயின்றவிண்ணோர்தொழ
வோதவேலையொருபுடையாகவே, மாதுருக்கொண்டமாதவனவைகவே. (௨௭)

நால்வகைப்படநண்ணியசத்தி * யுண், மாலுமாதலின்மற்றதுகாட்டுவா
னாலகண்டத்தனச்சுதனச்சுறுங், கோலமெய்திக்குறுகினனவ்விடை. (௨௮)

தண்டுழாய்முடியான்றனிநாயகற், கண்டுவெஃகக்கறையிடற்றெம்பிரா
னுண்டெமக்குமுனைப்புணர்காதனீ, கொண்டவேடமினிமென்றுகூறினான். (௨௯)

ஆணினீங்கியவச்சுதனூற்றவு, நாணியிவ்வுருநல்கியதன்மையாள
காணியாயுனைக்காதலித்துற்றனள, பேணிநிற்பதென்னெனைப்பெருமநீ. (௩0)

ஆதிகாலத்தயன்செயன்முற்றிட, மாதையேவிடவந்துனைவேண்டினங்
காதலோவன்றுகாரணனாகையின, மீதுசோதருமவீரியனல்லையோ. (௩௧)

நெற்றியங்கணிமலவுனக்கிகல, பற்றதில்லையெப்பான்மையாகணினு
மற்றதாகவெனாகந்தழுவுவா, னுற்றகாதலுமுண்மையதன்றரோ. (௩௨)

என்னகாரணமெண்ணிக்கொலேலகினை, யன்னபான்மையறிகிலனெம்பிரா
னின்னதாடலைநீயல்லதேவரே, பின்னைநாடியறிவுறும்பெற்றியோர். (௩௩)

அன்பிலாடவராடவரோடுசேர், தின்பமெய்தியிருந்தனரில்லையான்
முன்புகேட்டதுமன்றுமுதல்வநீ, வன்பொடென்னைப்புணர்வதுமாட்சியோ (௩௪)

என்றுமாயனிசைத்தலுமெம்பிரா, னன்றுநீயுநமக்கொருசத்திகா
ணன்றுதாருகத்தந்தணர்பாங்குறச், சென்றபோழ்தினுஞ்சேயிழையாயினை. ()

முன்னைவேதன்முடிந்தனன்போதலு, முன்னொடேவந்துவப்பொடுகூடினோம்
பின்னரிந்தப்பிரமனையுந்தியா, லன்னையாகியளித்தனையல்லையோ. (௩௬)

ஆகையாலுன்னணிநலந்துய்த்திட, வோகையாலிவணுற்றனனசெல்கென
மாகையாரப்பிடிப்பவருதலும, போகையுன்னிப்பொருக்கெனவோடினான். (௩௭)

நாணியோடியநாரணனைப்பிறை, வேணியண்ணல்விரைவுடனேகியே
பாணியாலவன்பாணியைப்பற்றினான், சேணின்றுதிசைமுகன்போற்றவே. ()

* நால்வகைச்சத்தி - பார்வதி, துர்க்கை, காடுகிழாள், விட்டுணு.

பற்றியேயிப்படியிசைகாவலாற், பெற்றதீவிற்பெருங்கடற்சார்பினின்
மற்றுநேரில்வடதிசைவைப்பினி, லுற்றசாலத்திறெண்ணிழனண்ணினான். (௩௯)

நண்ணியேதனிநாயகனவ்விடைப், பெண்ணினீர்மையைப்பெற்றிடுநாரண
னுண்ணெகிழ்ந்துமயக்குற்றுருகியே, யெண்ணிலின்புறக்கூடினனென்பவே. (௪0)

மூன்றுகண்ணன்முகுந்தனிருவரு, மேன்றுகூடியவெல்லையிலன்னவர்
கான்றுமிழ்ந்தபுனல்கண்டகியென, வான்றதோர்நதியாகியகன்றதே. (௪௧)

அந்தநீரினகம்புறமாழிக, டந்துவச்சிரதந்தியெனப்படு
முந்துகீடமுறைமுறையாகவே, வந்துதோனறினமாழையின்வண்ணமாய். (௪௨)

ஆயமண்ணிலகங்கெழுபஞ்சர, மேயெனத்தந்திருந்துசிலபகன்
மாயுமவ்வுயிர்மாய்ந்தபிறகூடுகெ, டேயநேமிக்குறிகொடுதோன்றுமால். (௪௩)

நீர்த்தரங்கதிரல்படவீசியே, யாாதிரங்கியவணைவுறுகண்டகித்
தீரதிகைப்புனல்சென்றக்குடமபைக, ளீரதுவநதிடுமிமபர்கொண்டெய்தவே. ()

அன்னகீடமமர்நதகுடமபையை, யிங்கிலததாகொண்டேகியகத்துறை
பொன்னைவாங்கிப்பொறியினைநோககியே, யின்னமூாத்தமிஃதெனநாடுவார். (௪௫)

காடியேயவைநாரணனாகவே, கூடுமனபிற்குவலயத்தேசிலா
தேடியர்ச்சனைசெய்வரதனபெயா, கேடில்சாளககிராமமதெனபரால். (௪௬)

மாலுமெக்கையுமாண்பொடுகூடிய, சாலமேவுதனிநகரேயிதன்
மூலகாரணமாகையின்முந்தையோா, மேலைநாமமதற்குவிதித்தனர். (௪௭)

இந்தவண்ணமிருக்கமுராரியு, மநதிவணணத்தமலனுமாகியே
முந்துகூடிமுயங்கியவெல்லையில், வநதனனனைமவாழ்விக்குமையனே. (௪௮)

மைக்கருங்கடன்மேனியும்வானுலாஞ், செக்காவேணியுஞ்செண்டுறுகையுமா
யுககிரததுடனோமகன்சோதனு, முக்கணெநதைமுயக்கினைநீங்கினான். (௪௯)

அததகுநதிருமைந்தறகரிகர, புததிரனனெனுநாமம்புனைந்துபின்
னொததபானமையுருததிறாதமமொடும, வைததுநிக்கவரமபலநல்கியே. (௫0)

புவனமீந்துபுவனததிறையென, வவனைநல்கியமரருமாதவ
ரெவருமேததிடுமேற்றமுநல்கினன, சிவனதினன்ருளசெப்புதற்பாலதோ. (௫௧)

முச்சகததைமுழுதருணமேனிகொண், டசசுதனறுழுவசசுதன்போற்றிட
மெச்சியேயவருக்குவிடைகொடுத், தெச்சமில்சிவனேகினனென்பவே. (௫௨)

நாயகன்செலநான்முகததோனைமுன், றுயெனததருநதாமரைக்கண்ணினான்
சேயவைகுண்டஞ்சோந்தனனையனும, போயினனறன்புவனத்தரசினில். (௫௩)

அஙகண்மேவியரிகரபுததிரன, சங்கையில்பெருஞ்சாரதர்தம்மொடு
மெங்குமாகியிருந்தெவவுலகையுங், கங்குலும்பகலெல்லையுங்காப்பனால். (௫௪)

மண்ணகததருமவானவரும்மல, ரண்ணலுந்தினமர்ச்சிக்குநீர்மையான்
கணணனுமபுகழப்படுகாட்சியா, னெண்ணினநகவனுக்கெதிரில்லையே. (௫௫)

அன்னநீாமையனகானனதன்பின, லுனனைவந்தினிக்காத்தருளுத்தம
னென்னலோடுமிசைந்துநின்றுளரோ, பொன்னினுடுதணந்தபுலோமசை. (௫௬)

வேறு

இந்திரன்மங்கையிசைந்ததுகாணு, நந்தமர்கையனுநம்பனுநல்கு
மைந்தனையுனனிவழுத்துதலோடு, மந்தமிலாவெமதையனறிந்தான். (௫௭)

காருறழ்வெய்யகளிற்றிடையாகிப், பாரிடரெண்ணிலர்பாங்குறநண்ணப்
பூரணைபுட்கலைபூம்புறமேவ, வாரணமூர்பவன்முன்னுறவந்தான். (௫௯)

முன்னுறமேவலுமூவுலகோர்க்கு, மன்னவனாகியவாசவனையன்
பொன்னடிதாழ்ந்துபுகழ்ந்தனனிற்ப, வென்னிவண்வேண்டுமியம்புதியென்றான்.

கேட்டலுமின்னகிளத்தினன்மாயை, மாட்டுறுசூரன்வருத்துதலாற்பொன்
னாட்டினைவிட்டனனானிவளோடிங், காட்டுறுவேயெனவேகரவுற்றே. (௬0)

னோற்றிவண்மேவினனேதரும்வானே, ராற்றரிதாவவுணன்செயுமின்னல்
சாற்றினர்வந்துதளாந்தனமெம்மைப், போற்றுதியென்றுபுலம்பினரன்றே. (௬௧)

தள்ளரும்வானவாதமமொடுமுக்கண், வள்ளறனக்கெமவருத்தமுரைக்க
வெள்ளிமலைக்குவிரைந்துசெல்கின்றே, னௌ்ளரிதாகியவில்லினைவைத்தே.(௬௨)

தஞ்சமிலாதுதனித்திவவனததே, பஞ்சுறழ்செய்யபததியைவைததால்
வஞ்சகாகண்டிடின்வெளவுவரென்றே, யஞ்சினனுனறனடைக்கலமையா. (௬௩)

[illegible]த்தனமாந்தவகன்கிரிநண்ணி, வாய்ததிடுமிவவிடைவந்திடுகாறும்
பூத்திடுகாமாபுலோமசைதன்னைக், காததருளென்றிதுகட்டுரைசெய்ய. (௬௪)

மேதகுசெண்டுளவீரனிசைப்பா, னேதமுறுதநின்னேந்திழைதன்னைத்
தீதடையாதுசிறபபொடுகாப்ப, னீதனியெனறுநினைநதிடல்கண்டாய். (௬௫)

இல்லுறுநங்கையையிஙஙனம்வைத்தே, யல்லுறழ்கண்டனருங்கயிலைக்குச்
செல்லுதியெனறருள்செய்துதிருமபித, தொல்லையெம்மையனொருழலினுற்றான்.

வாளமர்நீந்திவயந்தனினமிக்க, காளனெனப்படுகட்டுரையோனை
யாளுடையண்ணலருட்கொடுநோக்கிக், கேளிவையென்றுகிளத்திடுகின்றான். ()

மூவரினமுநதியமூாத்திவரைக்குப், போவதுமுன்னினன்பொன்னகர்மன்னன்
றேவியிருந்தனடீஙகுவராமே, காவல்கொணீயெனக்கற்பனைசெய்தான். (௬௮)

மகாசாத்தாபபடலமுற்றிற்று.

ஆ திருவிருததம-௧,௪௬௭.

---

# இந்திரன்கயிலைசெல்படலம்.

---

அத்துணைதன்னிலருந்துணையில்லான், மெய்ததுணையாகியமின்னினைநோக்கி
யெய்ததிடலையனளிக்குவனீண்டே, சிததம்வருந்தலெனத்தெளிவித்தான். (௧)

மாதினையவவிடைமன்னுறவைத்தே, பேதுறுவானவர்பேரவைநண்ணிப்
போதுமெனக்கொடுபோந்துவிரைந்தே, நாதனகன்கிரிநண்ணினனன்றே. (௨)

அந்தரவைப்பிலமாந்தவர்தம்மோ, டிந்திரனக்கயிலைக்கிரியெய்தி
நந்திபிரானுறைநனகடைசேரா, வநதனைசெய்துவழுத்தினனின்றான். (௩)

கிற்றலும்வந்ததெனீபுகலென்னச், சொற்றனனங்கதுதொன்மையினுடி
யிற்றிலகொல்லுனிருந்துயரென்று, நறறவாகாணுறுநந்தியுரைப்பான். (௪)

நால்வருணர்ந்திடநாயகன்ஞான, மூலவியோகமுதற்பொருள்காட்டி
யேலவிருந்தனன்யாவருமேகக், காலமிதன்றெனவேகழ்றுற்றான். (௫)

தேறுதவஞ்செய்சிலாதனன்மைந்தன், கூறியவாய்மைகுறிக்கொளவோர்ந்து
மாறியிழிந்திடுவல்விடமற்று, மேறியதென்னவிடர்க்கடலுற்றான். (௬)

இம்பரின்வாசவனின்னலுழப்ப, வும்பர்கடாமுமுடன்றளர்வுற்றார்
தம்பமதானதடம்புனைதாழ, வம்புதிதன்னிலழுந்திடுவோர்போல். (௭)

செல்லலுழந்துதியங்கியதேவ, ரெல்லவர்தம்மொடுமிந்திரனென்போ
னல்லருள்செய்திடுநந்திபிரான்றன், மெல்லடிபோற்றிவிளம்புதல்செய்வான். (௮)

தூய்நெறிநீங்கியசூரபன்மாவுக், காயுவொடாற்றலளப்பிலசெல்வ
மேயவையாவுமிருந்தவநீரா, னாயகன்முந்துறநல்கினனன்றே. (௯)

நாங்கள்புரிந்திடுதொல்வினைநீங்கித், தீங்குகுறித்தெழுதீவினைசேர
வாங்கவனேவலினல்லலுழந்தே, மீங்கிதுவுமிறைவன்செயலையா (௧0)

கூனியற்கைசுரர்க்கருள்செய்யு, மாநிருதர்க்கிறைவனபுரிதுன்ப
மானதுணர்த்தியடைந்தனமெனனிற, றூனதுபோழ்துதவாததிடல்வேண்டும். ()

நீர்த்திரைபோலநெறிப்படயாங்கொ, ளார்த்தியகற்றியறந்தவிர்சூரன்
மூர்த்திகொளாவியுமொய்ம்பொடுசீருந், தீததிடுகின்றதிறஞ்செயல்வேண்டும். ()

அன்னதுசெய்திடினன்பறுசூரன், முன்னரருந்தவமுற்றியகாலைச்
சொன்னவரந்தொலையுந்தொலைவானாற், பின்னரவன்சொல்பிழைத்தனனென்பார்

அல்லதெம்மல்லலகற்றிலனென்னி, னல்லருளுக்கொருநாயகனென்றே
யெல்லவருமபுகழேற்றமுமின்றாந், தொல்லைமறைப்படியுந்தொலைவாமால். (௧௪)

ஆகையினிவ்வகையாய்ந்தெமையாளும, பாகநினைந்துபரமபொருளானோன்
மோகமிலாபெறமோனகஞான, யோகியல்காட்டியுறைந்துளனேகொல். (௧௫)

ஈங்கிவனல்லதையித்திறமாகுந், தீங்கினைநீக்கவொராதேவருமில்லை
யோங்கியமாலவரோடமர்செய்தே, யாங்கவனேமியுமற்றனனையா. (௧௬)

மூவரின்முந்தியமூர்த்திசெயற்கை, யாவதுமீதெனவண்டரும்யானும்
பூவுலகத்திடைபோந்திடினின்னே, தீவினையார்சிறைசெய்வதுதிண்ணம். (௧௭)

ஆதலினாயிடையண்டருமயானும், போதலிலைப்புனிதன்கழல்காணத்
தீதறுவேலைதனைதெரிவுற்றான், வாய்தலினோபுடைவைகுவனென்றான். (௧௮)

பேர்பெறுநந்திபிரானதுகேளா, வாரவுறுமின்னலகன்றிவணீவிர்
சேர்வுறுமென்றருள்செய்திடவாங்கே, யோபுடைவாசவனண்டரொடேற்றான. ()

வானவர்கோனரன்மால்வரைதன்னிற், போனதுமுற்றதுமீண்டுபுகன்றா
மானபுலோமசைசெய்கையுமல்லா, வேனையர்செய்கையுமயாவுமிசைப்பாம். (௨0)

இந்திரன்கயிலைசெலபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧,௫௧௭.

# அசமுகிப்படலம்.

நீங்காதுறைதனிநாயகனெடுமாலயனுணரா
வோங்காரமுதற்பண்ணவனுறையுங்கிரிசெல்லப்
பாங்காயணங்கினர்போற்றிடப்பயில்காழிவனத்திற்
பூங்காவனந்தனிலேசியிருந்தேதவம்புரிந்தாள். (௧)

சேணுடுபுரக்கின்றவன்சிந்தித்திடுகின்ற
மாணுகியவினைமுற்றுறவருவான்றவம்புரிவாள்
காணுளவன்வருகின்றதுகாலம்பலதொலைய
நாணுடொறுந்தன்மேனியினலமாழ்குறமெலிவாள். (௨)

கொளையாரிசையளிபாடியகுழலிந்திரன்பிரிவா
லுளையாமனம்பதையாத்தவத்துறைகின்றதொரளவில்
வளையார்கலியுலகந்தனில்வாழ்சூரபன்மாவுக்
கிளையாள்பலரிளையாபுணர்ந்தாலுஞ்சிறிதிளையாள். (௩)

கழிகின்றதொர்கடலேபுரைகாமந்தெறுநோயா
லழிகின்றவளெவர்தமமையுமவலிதேபிடித்தணையு
மிழிகின்றதொரியல்பாண்முகிலினமவாய்திறந்தெனவே
மொழிகின்றதொர்கடியாளசமுகியென்பதொர்கொடியாள். (௪)

பொறையில்லவளருளில்லவள்புகழில்லவள்சிறிது
நிறையில்லவளுணில்லவணிறகினறதொரறத்தின்
முறையில்லவள்வடிவில்லவண்முடிவில்லதொர்கற்பின்
சிறையில்லவளுலகோர்க்கொருசிறையாமெனத்திரிவாள். (௫)

கீழுற்றிடுமுலகெத்தனையவையாவையுங்கிளர்ந்தோர்
வாழுற்றிடுமுலகெத்தனையவையாவையுமாடே
சூழுற்றிடுமுலகெததனையவையாவையுஞ்சுற்று
ஆழுற்றிடுதென்னூர்தனிலொருநாழியில்வருவாள். (௬)

பொய்யுற்றவள்களவுற்றவள்புரையுற்றிடுசுரையூன்
றுய்யுற்றவள்களியுற்றவள்சோரவுற்றவள்கொலைசெய்
கையுற்றவள்விழியாலழல்காலுற்றவள்பவதின
மொய்யுற்றவள்படிறுற்றவண்முனிவுற்றவணமனத்தின். (௭)

பொங்குஞ்சிகையழன்மைத்தலைபுகுந்தாலெனவொளிருஞ்
செஙகுஞ்சியதுடையாளெவாசெருச்செய்யினுமிடையா
டுங்கஙகெழுதூணததிடைதோன்றிக்கனகனைமுன
பங்கம்படுதுயிருண்டெழுபகுவாயரிநிகாவாள். (௮)

சீயப்பெருமுகன்றாரகனிகராகியதிறலாண்
மாயத்தொழில்பயில்கின்றவண்மணிமால்வரைபுரையுங்
காயத்தவளடற்கூற்றையுங்கடக்கின்றதொர்வலியா
டோயப்புணரிகளேழுமொர்துணையிற்கடந்திடுவாள். (௯)

மாலுற்றிடவாழ்சூரபனமாவின்கிளைமுழுது
மூலததொடுமுடிவிததிடுமுறையூழ்வினையெனனச்
சூலத்தினையேந்தித்தனிதொடர்துன்முகியுடனே
யாலத்தினதுருவாமெனவாங்குற்றனளன்றே. (௧0)

கானின்றுளபொழிலேர்தனைக்காணுநனிசேணு
ளாநன்றெனவியவாப்புவியமர்சோலையிதன்றால்
வானின்றுளவனத்தைக்கொடுவந்தேயிவண்மகவான்
றானின்றுவைததானிஙகிதுதப்பாதெனநிற்பாள். (௧௧)

ஏலாவிதுகாணாயெனவீர்ந்தண்பொழிலெழிலை
யாலாலமதெனவேவருமசமாமுகியென்பாள்
பாலானதுன்முகிதன்றொபெகராவதுகாட்டிக்
கோலாலமதுடனேயதுகுறுகும்படிவந்தாள். (௧௨)

மட்டேற்றிடுதண்காவினைவருடைத்தனிமுகத்தாள்
கிட்டிச்சினைநனைமாமலர்கிளையாவையுநோக்கித்
தட்டற்றிவணுறைகின்றவர்தமைநோக்குவலென்றா
வெட்டுத்திசையினுநாடுதற்கிடையுற்றனள்கடிதின். (௧௩)

அதுகண்டனனவ்ணின்றதொரையன்படைத்தலைவன்
முதுகண்டகியிவளாமசமுகியென்பதொர்கொடியா
ளெதுகண்டிவண்வருகின்றனளென்றேகருத்திவடன்
கதிகண்டனனிற்பேனெனைக்காணாநெறியதனில். (௧௪)

மற்றிங்கிவள்செயல்யாவையும்வரலாற்றொடுகொணாத்
தெற்றென்றவண்மீள்கின்றுழிச்செவ்வேயெதிர்போந்து
குற்றந்தனக்கிசையுந்திறமுடிப்பேனெனக்கொலைசெய்
விற்றங்கியபுயவேடரில்வேறோரிடைநின்றான். (௧௫)

நின்றானவனதுகண்டிலனெஞ்சிற்களிதூங்கக்
குன்றாமுலையசமாமுகக்கொடியாளவளுடனே
சென்றாண்மலர்க்காவெங்கணுந்திரிந்தாடிரிந்தளவிற்
பொன்றாழ்முலைச்சசிமாதவம்புரிகின்றதுகண்டாள். (௧௬)

அந்தாவிவளயிராணிநமமரசன்றனக்கஞ்சி
நந்தாவளந்தனைப்பெற்றபொன்னகரத்தைவிட்டிங்கே
வந்தாளிவடனைக்கொடுவருவீரெனவெங்கோன்
முந்தாதரமுடனுய்த்தனன்முடிவற்றதன்படையே. (௧௭)

இங்குற்றதையுணராமையினிமையோர்புரநாடி
யங்குற்றிலளயிராணியென்றர்சனறனக்குரைப்ப
வெங்கட்டழலெனச்சீறினன்மீண்டுஞ்சிலர்தமையித்
திங்கட்புரைமுகததாடனைத்தேடும்படிவிடுத்தான். (௧௮)

வானெங்கணும்பிலமெங்கணும்வரையெங்கணும்பரவை
தானெங்கணுந்திசையெங்கணுந்தரையெங்கணுந்தரையிற்
கானெங்கணுநமர்தேடினர்காணாரிவடன்னை
யூனெங்கணும்வருந்தத்திரிந்துழன்றாரிதுவுணரார். (௧௯)

தண்டேனமர்குளிர்பூங்குழற்சசியென்பவடனைநான்
கண்டேனினியிவண்மையலிற்கவலாதொழிகென்றே
வண்டோவிடுதொடைமன்னவுன்மகிழ்வெய்தமுன்னுய்ப்பக்
கொண்டேகுவன்யானேயிவடனையென்றுகுறித்தாள். (௨௦)

இத்தேமொழிதனையிந்திரனீண்டேதனியாக
வைத்தேகினனிவடன்னைவருந்தாதளித்திடவோர்
புத்தேளிருமிலரிங்கிதுபொழுதாமவன்புகுமுன்
கொத்தேமலர்க்குழலாடனைக்கொடுபோவனென்றடைவாள். (௨௧)

இனக்குரற்கடுஞ்சொல்லெனுமுருமேறுதெழிப்பக்
கூனற்பிறையெயிறுகியமின்னுப்புடைகுலவக்
கானக்கரும்படிவததொடுகோல்கொண்டெழுவிசையால்
வானப்புயல்வழுவிப்புவிவந்தாலெனவந்தாள். (௨௨)

ஊற்றங்கொடுவருதுன்முகியுடனேயசமுகிதான்
றேற்றங்கிளர்மணிவெற்பெனத்துண்ணென்றவண்வரலு
மேற்றம்பெறநோற்றேதனியிருந்தாளதுகாணுக்
கூற்றந்தனைக்கண்டாலெனக்குலைந்தாள்வலிகுறைந்தாள். (௨௩)

நீரோதமிசைத்தங்கியநிருதக்குலமகளோ
பாரோர்மயக்குறுபேய்மகளோபாரிடத்தணங்கோ
சூரோடுறுதனிக்கொற்றவைதொழில்செய்பவடானோ
வாரோவிவளறியேனெனவஞ்சிக்கடிதெழுந்தாள (௨௪)

எழுகின்றவடனைநில்லெனவிசைததேயெதிரெயதி
மொழிகின்றனளயிராணிநினமுதிராவிளநலனும
பழியில்லதொருபெருநகாமரும்பயனற்றிவணவறிதே
கழிவெய்திடததவமபூணடிடல்கடனோவிதுவிடுநீ. (௨௫)

ஆரொப்புனக்குலகந்தனிலருளாழியமபரவன
மார்பத்துறைதிருமங்கையுமறறிஙகுனக்கொவ்வாள
பாரிற்கரந்திருந்தேதவமபயில்வாயிதென்னுன்னைச்
சேரத்தவம்புரிகின்றனன்றிறறசூரபன்மாவே. (௨௬)

இந்நாள்வரையுனைநண்ணியவிமையோரகிறையுன ஞா
நனாயகனுகப்பெருநலனுற்றவனனறே
தன்னாலுணாவரிதென்பாகடனபோழகதனுற
பன்னாளவனுடனமேவினைபாகிறபடுகரிபோல். (௨௭)

தவறுஞ்சுரருலகொன்றுளன்சதவேள்வியனமமுள
புவனம்பலவண்டம்பலபுரக்குந்திருவுளனு
லிவ்வனங்கவன்பணியேபுரிநதினைத்தேகாந்தழல்வா
னவணிஙகிவன்றனையேவல்கொளாடகிலந்தனியாள்வான. (௨௮)

அழிவில்லவனவணிஙகிவனழியுமபரிசுடையான
பழியில்லவனவணிங்கிவன்பழிவேலையிறறினைப்பான
கழியும்படருழந்தாணிவனகளிப்புறறுளனவனே
தொழுவன்பலரையுமிங்கிவனறொழுமோவவனசிலரை. (௨௯)

அந்நேரிலனொடுமேவுவதறிகின்றிலையனையான
றன்னேவலினெழுகிததிரிதமியோனறனைத்துணையென்
றினனேமெலிந்தனையீதுனக்கியல்போநினதெழிலுங்
கொன்னேகழிந்தனபறபகல்குறியாயிதுகுணனோ. (௩௦)

எத்தேவருமுகிலூர்தியுமிகன்மேவருமவுணக்
கொத்தேவருமணங்கோருமுன்குறறேவல்செய்திடவே
முத்தேவரும்புகழப்படுமொய்ம்புற்றிடுசூர்மு
னுய்ததேயவனொடுகூட்டுவெனுலகாண்டிடனிருக்க. (௩௧)

கூனல்வெஞ்சிலைக்குனித்துநூறாயிரகோடி
சோனைவெங்கணைதூண்டிவிற்றூணியைத்துணித்துத்
தானவெங்கரிதன்னுடன்முழுவதுஞ்சயந்தன்
மேனிமுற்றவுமழுத்தினன்பகலினைவெகுண்டோன். (எச)

வேறு.

வெய்யவற்சிறையிட்டவன்விட்டகோல், சையமொத்தசயந்தன்மெய்ம்மூழ்கலு
மையலுற்றனன்மற்றொருவெஞ்சமர், செய்வதற்குத்தெளிதலின்றாயினான். (எரு)

நீண்டவாளிகளானநிறத்திடை, யாண்டகாலையரிமகன்றந்திமேல்
வீண்டுவிம்மியுணர்ச்சியும்விட்டனன், மாண்டிலானமுதங்கொண்டவன்மையால்.

நண்ணுபாசடைநாப்பணிடந்தொறுந், தண்ணென்மாமலர்த்தாமரைபூத்தென
விண்ணவர்க்கிறைமாமகன்மெய்யிடைத், துண்ணெனப்படுசோரிபொலிந்ததே. ()

கற்றவாசவன்காளைதன்சீற்றநா, முற்றவோதமுடியுங்கொறன்னுணர்
வற்றபோதுமவன்சினக்கண்ணழல், வற்றுவித்தமெய்வார்குருதிப்புனல். (எஅ)

சயந்தனவ்வழிதன்னுணர்வின்றியே, யயர்ந்தபோதத்தனையவனூர்தியாங்
கயந்தனக்கிறைகண்டுகலங்கியே, துயர்ந்துநின்றுசுளித்தெதிர்புக்கதே. (எகூ)

காய்ந்ததொன்மைக்கதிரைமுனிந்திடு, மேந்தலூர்தருமெந்திரத்தேர்மிசைப்
பாய்ந்தகாலைப்பரித்தொகைபாகுடன், வீய்ந்துபோனதெழித்ததுவேழமே. (அ0)

பாண்டில்சேர்தருபண்ணமைசெய்யதேர், மாண்டகாலையில்வல்லையிற்கீழுறத்
தாண்டிவெள்ளையந்தந்தியைச்சீறினான், மூண்டுபானுவைமுன்சிறைசெய்துளான்.

மற்றவன்றன்மணியணிமார்பிடைச், செற்றமால்கரிசென்றுமுற்றாக்கலும்
பொற்றையின்கட்புழைதிடுஞ்சூசியி, னிற்றவாலதனீரிருதந்தமும். (அ௨)

தந்தநான்குஞ்சடசடவார்ப்பொடு, சிந்தலுற்றனசீரெழுசூர்மக
னுந்துதொண்டலம்பற்றிமறறோகையாற், றந்திவேந்தன்கவுளிடைத்தாக்கினான்.

வேறு.

காழ்ந்தநெஞ்சினன்கரங்கொடுதாக்கலுங்கயமா
வாழ்ந்ததெண்டிரைப்பாற்கடலுடைந்தெனவரற்றி
வீழ்ந்தயர்ந்ததுசயந்தனுமறிந்தனன்விரைவிற்
சூழ்ந்ததொல்லுணர்வெய்தலுமவணிவைசொல்லும். (அச)

மாயைபோயதுதணிதனங்குறைந்ததுவன்மை
தீயர்பற்றுவராழியுமிந்நகரெனச்சிறிது
நீயிரங்கலையினிமனனேவிதிநெறிகா
ணாயினிங்கிவையென்றனன்சயந்தனுமறிஞன். (அரு)

நுணித்துநாடியேயித்திறநுவன்றுநூற்றுணிபு
மனதில்வைத்திடுமிந்திரன்கான்முளைமயங்கித்
தணித்தநீர்மையுங்களிற்றொடுவீழ்ந்ததுந்தளர்வு
மனைத்துநோக்கியேதானவத்தலைவர்களார்த்தார். (அசு)

ஆர்த்ததானவத்தலைவர்கள்சயந்தனையயலே
போர்த்ததாமெனச்சுற்றினர்பற்றினர்புவிமேற்
கூர்த்தவாலெயிற்றரவினம்யாவையுங்குழீஇப்போயச்
சீர்த்தவெல்லையிலிரவியைக்கரந்திடுந்திறம்போல். (அஎ)

தடித்தமொய்ம்புடைச்சயந்தனைத்தானவத்தலைவர்
பிடித்தகாலையிற்கைதவன்கைதவன்பெரிது
மடித்திடுங்கள்சூற்றிடுங்களிங்கிவனுயிரதனைக்
குடித்திடுங்களென்றாரெலாவவுணருங்குழுமி. (௮௮)

மன்னர்மன்னவன்றிருமகனவவழிமற்றோர்
பொன்னெனும்பெருந்தேர்மிசைப்பொள்ளெனவேகிப்
பன்னரும்புகழ்படைத்திடுசயந்தனைப்பற்றித்
துன்னினின்றிடுமவுணருக்கொருமொழிசொல்வான். (௮௯)

வரிவில்வாங்கியேயான்விடுஞ்சரம்படமயங்கிப்
பெரிதுமெய்தளர்வுற்றனன்பேசவுங்கில்லான்
கருதலானெனவிவன்றனைவருத்தவிர்கடிதே
சுரர்குழாத்தொடுபுரிமினோசிறையெனச்சொற்றான். (௯0)

கொற்றவன்மொழிவினவியேமந்தரக்குன்றைச்
சுற்றுபாந்தள்போலிந்திரன்றிருமகன்றனைத்தோ
ளிற்றகொல்லெனநாணினால்யாத்தனரிமையோ
ருற்றுநின்றதோர்குழுவினுளொருங்குறவுய்த்தார். (௯௧)

வேறு.

தொழிலிதுபுரிந்தகாலைச்சூர்மகன்றனதுமாடே
தழியகாவலரைநோக்கிச்சயந்தனுமிவருமல்லா
லொழியநின்றோரையெல்லாமொல்லையிற்றருதிர்பின்ன
ரழியவிம்மூதூர்செந்தீயரசனுக்களிதிரென்றான். (௯௨)

என்றலுமிறைஞ்சியன்னோரெழிலுடைத்துறக்கம்யாண்டுஞ்
சென்றனாடியேனைதேவரைமகளிர்தம்மை
யொன்றொருவரையும்வீடாதுடனுறப்பற்றினாற்
பொன்றிரடடந்தோளயாத்துப்புரவலன்முன்னருய்த்தார். (௯௩)

உய்த்தபினபதுமச்செல்வியுறைதருமுறையுள்போலச்
சித்திரங்கெழுவுபொன்னந்திருநகரெல்லையெங்கும்
புத்தழல்கொளுவலோடும்பொள்ளெனப்பொடிபட்டன்றே
முத்திறவரைப்புமெங்கோன்முறுவலான்முடிந்தவாபோல். (௯௪)

ஊழியினன்றியென்றுமொழிவுறாத்துறக்கமூதூர்
பூழியதானதன்றேபுரந்தரன்வறியன்போனான்
வீழுறுசிறையினுற்றார்மிக்கவரென்றால்யாரும்
வாழியசெல்வந்தன்னைநிலையெனமதிக்கலாமோ. (௯௫)

அளிபடலின்றியென்றுமலர்தருநிழற்றுமூதூர்
வெளிபடுசுடலைபோலாய்வேற்றுருக்கோடலோடுங்
களிபடுபானுகோபன்கண்டனனவுணர்தம்மி
லொளிபடுகாவலோரைநோக்கியீதுரைக்கலுற்றான். (௯௬)

தாதுலாந்தெரியலாகச்சயந்தனையவனோடுற்ற
வேதிலாதமமைப்பின்னோர்யாரையுங்கொடுமுன்னீவி
போதிராலென்னவற்றேபோயினருவனைநீங்கி
யாதவன்பகைஞன்மீளாவணிகமோடவணிவந்தான். (௯௭)

மாநிலமதிக்கும்வீரமகேந்திரபுரத்துப்புக்குக்
கோனகாமுன்னமேகிக்கொடிஞ்சிமான்றேரினீங்கிச
சேனையைநிறுவிவானச்சிறையினைக்கொண்டுசென்று
தானவர்மன்னன்முன்போய்த்தாண்முறைவணக்கஞ்செய்தான. (௯௮)
தண்டுளிநறவமாலைத்தாதைதாள்வணங்கியெந்தாய்
கண்டிலன்சசியைவானோர்காவலனறனையுங்காணே
னண்டரைச்சயந்தன்றன்னையாரையுங்கொண்டுசென்றேன்
விண்டொடாதுறக்கமுற்றுமவெங்கனல்கொளுவியெனறான. (௯௯)
என்றலுமகிழ்ந்துசூரனிளஞ்சிறுகுமாறபுல்லித
தனறிருமுன்னரிட்டசயந்தனைமுதலியோரைக
கனறினனுருத்துவாட்கைக்காவலாசிலரைநோக்கித
துனறியவினையரங்கமயாவையுந்துணித்திரெனறான. (௱)
இரலைமானெருத்திதனமேலிருஞ்சிறைவீடுபெறற
வுருகெழுபுலிபாயந்தொப்பவொப்பிலாவரசனசொல்லால
விரைவுடனவுணாபல்லோாவிண்ணவாதமபானமேவித
தருவையினமுகத்திகாணத்துண்ணெனத்துணிக்கலுற்றா. (௱௧)
கரத்தினைத்தாளைத்தோளைக்கன்னமூலத்தைக்கல்லென்
றரறறுறுகணடநதனனையணிகெழுதுடைடந்தனனைச
சிரத்தினைநதுணிப்பவனனோசிறியரோசெய்தநோன்பி
னுரத்தினிலவைகளெல்லாமுடனுடனபொருந்தலுறற. (௱௨)
செல்லருநெறிக்கணின்றசேணுளாாதம்மையாருங
கொல்லரிதிறையுமங்கங்குறைத்தலுமரிதாமென்றூற்
சொலலரிதினையர்வனமைதொலைந்ததெம்வரத்தாலெனறு
வல்லரிபுரைவெஞ்சூரனமதித்துமற்றதனைககண்டான. (௱௩)
கண்டனன்முனிநதினனேரைககாலமொனறுனும்வீடா
வெண்டருநிரயமபோலுமிருஞ்சிறையிடுதிரெனறே
திண்டிறலசுராகேட்பசசெபபலுஞசயநதனறனனை
யணடரைப்பிடாதொட்டுநதியாஙஙனஙகொண்டுபோனா (௱௪)
போயினாசிறையினெலலைபோறறினாதமமைநோக்கி
யேயினனஙகோனின்றோயாரையுஙகாவலமகாண்மி
னீயிாகளெனறுவொறறாநீங்கினாநினறோாதமமை
யாயவாவலலிபூட்டியருஞசிறைககளததிலுய்த்தாா. (௱௫)
மனனவனதற்குபபினனாமைநதனையனபானேகி
நினனகரத்திற்போதிநீயெனவனையன்போனு
னனனதோாசூரபன்மனவையொாஇயுறையுள்புக்கா
னினனலங்கடலிலுற்றாரிருஞசிறைபபட்டவானோா. (௱௬)
வேறு
காடுபோந்தனனிந்திரனமபானனகாகரிநது
பாடுசோநததுசயந்தனுஞ்சிறையிடைப்பட்டா
னுடிலமினபததசசெய்கையீதெமபிரானல்குமம
வீடதேயலாறறுனபறுமாககமவேறுணடோ. (௱௭)
வேறு
படவரவனையதோாபருமவல்குலா, ரிடுகியநுண்ணிடையெழிலணங்கினோர்
கொடுமைசெயவுணருாகுறுகிவேடாபாற, பிழயுறுமஞளைஞயிற்பெரிதுமஞ்சினா.()

சூரன்வாழ்பெருநகர்துன்னிக்காப்பொடு, சீரிலாவேவல்கள்செய்துமேவினோர், கூரு
ம்வாய்வெங்குரீஇக்குடம்பையுய்த்திடப்,பேருருவிலகுமின்மினியின்பெற்றிபோல்

வாடியமகபதிமதலைவானுளோ, ராடுறுதுயர்க்கடலழுந்திச்சூரர்கோன்
வீடருஞ்சிறையிடைமேவினோரவர், பாடுறுதிறத்தையார்பகரற்பாலினோர். (௧௧௰)

இன்னலங்கடலினுமெடுத்துவீடுதந், தன்னவர்பெருஞ்சிறையகற்றும்வன்மையார்
பின்னெவருண்டுயிர்பெற்றுக்காத்திடு, முன்னவர்தமக்கெலாமுதல்வநீயலால். ()

வியந்தருகதிரைமுன்வெகுண்டுளாரொடு, சயந்தனவிண்ணுலகிடைச்சமர்செ
ய்தெய்த்துழி, வயந்தருகோடுகெண்மாய்ந்துதந்திவீழ்ந், தயர்ந்ததுபுவியிடையணுகிற்
றத்துணை. (௧௧௨)

வாலியவொளிகெழுவன * த்திலேகியே, மூலமதாகியமுக்கண்மூர்த்தியை
மேலுளதாணுவினமேவச்செய்துபின, சீலமொடருச்சனைசெய்துவைகிற்றே. ()

அறிவுளமால்கரியமலனைமந்திர, முறையதுநாடியேமுதிருமன்பினுள்
மறையுறவழிபடூஉவைகுமெல்லையிற், குறைபடுநாறபெருங்கோடுயவந்தவே. ()

பார்ப்பதிமருங்குறுபகவனாணையாள், மாறமபெருங்களிற்றிடைவல்லைமுனபுபோ
ஞற்பெருந்தந்தமுநண்ணநோக்கியே, யேற்பருமகிழ்ச்சியோடிருந்ததவ்விடை. ()

வேறு.

ஆயதோரமைதியின்கணணங்கொடுமேருவெற்பிற்
போயினவமரர்கோமானபொன்னகாசூரனமைந்தன்
காயெரிகொளுவியங்கட்கடவுளாகுழுவினோரைச்
சேயொடுபெற்றியேகிசசிறைசெய்ததனமைதேர்ந்தான். (௧௧௬)

தேர்ந்தனன்றளர்ந்துமேருசசிலம்பினின்மகவான்பனுள
வார்ந்திடுகங்கைவேணிவள்ளலையுன்னிநோறபச்
சார்ந்துநிற்கெனனைவேணடுஞ்சாற்றெனமுதலவனீகி
போந்தசூரகிளையைசசெறறெமபேதுறவகறறுகென்றான். (௧௧௭)

என்றலுமெந்தைசொல்வானயாமுமைதனனைமேவி
யொனறொருகுமரனறனனையுதவுமவனேபோநது
வென்றிகொள்சூரனாதியவுணரைவிரைவிறசெறறு
மன்றநுமமுரிமைபீனவருநதலைன்றுரைததுபோனான. (௧௧௮)

சாதலுநதொலைவுமில்லாததானவாக்கிறைவனேநோ
ரேதிலர்தம்மாலவீடானெனறுதனனுளததிலெணணிச்
சோதிகொள்பரமமாகிததோனறிடுமுதல்வனியே
யாதலினவிமலமூாத்தியவரைமேலடுதியென்றான். (௧௧௯)

அவ்வுரைமகவானறெறியரியயனோடுசூழ்நது
மைவருகளததோன்றனபான்மதனனையுய்ப்பவனறேனை
மெய்விழியெரியினைமாய்நதுவெறுநதுகள்படலுநதேய
ரெவ்வெவருமபோய்வேண்டவிரங்கியேகருணைசெய்தான. (௧௨௰)

அரியயனமகவானதேவராருஙகணததலைவயாரும்
பரவுறவிமயவெறபிற்படாந்துபின்னுமையைவேட்டுப்
பிரிவருங்கயிலைநணணிபபின்னைமதிரக்காடிக்
கருணையாலெந்தைநின்னைநெறறியங்கணனுற்றந்தான். (௧௨௧)

---

* வாலியவொளிகெழுவனம் - திருவெண்காடு.

எந்தைநீவந்தபின்றையிந்திரனயன்மாறேவ
ரந்தமின்முனிவரேனோரனைவர்க்குமகன்றவாவி
வந்ததுபோன்றதம்மாவலியவெஞ்சூரற்செற்றுத
தந்தமதரசுபெற்றதன்மையாபோலவுற்றார். (௧௨௨)

ஆழ்தருமுந்நீர்நேமியகன்கடலழுவம்புக்கு
வீழ்தருவோர்கடம்பால்வியன்கலமொன்றுசேர
ஆழ்தருதொடர்பாற்பற்றியுய்ந்தெனத்துன்பவேலைக்
கீழ்தருவோர்கணின்னாற்கிளர்ந்துமேலெழுதலுற்றார். (௧௨௩)

புரந்தரன்முதலாவுள்ளபுங்கவரெம்மனோர்க
ளரந்தையையகற்றவுன்னியையநீபோந்தபின்னுந்
தெரிந்திடுதுணிபிற்சோர்ந்துந்தம்முனைச்சூரற்கஞ்சிக்
கரந்தனரிருந்தார்காணிற்கடுஞ்சிறைப்பிணிப்பனென்று. (௧௨௪)

எம்பிரானின்னைமுக்கணெந்தையைவணங்கநேரிற்
றம்பெருவடிவங்காணச்சாருவரொழிந்தகாலை
யும்பர்கோன்முதலோர்தத்தமுருக்கரந்துழலவானமேல
வெம்பணிசிலைகண்மாறுமவெய்யவாநிலைமையேபோல. (௧௨௫)

மறைந்திடுபொங்கரின்னவாசவன்முதலோராரு
மறந்தவிர்சூரபன்மன்படைத்தலைவர்கட்காணிற
பறைந்திடமாப்பமுள்ளம்பணித்திடவியாப்பயாக்கை
யிறந்தனராகிப்பின்னரின்னுயிர்பெறுவரன்றே. (௧௨௬)

வினைப்பவமுழந்தவிண்ணோர்வெந்தொழிலவுணர்கோனை
நினைப்பினுமவசமாவார்நெடுந்துயில்பெறுதனீரான
மனப்படுகனவுநீத்தார்மற்றதுவருமேலங்க
ணுனப்படுசூரற்காணினுயிரையுமிழப்பரம்மா. (௧௨௭)

பொன்னகரிறுதிசெய்துபுதல்வனையமரரோடு
துன்னருஞ்சிறையுட்சேர்த்தித்துயர்ப்பெருங்கடலுள்வீட்டி
மன்னியவெறுக்கைவெள்ளமனைத்தொடுகாப்பச்செய்து
மின்னுமவுணர்கோமானிந்திரன்கலக்கண்சூழும். (௧௨௮)

ஒப்பருப்வெறுக்கைதன்னாலோங்கியவிறலார்சீரான்
மெய்ப்படுமிடலால்யாக்கைமேன்மையாலழியாவாற்ற
லிப்பகலவரோர்க்கெல்லாமிடர்புரிகொடுமைநீரா
லப்பெருஞ்சூரற்கென்றுமாருநேரன்றுமாதோ. (௧௨௯)

ஏயதோரண்டமொன்றினிழைத்தனவிவ்வாறேனை
யாயிரத்தோரேழண்டத்தவன்செயலறிதறேற்றும் *
தூயதோர்பரத்தினமேலாஞ்சோதியாயெம்மைக்காப்பான
மேயினவொருநீயன்றிவேறியார்தெரிதற்பாலார். (௧௩0)

தொடர்ந்திடுசீர்பெற்றுள்ளசூரன்றானையென்னிற
கடந்திடல்புரியார்மாலுங்கமலமேலயனும்வானோ
ரடங்கலுமுனிவராருமாயிரவிருநாலண்டத
தொடங்கியவுயிருமன்னோன்பெருமையாருரைக்கற்பாலார். (௧௩௧)

* தேற்றும் என்பது "தேற்றுவொழுக்கம்" என்பதுபோலத் தனிவினையாயிற்று.

முடிவிலிவ்வளம்பெற்றுள்ளமுரண்கெழுசூரபன்மன்
கெடுகிலனன்றுமேலோனளித்தியவரத்தின்சீராற்
படியறுமமலமேனிப்பரஞ்சுடர்க்குமரநீயே
யடுவதையன்றிப்பின்னரவனையார்முடிக்கற்பாலார். (௧௩௨)

ஐந்தியலங்கலுஞ்சூரற்கயன்புகன்றுழல்வாளுரு
மிந்திரை கேளவன்போர்செய்தெஞ்சினனெவர்க்குமேலாய்
முந்தியசிவனன்னோற்குமுதல்வரமளித்தானபின்னா
வந்தடல்புரியானீயேமற்றவற்கோறல்வேண்டும். (௧௩௩)

ஆவதோர்சூரன்றனையவன்றுணையோரைமைந்த
ரேவர்கடமையுமட்டேயெழில்பெறுசயந்தனோடுந்
தேவர்தஞ்சிறையைநீக்கித்திசைமுகனமகவானாதிக
காவலர்பதங்கணல்கிக்காத்தருளெம்மையென்றான். (௧௩௪)

இவ்வகைமுகமாறுள்ளவெம்பிரானுளத்துக்கேற்ப
வுய்வுறுமன்பாற்பொன்னோனுரைப்பமுன்னறிந்ததொன்றை
மெய்வருதெர்டர்பாலினோரோவிழைவினானமழலையோவாச
செவ்வியினமகாவாயக்கேட்குந்திறமெனவினவிசொல்வான். (௧௩௫)

புன்றொழிலவுணர்தம்மைப்புறத்தவர்செய்கையாவு
மொன்றிடைவிடாதுமுற்றுமுள்ளவாறுரைத்தாயநமமு
னன்றிதுபனுவற்கெல்லாநாதனையொருநீயன்றோ
வென்றவனபுறத்தைநீவியினிதருள்புரிந்தானெங்கோன். (௧௩௬)

அறிவினுளறிவாய்வைகுமறுமுகவமலவெஞ்சூ
ரிறுசெயனினைகிலாகுமீண்டையோராடலுன்னிக்
குறுகினையதுபோலனனோனகொள்கையுந்தோந்தாய்நிற்கோர
சிறியனேனுரைத்தேனென்னுநீப்பிழைபொறுத்தியென்றான். (௧௩௭)

பொறுத்தியென்குற்றமென்றுபொன்னடித்துணையைப்பொன்னோன
மறத்தலிலனபிற்றுண்டுவணங்கினனெழுதுபோற்ற
வெறித்தருகதிர்வேலண்ணல்லெமமுறைகொண்டுசொற்று
யுறத்தகுபிழையிலயாதுமுன்னலையிருத்தியென்றான். (௧௩௮)

வேறு.

பொன்னெனும்பெயரினன்பொருவிலகந்தவே, ளின்னருணிலைமைபெற்றிருந்தபி
னனரே, தனனயனிறபுறுசதமகத்தனை, யங்கிலேநோக்கியேயனபிறகூறுவான். ()

ஈண்டிதுகேண்மனத்தேதுமெண்ணலை, மூண்டிடுசூர்குலமுடியவானுளோர
மீண்டிடவிருஞ்சிறைவிண்பதத்தைநீ, யாண்டிடநல்குதுமையுறேலென்றான். ()

இகபரமுதவுவானிதனைச்சாற்றலு,மகபதிபரிவொடுவணங்கிவானவத,தொகையொ
டுபோற்றியேதுன்பெலாமொரீஇப், புகலருமகிழ்ச்சியுட்பொருந்தனமேயினான். ()

அமராசிறைபுகுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம - ௧,௯௨௯.

---

அசுரகாண்டமுற்றுப்பெற்றது.

ஆ காண்டம் இரண்டுக்குத் திருவிருத்தம - ௩,எ௧௨.

கச்சியப்பசிவாசாரியா திருவடிவாழ்க.

---

உ

திருச்சிற்றமபலம.

---

மூன்றாவது

# மகேந்திரகாண்டம்.

## வீரவாகுகந்தமாதனஞ்செல்படலம்.

விரிஞ்சன்மாறேவரானுமவெலற்கருமவிறலோனாகிப்
பெருஞ்சுராபதுமமேயதவொழுககமுமபிறவுமாறறி
யருஞ்சிறையவாகக்குச்செய்தவவுணாகோனாவிகொள்வான
பரஞ்சுடருருவாயவந்தகுமரனைபபணிதல்செய்வாம். (௧)

இந்திரனாதியானவமரருமேனையோரும்
புநதியிலுவகைபூத்துப்புடைதனிலொழுகிப்போற்றச
செந்திமாநகரநதன்னிறசியமெல்லணைமேல்வைகுங்
கந்தவேளருளினீராலிணையனகருதலுற்றான. (௨)

நான்முகனாதியானநாகருமுனிவருமபோன்
மேன்முறையவுணாக்குமவியனறொகையவருமெஙகோன
கானமுனைநெறியரேனுங்கடியரைமுடிவுசெய்த
லூன்முறையியற்கையாகுநுவலருமறனுமஃதே. (௩)

இற்றிதுதுணிபாமேனுமெண்ணெழிறசூரனறனனை
யறறமில்சிறப்பினவைகுமவன்றமாதமனைமயெல்லாஞ
செறறிடனமுறையதனறுறதேவாதஞ்சிறைவிட்டுய்ய
மறறவனறனக்கோரொறறைவல்லையில்விடுததுமன்றே. (௪)

தூண்டுநமமொறறன்மாற்றஞ்சூரனுமவுணன்கேளா
வீணடிடுசிறையினீக்கியமரரைவிடுப்பனென்னின்
மாண்டிடவினறியினனுமவாழியமறுததுளானே
லாண்டுசென்றடுதுமீதேயறமெனவகததுட்கொண்டான். (௫)

வடித்தசெஙகதிரவேலண்ணனமாலயன்மகவானாதி
யடுத்தபணணவரைநோக்கியவுணாதங்கிளையையெலலா
முடித்திடப்பெயாதுநாளைமுன்னமோாதூதன்றனனை
விடுததனமுணாதல்வேண்டுமெவெய்யசூரகருததையென்றான். (௬)

கடலுடைக்கடுவையுண்டோன்காதலனினையசெப்ப
மடலுடைப்பதுமப்போதில்வைகினோன்மாயன்கேளா
வடலுடைப்பெரும்போரெந்தையாற்றுமுன்சூரன்முன்னோர்
மிடலுடைத்தூதன்றன்னைவிடுத்தலேயறத்தாறென்றார். (௭)

என்றலுங்குமரமூர்த்தியிப்பெருந்திறலோர்தம்முள்
வென்றிகொள்சூரன்றன்பால்வீரமாமகேந்திரத்துச்
சென்றிடவிடுத்தும்யாரைச்செப்புதிரென்னலோடு
நன்றெனவதனைநாடிநான்முகன்விறலுற்றான். (௮)

மெல்லெனவுலவைக்கோனுமவ்வீரமாமகேந்திரத்திற்
செல்லரிதெனக்குமற்றேசெய்பணிநெறியாலன்றி
யொல்லையிலங்கணேகியொன்னலாக்கடந்துமீள
வல்லவனிணையவீரவாகுவேயாகுமென்றான். (௯)

சதுர்முகனினையவாற்றாற்சண்முகனுளத்துக்கேற்பக்
கதுமெனவுரைத்தலோடுங்கருணைசெய்தழகிதென்றா
மதுமலர்த்தொடையல்வீரவாகுவின்வதனநோக்கி
முதிர்தருமுவகைதன்னாலித்திறமொழியலுற்றான். (௧0)

மயேந்திரமூதூரேகிவல்லைநீயமலனல்குஞ்
சயேந்திரனாலத்தேரோன்றனையடுத்தொருநாற்றந்தக்
கயேந்திரன்மதலைவானோர்காப்பைவிட்டறத்தாறுன்னி
நயேந்திரவளத்தினோடுமுறைகெனநவிற்றினன்றே. (௧௧)

அம்மொழிமறுத்துளானேலவுணன்கிளையையெல்லா
மிம்மெனமுடித்துநின்னையெஃகவேற்கிரையாநல்கத்
தெம்முனைகொண்டுநாளைச்செல்லுதும்யாமேயீது
மெய்ம்மையதென்றுகூறிமீள்கெனவீரன்சொல்வான். (௧௨)

வெந்திறலவுணரீண்டுமவ்வீரமாமகேந்திரத்திற்
சுந்தரத்திருவினவைகுஞ்சூரபன்மாவின்முன்போ
யெந்தைநீயருளிற்றெல்லாமிசைத்தவனுள்ளநாடி
வந்திடுகின்றேனென்னாவணங்கியேதொழுதுபோனான். (௧௩)

கூர்ந்திடுகுலிசத்தண்ணல்குமரவேளோடறன்றன்பின்
பேர்ந்தனன்சென்றுவீரபெருந்திறற்சூரன்மூதூர்
சார்ந்தனைசிறையில்வானோர்சயந்தனோடிருந்தாரங்கட்
சேர்ந்தனைதேற்றிப்பின்னுன்செயல்வினைமுடித்தியென்றான். (௧௪)

அவ்வழியமரர்கோமானனையனவுரைத்தலோடுஞ்
செவ்விதுநிற்றியற்றேசெய்வனென்றவனைநீங்கி
யெவ்வமிறுணைவராகுமெண்மருமிலக்கத்தோரு
மெய்வருந்தொடர்பிற்செல்லக்கண்ணுறீஇவிடலைசொல்வான். (௧௫)

நீயிர்கள்யாருங்கேண்மினெடுந்திரைப்பரவைவாவித்
தீயதோர்மகேந்திரத்திற்சென்றுசூர்முன்போய்நந்த
நாயகன்பணித்தமாற்றநவிலுவன்மறுத்துளானே
லாயவன்மூதூர்முற்றுமட்டபின்மீள்வனம்மா. (௧௬)

என்றலும்வியந்துபின்னோர்யாவருமிறைஞ்சலோடும்
பொன்றிகழாகத்தூடுபொருந்துறப்புல்லிக்கொண்டு
வன்றிறற்பூதர்தம்முண்மன்னவரோடுமங்க
ணின்றிடவருளிவல்லேநெடுங்கடல்வேலைபோந்தான். (௧௭)

அலங்கலந்திரைகொணேமியகன்கரைமருங்கின்மேரு
விலங்கலினுயர்ந்தகந்தமாதனவெற்புதன்னிற்
பொலங்குவடுச்சிமீதுபொள்ளெனவிவாதலூறருன
கலன்கலன்கலனென்றம்பொற்கழலமர்கழல்களார்ப்ப. (௧௮)

புஞ்சமார்தமாலச்சூழல்பொதுளியபொதும்பாசுற்றி
மஞ்சுநின்றுறுதகந்தமாதனப்பிறங்கலும்பர்
விஞ்சுநுண்பொடிதோயமேனிமேலவணிவரும்பான்மை
யஞ்சனவரைமேல்வெள்ளியடுக்கல்சென்றனையதன்றே. (௧௯)

கடுங்கலிமான்றேர்வெய்யோன்கையுறநிவந்தசெம்பொ
னெடுங்கிரிமிசைப்போயவீரனிற்றலும்பொறையாற்றாது
நடுங்கியதுருமுற்றெனநனிபகிர்வுற்றதங்க
ணொடுங்கியமாவும்புள்ளுமொல்லெனவிரிந்தவன்றே. (௨௦)

உண்ணிறைபுள்ளுமாவுமோலிடவொலிமேல்கொண்டு
துண்ணெனவருவிதூங்கத்தோன்றியகுடுமிக்குன்ற
மண்ணலைத்தரிக்கலாற்றேனெளியனேனந்தோவென்னாக்
கண்ணிடைவாரிசிந்தக்கலுழ்தல்போலுமாதோ. (௨௧)

அடல்கெழுதிண்டோள்வீரனடிகளின்பொறையாற்றாது
விடர்கெழுகுடுமிவெற்புவெருவலுமாண்டைவைகும்
படவரவுமிழ்ந்தசெய்யபருமணிசிதறும்பான்மை
யுடல்கெழுகுருதிதுள்ளியுகுக்குமாறொப்பதன்றே. (௨௨)

அறைகழலண்ணனிற்பவவ்வரையசையவாங்க
ணுறைதருமாக்களஞ்சியொருவிலவொருவிவிண்மேற்
பறவைகள்போயதுன்பம்பட்டுழிப்பெரியர்தாமுஞ்
சிறியருநட்டோர்க்காற்றாஞ்செயன்முறைகாட்டுகின்ற. (௨௩)

மழையுடைக்கடமால்யானைவல்லியமடங்கலெண்கு
புழையுடைத்தடக்கையாளிபொருப்பசைவுற்றகாலை
முழையிடைத்தவறிவீழ்வமுதியகாலெறியப்பட்ட
தழையுடைப்பொதும்பர்பைங்காய்தலைத்தலையுதிர்க்குமாபோல். (௨௪)

நன்றிகொள்பரிதிப்புத்தேணகுசிரமாகவென்றூழ்
துன்றிருஞ்சடிலமாகச்சுரநதிதோயத்திங்க
ளொன்றொருபாங்கர்செல்லவோங்கிரும்பிறங்கலுச்சி
நின்றதோர்விசயத்தோளானெற்றியங்கண்ணன்போன்றான். (௨௫)

வலமிகுமொய்ம்பின்மேலோன்மலர்க்கழலுறைப்பவாற்றா
தலமருகுவட்டினிற்றலன்றுநீமுனிவருய்த்த
கொலைகெழுமுயலகன்மெய்க்குலைந்திடப்புறத்துப்பொற்றா
ணிலவணிசடையோனூன்றினின்றநிலைமைநேரும். (௨௬)

மாசிருள்செறியுந்தெண்ணீர்மறிதிரையளக்கர்வேலைப்
பாசடைப்பொதும்பர்வெற்பிற்பண்ணவன்றூதனிற்றல்
காசியிலரற்றத்தள்ளிக்களிறுடல்பதைப்பக்கம்மே
லீசனன்றடிகளூன்றியிருததியவியற்கைபோலும். (௨௭)

தாரகன்படைஞர்பல்லோர்சமரிடையிரிந்துபோனார்
பாரிடையுறாமேயந்தப்பருவரைமுழைக்கணுற்றா
வீரமொய்ம்புடையோனங்கண்மேவலுமவற்கணடேங்கி
யாருயிருலந்தாரீயோர்க்காவதோரரணமுண்டோ. (௨௮)

அனையதோர்சிமையக்குன்றமசைதலுமங்கணுற்ற
வனைகழல்விஞ்சைவேந்தாமங்கையருடனமாற்றி
யினிதுமுன்கலந்தாரஞ்சியின்புறுதிடைக்கணீத்து
வினைவிளைவுன்னிநொந்துவிண்மிசையுயிர்த்துச்சென்றார். (௨௯)

வரைமிசைநின்றவண்ணல்வனைகழலவுணர்கோமான்
பொருவருநகாமேற்செல்லப்புந்திமேற்கொள்ளாவெந்தை
திருவுருவதனைபுனணிச்செங்கையாற்றொழுதுமாலும்
பிரமனும்வியந்துநோக்கப்பேருருக்கொண்டுநின்றான். (௩௦)

பொன்பொலியலங்கற்றோளான்பொருப்பின்மேற்பொருவிலாத
கொன்பெருவடிவங்கொண்டுகுலாய்நிமிர்கொள்கைசெவ்வேண
முன்பொருஞான்றுமேருமுடியில்வந்தமரர்க்கெல்லாந்
தனபெருவடிவங்காட்டிநின்றதோதன்மையாமால். (௩௧)

ஆண்டகைநெடுநேதோள்வீரனண்டமேன்மவுலிதாக்க
நீண்டிடுமெல்லையன்னானின்றிடுகுன்றஞாலங்
கீண்டதுபிலததிறசேறல்கேடில்சீர்முனிகையூன்ற
மீண்டுபாதலத்திற்புக்கவிந்தமேபோலுமாதோ. (௩௨)

விண்ணவருய்த்ததோமேனமேவலர்புரநீறாக்கும்
பண்ணவனொருதாளூன்றப்பாதலம்புகுந்தவாபோற்
கண்ணகன்வரையும்வீரன்கழல்படவழுந்திறறம்மா
வண்ணலந்தாதைவன்மையருள்புரிமகறகுறாதோ. (௩௩)

கன்றியவரிவிற்செங்கைக்காளைபொற்றாளுமந்தண
குன்றுபிலத்துட்செல்லக்குறிப்பொடுவிழிக்குறாமே
சென்றிடமுடியுஞ்சேணபோய்த்திசைமுகத்தயனுமாலு
மன்றடிமுடிகாணுதவசலமுமபோலநின்றன. (௩௪)

ஆளரியன்னோனாளுமடுக்கலுமழுந்தும்பாரி
னீளிருமுடிசேர்வானினிரந்தமாப்பறவைபோதல்
சூளுடையிமையோர்புள்ளுமாவுமாய்த்தோமிலவீரன்
றாளொடுமுடியுநாடிச்சார்தருந்தகைமைத்தாமால். (௩௫)

அந்தமில்வலியோனிற்பவாயிடைத்துஞ்சும்பாந்த
டந்தொகைவீழுறுதுதழீஇமருங்காகக்கீழ்போய்
முந்துயர்கமடஞ்சேர்ந்துமுழங்குதெண்டிரைக்கணவைகு
மந்தரமென்னக்கந்தமாதனநதோனறிற்றமமா. (௩௬)

பதுமநேர்கண்ணன்வேதாப்பலவகைமுனிவர்தேவர்
கதிபடருவணர்சித்தர்கந்தருவத்தரொணகோண்
மதியுடைக்கதிகளோனோர்வான்பதமுற்றுமோங்கு
மதிர்கழல்வீரன்பல்வேறுரமாயொளிரநின்றான். (௩௭)

எண்டிசைமுழுதுநேமியெழுதிறதனைவுமறைதந்
தெண்டிரைக்கடலும்பாருஞ்சேண்கிளராழிவெற்பு
மண்டமுமுலகம்யாவுமகன்விழிபரப்பிநோக்கிக்
கண்டனனமலன்வைப்புங்கைதொழுதையனின்றான். (௩௮)

ஆணமில்சிந்தைவீரனச்சுதன்முதலோராவைகுந்
சேணகர்நோக்கிச்சூழுந்திசைநகர்நோக்கிப்பாரின
மாணகர்நோக்கிவீரமகேந்திரநோக்கிசூர
னீணகரிதற்கியாவுங்கரிலைபோலுமெனலுற்றான். (௩௯)

விண்ணுலாமபுரிசைவெஞ்சூர்வியனகரதனைநோக்கி
யுண்ணிலாவெகுளிகொண்டாவொருகரமங்கணேசசி
நண்ணலாயாருந்துஞ்சநாமறப்பிசைகோவெனவெ
வெண்ணினன்சிறையிலுற்றோர்க்கிரங்கியவவெண்ணமீட்டான். (௪0)

விஞ்சையரியக்காசித்தாவியன்சிறையுவணர்திங்கள்
செஞ்சுடர்ப்பரிதிநாள்கோடெய்வதகணத்தர்யாரும்
வஞ்சினத்தடுதோள்வீரனமாவுருநோக்கலாற்று
தஞ்சினர்வெருவச்செங்கையமைத்தனனழுங்கலெனறே. (௪௧)

கோளியல்கருடர்தாம்வீழ்மாதரைவிழைந்துகூடி
வாளுறுநகதகதினூறுமதிக்கிலாமயங்கித்துஞ்சி
வேளொனுநெடியோனூனறும்வெற்பொடுமபிலத்திறசெற
கேளுடனெழுந்துநாகாகிளைதனக்கணங்குசெய்தா. (௪௨)

ஆதியங்குமரன்றூதனுற்றலாலுனநிகிற்பப்
பூதலங்கீண்டுவெற்புப்பொள்ளெனவாழந்துகீழ்ப்போய்ப
பாதலங்குறுகவங்கட்பயிலராதொகையைநாகர்
காதலங்கேணமைநாடிக்கலநதனாவிருந்துசெயதா. (௪௩)

தேன்றிகழ்தெரியல்வாகைச்சேவகனகழல்கள்வெறபி
னூனறவுமனையபாங்கரொருசிலராக்காநோற்று
ரான்றுயாபதத்தைவெஃகியாங்கவாபிலதுள்வீழநது
மான்றனரிரங்கவுற்றாவனகணூர்க்குய்வுமுணடோ. (௪௪)

புண்டரநீற்றுவள்ளலபுரையுருதேவாநோக்கி
மண்டலமபுகழுமவீரமகேநதிரஞசேறற்கன்றற்
கொண்டவிவவுருவநோக்கிற்குரைகழலவுணாதம்மை
யண்டமுமிடிததுச்சாடுகினைவுகொலையறகென்றார். (௪௫)

வீரமாமகேநதிரததிலவுணருமவீற்றுவீறறுச
சாருறுமவுணாதாமுஞ்சயஙகெழுபுயததுவளளல்
பேருருநோக்கியிஙஙன்பிறந்தசொறசழக்கேயின்னுந்
தேருவதுண்டோநதாநதிறலவரைப்புணர்பபிதெனறு. (௪௬)

ஒலிகழல்வீரவாகுவோங்கலையூன்றியிந்த
நிலைமையினிற்றலோடுநெடியமால்சுதனும்விண்ணோ
தலைவனும்பிறருமன்னோன்றம்பியரளப்பிலோருங
கலிகெழுபூதர்யாருங்கண்டுவிம்மிதத்தினார்த்தார். (௪௭)

தேவர்கண்முனிவரேனைத்திறத்தவர்யாருந்தத்த
மோவரும்பதத்தினின்றேயொல்வதோருறுப்பின்மேவக்
காவருகடிமென்பூத்தூய்க்கைதொழுதையவெஞ்சூர்
மேவருநகர்சென்றெங்கள்வியன்றுயரகற்றுகென்றார். (௪௮)

ஆவதோர்காலையெந்தையாறிருதடந்தோள்வாழ்க
மூவிருவதனம்வாழ்கமுழுதருள்விழிகள்வாழ்க
தூவுடைநெடுவேல்வாழ்கதொல்படைபிறவும்வாழ்க
தேவர்கடேவன்சேயோன்றிருவடிவாழ்கவென்றான். (௪௯)

ஆண்டகைதொழுதபாணியணிமுடிக்கொண்டிவவாற்றா
லீண்டுசீர்க்குமரவேளையேத்தலுமன்பின்கண்ணீர்
வீண்டுதெண்கடலுளேகிவெள்ளமிக்குவரைமாற்றப்
பூண்டகண்டிகையைமானத்தோன்றினபொடிப்பின்பொயமல. (௫௦)

மீதுகொள்பொடிப்புமூடமெய்ப்புலன்சிந்தையொன்ற
வோதுவதவறவென்புமுருகியசெருகாட்டங்
கோதில்பேரருளின்மூழ்கிக்குதூகலிததிடுதலோடு
மூதுலகனைத்துமாவிமுழுவதுமகிழ்ந்தவன்றே. (௫௧)

அவ்வகைநிகழச்செவவேளாரருளதனைப்பெற்று
மொய்வரைமீதுநின்றோன்முழுதுலகளந்துசேண்போ
மிவவுருவோடுசெல்லினிறநதிடுமுலகமீது
செவவிதன்றென்றாவேண்டுந்திருவடிவமைந்தானனறே. (௫௨)

கிரிமிசைநின்றவண்ணல்கிளர்ந்துவானெழுந்துசென்னிக்
குருமணிமகுடமண்டகோளகைபுடைப்பவீர
னுருகெழுசீற்றசசிம்புளுருவுகொண்டேகிறறென்ன
வரைபுரைமாடவீரமகேந்திரமுன்னிப்போநதான். (௫௩)

வீரவாகுகந்தமாதனஞ்செலபடலமுற்றிற்று.

---

## கடல்பாய்படலம்.

---

அழுங்கியகழற்காலவீரனவவழியவணிக்கீழ்போய்
விழுஙகிரிநிலைமைநோக்கிமீணடுநீயெழுதியெனறா
வழஙகினனவழஙகுமெலலைவல்லையிறகிளாநதுதோனறி
முழங்கிருஙகடலினமாடேழுந்துபோனின்றதன்றே. (௧)

வீரனங்கெழலுமன்னோனவிண்படாவிசைப்பின்காலாற்
பாருறுவரைகள்யாவுமபடர்ந்தனபாங்கராகச்
சாரததலைவரேனைத்தமபியரிலககதெண்ம
ராருமங்கவன்றன்பாலாயணிந்துடன்சேறலென்ன. (௨)

விரைந்துவான்வழிக்கொள்வீரன்விசைத்தெழுகாலினண்டங்
திரிந்தனவுயிர்கணமுற்றுந்தெருமரலுற்றதெண்ணீர்
சுரந்திடுகொண்டல்யாவுஞ்சுழன்றனவடவையுண்ண
விருந்திடுமூழிக்காலுமாற்றலாதிரியல்போன. (௩)

பெருமிடல்பூண்டதோன்றல்பெயர்தலுமவிசைப்பினூதை
பரவினவெம்மைமாற்றிப்பரிதியைக்கனலைத்திங்கள்
வருணனதியற்கையாக்கிவடவையின்முகத்ததுதோன்றித்
திரைகடலிருந்தவூழித்தீயையுமவித்துச்சென்ற. (௪)

விரைசெறிநீபத்தாரோன்விரைந்துசெல்விசைக்காற்றள்ளத்
திரைகடல்சுழித்துளவாங்கித்திறன்மகேந்திரத்திற்சேற
லரசியல்புரிவெஞ்சூரனணிகங்களவன்மேற்சென்று
பொருமுரணின்றித்தம்மூர்புகுவனவிரிவபோலாம. (௫)

விடைத்தனியாற்றல்சான்றவிடலைகால்வெற்பினோடும்
படித்தலங்கீண்டுமுன்னம்பாதலங்காட்டிற்றன்று
ணடற்படுவிசையின்காலுமளியதோவலியதன்றே
கடற்புவிகீண்டுநாகருலகினைக்காட்டிற்றன்றே. (௬)

பாசிழையலங்கற்றோளான்படர்தலும்விசையின்காலைக்
காய்சினவுயிர்ப்புச்செந்தீக்கலந்துடன்றழீஇக்கொண்டேகி
மாசுறுசூரன்வைகும்வளநகர்சுற்றியன்னோ
னூசியதென்னமுன்னங்கொளுவியதூமஞ்சூழ. (௭)

பூஞ்சிலம்பரற்றுந்தாளான்போதுமுன்விரைவினோதை
வேய்ஞ்சிலம் * படுதோட்சூரன்வீரமாமகேந்திரத்தி
னுஞ்சிலம்புரிசைபொன்செய்நகரிவரைகுளிர்பூங்கிள்ளை
தாஞ்சிலம்புற்றசோலையலைத்தனதரையிற்றள்ளி. (௮)

உறைபுகுநெடியவேலானுயிர்ப்புறுகனனமுன்னோடிச்
செறுநனூர்கொளுவவன்னோன்சென்றிடுவிரைவின்கால்போ
யெறிபுனற்கடலைத்தாக்கவிடைந்துமற்றதுதானேகி
முறைமுறைதிரைக்கைநீட்டிமூண்டிடாதவித்துப்போமால். (௯)

அண்ணலங்காளையேகவுயிர்த்தகாலவன்செல்லோதை
கண்ணழறுண்டமோசகங்கடுங்கனலெதிராதோடு
முண்ணிறைபுணரியாவுமொன்னலன்பதிமேற்சென்று
விண்ணிலமொழிந்தபூதமடுத்தலின்விளைத்தபூசல. (௧௦)

வெள்வரைக்குவவுத்திண்டோள்வெலற்கருந்திறலோனெண்காற்
புள்விசைகொண்டுசெல்லப்புறந்தரப்புணரியங்க
ணுள்வளைந்துலாயசினையையொண்சுறப்பனைமீனாறை
தெள்விளித்திருக்கைதந்திதிமிங்கிலமிரிந்துபாய்ந்த. (௧௧)

நாயகன்றூதனேகளிர்கடலெதிர்ந்திடாது
சாய்வதுமீனமுற்றுந்தரங்கவெண்கரங்கடாங்கித்
தீயசூர்மூதூருய்த்துச்சென்றதுபொன்றுவோர்க்கு
மேயினவிச்சையுண்டிமிகத்தமர்வழங்குமாபோல். (௧௨)

* வேய்ச்சிலம்பென்றபாலது எதுகைநோக்கி வேய்ஞ்சிலம்பென்றாயிற்று. இது யகரவொற்று இடைவந்த ஆசெதுகை. மூங்கிலையுடைய மலையென்பது பொருள்.

காழ்தருதடக்கைமொய்ம்பன்கடுமைசால்செலவினைதை
சூழ்தருகின்றகாலைத்துண்ணெனத்துளங்கிவிண்மீன்
வீழ்தரவேலைதன்னில்வேலையுமறிந்துசெல்ல
வாழ்திரையெறிமீன்முற்றுமந்தரமபுகுவமாறாய். (௧௩)

காமருநயக்குங்காலைக துமெனச்செல்லப்பாங்கிற்
றாமலர்க்கரத்திவிட்டசுடர்மணிக்கடகவாள்போய்
நேமியங்குவடுசூழ்ந்துநிமிர்தருதிமிரமோட்டி
யேமநல்லண்டவில்லோடெதிர்ந்துபோயிகல்செய்கின்ற. (௧௪)

விண்ணவர்யாருந்தேரும்படையுமாய்விரவமேலோ
னண்ணலர்புரமேலோச்சுநகையழல்போதலொத்தான்
கண்ணழற்செலவும்போனாருன்காமுகமபூட்டியுயதத
மண்ணுலகிடந்தகூாவாய்வாளியுமெனனச்செனருன. (௧௫)

தரைதனையலைத்துநோறகுந்தாபதாக்கலக்கண்செய்து
சுரர்திருக்கவாந்துவாட்டுஞ்சூரனைக்கிளையினோடும்
விரைவுடன்முடிப்பான்முனனிவெகுணடுசெவவேளங்குய்தத
வொருதனிச்சுடாவேல்போன்றும்போயினனுயாதிண்டோளான். (௧௬)

இமிழ்தருதரங்கப்பாலினெறிகடனமதித்துவானோக்
கமிாதினையளிப்பான்வேண்டியகிலமுமுண்டுதொன்று
ளுமிழ்தருதிருமாலுன்னவுணர்ந்துமநதரமாமோங்க
ணிமிாதருபுணரிசெல்லுநிலைமைபோல்வீரன்போந்தான். (௧௭)

சேண்டொடாருலகும்பாருந்தெருமரவனலமவீசிக்
காண்டகுவிடதகையீசனளேததிடையடக்கிவைப்ப
வீண்டெமைவிடுத்தியென்றுவேத்தலுமவனநகுய்ப்ப
மீண்டதுகடல்போந்தெனனவீரருள்வீரன்சென்றான். (௧௮)

பொலங்கழல்வீரவாகுபுணரிமேலிவ்வாறேகி
யலஙகலந்திணடோள்வெஞ்சூரணிநகாவடாதுபாலின
விலஙகலில்வீரன்யாளிவியனமுகததவுணனபோற்று
மிலஙகையயநதொலலைமூதூரணிதடுதனுமெல்லைசெனறான். (௧௯)

கடலபாய்படலமுற்றிற்று.

ஆ திருவிருததம் - எ௨.

# வீரசிங்கன்வதைப்படலம்.

அனனதோராவேலைமுன்னமகனறலையாளிப்பேரோன
றன்னுபல்லணிகத்தோடுஞ்சூரனைக்காண்பானேக
மனனதிவீரனென்னுமதலையாயிரமாம்வெள்ளந
தன்னொடுமிலங்கைவைகிததணப்பறப்போற்றியுற்றான். (௧)

ஆனதோாமிக்கவீரததாண்டகையவுணர்போற்ற
மாநகர்க்கோயினண்ணவடதிசைவாயிறன்னின்
மேனிமிரவுணாதானைவெள்ளமைஞ்ஞூறுடனனான்
சேனையந்தலைவனவீரசிஙகனுந்திறலோனுற்றான். (௨)

உற்றதோர்வீரசிங்கனொண்சிறைச்சிம்புளேபோல்
வெற்றியந்திண்டோளேந்தல்விரைந்துசென்றிடலுங்காணூஉச்
சற்றுநங்காவலெண்ணானறமியனவந்திடுவான்போலு
மற்றிவன்யாரையென்னாச்சீறினனவடவையேபோல். (௩)

உண்குவனிவன்றனாவியொல்லையெனறுன்னிக்காலு
மெண்கிளாமனமுமபின்னரெய்துமாறெழுந்துநோபோய
விண்கிளர்செலவிற்றானைவெள்ளமைஞ்ஞூறுஞ்சுற்ற
மண்கிளர்கடல்போல்வீரவாகுவின்முன்னனாசென்றான். (௪)

சென்றிடுவீரசிங்கன்றிறல்கெழுபுயனைப்பாரா
வின்றளவெமதுகாப்புளேகினரில்லையாநீ
யொன்றொருதமியனபோந்தாயுயிர்க்குநண்பில்லாய்நின்னைக்
கொன்றிடுமுனனீவந்தசெயன்முறைகூறுகென்றான். (௫)

பொன்னியதிண்டோளவீரன்புகலுவானிலங்கைவாழ்
மன்னியல்சூரன்வைகுமகேந்திரஞ்சென்றுமீளவா
னுன்னினனபோந்தேனீதென்னுறுசெயல்வலியையென்னி
னின்னினீவேண்டிற்றொன்றையியற்றுதிகாண்பனென்றான். (௬)

திறன்மிகுசிங்கனன்னோன்செப்பியமொழியைக்கேளா
விறையுநம்மவுணரானையெண்ணலன்வலியன்போலு
மறிகுதுமீண்டுசேறலழகிதன்றெனாவுன்னிக்
குறுகியபடைஞர்தம்மையிவனுயிர்கோடிரென்றான். (௭)

எனறலுமரியதொன்றையெயினர்கள்வேட்டைக்கானிற்
சென்றனர்திரண்டுசுற்றிச்செருவினையிழைப்பதேபோற்
பொன்றிகழ்விசையவாகுப்புங்கவன்றன்னைச்சீற்ற
வன்றிறலவுணர்யாருமவனைந்தமர்புரியலுற்றார். (௮)

வேலினைவிடுப்பாதண்டம்வீசுவாமுசலந்தூர்ப்பர்
சாலமதெறிவராலந்தன்னையோசசிடுவாவாவிற்
கோல்வகைதொடுப்பாநாஞ்சிற்கொடும்படைதுரப்பாவெய்ய
சூலமதுயப்பாகொண்டதோமரஞ்சொரிவரம்மா. (௯)

கிளாந்தெழுபரிதிதன்னைக்கேழ்கிளருருமுக்கொண்மூ
வளைந்தெனவவுணாவீரனமருங்குசூழ்ந்தாடல்செய்யத்
தளர்ந்திலனெதிாந்துதன்கைததாரைவாளுறையினீக்கி
யுளந்தனின்முனிந்தன்னோரையொல்லைசூழ்ந்தடுதலுற்றான். (௧௦)

அரக்குருக்கொண்டவெற்பினடுகனற்கடவுளெய்தி
யுருக்கியேயதனையெல்லாமொல்லையினுடைக்குமாபோ
னெருக்கியவவுணர்தானைநீததமதுடையவீரன்
றிருக்கிளர்வாளொன்றேந்திச்சென்றுசென்றடுதல்செய்தான். (௧௧)

பணிபடாகுழுமறன்னைப்பாயிருட்செறிவையங்கிக்
கணிபடர்பொற்பிற்றோன்றுங்காய்கதிர்முடிக்குமாபோ
னணிபடரவுணர்தானைநைந்திடச்சுடாவாளொன்றாற்
றணிபடர்வீரவாகுதடிந்தனன்றிரிதலுற்றான். (௧௨)

உறைந்தனகுருதிவாரியொல்லையினுவரித்தெண்ணீர்
மறைந்தனவவுணர்தானைமால்கரிபரிதேர்முற்றுங்
குறைந்தனகரந்தாண்மொய்ம்புகொடுமுடிதுணிந்துவீழ்ந்த
நிறைந்தனவலகையீட்டநிரந்தனபரந்தபூதம். (௧௩)

வெள்ளமாறவுணர்தானைவிளிந்திடவினையபாலால்
வள்ளல்சென்றடுதல்செய்யமற்றுளவவுணர்யாரு
முள்ளநொந்திரங்கித்தத்தமுயிரினையோம்பல்செய்து
பொள்ளெனநிலனுமவானும்புலந்தொறுமிரியல்போனார். (௧௪)

போதலும்வீரசிங்கன்பொள்ளெனச்சினமேற்கொண்டு
மாதிரங்கடந்துமேல்போய்வளாதரும்வாகைமொய்ம்பன்
மீதொருசூலந்தன்னைவிட்டனன்விட்டகாலை
யேதியங்கதனைஎன்னதிருதுணிபடுதலியார்ததான். (௧௫)

ஆர்த்தலுமடங்கற்பேரோனண்டகைவீரன்மேனமை
பார்ததனன்றனதுபாணிபற்றியபடைகடம்மிற்
கூர்த்ததோர்குலிசம்வீசக்குறுகிவாளதனைமாற்றிப்
போத்தொருபடையெடாமுன்பெயாந்தவன்முனனஞ்சென்றான். (௧௬)

சென்றுதன்மணிவாளோச்சிச்செஙகைகடமித்துத்தீயோ
னென்றொருமுடியுஙகொய்தேயுவாக்கடலிடையேவீட்டி
நன்றுதன்னுறையுட்செல்லநாந்தகஞ்செறித்துமுன்னோர்
வென்றிகொண்டகன்றனென்பவேலவன்விடுத்ததூதன். (௧௭)

வீரசிங்கன்வதைப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௮௧.

# இலங்கைவீழ்படலம்.

மலங்கொடுசுறவுதூங்குமறிகடன்மீதுமேரு
விலங்கல்சென்றிட்டதென்னவிண்ணிடந்தனனினீங்கி
யலங்கலந்திண்டோள்வள்ளலவுணர்தம்மிருக்கையாகு
மிலஙகையஙகுவடுமூன்றிலிடைப்படுசிகரம்பாய்ந்தான். (௧)

நெடுவரைதனனைவேலானீறுசெய்திட்டவண்ணல்
விடவருதமியோன்றொல்லையிலஙகையினமீதுபாய
வடலதிவீரனேனையவுணாகள்கலஙகியேங்கி
யிடியுறுபுயஙகமென்னயாருமெய்பனித்துவீழ்ந்தார். (௨)

வேறு.

வைப்புறுமகேந்திரவடாதுபுலமாகி
யிப்புறமிருந்திடுமிலங்கைதனிலேந்தல்
குப்புறுதலுங்குலைகுலைந்தவுணரோடு
முப்புறுகடற்படிதல்கண்டுவகையுற்றான். (௩)

தந்திமுகமாமதலைதன்னடிவணங்கா
தந்தரவிண்ணோர்கடலைதிடலுமன்னோன்
சிந்தைமுனிவெய்தவிடைசேர்த்தகயிறோடு
மந்தரநெடுங்கிரிமறிந்தபடிமானும். (௪)

ஆடல்கெழுமொய்ம்பினனடித்தலமதூன்ற
மூடுதிரைவேலையிடைமூழ்கியவிலங்கை
கூடுமேகவண்ணல்குலிசந்தொடரநேமி
யூடுபுகலுற்றிடுமைநாகவரையொக்கும். (௫)

மாமறைகடம்மைமுனமவஞ்சனைபுரிந்தே
சோமுகன்மறைந்ததிரைதூங்குகடலூடே
யேமமுறுபேருருவெடுத்ததொருமாணசேல்
போமதெனவாழ்ந்ததுபொலங்கெழுமிலங்கை. (௬)

தொல்லைதனிலோரவிதிதுயின்றகடைநாளி
னெல்லையதிகந்துகடலேழுமெழவங்க
ணொல்லைபிலமுற்றபுவியுய்ப்பவொருகேழல்
செல்லுவதினாழ்ந்ததுதிரைக்கடலிலங்கை. (௭)

சிந்துவினகன்கரையொர்திண்கிரியழுந்த
வந்தமிலிலங்கையுமழுந்தியிடுதன்மை
முந்தொருமடக்கொடிவிருப்பின்முனிமூழ்க
விந்திரனுநேமியினிடைப்புகுதல்போலும *. (௮)

உலகுகொள்புயவீரனடியூன்றுதலுமுன்னோர்
விலங்கல்பணிதன்னுலகமேவியதுகோளா
வலங்கல்பெறுவாகையவனாற்றலதுதாங்கி
யிலங்கையதுகாண்பலெனவேகியதுபோலும். (௯)

இலங்கையிதுபான்மையினிருங்கடலுண்மூழ்கக்
குலங்களொடுவைகியகொடுந்தகுவர்யாருங்
கலங்கினரழுங்கினர்கவன்றனர்துவன்றி
மலங்கினர்புலம்பினர்மருண்டனர்வெருண்டார். (௧௦)

அற்றமுறுதானவர்களாழவனையோரைச்
சுற்றியவளப்பிலசுறாவுழுவைமீனம்
பற்றியவனந்தனபலப்பலதிரண்டே
செற்றியதிமிங்கிலதிமிங்கிலகிலங்கள். (௧௧)

கையதனையீர்ப்பசிலகால்கள்சிலவீர்ப்ப
வெய்யதலையீர்ப்பசிலமிக்கவுயர்தோள்கண்
மொய்யுடையமார்பதனையீர்ப்பசிலமொய்த்தே
சையமுறழ்யாக்கையுளதானவரையீனம். (௧௨)

* பிரமன் அகலிகை எனபாளைப் பேரழகுடையளாகச் சிருட்டித்து, ஆயிரம் வருடங் கடலிலாழ்ந்து சுவாசம் அடக்கித் தவஞ்செய்வார்க் கிவ ளுரியள் என்று கூற, இருடிகளனைவரும் அவளுடைய பேரழகைக்கண்டு ஆசையுற்றுப் பிரமன் கூறியபடி தவஞ்செய்தும் அது முடிவுபெறாமையி னொழிந்தனர். அதனையறிந்த கௌதமர் பிரமன் கூறியபடி கடலிலாழ்ந்து தவஞ்செய்யும் பொழுதில், இந்திர னும அவளைப் பெறும்பொருட்டு, ஓரிருடிவடிவங்கொண்டு, தவஞ்செய்வானைப் போல நடித்துக் கடலிலாழ்ந்து பலமுறை எழுந்தெழுந்து வஞ்சனை புரிந்தான் எனவுணர்க.

அத்தனொடியாளையமனையன்பின்மூதிர்சேயைக்
கொத்தினொடுகொண்டுசிலர்கூவியெழுகின்று
ரெய்த்தனர்கள்செய்வதெனிரும்படையும்விட்டுத்
தத்தமுயிர்கொண்டுசிலர்தாமுமெழலுற்றார். (௧௩)

உற்றசிலதானவரையொய்யெனவளாவித்
திற்றிவிழைவானனிதிரண்டனர்களெல்லாம்
பற்றுழிதனித்தனிபறித்ததுபொருட்டாற்
பொற்றைபுரைமீன்கள்பெரும்போர்வினைபுரிந்த. (௧௪)

தானவர்களோர்சிலவர்தம்முணல்குறித்தே
வானிமிருமோதையெனவந்துதமையெற்றப்
பூநுனையவாள்சுரிகைபோரயில்கள்கொண்டே
மீனமொடுவெஞ்சினம்விளைத்தமாபுரிந்தார். (௧௫)

சீர்த்திகொளிலங்கைகடல்சென்றிடலுமங்க
ணார்த்திபெறுமங்கையர்களங்கையவைபற்றி
யீர்த்தபிறரில்லுறவிசைந்துகரம்பற்றுந்
தூர்த்தரைநிகர்த்தனசுறாமகரமீனம். (௧௬)

மீனொருகைபற்றியிடவேறொருகரத்தைத்
தானவர்வலித்தொருதடக்கைகொடிசிப்ப
மானனையகண்ணியர்வருந்திடுதலோரைந்
தானபுலனீர்ப்பவுளமூங்குவதுபோலும். (௧௭)

திண்டிறல்வலம்படுதிருக்கைசுறமீன
மண்டியதிமிங்கிலம்வருந்தகுவர்சூழல்
கண்டுமிசையெற்றிடுதலுங்கடிதுவாளாற்
றுண்டமுறவேயவைதுணிதகெழூநர்சில்லோர். (௧௮)

கட்டழல்விழிச்சுறவுகாரவுணர்தம்மை
யட்டுணல்குறிததுவரவன்னவர்கணீவித
தொட்டனாபிடித்தகடுதூருமவகைபேழ்வா
யிட்டனர்மிசைநதனரெழூநதனாகள்சில்லோர். (௧௯)

ஏற்றபுனலூடுதெரிவின்றியெமரென்றே
வேற்றொருமடந்தையர்வியன்கையதுபற்றிப்
போற்றியெழவங்கவர்புறத்தவாகளாக
மாற்றினரிசைந்துசிலர்வாழ்க்கைமனமவைத்தா. (௨௦)

இல்லிவரெனப்பிறரையேந்தியெழவன்னோர்
புல்லுதனியன்பர்புடைபோகவொருசில்லோ
ரல்லலுறுவார்தமையடைந்ததொருகன்னி
மெல்லவயல்போந்துழிமெலிந்தழலுவார்போல். (௨௧)

நீமைபுரிமால்களிறுதிண்புரவியாவு
மேமருசுறாத்தொகுதியீர்த்துவிரைந்தேகித்
தோமறுபிணாமகரந்துய்ப்பவுதவுற்ற
காமர்கெழுபெண்மயல்கடக்கவெளிதன்றே. (௨௨)

மாற்றறுசுருச்சிலமடப்பிடிகைபற்றி
யேற்றபெண்வழிச்செலவெதிர்ந்ததனைநோக்கி
வேற்றொருபெடையாயதெனவோவுறுகைகையாக
காற்றுமுபகாரவியல்பாகியதையன்றே. (௨௩)

சிந்துவதன்மீதிலெழுசில்லவுணராயோர
கந்தனமுருகேசன்விடுகோளைசெயல்காணு
நந்தமையுநின்றிடினலிந்திடுவன்யாங்க
ளுய்ந்திடுதுமென்றுகடிதோடியயல்போனார். (௨௪)

பீடுசெறிதங்கணவரைப்பிரிகிலாமே
கூடுமவழியாய்ந்தசிலகோறதொடிமின்னாக
ளாடைபுனலூடுபுகவல்குறமகையான
மூடியெழுவாமுலைமுகத்தினமுகம்வைத்தே. (௨௫)

சேண்டொடரிலங்கைகடலசென்றுழியதன்பா
லாண்டசிலமாதர்களரத்தவுடைகொண்டார்
மீண்டெழுநீர்படவெளிப்படுவதல்குல
காண்டகையசெம்மதிகளங்கமடைந்ததென்ன. (௨௬)

காரவுணமாதர்சிலர்காமாகடல்வீழ்வார்
நீரமெழவேயுடைநெகிழ்ந்தொருவியேக
மூரனமுகமலனுருவுமுற்றுறமறைத்தே
தேரையெனவொண்புனலசெறிந்துதிரிவுற்றார். (௨௭)

ஆசுறுமரைத்துகிலகன்றிடவெழுந்தே
தேசுறுமடந்தையரிலோர்சிலவர்சேண்போய்
மாசறுபுயற்குழலைவலக்கரம்பற்றி
நூசினியல்பானவுசுற்றியுலவுற்றார் (௨௮)

இலங்கைவீழ்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௧௯.

---

# அதிவீரன்வதைப்படலம்.

அன்னதொர்பானமைகள்ளாகவிலங்கை, முன்னுறுவ கடலாழ்ந்ததுமுழுக
விந்நகர்போற்றியிருந்திடுகின்ற, மின்னுனைவேலதிவீரனுணர்ந்தான். (௧)

தனதுபுரங்கடல்சார்ந்ததுகண்டு, நனிதுயரெய்தினனுன்னுமனடந்தான
சினவியுயிர்த்தழல்சிந்தநகைத்தா, னினையவணிவ்வனதகத்திடைகொண்டான் (௨)

சுந்தரமேவருசூரபன்மாவோ, வந்தமிறப்பியரோவனையார்தம
மைந்தர்களோமதியேனவரல்லா, விந்தவியற்கையையார்புரிகிற்பார். (௩)

ஆயவரெண்ணினுமிங்கதுசெய்தற, கேயவரேதுவுமின்றுதமமூக்குத
தீயதுசெய்கலாசிந்தையதன்றானை, மாயையுமீதுமதிக்கிலளம்பாலும. (௪)

மூவருமிச்செயன்முன்னலர்பின்னர்த, மேவலர்களயாரிதுசெய்திடவல்லா
ரேவருநஞ்சிறையெய்தினர்வேள்விக், காவலருருயிர்காத்துமறைந்தான். (௫)

மாதிரமேலவர்வானிடைவைப்பின், மேதகும்விண்ணவர்விஞ்சையர்சித்த
ராதியர்நம்மிறையாணையினீங்கா, ரீதுபுரிந்திடவெண்ணுவர்கொல்லோ. (௬)

தவ்வறவீண்டமர்தானவராற்ற, மெய்வலிமாயைகண்மேவினரேனுந்
தெவ்வடுசூர்முதறிண்படையஞ்சி, யிவ்வியறன்னையிழைக்கலர்போலும். (௭)

ஆதலினன்னவராற்றலரென்னி, னீதொருசெய்கையிழைத்தவர்யாரோ
தாதையகன்றுழிதானவரோடே, காதலனிந்நகர்காத்ததுநன்றால். (௮)

காயமொடுங்குகனற்சிரமூடு, போயதுவல்லைபுறஞ்செலநோற்று
மாயைபெரும்படைவன்மைகள்வேத, னீயமுன்வாங்கியவென்செயனன்றால். (௯)

தந்தையுறாதுதணந்துழியாங்கோர், மைந்தனிருந்துதன்மாநகரோடு
மந்திலகன்கடலாழ்ந்தனனென்றா, னந்தமரென்னைநகைப்பர்களன்றே. (௧0)

மன்னவனீதுமதித்திடின்மற்றென், றன்னையடும்பெறுதாதையுமற்றே
பின்னுளரெள்ளுவர்பெற்றியிதாமே, லென்னியனன்றெனவெண்ணியினைந்தான்.

இனைந்ததிவீரனெனுந்திறன்மைந்தன், கனைந்திடுகின்றகடற்கிடையாழ்வோ
னனந்தரமூழ்வினையாற்றலினன்றோன்,மனந்தனிலீதொருதன்மைமதித்தான்.(௧௨)

ஒல்லொலிசேருவரிக்கடன்மீதாய்ச், செல்லுவன்யாரிதுசெய்தனரென்றே
வல்லையிலோர்குவன்மற்றவர்தம்மைக், கொல்லுவன்மெய்ப்படுசோரிகுடிப்பன். ()

என்றதிவீரனிரும்படையாவு, மொன்றறவாரியுருத்தணிகத்து
ணின்றுளர்தங்களைநேடுபுகொண்டே, வன்றிரைவேலையின்மீமிசைவந்தான். (௧௪)

வேறு.

விடலைதிருமுன்னமதிவீரனணிகங்கள்
புடையில்வரநீரின்மிசைபொள்ளெனவெழுந்தா
னடுதொழிலியற்றியிடுமாதிதனையெய்தக்
கொடியவிடம்வார்கடல்சூலாய்நிமிர்வதேபோல். (௧௫)

விழுந்திடுமிலங்கைதனின்மேவுமதிவீர
னெழுந்துதனதானையொடிருங்கடலுளங்கிக்
கொழுந்துமிசைசென்றனையகோலமொடுநின்ற
செழுந்திறல்கொண்மொய்ம்புடையசெம்மணிலைகண்டான். (௧௬)

கண்டனன்வெகுண்டிதழ்கறித்துநகைசெய்யா
வண்டர்குழுவானிவனொராண்டகைநமூதூர
தெண்டிரையிலாழுமவகைசெய்துமிவணின்று
னெண்டிசைதொழுந்தகுவராணையினிதென்றான். (௧௭)

என்றுமொழியாவிரைவில்யாளிமுகன்மைந்தன்
கொன்றிவனதாருயிர்குடிப்பனெனவுன்னிச்
சென்றிடலுமாழ்ந்தவாசெயற்கையதுகாண்பா
னின்றதொருபேரறிஞனீர்மையதுகண்டான். (௧௮)

ஆனபொழுதத்தினிலவன்புடையில்வந்த
தானவர்கள்சூழ்ந்தனர்சமர்த்தொழிலியற்ற
மானவிறலோன்றனதுவாளுறைகழித்தே
யூனொடுயிர்சிந்திடவொல்லையடல்செய்தான். (௧௯)

அற்றனசிரத்தொகுதியற்றனகரங்க
ளற்றனபுயத்தொகுதியற்றனபதங்க
ளற்றனபெரும்புறமுமற்றவுடன்முற்று
மற்றனர்கள்யாருமுயிரற்றதவர்பூசல். (௨௦)

பங்கிசெறிசெந்தலைகள்பாய்குருதிநீர்மே
லெங்கணுமிதப்பனவிருங்கடலினூடே
செங்கொடிபடர்ந்திடுசெழும்பவளவைப்பி
லங்கமலமானவையலர்ந்திடுதல்போலும். (௨௧)

அற்றமகல்வீரனவுணப்படைதுணிப்பச்
செற்றியபிணத்தொகைதிரைப்புணரிதூராதது
மற்றுமிசைபோந்துமணியாலுமொரிலங்கைப்
பொற்றையதியற்றியதுபோன்றுளதுமாதோ. (௨௨)

தன்படைவிளிந்துசலதிக்கடலுள்வீழ
முன்பனதிவீரன்முனியாவதனைநோக்கி
யென்புடையினோரையெறிந்தாய்கடிதினின்னைத்
தின்பனதுகாண்டியெனவேசெருமுயன்றான். (௨௩)

சொல்லுமதிவீரனவருதோற்றமதுகாணா
வல்லைவருகென்றுதிறல்வள்ளலுமழைப்ப
வெல்லையதனிற்செருவினேற்றிவனையின்னே
கொல்லுகெனவங்கொருகுந்தமதெறிந்தான். (௨௪)

உய்த்ததொருகூரயிலுரத்திலுறுமுன்னர்
மத்தகயனோவிடலைமற்றதுதெரிந்தே
கைத்தலமிருந்திடுகனற்புரையும்வாளா
லத்துணையிரண்டுதுணியாய்விழவெறிந்தான். (௨௫)

கண்டமுறஞாங்கரதுகண்டுதிறன்மைந்தன்
றண்டமவிரைந்தொன்றொருதடக்கைகொடெடுத்தே
மண்டமர்செயுன்னுயிரைவாங்குமிஃதென்று
வண்டாபுகழ்காளைதனதாகமுறவிட்டான். (௨௬)

வேறு

விட்டகாலையத்தண்டினைவெலற்கருந்திறலோ
னட்டிடானற்றனிவாளினாலேற்றனனகலம்
பட்டுமற்றதுநுண்டுகளாகவப்பதகன்
மட்டிலாததோர்விம்மிதமெய்தினன்மறுகி. (௨௭)

வேறொராமுத்தலைப்படையதுகொண்டதிவீரன்
மாறிலாவிறன்மொய்ம்பினன்றன்மணிமார்பி
னூறுசெய்திறமோச்சலுங்கண்டுநம்முரவோன்
சீறியாங்கதுபற்றினன்செங்கையாலிறுத்தான். (௨௮)

இறுத்தகாலையிலிலங்கையில்யாளிமாமுகன்சேய்
செறுத்துமற்றிவன்றனையடலரிதெனச்சிந்தை
குறித்துமற்றொருநாந்தகமேந்தினன்குறுகி
வெறித்தகொண்டலுட்கொட்புறுமின்னெனவிதிர்த்தான். (௨௯)

கறங்கினிற்பெருவட்டணைபுரிந்துதன்கரமே
னிறங்கொள்வாளினையிடம்வலந்திரித்தனனெறியே
பிறங்குமார்கலித்தெண்டிரையலைதரப்பெரிது
மறங்கொளுந்தகமீனுகண்டலமரும்வகைபோல். (௧௦)

ஏதியிங்கிதுநான்முகன்றந்துளதெவர்க்கும
பேதகஞ்செயலரியதாலனையதுபிடித்தேன்
சாதிதிண்ணைநீவருகெனுமிகைமொழிசாற்றிக்
கோதில்வீரன்முன்னணுகலுமனையவன்கூறும். (௧௧)

நன்றுநன்றுநினாற்றலுமாண்மையுநம்மை
வென்றியேயெனின்யாவருமேலுனைவியப்பார்
நின்றுநீசிலமொழிவதெனகடிதுநேருதியால்
வென்றிவீரருந்தமைப்புகழ்கிற்பரோவென்றான். (௧௨)

என்னவொன்னலனகைத்தனன்வீரனுமெதிர்ந்தா
னன்னபான்மையாவாளமராடினரகல்வான்
மின்னுமாமுகிற்றொன்றியேயெதிரெதிர்விரிந்து
பின்னருள்புகுந்துடனுடனசெறிந்தபெற்றிமைபோல். (௧௩)

சென்னிநாடுவார்களத்தினைநாடுவார்செவிதாள்
கன்னநாடுவார்புயங்களைநாடுவர்கரங்க
ளுன்னிநாடுவருரத்தினைநாடுவருகளப்
பொன்னினார்கழனாடுவார்வாளமர்புரிவார். (௧௪)

இணங்குசீரவிருவருமினையனவுறுப்பி
லணங்குசெய்திமெய்ப்பினுலாயிடையுய்ப்பார்
நுணங்குவிஞ்சையின்வன்மையானெய்தினமாற்றிடுவார்
மணங்கொள்செந்நிறவாள்கொடேவட்டணைவருவார். (௧௫)

போதயின்னதிலெம்பிரானறாதுவன்பொருவா
னேதிகொண்டுளான்றன்னையானவலிகதிடவியல்போ
வாதலாலிவன்படைமுறைவெல்லுதேயறனென
றோதிசேருளங்கொண்டனனிடைதெரிந்துநின்றான். (௧௬)

இடைபுகுந்ததிவீரனதடிகளோரிரண்டு
முடியுமாகமுந்தோள்களுமாங்கொருமுறையே
சுடர்பிறங்கியவாளினாலண்டகைதுணித்துக்
கடிதுவீட்டினனவனவர்தவனுயிர்கவர்ந்தான். (௧௭)

அதிவீரன்வதைப்படலமுற்றிற்று

ஆ திருவிருத்தம் - ௧௫௪.

# மகேந்திரஞ்செல்படலம்.



வீரவாகுநின்றவவதிவீரனைவீட்டித்
தாரைவாளுறைசெலுத்தியேவெஞ்சமாதணித்து
நேரில்வீரமாமகேந்திரம்போவதுநினைந்தே
யேருலாவருமிலங்கையினெல்லைநீத்தெழுந்தான். (௧)

எழுந்துவான்வழிச்சேறலுமார்கலியிடையே
விழுந்துகீழுறுமிலங்கைமீண்டெழுந்ததுவிரைவிற்
கழிந்ததொல்பரநீங்கியகாலையிற்கடனூ
டழுந்துகின்றபொற்றோணிமீச்சென்றிடுமதுபோல். (௨)

வார்த்தயங்கியகழலவன்வான்வழிக்கொளனு
மீதத்தெண்கடனீத்தமேலெழுதருமிலங்கை
சீத்தநான்முகனுறங்குழிச்சிந்துவூடழுந்திப்
பேர்த்துஞாலமவிட்டெழுதருமேருவிற்பிறழும். (௩)

எள்ளுநீரரைப்பற்பகலாற்றலினிலங்கை
கொளலைவெமபவமாசிருளடைந்ததுகுறைதீ
வள்ளருள்படநீத்ததுபவந்துகணமாற்றத்
தெள்ளுநீர்க்கடலபடிந்தெழுந்தாலெனத்திகழும். (௪)

கந்தரந்தவழ்தெணபுனற்கருங்கடனடுவட்
சுந்தரஞ்செறிபொன்சுடரிலங்கைதோன்றியது
முந்துகாலையிலெமபிரானருள்வழிமுராரி
யுந்திநின்றெழுபிரமன்மூதண்டமொத்துளதால். (௫)

இன்னதாகியவிலங்கைமாபுரத்தைநீத்தெழுந்து
பின்னுமாயிரயோசனைவானிடைப்பெயர்ந்து
பொன்னுலாவுறுவாகையம்புயத்தவனபுலவோ
ரானலானுறைமகேந்திரவரைப்பினமுன்னுற்றான். (௬)

நெற்றிநாட்டத்துநந்திதன்கணத்தவனேமிப்
பொற்றையாமெனச்சூழ்ந்துயாமகேந்திரபுரிசைச
சுற்றுஞாயிலும்வாயிலகடொறுந்தொறுநதோன்றுங்
கற்றைமாமணிச்சிகரியுநுனித்துமுன்கண்டான். (௭)

சேரலாரமர்மகேந்திரநகர்வடதிசையில்
வாரிவாய்தலுட்கோபுரத்தெற்றியினமாடே
கோரனேயதிகோரனேயெனப்படுங்கொடிய
வீரர்தானையோடிருந்தனாகாவல்கொள்வினையால். (௮)

கரிகளாயிரவெள்ளமேதேருமக்கணிதம்
பரிகளாங்கதற்கிருதொகையத்தொகைபதாதி
யுரியவப்பெருந்தானையம்பெருங்கடலுலவா
விரவிமேவரவிருந்தனர்காத்திடும்வீரர். (௯)

பகுதிகொண்டிடுதானையஞ்சூழலாமபரவைத்
தொகுதிகண்டனன்விம்மிதங்கொண்டனன்றுன்னார்
மிகுதிகொண்டுறைகாவலுங்கண்டனன்வியனூர்
புகுதிகொண்டிடுமுணர்வினனினையனபுகல்வான். (௧௦)

ஈண்டுசெல்லினித்தானைசூழ்ந்தமர்செயும்யானு
மூண்டுநேரினுமுடிப்பவோபகலெலாமுடியு
மாண்டதென்னினுமுலவுமோமாநகரிடத்து
மீண்டும்வந்திடுங்கரிபரிபதாதிதோவெள்ளம். (௧௧)

வந்தவந்ததோர்தானவப்படையொடேமலேவுற்
றெந்தைகந்தவேளருளினல்யாஞெருவேனுஞ்
சிந்திநிற்பனேவிந்கர்த்தானேகள்சிதைய
வந்தமில்பகல்சென்றிடுமெளியரோவவுணர். (கஉ)

எல்லேயில்பகல்செல்லினுஞ்செல்லுகவினைய
மல்லன்மாநகரவுணர்மாப்பெருங்கடல்வறப்ப
வொல்லுசீர்மையால்யானடல்செய்வனேனுருத்துத்
தொல்லேமைந்தரைத்துணைவரையுய்க்குவன்சூரன. (கங)

உய்த்தமைந்தர்கள்சூழ்ச்சியின்றுணைவர்களொழிந்தோ
ரத்திறத்துளோர்யாரையும்வெலற்கரிதயில்வேற்
கைத்தலத்தவன்வலிகொடேபற்பகல்காறு
மித்தலேச்சமராற்றியேமுடிக்குவனெனினும. (கச)

ஏவரும்வெலற்கரியசூர்பின்னர்வந்தெதிர்க்கு
மோவில்வெஞ்சமர்பற்பகலாற்றியானுறினும்
வீவதில்லேயாலங்கவன்மேலேநாட்டவததாற்
றேவதேவன்முன்னருளியவரங்களின்சீரால். (கரு)

அன்னவன்றனேமாலயன்றனக்கும்வெல்லரிதா
லின்னுமாங்கவனுனேக்கும்வெருவியேயிருந்தார்
பின்னேயாரவனறன்னேவென்றிடுவர்கள்பெருநாட்
டுன்னியான்சமராற்றினுந்தொலேகிலன்சிறிதும். (கசு)

தொலேந்துபோகிலன்சூரமரியற்றிடற்றுன்னிக்
கலந்தயான்விறலின்றிமீண்டேகுதல்கடனே
மலேந்துநிற்கவேவேண்டுமொலாயினும்வறிது
மலந்தலேப்படுஞ்சுரர்சிறையகன்றிடவற்றே. (கஎ)

மற்றிந்சீர்மையிற்பற்பகலவனெடுமலேந்து
வெற்றிகொண்டிலனின்னுமென்றமரினேவீட்டி
யொற்றினீர்மையையுணர்த்துதலொல்லுமோவுலவா
தெற்றைவைகலுமமர்செயவேண்டுமாலெனக்கே. (கஅ)

போதநாயகன்பரம்பொருளுயகன்பொருவில்
வேதநாயகன்சிவனருளுயகனவிண்ணோர்க்
காதிநாயகனறுமுகநாயகனமலச்
சோதிநாயகனன்றியார்சூரனேத்தொலேப்பார். (கக)

இம்பர்சூரொடுபொருதுநின்றிடுவனேயென்னி
னம்பிரானறுமாமுகன்பின்னரேநண்ணி
வெம்புசூரனேவேலினுற்றடிந்துவெஞ்சிறையி
னும்பர்யாரையுமீட்டிடவேண்டுமேலொருநாள். (உ௦)

ஆதலாலமராற்றுதன்முறையதோவஃதான்
றீதுநம்பெருமான்றனதருளுமன்றினேய
தூதர்செய்கடனுங்கொலோவமர்பெருத்தொடர்பாற்
போதலேகடனென்றனன்பொருவில்சீரறிஞன். (உக)

வே று.

இப்பால்வாய்தலினெல்லைநீங்கிய, துப்பார்தானைகடுற்றுநின்றவா
லப்பாலெய்தரிதாமருங்குபோய், வைப்பார்கீழ்த்திசைவாயினண்ணுவேன். (௨௨)

என்றுவுன்னியியன்றவுத்தரப், பொன்றூர்வேலிபுகாதுபாங்கர்போய்க்
கொன்றூர்கின்றகுணக்குவாய்தலின், முன்றுவேகினன்மொய்ம்பின்வீரனே. (௨௩)

மேதிக்கண்ணவன்வீரபானுவென், றூதிக்கத்தவுணர்க்குநாயக
ரேதிக்கையரிரண்டுவீரரு, மாதிக்கன்னதன்வாயிலபோற்றினூர். (௨௪)

திருவுந்தும்வடதிக்குவாய்தலின், விரவுந்தானையின்வெள்ளமெய்ததொகை
பரவுஞ்சூரர்பயிற்றுபல்பவத, துருவஞ்சூழ்ந்தெனவொததுநின்றவே. (௨௫)

வண்டார்செற்றியவாகைமொய்மபினூன், கண்டானன்னகடிக்கொள்காவலுந்
தண்டாதுற்றிடுதானைநீத்தமு, மண்டாவற்புதநீரனுயினூன். (௨௬)

ஆண்டங்குற்றவளப்பில்சேனையைக், காண்டுமிவ்வுழிகாவல்போற்றியே
சேண்டுன்றுமபுவிசெற்றுமாதலா, லீண்டுசெல்லரிதென்றுமுன்னினூன். (௨௭)

நினறிப்பாற்படனீாமையன்றரோ, தென்றிக்கினவழிசென்றுநாடுவ [ன.
னென்றுட்கொண்டவணீங்கியேகினூன், குன்றிற்ருனமிடல்கொண்டதோளினு

மகேநதிரஞ்செல்படலமுற்றிற்று.

ஆ திருவிருததம் - ௧௮௨.

# கயமுகன்வதைப்படலம்.

ஏகாநிற்புழியேந்தல்கீழ்ததிசை, மாகாவறகொாமதங்கமாமுகன
மீகானுபபவியனகலததினுக், காகாயத்தினமாந்துபோற்றுவான. (௧)

நூற்றுப்பதுநுவன்றதோன்முகன், மூற்றைக்கை * யினன்மொய்ம்பிராயிரன்
சீற்றத்துப்புறுதீயசிந்தையான, கூற்றத்துககொருகூற்றமேயனூன். (௨)

பொனனுரேமபுரத்துவைகனு, மன்னுய்வாழ்பவன்மாறுகொண்டுதன்
முன்னுவெயதிமுனிநதுபோாசெய, வொனனுரினறியுளஙகுறைந்துளான். (௩)

கருமேகங்கள்கறிததுவாரியுண், டுருமேரூடுமுரற்றவோச்சுவான்
பெருமேதக்கபவஞ்செய்பெற்றியான, செருமேல்கொண்டிடுசிந்தைபெற்றுளான்.

மஞ்சார்வேழம்வனத்தில்வல்லுளி, யெஞ்சாவெவவரியாளிவல்லிய
மஞ்சாராயிரமங்கைகொண்டுஞ்ச், செஞ்சோரிப்புனல்சிந்தும்வாயினூன். (௫)

காசைப்போதுகடுத்தமெய்யாதென், ஞசைக்காலரொராயிரத்தர்தம்
பாசத்தோடுபயின்றுசேர்ந்தென, வீசிதூங்கும்வியன்றுதிக்கையான். (௬)

வாளுளஃகினன்மாயுமெல்லையா, னேனுலத்திசையேகும்வீரனைக்
காணுநின்றுகனனறுசாலவுஞ், சேணுனின்னனசெப்பியேகுவான். (௭)

* மூற்றையெனபது இரட்டையென்பதுபோல கினறது; கிற்பவே, மூற்றை க்கையென்பதறகு இஙகே மூவாயிரங்கையெனப்பொருள் கொள்ளப்படும்.

மிக்கார்காவல்விலங்கிநீயிவட், புக்காய்மாயைபுகன்றுளாய்கொலோ
வக்காறுனுமெம்மாணைநீங்கியே, யெக்காலத்தினுமேகவல்லதோ. (௮)

வறியாராகிமயங்கும்வானவச், சிறியார்வைகியசீரிலூரெனக்
குறியாவந்தனைகோதிலிந்நக, ரறியாயோநமதாணையாற்றலே. (௯)

மூண்டேகுற்றனென்மொய்சினத்தினேன், மாண்டேபோயினைவல்லைநீயினி
மீண்டேபோந்திறமில்லைமேலுனக், கீண்டேமாயவிழைத்தவெல்லையே. (௧0)

சூராள்கின்றதொர்தொல்லைமாநகர், சேராநின்றனைசீறுகேசரி
பேராவெல்லையொர்பீடின்மான்பிணை, யாராய்தற்குவருங்கொலாற்றலால். (௧௧)

தொடுநேமிக்கடலுண்ணெனக்கடந், திடைசேர்கின்றவிலங்கைநீங்கியே
கடிதேயிநகர்காணவுன்னியே, யடைவாய்தேவர்கணத்துளாரைநீ. (௧௨)

திருத்தங்கண்ணகறேவர்தம்முளும், விருத்தன் * போலுமிகததுணிந்துநீ [றுளாய்.
யொருத்தன்போந்தனையொன்றொர்வாளொடே,வரத்தொனிவவிடைமாயைகற்

ஆலாலத்தையயின்றநம்பனோ, மாலானோவனசத்திலண்ணலோ
பாலாதந்திபடைத்தகள்வனோ, மேலாரிங்குனைவிட்டதன்மையார். (௧௪)

சுற்றாநின்றனைசூழவிந்நக, ரொற்றாய்வந்தனைபோலுமுன்றனை
மற்றாருய்த்தனர்வந்ததென்கொலோ, விற்றாய்நின்னுயிரெங்கணுய்திநீ. (௧௫)

சிறையிற்பட்டுழறேவர்செய்கையை, யறிகுற்றிந்திரனூளையாகியே
நெறியிறபோகநினைந்துளாய்கொலாங், குறுகுற்றாயிதுவுங்குறிப்பதோ. (௧௬)

விண்டோயுங்கனன்மேவுமெல்லையின், மண்டோய்பூளைமருததனுய்த்தெனப்
பண்டேநொய்யைபடுந்திறத்திவட், கொண்டேவந்ததுகொல்லும்வல்வினை. (௧௭)

முனனங்கம்பணிமுற்றுமாற்றியே, கின்னங் † கொண்டுகரந்தகீழ்த்திசை
மன்னன்பாலுறுவாருளன்றுநீ, யின்னும்மஞ்சலையெனனையெணணலாய். (௧௮)

கொல்லாநிற்பதொர்கூற்றமேயெனச், செல்லாநின்றிடுதிண்ணியேனமுன
நில்லாயெங்கடாநீங்குவாயெனு, வொல்லானோதியுரப்பியேகினான. (௧௯)

வனறாள்கொண்டமதக்கயாசுரன், சென்றானின்னனசெபபியமொழி
நன்றாலென்றுநகைததுநோக்கியே, நினறான்வாகைநெடுமபுயததினான. (௨0)

ஓவாதிவவகையோதிமுன்வருந, தீவாயோனெதிசென்றுயலலையிற [ன்.
சாவாயென்னிடைசாாந்துளாய்கொலாம, வாவாவென்றனனவாகைமொய்ம்பினா

வானோரஞசவருங்கயாசுரன, றானோகுன்றுதனைபபறித்திடா
வூனோடினனுயிருண்ணுமீதெனு, வானோனமைந்தன்முனனாததுவீசினான. (௨௨)

விண்டோய்மேனிவியன்கயாசுரன், கொண்டோாகையில்விடுத்தகுனறது
வண்டோலம்புரிமாலைமொய்ம்பினான், றிணடோண்மீமிசைசெவவனுறறதே. ()

வேழத்தோன்முகன்விட்டபூதரம், பாழிததோண்மிசைபட்டகாலையில்
வாழிப்பூதியின்வட்டுவிண்டெனப், பூழித்தாகியுடைந்துபோயதே. (௨௪)

பொடியுங்காலெதிர்புக்கதீயவன், மிடல்கொண்டுற்றிடுவீரனுற்றலகண்
டுடலுந்திண்சினமுற்றொராயிரம், படருங்குன்றுபறிததனமேயினான. (௨௫)

---

* விருந்தன் எனற்பாலது விருததன் என வலித்தல் விகாரமாயிற்று.
† கின்னம் - துன்பம.

பரியாகின்றபகட்டுமோமுக, னெறிவீழுகின்றநெடுங்கைசுற்றிஞ
னிறைசேர்மேருவிருந்தகோடெலாங், கறைசேர்காலவர்கட்டெழுந்தபோல் *. ()

பத்தாறூறுபடுத்தவேலையுண், மத்தாகுற்றனவாசுகித்தொகை
மொய்த்தார்வன்றலைமுனபுகுழ்ந்தெனக், கைத்தாமால்வரைக்காட்சியிக்கவே. ()

துண்ணென்றேகயாரூரனூறுபத், தெண்ணுங்தொலகிரியாவுமெய்பிரான்
கண்ணின்றோனவிடுகாமாகாளைமேல், விணணங்கான்றெனவாரத்துவீசினன். ()

பாடாபல்கிரிபற்றிவீசலு, மீடார்வெம்புலியாளிகேசரி
கோடார்தந்திகள்கோடிகோடிகள, வீடாவாப்பொடிவிமமிவீழ்பவே. (௨௯)

கேடாய்மன்னாகிடப்பவாங்கவர், வீடாவாக்கமிசைந்துளாரெனப்
பாடாவண்டுபேராரைமால்வரை, யூடாதேனகளுகுப்பவுண்டவே. (௩0)

வேறுரும்பலவெறபிடங்தொறு, மூறூரினறுலவுறறவானபுனை
மாறுமறகவிழ்வுற்றுவல்லேபே, ாறுகிக்கடலென்னவாரததே. (௩௧)

வரைவீழ்பூமபுனன்மாநதிக்கணே, யிரையாமாக்களியாவுமவீழ்தலாற
றிரைசோவாரிகள்சென்றுசேனெழிஇ, விரைவாலவெய்யவனவெடபநீகுமே. ()

பேசுஞசீரிவைபெற்றவெறபலா, மீசன்றாதுவனமுனனமெய்தின
பாசஞ்சுற்றியபம்பரதொகை, வீசுஙகாலைசுழனறுவீழ்வபோல (௩௩)

வேறு

சுடாபபெருஙகதிராதவன்றுணைனைக்கரப்ப
வடுக்கலாயிரமின்னவாறுருதலையாகக்
கடற்புருங்கணமுகிலெனவருகலுஙகணடான்
றடக்கைவேலுடையணறுணமுனனினறபிபோர். (௩௪)

நிற்குமெல்லையினவெஙகொலைதொழிலமுறைநிபடக
கிறகுமவெயயவனவிடுதிடுமாயிரஙகிரியும
பங்கன்மால்வரைகாபபவனறமமிசைடழிதி
ரறகனமேலவருமெழிலிகளெனவடைநதனவே. (௩௫)

வேறு.

மறுவரையாததிஙகளவாாசடைககடவுணலக
யறுவரையலையாபபெறறோனருளினுலையனிற
வுறுவரைபததுநூறுமொருஙகுமாயுறறுமறறோா
சிறுவரைதன்னில்யாவுஞ்சிதறியேயுடைநதவனறே (௩௬)

தெளிதருவீானறன்மேறசெறிநதிடுமடுககலயாவும
விளிவொடுமாய்நதவன்றிவிளைததிலவேறஙகொன்றும
வளநனிசுருஙகியானமவறநதநாளவெளிறுக்கொண்முக
கிளாவணபயனினறுகிககேடுபட்டுடையுமாபோல். (௩௭)

மடபகைவினைஞராறேனாவனைதருகலஙகண்முற்றுந்
திட்பமொடமாந்தகற்றாணசோந்துழிச்சிதறுமாபோற்
கொட்புறுபுழைக்கைவெய்யோனகுறிததெறிபிறங்கலயாவு
மொட்பமதடைந்தவீரன்மிசைபடவுடைந்தவன்றே. (௩௮)

* கறைசோகாலவா கட்டெழுந்தபோல என்பதற்கு - கரியவாயுக்கள்பிடுங்கி எழுந்தவாறுபோல எனப் பொருள்கொள்க.

விறல்கெழுபுயத்தினான்மேல்விடுத்திடுகிரிகள்யாவும்
வறிதுபட்டிடலுங்காணுமால்கரிமுகத்தனின்று
னறநெறியொருவிமொய்ம்பாலாற்றியவெறுக்கையாவும்
பிறர்தொளவுகுத்தியாதுமூதியம்பெறுகிலார்போல். (௩௯)

கண்டுவிம்மிதத்தனாகிக்கயாசுரன்முனிந்தோர்தண்டந்
திண்டிறன்மொய்ம்பன்றன்மேற்செலுத்தலுமதனைக்காணு
வொண்டழல்புரையுமொள்வாளுறைகழித்தொல்லைவீழத்
துண்டமதாக்கியன்னோனெதிருறத்துன்னலுற்றான். (௪௦)

மத்தவெங்கயமாந்தீயோன்வாகையந்தடந்தோளண்ணன்
மெய்த்தனியாற்றல்காணுவிழுத்தகுபனைக்கையோச்சிப்
பத்துநூறனசாலப்பழுமரம்பறியாவேந்தி
யுய்த்திடவொருதனவாளாலொய்யெனச்சிந்தியார்த்தான். (௪௧)

காயெரிகலுழும்வெங்கட்கயாசுரனவிடுவான்பின்னுஞ்
சேயுயர்வரைபல்வேறுதெரிந்தனன்பறிக்குமெல்லை
நாயகன்றூதன்காணுநாந்தகங்கொடுபோயன்னா
னுயிரமாகியுள்ளபுழைக்கையுமறுத்தானன்றே. (௪௨)

அறுத்தலுங்கவன்றுதீயோனுயிரத்திரட்டிகையுஞ்
செறித்திவன்றன்னைப்பற்றித்திற்றியாக்கொள்வனென்றே
குறித்தனனவனைப்பவாளாற்கொமமெனவாற்றல்வீரன்
றறித்தனனொருசாரவந்தவாயிரந்தடக்கைமுற்றும். (௪௩)

செற்றமால்கரியின்பேரோன்றிண்கையாயிரமும்வீட்ட
மற்றையாயிரங்கையாலும்வாகையஞ்செம்மன்மார்பி
னெற்றினனெற்றுமெல்லையெல்லையில்வெகுளியெய்தி
யற்றுவீழ்ந்திடவேவாளாலவையெலாமடுதல்செய்தான். (௪௪)

கொலைகெழுசறுகணால்வாய்க்குஞ்சரமுகத்துவெய்யோ
னிலைகெழுபாணிமுற்றுநீங்கியீரைந்துநூற்றுத்
தலைகெழுநிலைமைத்தாகிததண்சினைபலவுமல்கி
யலைகெழுவீழ்போயுற்றவாலமேபோலநின்றான். (௪௫)

பாணிகளிழந்துநின்றபகட்டுடைவதனத்தீயோ
னணினனிவனையட்டுநமமுயிர்துறததுமெனனா
மாணறுமனத்திற்கொண்டுமற்றொழினமுன்னிதடோளாற்
றாணுவின்கயிலைகாப்போன்றடமபுயந்தாக்கியார்த்தான். (௪௬)

ஐயனதொற்றன்காணுவாற்றலின்றாகிமுற்றுங்
கையினையிழந்துநின்றான்கடுங்கதிர்வாளினவெம்போர்
செய்யலனினியானென்னாச்சிந்தைசெய்துறைவாளோச்சி
யொய்யெனவவன்றன்மார்பினுதைததனனொருதன்றாளால். (௪௭)

உதைத்திடுகின்றகாலையொல்லெனவரற்றிவீழ்ந்து
மதத்தினையுறுகபோலமால்கரிமுகத்துவெய்யோன்
பதைததனனுவிசிநதிப்பட்டனனபகிரந்தமாபிற்
குதித்திடுசோரிநீத்தநகுரைகடற்போயதன்றே. (௪௮)

அவ்வியல்கண்டெல்லோரவுணர்கணமரேயீண்டித்
தெவ்வியன்முறையினின்றுசெருவினையிழைப்பார்போலு
மிவ்விவராடற்கேதுவென்கொலோவறிதுமென்றே
கவ்வையினெறிகடோறுங்காண்பதுகருதிப்போந்தார். (௪௯)

சென்றிடல்வீரன்காணாத்தீயரென்செய்கைநோக்கிற்
கன்றிவெஞ்சினமேற்கொண்டுகடுஞ்சமரிழைப்பர்யானு
நின்றமர்புரிதல்வேண்டுநிலைமையீதென்றாலம்மா
வின்றொடுமுடியுங்கொல்லோவியற்றினுமிவர்போரென்றான். (௫௦)

ஆரணந்தனக்குங்காணாவாதியங்கடவுள்சொற்ற
பேரருண்மறந்தேயின்னேபீடிலார்தம்மோடேற்றுப்
போரினையிழைத்துநிற்றல்புல்லிதுபுலமைத்தன்றாற்
சூருறைமூதூர்தன்னிற்றுன்னுவன்கடிதினென்றான். (௫௧)

எப்பெருவாயில்சாரவேகினுமங்கணெல்லாங்
கைப்படையவுணர்வெள்ளங்காவல்கொண்டுற்றவாற்றாற்
றப்பினன்சேறலொல்லாதமியனிப்படிவத்தோடு
மெய்ப்பதியிதற்குச்செல்வன்வேற்றுருவெய்தியென்றான். (௫௨)

கூற்றினையுறழும்வைவேற்குமரவேளருளாலீண்டோர்
வேற்றுருவதனைக்கொண்டுவெய்யராமவுணவீரா
போற்றுமிக்குணபால்வாய்தல்பொள்ளெனக்கடந்துபின்னர்
மாற்றலனூரிற்செல்வனென்றனனவாகைமொய்ம்பன். (௫௩)

நொய்யதோரணுவினுற்றநுணுகியுமேன்மைதன்னிற்
பொய்யில்சீர்பெருமைத்தாயும்பூரணமாகிவைகுஞ்
செய்யதோகுமரன்பொற்றாள்சிந்தைசெய்தன்பிற்போற்றி
யொய்யெனவருளினீராலோரணுவுருவங்கொண்டான். (௫௪)

நுணுகுதன்னுணர்வேபோலநோக்கருந்திறத்தாற்றானே
ரணுவுருக்கொண்டுவீரனடுகளமதனைநீங்கி
யிணையறுகுமரறம்போற்றியெழுந்துவிண்படர்ந்துமூதூர்க்
குணதிசைவாய்தனின்றகோபுரமிசைக்கணுற்றான். (௫௫)

கயமுகன்வதைப்படலமுற்றிற்று

ஆ திருவிருத்தம் - ௨௩௭.

# நகர்புகுபடலம்.



அண்டம்யாவையுமெழுவகையுயிர்த்தொகையனைத்தும
பிண்டமாம்பொருண்முழுவதுநல்கியெம்பெருமான்
பண்டுபாரித்ததிறமெனமகேந்திரப்பதியின்
மண்டுதொல்வளநோக்கியேயின்னனமதிப்பான். (௧)

எந்தைமுன்னரேசூரபன்மாவினுக்கீந்த
மூந்துமண்டங்களலமருமுவரிகண்முழுதும்
வந்துமொய்த்தனபோலுமால்வரைபுரைகாட்சிக்
கந்துபற்றியேயார்த்திடுமெல்லைநீர்கரிகள். (௨)

இயலுமைம்பெருநிறத்தினண்டங்களினிருந்த
புயலினம்பலவோர்வழித்தொக்கனபொருவ
மயிலிருஞ்சரமுயலொடியூகமற்றொழிலைப்
பயில்பரித்தொகையளப்பிலவயினவொறும்பரவும். (௩)

அண்டமாயிரத்தெட்டினுண்மேதகுமடன்மாத்
தண்டமால்கரியாயினதடம்பெருந்தேர்க
ளெண்டரும்பொருளியாவுமீண்டிருந்தனவிவற்றைக்
கண்டுதேர்ந்தனரல்லரோவகிலமுங்கண்டோர். (௪)

இணையிலிவ்விடைத்தானையின்வெள்ளமோரிலக்க
நணுகுமென்றனனந்தணஞற்பெருமபடையுங
கணிதமில்லனவிருநதனவெள்ளிகண்ணிலன்போ
லுணாவிலன்கொலாஙகனகலுஙகேட்டசொலலுரைத்தான். (௫)

உரையின்மிக்கசூர்பெற்றவண்டந்தொறுமுளவாம
வரையின்மிக்கதோகடல்களின்மிககைமாக்க
டிரையினமிக்கவாம்பரிததொகையாயிடைச்செறிந்த
பரவைநுண்மணறனனினுமிக்கனபதாதி. (௬)

மண்கொளாயிரத்தெட்டெனுமண்டததினவளமு
மெணகொளெணபதினுயிரயோசனையெல்லைக்
கண்கொள்பான்மையிலீண்டியதற்புதங்கறைதோய்
புண்கொள்வேலுடைசூரதலத்தடஙகியபோலாம. (௭)

உரைசெயாயிரத்தெட்டெனுமண்டத்தினுளவாங்
கரையில்சீரெலாநதொகுததனனீண்டவைகண்டாந்
தருமமெய்யளிகணடிலமவற்றையுநதந்து
சுராகடமமுடனசிறையிலிட்டான்கொலோசூரன. (௮)

ஆணடருங்கழற்சூரன்வாழ்மகேந்திரமதனிற்
றிரண்டபல்லியத்துழனியேழ்கடலினுநதெழிப்ப
முரணடிறததவையியம்புவாரளவையாமொழிவா
ரிரணடுபததுநூறியோசனையுண்டவரிடஙகள். (௯)

கரிகள்சேவகமொருபதினுயிரங்கடுநதோ
விரியுநீளிடையொருபதினுயிரமவிசயப
பரியினெல்லையோரிருபதினுயிரம்பையத்
துருவினினமுமுண்டுகொல்யோசனைத்தொகையே. (௧௦)

இவுளிவாயினுமால்கரிக்கரத்தினுமிழிந்து
திவளுநீரமைசால்விலாழியுந்தானமுஞ்செறிந்து
குவளையுண்கணார்நீததசாந்தணிமலர்கொண்டே
யுவளகந்தருமகழிசென்றகன்கடலுறுமால். (௧௧)

வளமைமேதகுமிப்பெருமகேந்திரம்வகுத்தன்
முளரியண்ணலிங்கொருவனன்முடிந்திடவற்றோ
வொளிறுவாட்படையவுணர்கோனுடையவண்டத்தி
னளவிறனமுகர்யாருமவந்திழைத்தனராமால். (௧௨)

புரந்தரன்றன துலகமுமொழிந்தபுத்தேளி
ரிருந்தவானமுமெண்டிசைநகரமும்யாவும்
வருந்தியிந்நகர்சமைத்திடமுன்னரேவண்கை
திருந்தவேகொலாம்படைத்தனர்திசைமுகத்தலைவர். (௧௩)

பொன்புலப்படுதுறக்கம்வான்மாதிரம்புவிகீழ்
துன்பில்போகமாருலகென்பர்தொடுகடற்பெருமை
முனபுகாண்கலர்கோட்டகம்புகழ்தருமுறைபோ
லின்பமயாவையுமுளநகரீதுபோலியாதோ. (௧௪)

கறைபடைததாட்கரிபரியவுணர்தேர்க்கணங்க
ளறைபடைததிவணீண்டியவண்டங்களனைதது
முறைகடற்றொகைமுழுவதுஞ்சூழ்கொணர்ந்தொருங்கே
சிறைபடுத்தியபோலும்வேறொன்றிலைசெப்ப. (௧௫)

ஐயபூழியுமாரகிலாவியுமாற்ற
நொயயவாகியவணுக்களுநுழைவரிதெனணிற்
செய்யவிந்நகராவணமெங்கணுஞ்செறிந்த
வெய்யதோகரியவுணர்தம்பெருமையார்விரிப்பார். (௧௬)

அள்ளலவேலைசூழ்மகேந்திரபுரிக்கிணையாகத
தெள்ளிதாவொருநகருமின்றுளதெனசசெப்ப
வெள்ளலின்றியவண்டமோராயிரதெட்டி
னுள்ளசீரெலாமீதுபோலொருபுரத்துளதோ. (௧௭)

கழிந்தசீர்த்திகொளிந்நகர்தன்னிடைக்குல
வழிந்துதொல்லுருமாழையின்மணிநிழலாகி
யிழிநதுளான்பெறுதிருவெனப்பயனபெறுதெவர்க்கு
மொழிந்தவேலைகடம்புகழ்கொள்வதிவவுவரி. (௧௮)

ஏற்குநேமிசூழ்மகேந்திரவெறுக்கையிவ்வுலகோ
ராக்குமோபயன்பெற்றிலதுயிர்பபலியருநதுங்
காககுழாம்புரையலகைசூழ்காளிமந்திரத்திற்
சீரகொள்கறபகமபிறாக்குதவாதமாசெயல்போல். (௧௯)

மறக்கொடுந்தொழிலிரவியம்பகையழன்மடுப்பத
துறக்கமாண்டதுபட்டிமையாகுமத்தொல்லூர்
சிறக்குமிந்நகாநோக்கியேதன்னலநதேய்ந்து
பொறுக்கரும்பெருநாணசுடக்கரிந்ததுபோலாம். (௨௦)

துஙகமிக்கசூர்படைத்திடுமண்டமாத்தொகையுட்
செங்கதிாதொகையாங்கவன்பணியினுற்சென று
பொஙகுதண்சுடர்நடாத்தினறென்னவிப்புரியி
லெங்குமுற்றனசெழுமணிச்சிகரமெண்ணிலவே. (௨௧)

மாணிலைப்படுமெழுவகையுலகினவைப்பென்ன
வேணிலைப்பெருஞ்சிகரிகள்செறிந்தனயாண்டுங்
கோணிலைக்கதிருடுப்பிறர்பதங்களிறகுழுமி
நீணிலைத்தலம்பலவுளமாடங்கணிரந்த. (௨௨)

நூறியோசனைசேண்படுநீட்சியுநுவனூ
மாறியோசனைப்பரவையும்பெற்றவாவணங்க
ளேறுதேர்பரிகளிறுதானவர்படையீண்டிச்
சேறலாயிடையருமையால்விசும்பினுஞ்செல்லும். (௨௩)

அடன்மிகுத்திடுதானவரகலிருவிசும்பிற்
கடிதினிற்செலமத்திகைகாட்டுமொருப்ப
நெடுமுகிற்கணந்தழுவுசூளிகைமிசைநிறுவுங்
கொடிகளெற்றிடப்போவனவிரவிகொய்யுளைமா. (௨௪)

மேனுலாவியபடிகமாளிகைசிலமின்னார்
மாலைதாழ்குழற்கிடுமகிலாவியான்மறைவ
சீலநீங்கியவவுணர்தஞ்சீர்த்திகளனைத்து
மேலவேயவர்பவத்தினுளொடுங்குமாறென்ன. (௨௫)

அணிகுலாயகோமேதகமரகதமாரந்
துணியுநீல.மவச்சிரம்வயிடூரியந்துப்பு
நணியபங்கயம்புருடராகம்மெனுநவமா
மணிகளாற்செய்துமிளிர்வனவரம்பில்பொன்மாடம். (௨௬)

இயல்படைத்தவெண்படிகத்தினியன்றமாளிகைமேற்
புயல்படைத்திடுகளிமயில்வதிந்திடப்புடையே
கயல்படைத்தகண்ணியர்புரியகிற்புகைகலப்ப
முயல்படைத்திடுமதியினைச்சூழ்தருமுகில்போல். (௨௭)

வளனியன்றிடுசெம்மணிப்பளிங்குமாளிகைமே
லொளிறுபொற்றலத்தரிவையர்வடிமிசைந்துறுதல்
வெளியசேயனபங்கயப்பொகுட்டின்மீமிசையே
யளியினங்கடேன்மாந்தியேவைகுமாறனைய. (௨௮)

துய்யவாலரிபுனற்கிறைமண்ணியேதொகுப்பச்
செய்யதீயவனூன்களோடவைபதஞ்செய்ய
மையன்மாதரோடவுணர்களரம்பையாவழங்க
நெய்யளாவுண்டியுண்குவர்மறுசிகைநீக்கி. (௨௯)

துப்புறுத்தனகுஞ்சியங்காளையாதொகையுஞ்
செப்புறுத்துசீறடிமினார்பண்ணையுஞ்செறிந்து
மெய்ப்புறதயல்காட்சியுங்கலவியும்வெறுப்பு
மெப்புறத்தினுநிகழ்வனமதனுலகிதுவே. (௩0)

பூணுமாரமுங்கலாபமுமிழைகளும்பொன்செய்
நாணுமொற்றராற்பரத்தையர்பாற்படாநல்கிப்
பேணிமற்றவர்விலக்கினைநயந்தனபிறவு
மாணுமைந்தர்கடேறுவாரூறுபார்த்தயர்வார். (௩௧)

துன்றுதானவர்தெரியலின்மாதர்பூந்தொடையின்
மன்றன்மாளிகைச்சோலையினிலஞ்சியின்மலரிற்
குன்றமால்கரித்தண்டத்தில்யாழ்முரல்குழலிற்
சென்றுசென்றெனதுணர்வுபோலளிகளுந்திரியும். (௩௨)

மாறிலாதசூராணையால்வக்கிடும்வசந்த
னூறுதென்கடலளவியேதண்டலையுலவி
வீறுமாளிகைநுழையினிடந்தொறுமெல்லத்
தேறல்வாய்மடுத்தோரெனவசைந்துசென்றிடுமால். (௩௩)

மாடமீதமர்மடந்தையர்தம்முருவணப்புக்
கூடவேபுனைந்தணிநிழற்காண்பதுகுறித்துப்
பாடுசேர்கரநீட்டியேபகலவற்பற்றி
யாடிநீர்மையினோக்கியேயந்தரத்தெறிவார். (௩௪)

வன்னமாடமேலாடவர்பரத்தைமைமகளி
ருன்னியூடியேபங்கியீர்த்தடிகளாலுதைப்பப்
பொன்னிணுறத்தமதுகையெழிலியுட்போக்கி
மின்னுவாங்கியேயார்த்தனர்குஞ்சியைவீக்கி. (௩௫)

முழங்குவானதிதோய்ந்தசின்மாளிகைமுகட்டி
னழுங்கலெனபதையுணாகிலாமாதராரகல்வான்
வழங்குகோளுடனுருமினைப்பற்றியம்மனையுங்
கழங்குமாயெறிந்தாடுவரலமரக்கண்கள். (௩௬)

ஈண்டைமாளிகைமங்கையர்தஞ்சிறாரிரங்க
வானைமேற்றவராடுவானபற்றியாதவன்றேர்
பூண்டமானறுகைகொடுத்தலுமாங்கவன்போந்து
வேண்டிநின்றிடவாங்கியேயுதவுவாமெல்ல. (௩௭)

நீடுமாளிகைமிசைவருமாதர்கைநீட்டி
யீடுசாலுருமேறுடன்மினபிடித்திசைத்தே
யாடுகிங்கிணிமாலையாமைந்தருக்கணியா
வோடுகொண்டலைச்சிறுதுகிலாப்புனைந்துகப்பார். (௩௮)

பொங்குமாமணிமேற்றலத்திரவிபோந்திடலு
மிங்கிதோர்கனியெனச்சிறாரவன்றனையெட்டி
யங்கைபற்றியேகறித்தழலுறைப்பவிட்டழுங்கக்
கங்கைவாரிநீரூட்டுவார்கண்டநற்றாயா. (௩௯)

கண்டுவந்தனைவரும்புகழ்தஞ்சிறாரகலுழ
விண்டுவந்தனைசெய்தெனத்தாழ்ந்தமேனிலத்தில்
வண்டுவந்தனைப்படுகதிர்கைம்மலர்வலிந்து
கொண்டுவந்தனைமாரிரங்காவகைகொடுப்பார். (௪0)

அஞ்சிலோதியர்மாளிகைமிசைச்சிலரகல்வான்
விஞ்சுதேவரைவிளித்தலுமெய்யுறன்மறுப்ப
வஞ்சர்வஞ்சரென்றரற்றியவ்வானவரிசைய
நஞ்சிறாருடனாடுதுமென்பர்நண்ணினர்க்கு. (௪௧)

பொருளில்மாளிகைப்படிற்றியர்புணர்வரென்றுன்னி
வரவுமஞ்சுவர்வராமையுமஞ்சுவர்மடவார்
கரவின்மேவுதலவுணர்கள்காண்பர்கொலென்றும்
வெருவுகின்றனரெண்செய்வார்விண்ணெறிப்படர்வார். (௪௨)

மேனிலந்தனின்மங்கையர்சிறூர்விடாதிரங்க
வூனமில்கதிர்தேர்வழுவவரையாண்டுய்த்து
வானகந்தனிற்சில்லிடையேகிநம்மகவைப்
பானுவந்துநீதருகெனவிடுக்குநர்பலரால். (௪௩)

கலதியாகியவவுணர்தம்மாதர்கால்வருடிச்
சிலதியாரெனவணங்கினோரேவல்செய்கிற்பார்
சலதியார்தருமுலகமேற்றெரிகுறிற்றவமே
யலதியாவுளவேண்டியாங்குதவநின்றனவே. (௪௪)

ஐந்தவாகியதருக்களுமணியுநல்லாவு
நந்துமம்புயநிதியமுமபிறவுமிந்நகரின்
மைந்தர்மாதர்களிருந்துழியிருந்துழிவந்து
சிந்தைதன்னிடைவேண்டியாங்குதவியேதிரியும். (௪௫)

மீதுபோகியமாளிகைக்காப்பினுண்மேவு
மாதர்வானெறிச்செல்லுவோர்சிலர்தமைவலித்தே
காதலாற்பிடித்தொருசிலர்முறைமுறைகலந்து
போகிராலெனவிடுப்பாபின்னசமுகிபோல்வார். (௪௬)

வேறு.

மேதாவிகொண்டகதிர்வெய்யவனைவெஞ்சூர
சேய்தான்வலிந்துசிறைசெய்திடலின்முன்ன
மேதாமினங்கொலெனவெண்ணியவனென்றாழ்
வாதாயனங்கடொறும்வந்துபுகலின்றே. (௪௭)

தேசுற்றமாடமுறைசீப்பவருகாலோன்
வாசப்புனற்கலவைவார்புணரிகொண்கன்
வீசப்புலர்த்திடவிண்படரும்வெய்யோ
னேசுற்றதானவரமர்ந்திவணிருந்தார். (௪௮)

பால்கொண்டதெண்கடன்மிசைப்பதுமைதன்னை
மால்கொண்டுகண்டுயிலும்வண்ணமிதுவென்ன
மேல்கொண்டநுண்பளிதமேனிலமதனகட்
சூல்கொண்டகாரெழிலிமின்னினொடுதுஞ்சும். (௪௯)

வேறு.

குழலினோதையுமெழால்களினோதையுங்குறிக்கும்
வழுவிலகோட்டொடுகாகளவோதையுமற்றை
முழவினோதையும்பாடுநரோதையுமுடிவில்
விழவினோதையுந்தெண்டிரையோதையின்மிகுமால. (௫௦)

மதனிழுக்குறுமைந்தருமாதரும்வனமா
மதனிழுக்கியவீதியில்வீசும்வண்கலவை
பதனிழுக்குறச்சேதகமாகுமீன்பலவும
பதனிழுக்கியவாங்கினம்புனைக்தெறிபணிகள். (௫௧)

அளப்பில்வேட்கையங்கொருவர்கண்வைத்துமற்றதனை
வெளிப்படுக்கிலர்மெலிதலுங்குறிகளேவிளமப
வொளிப்பதெனனுளம்பகரெனவாற்றலாதுடைந்து
கிளிப்பெடைக்கிருந்தொருசிலமடந்தையாகிளப்பா. (௫௨)

குருளைமான்பிணித்திளஞ்சிறாரூர்ந்திடுங்கொடித்தே
ருருளையொண்பொனைமணித்தலங்கவர்ந்துகொண்டுறுவ
வெருளின்மாக்களைவெறுப்பதென்முனிவரும்விழைவார்
பொருளினாசையைநீங்கினர்யாவரேபுவியில். (௫௩)

விழைவுமாற்றியதவத்தினரேனுமிவவெறுக்கை
மொழியினோரினுமவுணராகத்தவமுயல்வா
ரொழியுமேனையர்செய்கையையுரைப்பதென்னுலகிற்
கழிபெரும்பகனோற்றவரேயிதுகாண்பார். (௫௪)

குழவிவாண்மதிக்கிம்புரிமருப்புடைக்கொண்மூ
விழுமெனச்சொரிதானநீராறுபோலேகி
மழலைமென்சிறாராவணத்தாடும்வண்சுண்ணப்
புழுதியீண்டலின்வறப்பவான்கங்கையும்புலர. (௫௫)

கங்கையூண்பயனாகவுந்தூயதெண்கடனீ
ரங்கண்மாநகர்ப்பரிசனமாடவுமணைந்து
துங்கமேனிலைமாளிகையாவணஞ்சோலை
யெங்கும்வாவியும்பொய்கையும்பிறவுமாயீண்டும். (௫௬)

வில்லியற்றுவோர்வாட்படையியற்றுவோர்வேறு
மெல்லையில்படையுள்ளவுமியற்றுவோரிகலான்
மல்லியற்றுவோர்மாயமதியற்றுவோர்மனுவின்
சொல்லியற்றுவோர்கண்ணுறுபுலந்தொறுந்தொகுமால். (௫௭)

நாடிமேலெழத்தசையிலாதுலறியேநரையாய்க்
கோடுபெற்றிமூத்தசைந்திடுவோரையுங்கூற்றால்
வீடுவோரையும்பிணியுழப்போரையுமிடியால்
வாடுவோரையுங்கண்டிலமிதுதவவலியே. (௫௮)

கன்னன்மாண்பயன்வாலளைநெய்கடுந்தேற
றன்னுதியபாலளக்கர்தம்பெருருச்சுருக்கி
மன்னனாணையாலிந்நகர்மனைதொறுமருவிப்
பன்னெடுங்குளனாகியேதனித்தனிபயில்வ. (௫௯)

அட்டதேறலுமடாதமைதேறலுமருந்திப்
பட்டுவார்துகில்கீறியேதம்மொடுபறைந்து
விட்டநாணினோரொருசிலமடந்தையர்வியன்கை
கொட்டியாவரும்விழைவுறக்குரவையாட்டயர்வார். (௬௦)

திலகவாணுதன்மாதராடவர்சிறுவரையி
னலகிலாமுறைபுனைதலினணித்தணித்தகற்று
மிலகுபூண்டுகின்மாலைகந்தம்பிறவீண்டி
யுலகில்விண்ணகரெனச்சிறந்தாவணமுறுமே. (௬௧)

கொய்தலர்த்தபூசித்திலமணியுடன்கொழித்துப்
பொய்தலாடுவார்முற்றிலாலெற்றுபொற்பூழி
யெய்தலானதிந்நகரளவோகடலிகந்து
நெய்தலங்கரைக்கானலையடைந்துமேனிமிரும். (௬௨)

சந்தரங்கெழுசெய்யவெண்மலர்களாற்றொடுத்த
கந்துகங்களைச்சிறுவர்தங்கரங்களினேந்தி
யந்தரம்புகவெறிதலுமங்கவைமேனி
வந்துவீழுமாவிருகதிர்வழுக்கிவீழ்வனபோல். (௬௩)

கழகமீதுமுன்போந்திடுழுதுகணக்காயர் *
குழகுமென்சிறார்தனித்தனிவந்தனர்குறுகிப்
பழகுகற்பினூல்பயின்றனர்மாலையிற்பட்ட
வழகுசேர்மதிப்பின்னெழுகணங்கண்மொய்த்தலையார். (௬௪)

கள்ளிறுற்றலாற்களிப்பவர்தேறலைக்கரத்திற்
கிள்ளையாணினுக்கூட்டியேகாமநோய்கிளர்தி
யுள்ளமோடியசேவலுமிரங்கவோதிமத்துப்
புள்ளின்மென்பெடைமீமிசைகலந்திடப்புணர்ப்பார். (௬௫)

உரத்தின்முன்னரேவெளவிவந்திட்டியவும்பர்
சிரத்தின்மாமுடித்திருமணிபறித்தொருசிலவ
ரரத்தமேயதம்பங்கியிற்பஞ்சிகளழுததும்
பரத்தைமாரடிப்பாதுகைக்கணிபெறப்பதிப்பார். (௬௬)

தேவிமார்பலர்வருந்தவுமனையர்பாற்சேரா
ராவிபோவதுகினைகிலராகியேயயலார்
பாவைமார்தமைவெஃகியேபட்டிமைநெறியான்
மேவுவார்சிலர்காண்பதேயிதுவுமென்விழியே. (௬௭)

செருக்குபூண்முலையியக்கர்தம்மங்கையர்நெஞ்ச
முருக்குமேருடையமரர்தம்மங்கையருளத்தி
னிரக்கநீங்கியவவுணர்தம்மங்கையரேனை
யரக்கர்மங்கையாகணிகைமங்கையர்களாயமர்வார். (௬௮)

கந்தமானபல்களபமுஞ்சுண்ணமுங்கமழும்
பந்துமாலையுஞ்சிவிறிநீரொடுபரத்தையர்கள்
மைந்தரோடெறிந்தாடல்யாருளத்தையுமயக்கு
மிந்தவீதிகொல்லுருவுகொண்டநங்கன்வீற்றிருத்தல். (௬௯)

பொன்னினன்னமும்பதுமராகம்புரைபுறவுஞ்
செக்கலங்கிளர்மஞ்ஞையுஞ்சாரிகைத்திறனும்
பன்னிறங்கெழுபுள்ளினமினையனபலவு
மின்னதொன்னகர்மங்கையர்கரந்தொறுமிருப்ப. (௭0)

பண்டுவேட்டவர்பின்முறைப்பாவையர்பரிவிற்
கண்டுபின்வரைமங்கையர்கானமதியற்றிக்
கொண்டவில்வழிப்பரத்தையர்கணிகையர்குழாத்துள்
வண்டுபூவுறுதன்மைசென்றுடவர்மணப்பார். (௭௧)

தக்கமெல்லடிப்பரிபுரமுழவுறத்தனமா
மிக்கதாளங்களொத்தமென்புள்ளிசைவிரவ
விக்குவேளவைகாணியபூந்துகிலெழினி
பக்கநீக்கியேமைந்தரோடாடுவோர்பலரே. (௭௨)

* கணக்காயர் - உபாத்தியாயர். "கற்றதூமின்றிக் கணக்காயர்பாடத்தால்" என்பதனுனுணர்க.

பாட்டமைந்திடுகோளையரணிநலம்பாரா
வேட்டுமெங்கையரொருசிலர்தமதுமெய்விளர்ப்பக்
கூட்டமுன்னியேபன்னிறக்கலவையுங்குழைத்துத்
தீட்டுவாரவருருவினைவியன்கிழிதிருத்தி. (௭௧)

சுற்றுவிட்டலர்தாருடையவயவர்தொல்லுருவிற்
பற்றுவிட்டிடனுளத்தையும்விட்டுமென்பார்ப்பைப்
பெற்றுவிட்டிலாப்பெடைமயிறழீஇத்துயர்பேசி
யொற்றுவிட்டனரொருசிலராறுபார்ததுழல்வார். (௭௪)

அகன்றுகொண்கரைநனைவினைக்காலமுமகத்திற்
புகன்றுமட்டித்தவெம்முலைச்சாந்தொடும்புலர்வார்
பகன்றைபோனமுரல்சிலம்படிப்பாவையர்பல்லோர்
முகன்றனிற்கருமணிகளிற்சொரிதரமுத்தம். (௭௫)

மங்கைமார்சிலராடவர்தம்மொடுமோடத்
துங்கமேனிலத்திடைப்படுசேக்கையிற்றுன்னி
வெங்கண்மெல்லிதழ்வேறுபட்டணிமுகம்வியர்ப்பக்
கங்குலொண்பகலுணர்கிலர்விழைவொடுகலப்பார். (௭௬)

மறிகொள்சோரிநீர்பலியுடனேக்கிநாண்மலர்தூ
யிறைகொளில்லிடைத்தெய்வதம்வழிபடலியற்றிப்
பறைகறங்கவக்கடவுளையாற்றுறப்படுத்தி
வெறியயர்ந்துநின்றாடுவரளப்பிலர்மின்னார். (௭௭)

அலங்கல்வேல்விழிமாதருமைந்தருமமர்ந்த
பொலங்கொண்மாடமேலாடுறுபெருங்கொடிபொலிவ
மலங்குசூழ்தருதெண்டிரைப்புணரியில்வைகுங்
கலங்கண்மேவியகூம்பெனக்காட்டியவன்றே. (௭௮)

புரசைவெங்கரிபுரவிதேர்பொருபடைத்தலைவர்
பரிசனங்களாதோரணர்வாதுவர்பரவ
முரசமேமுதலியமெலாமுன்னரேமுழங்க
வரசவேழமாவெண்ணிலகோயில்வந்தடைவ. (௭௯)

கள்ளுறைத்திடுமாலையம்பங்கியர்கமஞ்சூல்
வள்ளுறைப்புயன்மேனியரொருசிலர்வார்வி
லொள்ளுறைப்படைபிறவினிற்கவரிதூங்குறுத்துத்
தள்ளுதற்கரும்வயமுரசறையமுன்சார்வார். (௮௦)

அறுகுவெம்புலிவலியுடைமடங்கன்மானுமாச்
சிறுகுகண்ணுடைக்கரிமரையிரலையித்திறத்திற்
குறுகுமாக்களைப்படுத்தவற்றூன்வகைக்குவால்கண்
மறுகுளார்பெறப்பண்டிகொண்டளப்பிலோர்வருவார். (௮௧)

மஞ்சுலாவருசிகரியுஞ்சூளிகைவரைப்பும்
விஞ்சுமேனிலவடுக்கமுஞ்சோலையும்வெற்புஞ்
சஞ்சரீகமாரோடையும்வாவியுந்தடமு
மெஞ்சலில்லதோர்மாடங்களெங்கணுமுளவே. (௮௨)

எற்றிமுன்செனுமுராசினர்கம்மியரெல்லிற்
பற்றுதீபிகைச்சுடரினர்மாலேதாழ்படைய
ரொற்றைமுக்குடையிருபுடைக்கவரியருலப்பில்
கொற்றவீரரீண்டனப்பிலோர்வந்தனர்குலவி. (௮௩)

மண்படைத்திடுதவமெனுமகேந்திரமலிசீ
ரெண்படைத்தகண்ணிரண்டினர்காணுதலெளிதோ
விண்படைத்தவற்காயினுமமையுமோமிகவுங்
கண்படைத்தவர்க்கன்றியேகண்டிடலாமோ. (௮௪)

வரம்பில்கட்புலங்கொண்டவரேனுமற்றிவ்வூர்
விரும்பியித்திருநோக்கினுமனத்தன்மேவருமோ
வரும்புயற்குழுவைகளும்பருகினுமதனாற்
பெரும்புனற்கடலானதுமுடிவுபெற்றிடுமோ. (௮௫)

கழியுமிந்நகராக்கமோகரையிலவிவற்றுன்
விழிகளெண்ணிலபெற்றுளார்தாங்கண்டவெறுக்கை
மொழிவரென்னினுநாவதொன்றுன்முடிந்திடுமோ
வழிவிலாயிரகோடிநாப்பெறுவரேலறைவார். (௮௬)

வாழ்வின்மேதருமகேந்திரப்பெருமிதவளத்தைத்
தாழ்விலாநெறிகண்டனர்தானுவெண்ணிலவாற்
சூழ்வினுடியேபகரினுமெய்யெலாந்துதையக்
கேள்விமூலங்களில்லவரெங்ஙனங்கேட்பார். (௮௭)

ஆயிரம்பதினுயிரங்கோடிநாவளவி
லாயிரம்விழியாயிரமாயிரஞ்செவிக
ளாயிரம்புந்திகொண்டுளோர்க்கல்லதிவ்வகன்சீ
ராயிரம்யுகங்கண்டுதேர்ந்துரைப்பினுமடங்கா. (௮௮)

பொய்த்தலின்றியேயிந்நகர்த்திருவைவையம்புலத்துந்
துய்த்தன்முன்னியேவிழைந்துகொணேற்றிடுந்தொடர்பாற்
பத்துநூறுடனுயிரங்கோடியாப்பகரு
மித்தொகைச்சிரங்கொண்டனரீண்டுளோரெவரும். (௮௯)

முன்னவர்க்குமுன்னுகியவறுமுகமுதல்வன்
றன்னருட்டிறத்தெல்லையில்பேருருச்சமைந்தே
யிந்நகர்த்திருயாவையுங்காண்குவனின்னே
யொன்னலர்க்கெனைக்காட்டுதற்காதெனவொழிந்தேன். (௯0)

இனைத்தவாகியபெருவளமெல்லையின்றிவற்றை
மனத்தினுடினும்பற்பகல்செல்லுமான்மனக்கு
நுனித்துநன்றுநன்றுய்ந்திவைமுழுவதுநோக்க
நினைத்துளேனெனினிங்கிதுபொழுதினினிரம்பா. (௯௧)

அம்புயாசனன்றெளிகிலாவருமறைமுதலைக்
கும்பமாமுனிக்குதவியேமெய்யருள்கொடுத்த
வெம்பிரான்பணிபுரிகிலாதிந்நகரிருஞ்சீர்
நம்பிநாடியேதெரிந்துபாணிப்பதுநலனே. (௯௨)

என்றுமுன்னியேயறுமுகன்றாதுவனிமயக்
குன்றமன்னகீழ்த்திசைமுதற்கோபுரக்குடுமி
நின்றுமாநகர்வளஞ்சிலநோக்கியேநெடுஞ்சீர்
துன்றுகுறுறைதிருநகரடைவதுதுணிந்தான். (கங)

வளைந்தமாளிகையொளியினிலிடைப்படமேறுகிற்
கலைந்துசெற்றியேபரிசனம்பரவுதல்காணு
கிளைந்தசூழ்ச்சியான்கீழ்த்திசைச்சிகரியைநீங்கி
நனந்தலைப்படநகரத்துவிண்ணிடைநடந்தான். (கச)

வானமாநெறிநீங்கியேமறைகளிற்றுணிபா
ஞானநாயகவறுமுகனருள்கொடுநடந்து
தூநிலாவுமிழெயிறுடைச்சூர்முதற்சுதனும்
பானுகோபனதுறையுளையெய்தினன்பார்த்தான். (கரு)

பாய்ந்துசெஞ்சுடர்ப்பரிதியைப்பற்றிஞெனுறைய
ளேந்தல்காணுறீஇவிம்மிதப்பட்டவணிகந்து
காந்துகண்ணுடையங்கிமாமுகனகர்கடந்து
சேந்தமெய்யுடையாடகனுறையுளுந்தீர்ந்தான். (கசு)

உச்சியையிரண்டிருபதுகரதலமுடைய
வச்சிரப்பெருமொய்ம்பினேன்மாளிகைவரைப்பு
மச்செனத்தணந்தேகிமூவாயிரராகு
மெச்சமெய்தியமைந்தர்தம்மிருக்கையுமிகந்தான். (கஎ)

உரியமந்திரத்துணைவரிற்றலைமைபெற்றுறையுந்
தருமகோபன்றன்கடிமனைச்சிகரமேற்றங்கிச்
சுரரும்வாசவன்மதலையுமவுணர்கள்சுற்றப்
பரிவுகொண்டமர்சிறைக்களநாடியேபார்த்தான். (கஅ)

கறையடித்தொகைபிரிதலுங்கயமுனிகவர்ந்து
மறையிடத்தினில்வேட்டுவருய்ப்பவைகுவபோற்
பொறையுடைத்துயரிந்திரன்போந்தபின்புல்லார்
சிறையினுற்றவர்செய்கையிற்சிறிதுரைசெய்வாம். (ககு)

நகர்புகுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - நகசு.

---

# சயந்தன்புலம்புறுபடலம்.

---

பரஞ்சுடர்நெடுங்கணைபடுத்தபாயலில், வருஞ்சசியனையதோர்வானுதற்சசி
தருஞ்சிறுகுமரனுஞ்சயந்தனவ்விடை, யருஞ்சிறையிருந்தனனமரர்தம்மொடும். ()

வாலிதாமமரர்சூழ்வைப்பிலிந்திரன், கோலமாகியதனிக்குமரன்வைகுதன்
மேலைநாளமுதெழும்வேலைதன்னிடை, நீலமாமுகினுறைநீர்மைபோலுமே. (உ)

மழைபுரையவுணர்சூழ்வைப்பில்வாலொளி, தழுவியவமரருட்சயந்தன்மேயினன்
கழிதருபணிபலகவரச்சோர்தரு, முழுமதியதனிடைமுயலுற்றென்னவே. (ங

வென்றிவில்லியற்றியவிஞ்சைசீர்மையாற், கன்றியகரமெனக்காவற்சாலையிற்
பொன்றிகழ்வல்லிகள்பூண்மெற்பட, நன்றுனைத்தாள்களிற்றழும்புசேர்ந்துளான்.

இயற்பமொனமுமிகலுநாணமு, மயற்படவெம்பழியனலஞ்சுற்றிட, வுயிர்ப்பெனு
மோதைகின்றுயிரலைத்திடத், துயர்ப்பெரும்பரவையூடழுந்திச்சோருவான். (ரு)

அண்டருஞ்சிறையினல்வீமெல்லதே, லெண்டருமுகம்பலவிடருண்மூழ்கலின்
மண்டுதொல்பழியநவலிதுதுஞ்சுமா, லுண்டகல்லமுதினுலவையொழிந்துளான்.()

தணிப்பரும்வெஞ்சினத்தருவர்மன்னவன், பணிப்படுசிறைக்களம்பட்டுத்தம்
மூட, றுனிப்புறுவோரெனத்துயர்கொண்டோர்கணங், கணிப்பருமுகங்களாக்கழி
த்துலைகுவான். (எ)

தேவியன்மரகதந்தெளித்துத்தீட்டிய, வோவியவுருவமாகண்டதன்மையா
ஞவியம்புனலறுதமருங்காவியம், பூவியன்மென்றொடைபுலர்ந்ததேயனுன். (அ)

வியலுகறாறடன்மிக்கவெட்டினு, ளியலுறுசிறுவரையெனினுந்துஞ்சமேன்
மயல்சிறிதகலுமான்மரபின்வைகலுந், துயில்கிலஞதலாலறுததுன்பினுன். (கூ)

கெஞ்சழிதுன்பிடைநீடவைகலிற், றுஞ்சலன்வலிதுயிர்துறப்புமாற்றல [லோ.
னெஞ்சுமோரிறைவரையிமையுங்கூட்டலன், விஞ்சியதவந்துயர்விளைக்குமாங்கொ

இலங்கியமரகதத்தியன்றுபொன்குலாய், நலங்கிளர்தன்வனப்பிழந்துநாடொ
றுஞ், சலங்கெழுமவுணர்கடமைக்கண்டஞ்சியே, கலங்கினனுய்வகையாதுங்கா
ண்கிலான். (கக)

சுந்தரமரகதத்தனதுதொல்லுரு, வெந்துயருழத்தலின்வெய்துயிர்ப்பென
வந்தெழுபுகைபடமறைந்துகட்புனல், சிந்திடவுடனுடன்றிகழத்தோன்றுமால். ()

முழுதுறுதன்றுயர்முன்னிமுன்னியே, யிழுதையரவுணருமிரங்கவேங்குறு [ல்.
வழுதிங்காப்பினோரச்சஞ்செய்தலும்,பழுதுகொலென்றுவாய்பொத்தும்பாணியா

இந்திரன்சசியொடுமிருந்தகுழல்போய்த், தந்தனர்பற்றினர்தமரெனச்சிலர்
முந்துறுகாவலோர்மொழிந்தபொய்யுரை, யந்தமதடையுமுன்னயர்ந்துவீழுமே. ()

ஐந்தருநீழலின்கிளைக்குமாய்மலர், தந்தமென்பள்ளியையுன்னுந்தானெனப் [மே.
புந்திகொண்மங்கையர்புணர்ப்பையுட்கொளு, மிந்திரப்பெருவளமெண்ணிச்சோரு

தன்னிணையில்லதோர்தருவினீழலு, னன்னலந்துய்த்தியாநாளுமின்புறும்,
பொன்னகர்பூழியாய்ப்போங்கொலோவெனு, வுன்னிடுந்தொன்மைபோலுறுவதெ
ன்றெனும். (கரு)

ஈண்டையிலவுணர்கோனேவத்தானைகள், சேண்டொடர்துறக்கமேற்செல்ல
நாடியே, காண்டகுதம்முருக்காரந்துபோயினர், யாண்டையரோவெமையீன்று
ளாரெனும். (கஎ)

ஏயினதுறக்கநாடிழிந்துதொல்லைநாட், டாயொடுபெயர்ந்துளதந்தைபாரகம்
போயினனெனச்சிலர்புகலக்கேட்டன, ஞயிடைப்புகுந்தனவறிகிலனெனும். ()

அண்டர்களொருசிலரயர்வுகூறவுட்,கொண்டனரேகினர்குறகியெந்தையைக்[னும்
கண்டனரேகொலோகவந்துளார்கொலோ,விண்டனரேகொலோவிளைவெனேனெ

சீகர * மிக்கருர்செயிர்த்துச்செய்திடு, மாகுலமுழுவதுமறையவம்மையோர்
பாகமதுடையசம்பரமன்மால்வரைக், கேகினனேகொலோவெந்தையென்றிடும்.()

* சீகரம் - இலட்சுமீகரம்.

பொருந்தலர்கண்ணுறுப்பொருட்டுத்தம்முருக், கரந்தனரோவறீஇக்குரவர்க
ள்வர்யாறு, பொருந்தினரேகொலோபுவனமெங்குமாய்த்,திரிந்தனரேகொலோதெ
ளிகிலேனெனும். (௨௧)

மாண்கிளர்சூரபன்மாவினைவலா, லேண்கிளரவுணர்கள்யாளைத்தந்தையை
நாண்கொடுபிணித்திவணல்கப்போயினார், காண்கிலரேகொலோகரந்தவாறெனும்.

அன்புடையம்மனையத்தனீங்கிவர், வன்புடையவுணர்கள்வரவுகாண்பரேற் [னும்
றுன்புடைமனத்தராய்த்துளங்கியேங்கியே, யென்படுவார்கொலோவறிகிலேனெ

பொன்னகர்கரித்தலும்புதல்வனுகுமென், றன்னையிம்முதுநகர்த்தந்துதானவர்
துன்னருஞ்சிறையிடுதுயருங்கேட்டபி,னென்னினைந்திரங்குமோவீன்றதாயெனும்

பன்னெடுமாயைகள்பயின்றதானவ,ரன்னையொடத்தனையாய்ந்துபற்றியென் [னும்
முன்னுறக்காண்டகுமுறையினுய்ப்பினு, மென்னுயிர்பின்னருமிருக்குங்கொல்லெ

ஆற்றருஞ்செல்லலுளமுந்தும்பான்மையான், மேற்றிகழ்பரஞ்சுடர்விமலற்
போற்றியே, நோற்றனர்முத்தியினுழைகுற்றார்கொலோ, பேற்றினரிருந்தசொற்பி
றந்ததில்லெனும். (௨௬)

தீங்கதிர்ப்பகையொடுசெருமுயன்றநாட், டாங்கியெற்கொண்டுழித்தந்தமிற்றிட
வாங்கனம்வீழ்ந்ததாலதற்குமேற்பட,யாங்குசென்றதுகொலோயானையென்றிடும்

பிறப்புறுவைகலைத்தொட்டுப்பின்னரே, யிறப்புறுநாள்வரையாவர்க்காயினு [னும்.
முறப்படுதுய்ப்பெலாமுழினுற்றமால், வெறுப்பதென்னவுணரைவினையினேனெ

தாவறுதொன்னகர்விளியத்தந்தைதா, யாவியொடிரிந்திடவளியனோர்மகன்
வீவருஞ்சிறைப்படமேலைநாட்புரி, தீவினையாவதோதெளிகிலேனெனும். (௨௯)

துப்புறழ்சடையினான்சூரற்கீறிலா, வப்பெருவரத்தினையளித்தலாலவன்
மெய்ப்படவிளிகிலன்வீடுஞ்செய்கில, னெப்பொழுதிச்சிறைதீருமென்றிடும். (௩௦)

மட்டறுவெறுக்கையுநகரும்வாழ்க்கையும், விட்டனர்கடந்தனர்மேலையோரென
வுட்டெளிந்தகன்றிலனுவர்பிணித்திடப்,பட்டனனேகொலோபாவியேனெனும்.()

மாற்றலனிவ்வுயிர்வசையுறுவகை, போற்றலன்குரவர்பாற்புகுந்தபுன்கணைத்
தேற்றலன்றமியனுந்தெளிகிலன்சிறை, யாற்றலனாற்றலையகோவெனும். (௩௨)

துறந்ததோபேரறந்தொலையுந்தீம்பவஞ், சிறந்ததோமாதவப்பயனுந்தேய்ந்ததோ
குறைந்ததோநன்னெறிகூடிற்றேகலி,யிறந்ததோமறைசிவனில்லையோவெனும்.()

கூடலர்வருத்தலிற்குரவர்தங்களைத், தேடினர்விரைவுடன்சென்றதேவர்போ,லோ
டினர்புகாவகையொழிந்துளோரையும், வீடருஞ்சிறையிடைவீட்டினேனெனும்.()

அந்தியின்மறைமொழியயர்த்துவைகினன், சந்தியில்வினைகளுந்தழலுமோம்பல
னெந்தையைவழிபடுமியல்புநீங்கினன், முந்தையினுணர்ச்சியுமுடிந்துளேனெனும்.

மெய்யுயிரகன்றிடவிளிகிலேனெனி, னெய்யுறுமலக்கணீத்தினிதுமேவலன் [ம்.
வையுறுநெடும்புரிவடிவம்வெந்தெனப், பொய்யுடல்சுமந்தனன்புலம்புற்றேனெனு

சொல்லுவதென்பிறதொல்லைவைகலின், மெல்லெனவாற்றியவினையின்பான்மை
யா, லல்லுறழ்மிடற்றினெம்மடிகளேயெமக், கெல்லையிலித்துயரியற்றினானெனும்.

ஆவியுமுகைகளுமனைத்துமாகியு, மோவியுங்கருணையினுருக்கொண்டாடல்செய்
தேவர்கடேவனுஞ்சிவன்மற்றல்லதை, யேவரென்குறையுணர்ந்திரங்குவாரெனும்.

பெறலருந்திருவெலாம்பிழைத்துச்சூருமி, ரறுவதுமவுணர்களவிந்துமாய்வதுஞ்
சிறையிருகழிவதுந்தீர்விலாவகை, யிறுவதுமொருபகலெய்துமோவெனும். (கூகூ)

நூனெறிடார்கேள்வியோர்துணங்குசிந்தைசேர், கூறுடைமதிமுடிக்குழகன்றன்னருட், பேறுடையேனெனிற்பெருந்துயர்க்கட, லேறுவன்வினையினேற்கில்லை கொல்லெனும். (௪௦)

இத்திறமளப்பிலவெண்ணியெண்ணியே, மெய்த்துயருழந்துவெய்துயிர்த்துவிம்மி யே, யத்தலைசுற்றியவமரர்யாவருந், தத்தமிலிரங்குறச்சயந்தன்வைகினான். (௪க)

கண்டகனுதாவகன்கராளன்மாபலன், சண்டகனிசங்கனேசங்கனுதியா [ம்பினார்.
வெண்டருமவுணர்களெண்ணிலோர்குழீஇக், கொண்டனர்சிறைக்களங்குறுகியோ

ஆயதோர்காப்பினோரறுமுகத்தனி, நாயகன்றூதவனணுகுமப்பக லேயுறசயந்தனையிமைப்பிலாரொடு, காயெரியாமெனக்கனன்றுசுற்றினார். (௪௨)

வேறு.

மன்னாகங்கோன்றன்பணியில்லாமகவேந்து
மின்னாடானும்யாண்டுறுகின்றார்விரைவாகிச்
சொன்னாலுய்வீரல்லதுமாவிதொலைவிப்பே
முன்னாளேபோலெண்ணவிருண்மைமொழிகென்றார். (௪௩)

என்னுங்காலைக்கேட்டசயந்தனெம்மாயு
மன்னும்வானின்றோடினகண்டாமற்றன்னோர்
பின்னங்குற்றதன்மையுமோராம்பிணிநோயுட்
டுன்னுந்தீயேம்யாவதுரைத்துஞ்சூழ்கென்றான். (௪௫)

விண்டோய்மன்னன்முன்னொருநாண்மெல்லியறன்னைக்
கொண்டேபோனானின்னுழியென்றுகுறிக்கொள்ளேங்
கண்டோமல்லங்கேட்டிலமுள்ளங்கழிவெய்தப்
புண்டோய்கின்றேமென்சொல்வதென்றார்புலவோர்கள். (௪௬)

சொற்றாரிவவாறன்னதுபோழ்திற்றுணிவெய்தி
யுற்றார்போலுமிங்கிவரெல்லாமுளமொன்றி
யெற்றாலுண்மையோதுவரின்னோரெனவெண்ணாச்
செற்றாராகுங்காவலர்துன்பஞ்செய்கின்றார். (௪௭)

வெண்ணஞ்சென்னக்காயெரியென்னமிகுதீஞ்சொன்
முன்னஞ்சொற்றேவைவர்தெழிப்பர்முரணோடெங்
கன்னஞ்செல்லத்தோமரமுய்ப்பர்கடைகிற்பார்
சின்னஞ்செய்வார்போலுடன்முற்றுஞ்சேதிப்பார். (௪௮)

கண்டந்துண்டஞ்செய்திமெங்கங்கடிதொன்றிப்
பிண்டத்தன்னிற்கூடவெருண்டேபோராற்றல்
கொண்டங்கையால்வாள்கொடுமோர்பங்குடைகிற்பார்
தண்டத்தன்னொன்மோதுவரன்னோர்தலைகீற. (௪௯)

இத்தன்மைத்தீதாக்காவலர்யாருமெண்ணில்லா
மெய்த்துன்பத்தைச்செய்திடமைந்தன்விண்ணோர்தங்
கொத்துந்தானுமாற்றலனுகிக்குலைவெய்தி
நித்தன்றன்னையுன்னியரற்றாநிற்கின்றான். (௫௦)

சிற்றத்துப்போர்பல்படைகொண்டேசெறுபோழ்து
மாற்றத்துன்பம்பட்டதலான்மெய்யழிவாகி
யீற்றுத்தன்மைசேர்ந்திலன்விண்ணோரிறைமைந்தன்
கூற்றிற்பட்டேச்செல்லலுழக்குங்கொடியோர்போல். (௫௧)

நெஞ்சினில்வாலறிவெய்தினரைம்புலநெறிநின்று
மெஞ்சியமேல்வினைபெற்றிலதேயெனவிறும்வண்ணந்
தஞ்செயல்வெய்யோர்செய்யவுமைந்தன்றமரோடுந்
துஞ்சிலனூறும்பெற்றிலனுற்றான்றுயரொன்றே. (௫௨)

மாடேசூழ்வார்தம்மொடுமைந்தன்சிறைபுக்கான்
காடேபோனானிந்திரனேனோர்கவலுற்றார்
பாடேவிண்ணோர்தம்பதமுக்கட்பரனல்கும்
வீடேயல்லாற்றுன்பறுமாக்கம்வேறுண்டோ. (௫௩)

அந்தாவாளந்தோமரமெஃகமடுதண்ட
முந்தாவுற்றபல்படையாவுமுரிவெய்தச்
செந்தார்மார்பிற்காவலர்கையுந்திறலெஞ்ச
நொந்தாரின்னுசெய்வதுநீத்தார்நுவல்கின்றார். (௫௪)

வீவார்பின்னுளல்லதுவேறோர்வினையத்தாற்
சாவாரெஞ்சார்பேரமிர்துண்டார்தவமிக்கார்
நோவார்நாமிங்காற்றியபாலானோய்நொந்து
மாவாயாதுஞ்சொற்றிலரென்றற்புதமுற்றார். (௫௫)

இன்னோர்யாருமைந்தனைவானோரினமோடு
மெய்ந்நோவாரும்பாங்கினலைத்தவினையாலே
கைந்நோவெய்திவன்மையுநீங்கிக்கவலுற்றார்
முன்னோர்தம்பாற்செய்ததுடன்சூழ்முறையேபோல். (௫௬)

வேறு.

அத்தகையகாவலவுணரவர்க்கணித்தாய்
மொய்த்தொருசாரீண்டிமுறைநீங்கலர்காப்ப
வெய்த்தவமரருடனிந்திரன்சேய்பண்ணவரு
ளுத்தமனுங்கண்ணுதலையுன்னிப்புலம்புறுவான். (௫௭)

வந்திப்பவர்பவங்கண்மாற்றுவோயெத்தேவர்
சிந்தைக்குமெட்டாச்சிவனேசெழுஞ்சுடரே
யிந்தப்பிறவியிடருழப்பச்செய்தனையோ
வந்தித்தநின்புணர்ப்பையாரேகடந்தாரே. (௫௮)

கைந்நாகத்துக்குங்கயவாய்க்குநாரைக்கும்
பைந்நாகத்துக்கும்பட்டுஞ்சிலந்திக்கும்
பின்னுகியவுயிர்க்கும்பேரருண்முன்செய்தனையா
லென்னுயகனேயெமக்கேனருளாயே. (௫௯)

கங்கைமுடித்தாய்கறைமிடற்றாய்கண்ணுதலாய்
திங்கள்புனைந்தாய்சிவனேசிவனேயென்
றிங்குனைதடியேமெல்லேங்களுமாற்ற
னங்களுயிர்க்குயிராகாயகேட்டிலையோ. (௬௰)

பாசங்கொண்டாவிபலவும்பிணிப்போனு
நேசங்கொண்டாங்கதனைநீக்கியருள்செய்வோனு
மீசன்சிவனென்றியம்புமறைநீயிலைழத்த
வாசொன்றுமித்தீமையார்தவிர்க்கவல்லாரே. (௬௧)

நாராயணனுமந்நான்முகனுநாடரிய
பேராதியானபெருமானுயிர்க்கெல்லா
மாராயினீயன்றியாரேதுணையாவார்
வாராய்தமியேனுயிரளிக்கவாராயே. (௬௨)

சீற்றம்விளைத்துமுனந்தேவர்தொகையலைப்பான்
கூற்றமெனவேகுறுகுற்றவந்தகனு
மாற்றலிழப்பவகன்மார்பின்முத்தலைவே
லேற்றியவனீயன்றோவெமக்கேனிரங்கலையே. (௬௩)

ஏங்கியமரரிரிந்தோடவேதுரந்த
வோங்குகுரண்டத்துருக்கொண்டதானவனைத்
தீங்குபெறத்தடிந்துசின்னமாவோர்சிறையை
வாங்கியணிந்தவருளிங்கென்பால்வைத்திலையே. (௬௪)

ஞாலத்தினையளித்தநான்முகனுநின்றவற்றைப்
பாலித்தவனும்பிறரும்பணிந்திரங்க
வோலக்கடலுள்ளுலகந்தொலைப்பவந்த
வாலத்தையுண்டவருளென்பாலயர்த்தனையோ. (௬௫)

மோடிதரவந்தமுக்கணுடைக்காளி
யோடியுலகுயிர்களுண்ணும்படியெழலு
நாடியவள்வெருவிநாணிச்செருக்ககல
வாடியருள்செய்தவருளிங்கணுகாதோ. (௬௬)

பொற்றைக்கயிலைப்புகல்புக்கதேவர்தமைச்
செற்றத்துடனடவேசென்றசலந்தரனை
யொற்றைத்திகிரிப்படையாலுடல்பிளந்தே
யற்றைப்பகலவரையஞ்சலென்றாய்நீயன்றோ. (௬௭)

நந்துற்றகங்கைநதிசெறியுங்காசிதனிற்
றந்திக்கொடியோன்றவத்தோர்தமைத்துரந்து
வந்துற்றிடச்சினவிவன்றோலினையுரித்த
வந்தக்கருணைக்களியரேம்பற்றிலமோ. (௬௮)

ஈரஞ்சசென்னியிருபான்புயங்கொண்டோ
ரோரஞ்சரக்கருலகலைப்பவன்னவரை
வீரஞ்செய்தட்டவிமலவெமையவுணர்
கோரஞ்செய்கின்றகொடுந்தொழிலுட்கொள்ளாயோ. (௬௯)

பண்டைமகவான்பரிசுணராத்தக்கனைப்போ
லண்டர்பிரானின்னையறியாதோர்வேள்விசெயத்
துண்டமதுசெய்தசுரரையவன்றோண்முரித்தாய்
தண்டமதனையின்றுதானவர்பாற்காட்டாயோ. (எ௦)

சிந்தப்புரங்கொடியதீயவுணர்மூவகைத்தா
மந்தப்புரங்களடல்செய்தாயெம்பெருமான்
சந்தப்புரங்கொண்டதானவரோடொன்றாகு
மிந்தப்புரமுமெரிக்குதவவொண்ணாதோ. (எக)

அன்பானவருக்கருளுதியாற்பததிநெறி
யென்பாலிலையாலிறையுமெவனளிததி
நன்பான்மதியிலைச்சுநாயகனேநல்லருள்கூ
ருன்பானமிகநொந்தேயோதியதென்பேதைமையே. (எ௨)

ஆனாலுந்தீயேனழுங்கவருள்கொடுநீ
தானாகநண்ணிதலையளிசெய்தாண்டாயே
லானாதவித்துயரமாறுமேயாறியக்கான்
மேனாளெனயான்றுறக்கவளன்வேண்டிலனே. (எ௩)

வென்றியரக்கரான்மேதகையதானவரா
லன்றிமுனிவராலண்டராலேனையரா
லொன்றுசெயவொன்றாயுறுதுயரத்தாழ்ந்ததன்றி
யென்றுமகிழ்வாயிடரற்றிருந்தனமே. (எ௪)

கீற்றுமதியுங்கிளர்வெம்பொறியரவு
மாற்றினொடுமிலைந்தவாதியேநின்னருளா
லேற்றமிகுமலக்கணேகினிழிந்தவளம
போற்றுகிலனோற்றல்புரிவேன்புரிவேனே. (எ௫)

தண்டேன்றுளிக்குந்தருநிழற்கீழ்வாழ்க்கைவெஃகிக்
கொண்டேனபெருந்துயரமவானபதமுங்கோதெனறே
கண்டேன்பிறாதம்பதத்தொலைவுங்கண்டனனாற்
றொண்டேன்சிவனேநின்றொல்பதமேவேண்டுவனே. (எ௬)

அல்லற்பிறவியலமலம்விண்ணாடுறைந்து
தொல்லைதிருநுகருந்துன்புமலமலமாற்
றில்லைத்திருநடஞ்செய்தேவேயினித்தமியேற
கொல்லைத்துயர்தீர்ததுனதுபதந்தருளே. (எஎ)

ஒன்றாயிருதிறமாயோரைந்தாயையைந்தா
யன்றாதியின்மீட்டுமைந்தாயளப்பிலவாய்
நின்றாய்சிவனேயிந்நீர்மையெலாந்தீங்ககற்றி
நன்றாவிகட்குநலம்புரிதற்கேயன்றோ. (எ௮)

பொன்பொலியுங்கொன்றைப்புரிசடையாயிவ்வழிசேர்
துன்பமகற்றித்துறக்கத்துட்டாழாது
பின்புநணிநோற்றுப்பெறற்கரிதாநின்னடிக்கீ
ழின்பமொருதலையாவெய்தவருளாயெனக்கே. (எ௯)

வேறு.

என்றுயபற்பலவிரங்கியேவிடஞ்சேறிச்சென்னச்
சென்றுசென்றிடர்சூழ்ந்துணர்வெலாஞ்சிதைப்ப
வொன்றுமோர்கிலன்மயங்கினனுயிர்சரந்துலையப்
பொன்றினர்களின்மறிந்தனனிந்திரன்புதல்வன். (அ0)

ஆங்கவன்றனைப்போலவேயமரருமழுங்கி
யேங்கியாருயிர்பதைத்திடவீழ்ந்துணர்விழந்தார்
றூங்குவீழுறுபழுமரஞ்சாய்தலுந்தொடர்ந்து
பாங்கர்சுற்றியவல்லிகடியங்கிவீழ்பரிசின். (அக)

சயந்தன்புலம்புறுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩கஎ.

# சயந்தன்கனவுகாண்படலம்.



விண்ணுளாகளுஞ்சயந்தனும்வியன்மகேந்திரத்தி
னுண்ணிலாம்பெருந்துயருடன்மாழ்கியதுணர்ந்தா
னெண்ணிலாவுயிர்தோறுமுற்றின்னருள்புரியு
மண்ணலாகுமரேசனுமறுமுகத்தமலன். (க)

வெஞ்சிறைத்தலைமூழ்கியேயவுணரான்மெலிந்து
நெஞ்சழிந்திடுமவர்தமையருள்வதுநினைந்தான்
றஞ்சமின்றியேதனித்தயாசிறுவரைத்தழுவி
யஞ்சலென்றுபோற்றிடவருமீன்றயாயனையான். (உ)

இனியசீறடிக்குமரனிற்செந்திவந்திமையோர
வினைகொள்கமபலையகற்றுவானிருந்திடுமவிமலன்
றனதுணாச்சியின்றுகியேயவசமாஞ்சயந்தன்
கனவின்முன்னுறவந்தனனருள்புரிகருத்தால். (௩)

வீறுகேதனம்வச்சிரமஙகுசம்விசிக
மாறிலாதவேலபயமேவலமிடம்வரத
மேறுபஙகயமணிமழுத்தண்டுவிலலிசைந்த
வாறிரணடுகையறுமுகங்கொண்டுவேளடைந்தான. (௪)

தந்தையில்லதோர்பரமனைததாதையாவுடைய
கந்தனேகியேயனையதன்னுருவினைக்காட்ட
விந்திரன்மகனுளப்படும்யாக்கையுளிருந்த
முந்துகண்களாற்கண்டனன்றொழுதனன்மொழிவான். (ரு)

தொண்டனேன்படுமிடுக்கணைநாடியேதொலைப்பான்
கொண்டபேரருணீர்மையிற்போந்தனைகுறிக்கின்
விண்டுமெல்லையப்பிரமனுமல்லைமேலாகு
மண்டர்நாதனுமல்லைநீயேவர்மற்றருளே. (சா)

என்றகாலையிலறுமுகப்பண்ணவன்யாமக்
கொன்றைவேணியின்மிலைச்சியபாஞ்சுடர்குமர
னுன்றனல்லலுமிரக்கமுமையனுமுணர்ந்து
சென்றனம்மெனக்கூறியேபின்னருஞ்செப்பும். (எ)

நுந்தைதன்குறைநங்குறையாவையுநவன்று
வந்துநந்தமைவேண்டலும்வரம்பில்சேனையொடு
மிந்தஞாலத்தினெய்தியேகிரவுஞ்சமென்னு
மந்தவெற்பையுந்தாரகன்றன்னையுமட்டாம். (௮)

அனையவன்றனையட்டபின்செந்திவந்தமர்ந்தாம்
வனசமீமிசையிருந்திடுபிரமனுமாலு
முனைதுதாதையுமமரருநம்வயினுறைந்தா
ரினையல்வாழிகேளுங்கையுமேருவினிருந்தாள். (௯)

வீரவாகுவாந்தூதனையாமிவண்விடுத்தேஞ்
சூரன்மைந்தனங்கொருவனைப்பலரொடுந்தொலையா
நேரிலாதவிக்கடிநகரழித்துநீறாக்கிப்
பாரின்மாலையின்மீண்டிடப்புரிதுமிப்பகலின். (௧௰)

செல்லுமிப்பகல்கழிந்தபினாலேயேசெந்தி
மல்லலம்பதிநீங்கியிந்நகர்க்கயல்வைகிச்
சொல்லுமைந்திருவைகலினவுணர்தந்தொகையு
மல்லலாற்றியசூரனுமுடிந்திடவடுதும். (௧௧)

அட்டபின்னரேநின்னைவானவருடனவுண
னிட்டவெஞ்சிறைநீக்கிநுந்திருவெலாமீதும்
விட்டிடிங்குனதாகுலமென்றனன்வினைதீர்ந்
துட்டெளிந்தவர்போதத்தினுணர்வுமாயுறைவோன். (௧௨)

ஐயனீங்கிவையுரைத்தவைகேட்டலுமகத்துண்
மையன்மாசிருளகன்றனபுகுந்தனமகிழ்ச்சி
மெய்யுரோமங்கள்சிலிர்த்தனவுகுத்தனவிழிநீர்
லைசயமேயெணநிமிர்ந்தனசயந்தனதடந்தோள். (௧௩)

பற்றினால்வருமமிர்தினையெளிதுறப்படைத்துத்
துற்றுளோரெனதண்ணெனததனதுமெய்சுருதி
கற்றகற்றனபாடினானாடினான்களித்தான்
மற்றவன்பெறுமுவகையின்பெருமையார்வகுப்பார். (௧௪)

வேறு.

நிகழ்ந்திடுமறவினையைநீங்கியிவ்வகை, மகிழ்ந்திடுமிந்திரன்மதலையெம்பிரான்
றிகழ்ந்திடுபதமலர்சென்றிறைஞ்சியே, புகழ்ந்தனனினையனபுகல்வதாயினான். ()

நொய்யசீரடியரேநோவுமாற்றியே, யையநீவலிதுவந்தளித்தியானுரை
செய்வதுமுண்டுகொல்சிறிதுநின்கணே, கையடைபுகுந்தனங்காத்தியாலென்றான்.

சயந்தன்மற்றிவ்வகைசாற்றயாரினு,முயர்ந்திடுபரஞ்சுடரொருவன்கேட்குறா,
வயர்ந்தநுங்குறையறவளித்துந்திண்ணமென், றியைந்திடமேலுமொன்றிசைத்தன்
மேயினான். (௧௭)

இந்நகர்குறுகயாமேயதூதுவ, னின்னையுஞ்சுரரையுநேர்ந்துகண்ணுறீஇ
நன்னயங்கூறியேநடப்பவுய்க்குது, மன்னதுங்காண்கெனவருளிப்போயினான். ()

படைப்புறுதயர்ந்திடுபங்கயன்கனா, வடுத்துனக்கருள்செயவாறுடைவரை,விடுத்
துமென்றேகியவிமலன்போலவே, யிடர்ப்படுசயந்தன்முனிலைசொற்றேகினான்.()

ஏகியகாலையினிறந்துமுன்னரே, போகியபுலமெலாம்பொதியிற்றேன்றது
மாகியகனவினையகன்றவைப்பய, னாதர்தோன்றிருமகனனவினன்னினுன். (உ௦)

வே று.

தந்தி * கஞ்சந்தலைக்கொளச்சாய்ந்தவர், மந்திரத்தவர்வாய்மையுங்தூற்றுழிச்
சிந்தைமையலைத்தீர்ந்தெழுமாறுபோ, லிந்திரன்றன்மதலையெழுந்தனன். (உக)

கனவுதன்னிடைநண்ணியசீர்மகன், கனவினெல்லையிற்கண்டனயாவையு
நினைவுதோற்றினனெஞ்சங்குளிர்ந்துநம், வினையெலாமிவண்வீடியவோவென்றான்

கவலைதூங்கிக்கடுந்துயர்நீரதா, யவலமாகியவாழியிலாழ்ந்துளான்
சிவகுமாரன்றிருவருளுன்னியே, யுவகையென்னுமொலிகடன்மூழ்கினுன். (உ௩)

அனையகாலையயர்ந்திடுவானுளோர், கனவுதோறுங்கடிதுசென்றிந்திரன்
றனயனுக்குமுன்சாற்றியவாறுசொற், றினையலீரெனவேகினனெம்பிரான். (உ௪)

அம்மென்கொன்றையணிமுடிக்கொண்டவன், செம்மலேகளுந்தேவர்களுவொரீஇ
விம்மிதத்தின்விழித்தெழுந்தேயிரீஇத், தம்மிலோர்ந்துதவமகிழ்வெய்தினர். (உ௫)

சில்லைவெம்மொழித்தீயவர்கேட்பரே, லல்லல்செய்வரென்றஞ்சிக்கணுத்திற
மல்லன்மைந்தன்மருங்குறுவார்சிலர், மெல்லவங்கவன்கேட்கவிளம்பினர். (உ௬)

வே று.

அண்டர்கண்மொழிதருமற்புதத்தையுட், கொண்டனனங்கவைகுமரன்றுன்முனங்
கண்டதுபோன்றிடக்களித்துப்பாரெலா, மூண்டவனுமெனவுடலம்விம்மினுன். ()

அறுமுகமுடையதோராதிநாயக, னிறைதருமுலகெலாநீங்கவின்றியே
யுறைவதுங்கருணைசெய்திறனுமுன்னியே,மறைமுறையவனடிவழுத்திவைகினுன்.

சயந்தன்கனவுகாண்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௪௪௫.

---

## வீரவாகுசயந்தவணத்தேற்றுபடலம்.

இத்திறமமரரொடிந்திரன்மக, னத்தலையிருத்தலுமனையர்யாவரு
மொய்த்திடுசிறையகமுன்கண்டானரோ, வித்தகவறிவனும்வீரவாகுவே. (க)

வே று.

மாகண்டமொன்பான்புகழூந்திறல்வாகுவங்க
ணுகண்டலன்மைந்தனைவிண்ணவராயினுரைக்
காய்கண்டகராமவுணத்தொகைகாத்தல்கண்டான்
பேய்கண்டசெல்வந்தனைக்காத்திடும்பெற்றியேபோல். (உ)

கண்ணேடவின்றித்துயர்வேலியிற்காவல்கொண்ட
வெண்ணேரெனைக்கண்டிலராயுணர்வின்றிமாழ்க
விண்ணேர்கள்காணத்தமியேன்செலவேண்டுமென்றுன்
மண்ணேரடியாலளக்குந்தனிமாயனுெப்பான். (௩)

ஓங்காரமூலப்பொருளாயுயிர்தோறுமென்று
நீங்காதமருங்குமரேசனைநெஞ்சினுன்னி
யாங்காருவதோரவன்மந்திரமன்பிேைதித்
தீங்காமவுணர்செறிகாப்பகஞ்சென்றுபுக்கான். (௪)

---

* தந்தி - பாம்பு.

தாமந்தருமொய்ம்புடைவீரன்சயந்தன்விண்ணோ
ரேமந்தருவன்சிறைச்சூழலுளேகலோடுந்
தூமந்திகழ்மெய்புடைக்காவலர்தப்புநீங்கி
மாமந்திரமாம்வலைப்பட்டுமயங்கலுற்றார். (௫)

எண்டானவரிற்புடைகாப்பவர்யாருமையல்
கொண்டார்குயிற்றப்படுமோவியக்கொள்கைமேவத்
தண்டாரயில்வேற்படைநாயகன்றானைவேந்தைக்
கண்டார்சயந்தனொடுதேவர்கருதலுற்றார். (௬)

ஏமாந்தவுணர்சிறுகாலையினின்னல்செய்ய
நாமாண்டனர்போலவசத்தினனாகுமெல்லை
மாமாண்படையவருள்செய்தநம்வள்ளறாத
னாமாமிவனென்றகங்கொண்டனரார்வமுற்றார். (௭)

அன்னாரமருங்களஞ்சென்றயிலேந்துநம்பி
நன்னாயகமாந்திருநாமநவின்றுபோற்றிப்
பொன்னாடிறைகூர்திருநீங்கியபுங்கவன்றன்
முன்னாவணுகியிருந்தானடன்மொய்ம்பின்மேலோன். (௮)

செறிகின்றஞானத்தனிநாயகச்செம்மனாம
மெறிகின்றவேலையமுதிற்செவியேகலோடு
மறிகின்றதுன்பிற்சயந்தன்மகிழ்வெய்திமுன்ன
ரறிகின்றிலன்போற்றொழுதின்னவறைதலுற்றான். (௯)

தாவம்பிணித்ததெனுங்குஞ்சித்தகுவரானோர்
பாவந்தலைச்சூழ்வதுபோலெமைப்பாடுகாப்ப
மாவெம்படரிலிருந்தேங்கண்மருங்கினைய
நீவந்ததென்னையினிதிங்குநிகழ்த்துகென்றான். (௧௰)

வேறு.

முறையுணர்கேள்விவீரன்மொழிகுவான்முதல்வன்றந்த
வறுமுகவையன்றன்பினடுத்துளேனவன்றூதானேன்
விறல்கெழுநந்திபாலேன்வீரவாகென்பேர்நுங்கள்
சிறைவிடும்பொருட்டுச்சூர்முன்செப்புவான்வந்தேனென்றான். (௧௧)

என்னலுமமரரோடுமிந்திரன்குமரன்கேளாச்
சென்னியினமிர்துள்ளூறல்செய்தவத்தயின்றமேலோ
ரன்னதற்பின்னர்நேமியமிர்தமும்பெற்றுண்டாங்கு
முன்னுறுமகிழ்ச்சிமேலுமுடிவிலாமகிழ்ச்சிவைத்தான். (௧௨)

அந்தரமுதல்வன்மைந்தனறைகுவானையதன்பூர்
புந்தியேங்குறைவினாதற்பொருட்டினாற்போந்தாயற்றா
விந்தவன்சிறையுநீங்கிற்றிடரெலாமகன்றியாங்க
ளுய்ந்தனம்பவங்கடருமுதியம்படைத்துமென்றான். (௧௩)

பூண்டகுதடந்தோள்வீரன்புகலுவான்சூர்மேலொற்றா
வீண்டெனைவிடுத்தவேற்கையெம்பிரான்வலிதேநும்மை
யாண்டிடுகின்றான்முன்னராக்கமும்பெறுதிர்பின்னும்
வேண்டியதெய்துகின்றீரென்றனன்மேலுஞ்சொல்வான். (௧௪)

உலமெலாங்கடந்ததோளீருன்றுதிருள்ளியாங்கு
நலமெலாம்வழிபட்டோர்க்கு[illegible]
றலமெலாம்படைத்ததொல்லைச்சதுர்முகன்முதலாம்வானோர்
குலமெலாமுய்ந்ததென்றாலுமக்கொருகுறையுண்டாமோ. (௧௫)

தேவர்கடேவன்வேண்டச்சிறைவிடுத்தயனைக்காத்த
மூவிருமுகத்துவள்ளன்முழுதருள்செய்தாலும்பாற்
பாவமும்பழியுந்தீங்கும்பையுளும்பிறவுமெல்லாம்
போவதுபொருளோதோற்றப்புணரியும்பிழைத்தீரன்றே. (௧௬)

சீர்செய்தகமலத்தோனைச்சிறைசெய்துவிசும்பினோடும்
பார்செய்தவுயிர்கள்செய்தபரஞ்சுடர்நம்மையெல்லாஞ்
சூர்செய்தசிறையினீக்கத்தொடர்ந்திவணுற்றானென்றா
னீர்செய்ததவத்தையாரேசெய்தனர்நெடிதுகாலம். (௧௭)

சங்கையில்பவங்களாற்றுந்தானவர்செறிந்தமூதூ
ரிங்கிதனிறினர்செல்லாரெம்பிரானருளினல்யா
னங்கணம் * படர்வோரென்னவகமெலிந்துற்றேனீண்டே
யுங்களையெதிர்தலாலேயுலப்பிலாவுவகைபூத்தேன். (௧௮)

என்றலுமகிழ்ச்சியெய்தியிந்திரன்மதலையாங்கள்
வன்றளைப்படுமுன்போனார்மற்றெமைப்பயந்தோரன்றோ
ரன்றுதொட்டின்றுகாறுமாற்றியசெயலுமற்றா
லொன்றியபயனும்யாவுமுரைமதிபெரியோயென்றான். (௧௯)

வீரனங்கதனைக்கேளாவிண்ணவர்கோமான்றன்னோ
ளாரணங்குடனேகாழியடைந்ததேயெழுவாயாகச்
சீரலைவாயிலந்நாட்சென்றிடுகாறுமுள்ள
காரியநிகழ்ச்சியெல்லாங்கடிதினிற்கழறினானே. (௨௦)

மேதகுதடந்தோள்வீரன்விண்ணவர்கோமான்செய்கை
யோதலுஞ்சயந்தன்கேளாவுரைசெய்வானன்னைதன்னைத்
தாதையையடிகடன்னைச்சண்முகத்தனிவேற்செங்கை
யாதியையெதிர்ந்தாலொத்தேனையநின்மொழிகேட்டென்றான். (௨௧)

இறைதருமமரர்தம்மோடிந்திரன்புதல்வன்றன்னை
யறிவரிலறிவன்கண்ணுற்றறுமுகம்படைத்தவண்ணன்
மறையிடைவதிந்தநுங்கள்வன்சிறைமாற்றும்வைகல்
சிறிதிவணிருத்திரென்றுபின்னருஞ்செப்புகின்றான். (௨௨)

தன்னிகரின்றிமேலாய்த்தற்பரவொளியாயாரு
முன்னரும்பரமாய்நின்றவொருவனேமுகங்களாறும்
பன்னிருபுயமுங்கொண்டுபோலகன்போன்றுகந்த
னென்னுமோர்பெயருமெய்தியாவருங்காணவந்தான். (௨௩)

பங்கயமுகங்களாறும்பன்னிருபுயமுங்கொண்டே
யெங்கடம்பெருமான்போந்தவேதுமற்றென்னையென்னிற்
செங்கண்மாலுந்திபூத்தோன்சிறுமையுமடிகவான்றுன்பு
முங்கடஞ்சிறையுநீக்கியுலகெலாமளிப்பக்கண்டாய். (௨௪)

---

* அங்கணம் - சேற்றுநிலம்.

சிறுவிதிவேள்விகண்ணித்தியவிறுகர்த்தபாவ
முறைதனில்வீரன்செற்றமுற்றவுமுடிந்ததில்லை
குறைசிலவிருந்தவாற்றாற்கூடியதமக்கித்துன்ப
மறுமுகப்பெருமானன்றியாரிதுநீக்கற்பாலார். (உரு)

தாட்கொண்டகமலமன்னசண்முகத்தெந்தைவேலாற்
காட்கொண்டகிரியினோடுதாரகற்கடந்தபூச
றோட்கொண்டமதுகைசான்றசூர்முதல்களையமுன்ன
நாட்கொண்டதன்மையன்றோநறைகொண்டவலங்கற்றோளாய். (உசு)

காலுறக்குனித்துப்பூட்டிக்கார்முகத்துய்ப்பவோர்செங்
கோலினுக்குண்டியாற்றார்குணிப்பிலாவவுணர்யாரு
மாலினுக்கரிதாமண்ணன்மாமகன்கரத்திற்கொண்ட
வேலினுக்கிலக்கதில்லைவிடுப்பதுமிகையதன்றே. (உஎ)

வாரிதியேழுமெண்ணில்வரைகளும்பிறவுங்கொண்ட
பாருடனுலகீரேழும்படைத்தபல்லண்டம்யாவு
மோரிறைமுன்னமட்டேயுண்டிடுமொருவன்செவ்வேல்
சூரனையவுணரோடுந்தொலைப்பதோர்விளையாட்டம்மா. (உஅ)

சுறமறியளக்கர்வைகுஞ்சூரபன்மாவின்மார்பி
னெறிசுடரெஃகம்வீசியிருபிளவாக்கினல்லாற்
சிறையுளீர்மீள்கிலாமைதேற்றியும்பொருநர்செய்யு
மறநெறிதூக்கியொற்றுவடியனைவிடுத்தானையன். (உகூ)

ஆளுடைமுதல்வன்மாற்றமவுணருக்கிறைவன்முன்போய்க்
கேளிதென்றுரைப்பனற்றேகிளத்திநுங்கடனாக்கொள்ளான்
மீளுவன்புகுந்ததெல்லாம்விளம்புவன்வினவியெங்கோ
னாளைவந்திவரையெல்லாநாமறமுடிப்பன்காண்டி. (௩0)

நீண்டவன்றனக்குமெட்டாநெடியதோர்குமரன்செவ்வே
லாண்டிருந்தேயுமுய்த்தேயவுணர்யாவரையுங்கொல்லும்
பாண்டிலந்தேர்மேற்கொண்டுபடைபுறங்காத்துச்சூழ
வீண்டுவந்ததெலனாற்கிதுவுமோராடலன்றே. (௩க)

ஈரிரண்டிருமூன்றாகுமிரும்பகலிடையேயெங்கோ
னாரிருஞ்சமரமூட்டியவுணர்தம்மணிகந்தன்னைச்
சூரொடுமுடித்துநும்மைத்துயர்ச்சிறைத்தொடர்ச்சிநீக்கிப்
பேரிருஞ்சிறப்புநல்கும்பிறவொன்றுநினையன்மன்னோ. (௩உ)

என்றிவைபலவும்வீரனிமையவர்குழாத்தினோடுங்
குன்றெறிபகைஞன்மைந்தனுணாதரக்கூறலோடு
நன்றெனவுவகைபூத்துநாமவேணம்பியாற்ற
வென்றிபெற்றிடுகவென்றுவீற்றுவீற்றாசிசொற்றார். (௩௩)

எண்டகுமாசிகூறியிந்திரன்றனதுமைந்த
னண்டரொடங்கைகூப்பியளியரேந்தன்மையெல்லாங்
கண்டனைதாதைகேட்பக்கழறுதியிவணீயுள்ளங்
கொண்டதுமுடிக்கப்போதிகுரைகழற்குமரவென்றான். (௩௪)

வயந்திகழ்விடலையங்கண்மற்றவர்தம்மைநீங்கிக்
கயந்தருகாவலோர்தங்கருத்தின்மாலைதீயேக
வியந்திரமன்னோர்தேறியிமையவர்சூழத்திரேமு
சயந்தனைச்சுற்றிமுன்போற்றடைமுறையோம்பலுற்றார். (௩௫)

வீரவாகுசயந்தனைத்தேற்றுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௪௮௦.

# அவைபுகுபடலம்.

மடந்தையொடிரிந்திடும்வாசவன்மக, னடைந்திடுசிறைக்களமகன்றுவானெறி
கடந்தனனவுணர்கோனண்ணுகோனக, ரிடந்தருகிடைகரையிகந்துபோயினன்.()

ஆகழியைநீங்கினனயுதந்தன்னினு, மிகுதிகொணூற்படைவெள்ளந்தானைக
டகுதியின்முறைமுறைசாரச்சுற்றிய, முகிறவழ்நெடுமதின்முன்னரேகினன். (௨)

கான்கொடிகங்கைநீர்காப்பமாந்தியே, மீன்கதிருபெதிவிழுங்கிவிட்டிடும், வான்
கெழுகடிமதில்வரைப்பின்முன்னரே, தான்கிளர்கோபுரங்கண்டுசொற்றுவான். (௩)

சூரைகடலுண்டவன்கொண்டதண்டினால், வருபுழைமீமிசைவாய்ப்பத்தாரகன்
பெருவரைநிமிர்ந்திடுபெற்றிபோலுமாற், றிருநிலைபலவுடைச்சிகரிநின்றதே. (௪)

தூணமதுறழ்புயச்சூரனென்பவன், சேணுறுமண்டமேற்செல்லச்செய்ததோ
ரேணிகொலோவிதுவென்னநின்றதா, ஙீணிலைபலவுடணிமிர்ந்தகோபுரம். (௫)

துங்கமொடிறைபுரிசூரன்கோயிலிற், பொங்குசெம்மணிசெறிபொன்செய்கோபுர
மெங்கணுமுடியுநாளிவுளிவாய்ப்படு, மங்கிவிண்காறெழும்வடிவமன்னதே. (௬)

அண்டமங்கெவற்றினுமமர்ந்துநிற்புறும், விண்டொடர்வரைகளுமேருவானவும்
பண்டிதன்மிசையுறப்பதித்ததொக்குமாற், கொண்டியல்சிகரியுட்கூடசாலைகள். ()

மெய்ச்சுடர்கெழுமியவியன்பொற்கோபுர, முச்சியிற்றொடுத்திடமுழங்குகேதன
மச்சுதனுஞ்சிவனளவைதீமுகத், துச்சிதொறிருந்தராவொலித்தல்போலுமால். ()

திசைபடுசிகரியிற்செறிந்தவான்கொடி, மிசைபடுமண்டமேல்விடாமலெற்றுவ
பசைபடுமதளுடைப்பணையகததினி, விசைபடப்பலகடிப்பெறிதல்போலுமால். ()

விண்ணவர்தாமுறைவியன்பதத்தொடுந், திண்ணிலையிடந்தொறுஞ்சிவணவைகின
ரண்ணலங்கோபுரமதனிற்கைவலோன், பண்ணுறுமோவியப்பாவையென்னவே.

என்பனபலபலவியம்பியீறிலாப், பொன்புனைதோணியம்புரிசைச்சூழலின்
முன்புறுகோபுரவனப்புமுற்றவு, நன்பெருமகிழ்ச்சியானம்பிநோக்கினன். (௧௧)

புதவுறுகோபுரப்பொருவில்வாய்தலுண், மத * வலியுக்கிரன்மயூரனாதியோ
ரதிர்தருநாற்படையுதஞ்சுற்றிடக், கதமொடுகாப்பதுகாணோக்கினன். (௧௨)

நோக்கியதிறலவனெஞ்சிதாவியே, யாக்கமொடமர்தருமவுணன்கோயிலு
ளூக்கமொடும்பரானேடிமுன்னுறு, மேக்குயர்குளிகைமிசையிற்போயினன். (௧௩)

வேறு.

சூளிகைமீமிசைதுன்னுபுசூரன், மாளிகையுள்ளவனந்தனையெல்லா
மீளரிதாவிழியோடுளமேவ, வாளரிநேர்தருமாண்டலைகண்டான். (௧௪)

* மத என்பது - வலி. எனவே மதவலியென்பதற்கு, மிக்க வலியெனப் பொருள் கொள்க.

கண்டதோரண்ணல்கடுக்திறல்வெஞ்சூர், திண்டிறல்வாள * ரிசென்னிகொள்பீடத்
தெண்டகுமாணேயியற்றியசெம்பொன், மணடபம்வைகுறும்வண்மைதெரிந்தான்.

அருந்தவவேள்வியயர்ந்தாணியும், பெருந்திருமிக்கனபெற்றுலகெல்லாந்
திருந்தடிவந்தணேசெய்திடவெஞ்சூ, ரிருந்திடுகின்றவியற்கையிசைப்பாம். (கரு)

ஐயிருநூறெனும்யோசனேயான்றே, மொய்யொளிமாழையின்முற்றவுமாகித்
துய்யபன்மாமணிதுஞ்சிவில்வீசி, மையறுகாட்சிகொண்மண்டபமொன்றின். ()

மேனகையோடுதிலோத்தமைமெய்யி, னூனமில்காமருருப்பசியாதி
வானவர்மங்கையர்வட்டமசைத்தே, மேனிமிர்சீகரம்வீசினர்நிற்ப. (கஅ)

சித்திரமாமதிசெங்கதிர்பாங்காய், முத்தணிவேய்ந்துமுகட்டிளநீல
மும்த்துமணித்தொகையுள்ளமழுத்துஞ், சதகிரமாயினதாங்கினர்நிற்ப. (ககூ)

வெள்ளடைபாகுவெளிறறுசுண்ணங், கொள்ளுமடைப்பைமென்கோடிகவ்வட்
டில், வள்ளுடைவாளிவைதாங்கிமருங்காய்த, தளளருமொய்ம்புளதானவர்நிற்ப.()

வெம்மைகொள்பானுவைவெஞ்சிறையிட்ட, செம்மலுமேனேயசீர்கெழுமைந்தர்
மும்மைகொளாயிரமூவருமாகத், தமமுறையாற்புடைசார்ந்தனர்வைக. (உக)

பாவமுயன்றுபழித்திறனுற்றுங், காவிதியோர்கருமங்கண்முடிப்போ
ராவதொர்சாரணராய்படைமள்ள, ரேவருஞானகரினெங்சனுநிற்ப. (உஉ)

காடகநூன்முறைநன்றுநினேந்தே, யாடவரம்பையராயுளரெல்லாஞ்
சேடியர்கின்னரர்சித்தரியக்கா, பாடுறவீணேகள்பண்ணினபாட. (உங)

ஏகனேயீசனேயெந்தையையெண்ணு, ராகியதொல்லவுணக்குழுவென்ன
வேகுமுளத்தினர்கஞ்சுகர்வெங்கண், மாகதர்சூரல்பிடித்துவழுத்த. (உச)

உள்ளிடுமாயிரயோசனேயெல்லே, கொள்ளிடமானகுலப்பெருமன்றந்
தள்ளிடவற்றசனங்கண்மிகுததே, யெள்ளிடவெள்ளிடமின்றெனவீண்ட. (உரு)

வச்சிரமெய்வயிடூரியமொண்ப, லுச்சியில்வாலுனேயேயொளிர்மூதத
மச்சறுகண்மணியாமரிமாவின், மெய்ச்சிரமேந்தும்வியன்றவிசின்கண். (உசு)

மீயுயர்நீலவியன்கிரியும்பர், ஞாயிறுகாலேயினண்ணியவாபோற்
பாயிருள்கீறியபன்மணிகொணட, சேயபொனமாமுடிசென்னியின்மின்ன. (உஎ)

கறுத்தவராத்துணேகண்டிருவெய்யோ, ருறுப்பிடைகவ்வியொசிந்துதலேப்போய்
முறுக்கியவாலொடுமுன்கலநதென்ன, மறுததவிர்குண்டலமவார்குழைதூங்க. ()

வீறியமாமணிவெற்பின்மிசைக்க, ணேறியவொண்பகலிந்துவியற்கை
மாறியவந்தெனமால்வளமாகு, நீறுசெறிந்திடுநெற்றியிலங்க. (உக)

விண்டுமிழ்கின்றவியன்புழைதோறுந், தண்டுளிவந்தயர்தன்மையதென்னப்
புண்டரிகம்பொறைபோற்றியுயிர்க்கும், வண்டாளத்தொடைமார்பின்வயங்க.(ங0)

பங்கமில்சங்தொடுபொளிதாானங், குங்குமமேனேயகந்திகள்கூட்டி
யங்கமதன்கணணிந்தனவண்ட, மெங்குமுலாவியிருங்கடிதூங்க. (ஙக)

வான்றிகழ்நீனிறமாமுகிலின்பாற், றேன்றியமின்புடைசுற்றியதென்ன
வேன்றுளவண்டமெனேத்தையுமாற்று, மான்றுயர்தோளிடையங்கதமல்க. (ஙஉ)

மெய்த்துணேயாமிருவெம்பணிஞாலம், பைத்தலேகொள்வபரம்பொறையாற்று
தெய்த்தனபூண்கொடியாப்புறுமாபோற், கைததலமுன்கடகஞ்செறிவெய்த.(ஙங)

* வாள் - கொலே.

நீலமதாயசெங்கிரிமேல்பால், வாலியகங்கைவளைந்திடுமாபோற்
கோலமிடற்றிடைகோவைகொண்முத்தின், காவுறுகண்டசரங்களிமைப்ப. (௧௪)

வீரமடந்தையர்மேதககாளுஞ், சீரியதோள்விணைசெல்கதியென்ன
வேரியல்பன்மணியிட்டணிசெய்த, வாரவடுக்கல்பொன்ருகமிலங்க. (௧௫)

அந்தியின்வண்ணமுமத்தொளியூருஞ், சுந்தரமாலிடைசுற்றியவாபோன்
முந்துபராரைகொண்மொய்ம்மணியாடை, யுந்தியினுண்பணியோடுவயங்க. (௧௬)

இருபணிபார்முகமிட்டிடவீட்டி, யுருமொடுமின்னுமுலப்பிலசுற்றிக்
கருமிடறூடுகலந்தெனநுண்ணூல், குரைகழல்வார்கழல்கொண்டுகுலாவ. (௧௭)

மென்மணிமாலையின்வேதணியற்றிப், பன்மணிமீதுபடுத்தியபல்பூண்
டொன்மணிமெய்புனைசூரபன்மாவோர், பொன்மணிமாமுகில்போலவிருந்தான். ()

இருந்திடுகின்றவியற்கைவிழிக்கோர், விருந்தமுதாகவியப்பொடுநோக்கிச்
சுருந்திடுமென்பொடுசூளிகைவைகும், பெருந்திறன்மாமுகிலிங்கிவைபேசும். (௧௯)

மூவரின்முந்தியமுக்கணனம்பொற், சேவடிபேணியதேவர்கடம்முட்
டேவுடைவேலுளசூரபன்மாப்போ, லேவர்படைத்தனரித்திருவெல்லாம். (௨௦)

ஓய்ந்துதவம்புரிவோருளுவன்போன், மாய்ந்தவரில்லைமறத்தொடுநோற்றே
யாய்ந்திடின்முக்கணெம்மையனுமின்றேற், கீந்ததுபோற்பிறர்க்கீந்ததுமின்றால்.

பாடுறுவேள்விபயின்றழல்புக்கும், பீடுறுமிவ்வளமாயினபெற்று
நீடுறுமாறுநினைந்திலன்வெய்யோன், வீடுறுகின்றவிதித்திறனன்றே. (௨௨)

வேறு.

மெய்ச்சோதிதங்குசிறுகொள்ளிதன்னைவிரகின்மைகொண்டகுருகார்
கச்சோதமென்றுகருதிக்குடம்பைதனினுய்த்துமாண்டகதைபோ
லச்சோவெனப்பவிமையோரையீண்டுசிறைவைத்தபாவமதனு
விச்சூரபன்மன்முடிவெய்துநாளையிதனுக்கொரையமிலையே. (௨௩)

மிகையானவீரம்வளமாற்றல்சாலமேவுற்றுளோருமிறையும்
பகையார்கணேனுமுளராகிவாழ்தல்பழுதன்றிநன்றிபடுமோ
மகவானைமங்கையுடனேதுரந்துமவர்மைந்தனோடுசுரரை
யகலாமலீண்டுசிறைசெய்தபாவமதனாலிழப்பனரசே. (௨௪)

மன்னுந்திறத்தினமர்சூரபன்மன்மாமக்கள்சுற்றநகர
முன்னும்படிக்குமரிதானசெல்வமுடனானையீறுபடுமேன்
முன்னெனன்பவர்க்குமுன்னருமாறுமுகனல்குமுத்தியலதே
லென்னுண்டுநாளுமவினைசெய்துழன்றவிவனாருயிர்க்குநிலையே. (௨௫)

என்றித்திறங்களருளோடுபன்னியெழில்கொண்டவேரமிசையே
துன்றுற்றவீரன்வளனோடிருந்தசூரன்முனேகறுணியாக்
குன்றத்தினின்றுமிவரெல்லைபோன்றுகுமரேசனெந்தையடிக
ளொன்றக்கருத்தினிடைகொண்டெழுந்துநடைகொண்டவைக்கணுறுவான். ()

வேறு.

நலஞ்செய்சூளிகைநீங்கிவிண்ணெறிக்கொடுநடந்து
கலஞ்செய்திண்டிறல்வாகுவாம்பெயருடைக்கடவுள்
வலஞ்செய்வாட்படையவுணர்கோன்மன்னிவீற்றிருக்கும்
பொலஞ்செய்கின்றவத்தாணிமண்டபத்திடைப்போனன். (௨௭)

எல்லையில்லதோர்பெருந்திருக்கிழவீற்றிருந்த
மல்லலங்கழலிறைவனைக்குறுகிமாற்றலசால்
வெல்லருந்திறல்வீரவாகுப்பெயர்விடலை
தொல்லைநல்லுருக்காட்டினனவைக்கெலாந்தோன்ற. (௪௮)

ஒற்றைமேருவினுடையதோர்பரம்பொருளுதவுங்
கொற்றவேலுடைப்புங்கவன்றூதெனக்கூறி
யிற்றையிப்பகலவுணர்கோன்கீழியானெளிவாய்
நிற்றலெம்பிரான்பெருமையினிழிபெனநினைந்தான். (௪௯)

மாயைதந்திடுதிருமகன்மன்னிவீற்றிருக்கு
மீயுயர்ந்திடுமரியணைக்கொருபுடைவிரைவிற்
போயிருப்பதுமேலன்றுபுன்மையோர்கடனே
யாயதன்றியும்பாவமென்றுன்னினனகத்துள். (௫௦)

இனையதுன்னியேயறுமுகப்பண்ணவனிருதா
ணினையுமெல்லையினங்கவனருளினாணிசியிற்
றினகரத்தொகையாயிரகோடிசேர்ந்தென்னக்
கனகமாமணித்தவிசொன்றுபோந்ததுகடிதின். (௫௧)

நித்திலப்படுபந்தருஞ்சிவிகையுநெறியே
முத்தமிழ்க்கொருதலைவனுமதலைக்குமுதல்வ
னுய்த்தவாறெனக்குமரவேள்வீரனுக்குதவ
வத்தலைப்படவந்ததுமடங்கலேற்றணையே. (௫௨)

பன்னிரண்டெனுங்கோடிவெய்யவரெலாம்பரவப்
பொன்னின்மால்வரைதிரைக்கடலடைந்தவாபோல
மின்னுலாவியபொலன்மணிப்பீடிகைவிறல்சேர்
மன்னர்மன்னவனவைக்களத்தூடுவந்ததுவே. (௫௩)

சிவன்மகன்விடுபொலன்மணித்தவிசுசேண்விளங்கிப்
புவனமுற்றுறத்தன்சுடர்விடுத்தலிற்பொல்லாப்
பவமனத்தொடுதீமையேவைகலும்பயிற்று
மவுணர்மெய்யையுந்தெய்வதப்படிவமாக்கியதால். (௫௪)

அயிலெயிற்றுடையவுணர்களணிகலந்தன்னிற்
குயினுடைப்பலமணிகளுங்குமரவேளுய்த்த
வியனுடைப்பெருந்தவிசொளிபரத்தலினிரவி
வெயிலிடைப்படுமின்மினிபோல்விளங்கிலவே. (௫௫)

செக்கர்வானிறமதிக்கதிருடுக்களின்றிரட்சி
தொக்கபாயிருள்பலவகையெழிலியின்றுளக்க
மிக்கெலாஞ்செறிமாலையினும்பர்மேல்வெய்யோன்
புக்கதேயெனத்தொலைத்ததாலச்சபைப்பொலிவை. (௫௬)

திசைமுகத்தனுஞ்செயற்கருந்தவிசொளிசெறிந்தே
யசைவருந்திறற்சூரபன்மாவெனுமவுண
னிசைமைதன்னையுமாணைதன்னையுமவனியாக்கை
மிசைகொள்பேரணிக்கதிரையும்விழுங்கினவிரைவில். (௫௭)

அனையவான்றவிசவுணனேயிருந்ததுமதாகண்
டெனதுாாயகன்விடுத்தனன்பேசதுமென்றெண்ணி
மனமகிழ்ச்சியாலறுமுகப்பிரானடிவழுத்தி
வினையநாவோனிருந்தனனுங்கதன்மிசையே. (௫௯)

பெருந்தனிச்சுடரெறித்திடுபொன்மணிப்பீடத்
திருந்துமேதகுசிறப்பொடுவிளங்கியவேந்தல்
விரிந்தபல்கதிருடையதோர்வெய்யவனவெட்
பொருந்திவைகியகண்ணுதற்பரமனேபோன்றான். (௬௧)

மின்னிருந்தவேலவுணர்கோனெதிருறும்விடலை
முன்னிருந்தவாடகன்றனையடுமுரட்சீயஞ்
செந்நிணங்கவர்ந்தலமரவனுகிமுன்றெற்றப்
பொன்னிருந்தவிசிருந்திடுவீரனேபோன்றான். (௬௦)

வெம்மைக்காவிருள்வேலைபோன்மூடிவிண்புவியைத்
தம்முட்சித்தரிற்காட்டலுஞ்சதுர்முகத்தொருவ
னம்மொத்தாரிலையென்றிடச்சிவன்புகழ்நவிலுஞ்
செம்மைதொல்குணமானுநேர்ந்திருந்தனன்றிறலோன். (௬௧)

இவற்றியற்கையால்வீரவாகுப்பெயரேந்த
னிவப்பின்மிக்கதோர்பொனமணித்தவிசின்மேனெஞ்சி
னுவப்பும்வீரமுமேதகவிருத்தலுமுற்ற
வவைக்களத்தினர்யாவருங்கண்டனரதனை. (௬௨)

நோற்றன்முற்றுறும்வினைஞர்பானெய்தின்வந்திறுத்த
வாற்றல்சால்வளம்போலவேயரியணையதன்கட்
டோற்றுமேலவனிலைமையைக்காண்டலுந்துளங்கி
யேற்றவற்புதமெய்தினரவைக்களத்திருந்தார். (௬௩)

வேறு.

வாரிலங்கியகழன்மன்னன்முன்னரே, தாரிலங்கியமணித்தவிசினுற்றுளான்
வீரனும்போலுமால்வினையமோர்கிலேம், யாரிவன்கொல்லெனவியம்புவார்சிலர். ()

முந்திவட்கண்டிலமுடிவிலாற்றல்சே, ரெந்தைமுனிதுபொழுதிருத்தன்மேயினு
னந்தமைநீங்கியேநடுவேணையிவன், வந்ததெவவாறெனவழங்குவார்சிலர். (௬௫)

ஒப்பருஞ்சனங்களோடொன்றிநம்மெலாந், தப்பினன்புகுந்தனன்றமியனென்னி
னு, மிப்பெருந்தவிசிவணிருந்ததாற்றவு, மற்புதமற்புதமாமென்பார்சிலர். (௬௬)

சீயமெல்லணையொடுசெம்மன்முன்னரே, யேயெனுமளவையினீண்டுதோன்றினு
ணுய்பவருண்டெனிலைறவனம்மினு, மாயனிங்கிவனெனவருக்கின்றார்சிலர். ()

அறைகழலொருவனையவையத்தென்முனங்,குறுகியவிடுத்ததென்குழாங்கொண்டே
ரெனு,விறையவனங்களையாதுசெய்யுமோ,வறிகிலமெனப்பதைத்தழுங்குவார்சிலர்

ஒட்டலனொருவனையொறுத்திடாதிவண்,விட்டதெனென்றிறைவெகுளுமுன்னரோ
கிட்டினமவன்றனைக்கெழுமிச்சுற்றியே, யட்டனம்வருதுமென்றறைகின்றார்சிலர்.

விளிவிலாத்திறலுடைவேந்தன்றன்னெதிர்,களியுலாமனத்தொடுகெழுதினுற்றுளான்
றெளிவிலாமாயையின்றிறலன்போலுமா,லளியனோநுங்களுக்கவனென்பார்சிலர்.

மன்னவனெதிருறவந்துளான்றனை, யன்னவன்பணியினாலடுவதல்லதை
முன்னுறவதனையாமுன்னுவோமெனிற், பின்னதுபிழையெனப்பேசுவார்சிலர். ()

யாரிதைய றிருவரினையணிவ்விடைச், சூருறவுன் னியே துன் னினன்கொலோ
சேரலர்பக்கமாய்ச்சேர்ந்துளான்கொலோ,வோருதுமேலெனவுரைசெய்வார்சிலர்.

கடுந்தகர்முகத்தவள்கையொன்றற்றநாட், டடிந்தனன்காவலோர்தம்மைமன்
னவன், றெடுங்கழலிவன்வருஞ்சூழ்ச்சிநோக்கியின், றடும்பலர்தம்மையென்றச்சு
ற்றார்சிலர். (௭௧)

வாசவன்முதலினோர்மருளத்தொல்லைநாட்,டேசுறும்விஞ்சையர்வடிவிற்சேர்வுறீஇ
யாசிலோர்புன்னிறுத்தாளை காட்டிய, வீசனேயிங்கிவனென்கின்றார்சிலர். (௭௨)

ஆயதோர்காசிபனூதிதங்கள்பாற், சேயனுய்வந்தொருசிந்தன்போன்றுலாய்த்
தூயவான்புவியெலாமளப்பச்சூழ்ந்திடு, மாயனேயிவனெனமதிக்கின்றார்சிலர். ()

விண்டொடுகுளினைவிளம்பிவிண்புவி, யுண்டொருகணந்தனிலுக்கிகாட்டிய
புண்டரிகத்தனேபுணர்ப்பினிவ்வுருக், கொண்டனனெனக்கூறுவார்சிலர். (௭௬)

மூவருளாகுமோமுடிவின்மாதிரத், தேவருளாகுமோசேணில்வைகிய
தாவருமுனிவரர்தம்முளாகுமோ, வேவருளாகுமோவிவனென்பாசிலர். (௭௭)

மாலைதாழ்மார்புடைமன்னற்கின்னமு, மாலமார்கண்டனேயருளினின்னதோர்
கோலமாய்வரந்தரக்குறுகினன்கொலோ,மேலியாமுணருதும்விலையென்பார்சிலர்

காற்றுடனங்கியுங்கடுங்கட்காலனுங், கூற்றனுமோருருக்கொண்டுவைகிய
தோற்றமிதன்றியிச்சூரன்முன்வரு, மாற்றலர்யாரெனவறைகின்றார்சிலர். (௭௯)

குன்றமுமவுணனுங்குலைந்துபாடுற, வொன்றொருவேலினையொருவனுய்த்தன
னென்றனரன்னவனீண்டுமன்னன்முன்,சென்றனனோவெனச்செப்புவார்சிலர்.()

செற்றியபன்மணிச்செம்பொன்மன்றமு, முற்றிடுமவுணருமொளிறுவான்கதிர்
மற்றிவனணிகளின்றவிசின்வாள்பட, வற்றதுபகற்சுடராயென்பார்சிலர். (௮௧)

இருந்திடுமவுணர்கள்யாருமித்திறம், வருந்திறநினைகிலர்மறந்துமிவ்விடை [லர்.
தெரிந்திடினிங்கிதுதிறல்கொண்மன்னனே,புரிந்திடுமாயையின்புணர்ப்பென்பார்சி

னென்னலினிறந்துயிர்நீத்ததாரகன்,முன்னுறுதன்னுருமுடியவிப்பக[கின்றார்சிலர்.
வின்னதோர்பொன்னுருவெடுத்துமுன்னைபாற், றுன்னினன்கொல்லெனச்சொல்

வேறு.

சங்கமேவினரினையனவளப்பிலசாற்ற
வங்கணோரரிமான்றவிசிருக்கையிலவுணன்
றுங்கமெத்துணையத்துணைச்சிறப்பொடுதோன்றிச்
செங்கைவேலவற்புகழ்ந்துவீற்றிருந்தனன்றிறலோன். (௮௪)

அறிவர்மேலவன்றவிசில்வீற்றிருத்தலுமவுணர்க்
கிறைவனுங்கதுநோக்கியேயெயிற்றணிகறித்துக்
கறுவியேநகைத்துரப்பிமெய்வியர்ப்பெழக்கண்கள்
பொறிசொரிந்திடப்புகையுமிழ்ந்தினையனபுகல்வான். (௮௫)

சுற்றநீங்கியேயிலையுண்டுவிலங்கெனச்சுழன்று
வற்றன்மாமரக்காட்டகத்திருந்துடல்வருத்துஞ்
சிற்றுணர்ச்சியோர்வல்லசித்தியல்பிதுசிறியோய்
கற்றுளாய்கொலாங்காட்டினைநமதுமுன்காண. (௮௬)

துன்றுவார்ச்சடையோயினெருரல்லதுதொலைக்கு
பின்றுதேவரும்வல்லரிச்சிறுதொழில்பெரிது
மொன்றுமன்னதையிவ்விடைக்காட்டலருன்போ
னன்றுநன்றுநீநம்முனர்க்காட்டியநடனம். (அஎ)

சித்தராயினோர்செங்கண்மான்முதலியதேவ
ரித்திறத்தனகாட்டுதற்கஞ்சுவரென்முன்
றத்தமெல்லையிற்புரிந்திடலல்லதுதமியோய்
பித்தனேகொலாநமக்கிதுகாட்டுதல்பிடித்தாய். (அஅ)

உரைசெயிந்நகர்மகளிருஞ்செய்வருன்முற்றுக்
கருவினுள்ளுறுகுழவியுஞ்செய்திடுங்கருத்தில்
வரைகளுஞ்செயுமாக்களுஞ்செய்யுமற்றதனு
லரியதன்றரோபேதைநீபுரிந்திடுமாடல். (அக)

என்னையெண்ணலையெதிருறவிருந்தனையிதனுன்
மின்னல்வாட்படையுறைகழித்தொய்யெனவீசிச்
சென்னிவீட்டுவனின்செயன்முற்றவுந்தெரிந்து
பின்னரத்தொழில்புரிவனென்றேயுளம்பிடித்தேன். (கூ0)

ஏனூற்றுரெலாம்வழுத்தியவவுணரும்யாமுங்
காணக்காட்டினைநீயறிவிஞ்சையைக்கண்டாம்
பூணித்தாயெனவருமுனக்கித்துணைப்பொழுது
பாணித்தாவியையளித்தனனன்னதுபரிசே. (கூக)

வாசவன்கரந்தோடினன்பிறரிதுமதியார்
கேசவன்னிதுகினைகிலன்மறைகளின்கிழவோ
ஞசிகூறியேதிரிந்திடுமவர்க்கெலாமுதலா
மீசனென்னிடைவருகிலன்யாரைநீயென்றான். (கூஉ)

தீயனித்திறமுரைத்தனகேட்டலுந்திறலோன்
காயமீனெனக்காயமேல்வியர்ப்பெழக்கனன்று
மாயைசெய்துழல்வலியிலார்போலெனைமதித்தா
யாயபுந்தியைவிடுமதிகேளிதென்றறைவான். (கூங)

புரந்தரன்குறையயன்முதலமரர்தம்புன்மை
வருந்தும்வானவர்சிறையெலாநீக்கிமற்றவர்தந்
திருந்துதொல்லிறையுதவுவான்செந்திமாநகர்வந்
திருந்தவாதியம்பண்ணவனடியனேன்யானே. (கூச)

துன்னுதானைகட்கரசராயறுமுகத்தொல்லோன்
பின்னர்வந்துளாரொன்பதோடிலக்கமாம்பெயரா *
லன்னவர்க்குளேயொருவன்யானந்திபாங்கமர்ந்தே
னென்னலார்புகழ்வீரவாகெனும்பெயருள்ளேன். (கூரு)

தாரகப்பெயரிளவலைத்தடவரைதன்னை
யோரிறைக்குமுன்படுத்தவேலறுமுகத்தொருவன்
சூரெனப்படுகின்னிடைத்தமியனைத்தூதாப்
பேரருட்டிறத்துய்த்தனனென்றனன்பெரியோன். (கூசு)

---

ஆல் - அசை.

கொடுத்திடாதவென்கொண்டவனுரைத்தசொற்கொடுங்கோ
ணடத்துமன்னவன்கேட்டதுமாங்கவனம்மேல்
விடுத்தகாரணமென்னையோவிளம்புதியென்ன
வெடுத்துமற்றிலையெம்பிரான்றூதுவனிசைப்பான். (௯௭)

மருத்துவன்றனைச்சசியொடுதூரந்துசேண்வுதிந்த
புரத்தையாரழற்கூட்டியேயனையவன்புதல்வ
னொருத்தனோடுபல்லமரரையுவளகந்தன்னி
லிருத்தினையெனவினவினனறுமுகத்திறைவன். (௯௮)

இந்திராதிபரயன்முதற்பண்ணவர்யாரும்
வந்துவந்துவேண்டிடுதலுமவர்குறைமாற்றப்
புந்திகொண்டுபன்னிருபுயத்தெம்பிரான்புவிக்க
ணந்தமின்றுறைபாரிடத்தானையோடடைந்தான். (௯௯)

தரையினண்ணிநின்னிளவலைவரையொடுதடிந்து
நெருநலேவந்துசெந்தியின்வைகினனினையும்
விரைவின்வந்தடவுன்னினனின்றுநம்மிசையே
யருள்கொடேசிலபுகன்றெனைத்தூண்டினனதுகேள். (௧௦௦)

நிறையுமிந்துவைப்படவராக்கவர்ந்தெனநிகளச்
சிறைபடுத்தியேயமரரைவருத்தினைசெய்யு
மறையொழுக்கமுநீக்கினையுலகமாண்மன்ன
ரறமுமன்றிதுவீரர்தஞ்செய்கையுமன்றால். (௧௦௧)

தாதையாகியோன்காசிபனுங்கவன்றனய
னாதலாலுனக்கமரரைச்சிறைசெய்வதறனோ
வேதமார்க்கமும்பிழைத்தனைசிறுபொருள்விழைந்தாய்
நீதியாலுலகளிப்பதேயரசர்தந்நெறியே. (௧௦௨)

உலத்தின்மாண்டதோட்சலந்தரனந்தகனொருங்கே
கலத்தலில்லதோர்புர * த்தவராதியோர்கடவுட்
குலத்தைவாட்டலினிமைப்பினில்வீந்தனர்கொடியோய்
நிலத்தினும்பரைவருத்துதலழகிதோநினக்கே. (௧௦௩)

மெய்மைநீங்கியேகொலைகளவியன்றுமேலுள்ள
செம்மையாளரைச்சீறியேயணங்குசெய்தீயோர்
தம்மிலாற்றரும்பழிசுமந்தொல்லையிற்றமரோ
டிம்மைவீவெரெழுமையுந்துயரினூடிருப்பார். (௧௦௪)

இங்ஙனந்திருநீங்கியேதுயருழந்திறப்ப
ரங்ஙனம்பெரிதாரிருண்மூழ்குவரதற்பி
னுங்ஙனம்பிறந்தயருவரென்றமீதுலவா
ரெங்ஙனுய்வரோபிறர்தமக்கல்லல்செய்திடுவோர். (௧௦௫)

தீதுநல்லனவாயிருதிறத்தவுந்தெரிந்தே
யேதிலார்க்கவைசெய்வரேற்றமக்குடனெய்தும்
பேதைநீரையாயமரரைச்சிறைசெய்தபிழையான்
மாதுயர்ப்படலன்றியேயிறுதியும்வருமால். (௧௦௬)

* ஒருங்கேகலத்தலில்லதோர்புரம் என்பதற்கு நிலையின்றிப் பறந்துதிரியும் புரம் எனப் பொருள்கொள்க.

காண்டியென்கடிமுறைகடந்துமைந்தனே, யீண்டுயிர்வவ்வியேயிறைவனூர்புகா
மீண்டிகேள்வணிவீரந்தன்னொடே, மாண்டிடவருவன்வன்மையாலென்றான்.

என்றிவைவிளம்பியேயாளிமாமுகன், குன்றெனவெழுந்தொருகொற்றவாள்கொளீஇ, நின்றசில்படையொடுநேர்ந்துவீரன்முன், சென்றனனினையனசெப்பன்மேயினான். (௨அ)

நங்கடன்முறையினைநடாத்துமைந்தனே, யிங்கடல்செய்தனையினையகாப்பொரீஇ
யங்கடற்போந்தனையுழிவுசெய்தனை, வெங்கடல்கடந்தனைமீடியேகொலாம். (௨௯)

ஒல்லொலியளக்கரையுகண்டுநிற்கினிச், செல்லுதலரிதியான்செருவினேர்ந்தனன்
கொல்லுவன்பெருவயங்கொள்வனீயிவண், வல்லதுபுரிமதிமதியிலாயென்றான். ()

சொற்றதுகேட்டலுந்துழனிப்பேரொலி,யுற்றெரிகனலெனவுயிர்ப்புமூரலுஞ், செற்றமுமெய்தியேதுளக்கிச்சென்னியைக், கொற்றமொய்ம்புடையதோர்குரிசில்கூறுவான். (௩௧)

ஒருதலையுடையவென்னுயர்வுமாயிரந், தருதலையுடையநின்றாழ்வும்யாமிவட்
பொருதலையிழைத்திடும்போதுகாண்புறுங், கருதலைபெருவடிவமைந்தகாட்சியே.()

தீயவவிம்மொழிதிண்ணன்திண்ணமுன், மாயிரும்புழைக்கையின்மாமுகங்களோ
ராயிரந்தன்னையுமறுத்துவீட்டியே, நாயினங்கவரியநல்குவேனென்றான். (௩௩)

கருணைகொணந்தியங்கணத்தனிவவகை, யுரைதருமெல்லையினுததிமேருமால்
வரையினைவிழுங்கியவனந்ததேயென, விரைவொடுபடைஞர்கள்வீரற்சுற்றினர்.()

சுற்றியதானையர்தோன்றன்மீதுதாம், பற்றியபடைக்கலம்பலவுந்தூண்டியே[னான்.
செற்றமொடமர்வினைசெய்யச்சூறைபோன்,மற்றவர்சூழலுள்வாள்கொண்டெய்தி

துண்டமுமகலமுந்தோளுந்தாளுமொண், கண்டமுஞ்சென்னியுங்கரமுமானவை
விண்டுவிண்டழிவுறவெய்யதானவர், தண்டமதனைத்தையுந்தடிந்திட்டானரோ. ()

வேறு.

அறுகுமாமுகத்தண்ணலாற்றவுங், கறுவுபெற்றிடுங்கருத்தின்வீரனைக்
குறுகியாயிரங்கொண்டகைகளா, லிறுதியூழிநாளிடியினெற்றினான். (௩எ)

அடித்தகைகளையங்கையொன்றினாற், பிடித்துமேலவன்பெருங்கைவாளினா
லுடைத்தசோரிநீருகுத்துவீழ்ந்திறை, துடித்திடும்படிதுண்டமாக்கினான். (௩அ)

ஆயிரங்கரமறலுமற்றுள், வாயிரங்கரமவைகணீட்டியே
யாயிரங்கிரியவைபறித்தன, னாயிரகணனுடல்கொண்டுளான். (௩௯)

பறித்தவாயிரம்பருப்பதத்தையுங், கறுத்துவீரன்மேற்கடிதுவீசலு
மிறத்தல்கொண்டுமெய்யெங்குமெய்தியே, புறததுவீழ்ந்தனவுடைந்துபூழியாய். ()

பொற்றையாவையும்பூழியாகியே, யற்றகாலையிலையன்றூதுவன்
மற்றையாயிரம்வான்கரத்தையுங், கொற்றவாள்கொடேகுறைத்துவீட்டினான். ()

இழைக்குமெல்லையினெய்துங்கூற்றினை, யழைக்குமாறெனவார்த்துத்தானவன், றழைக்குமொய்ம்பினூன்றன்னைப்பற்றுவான், புழைக்கைமுற்றவும்பொள்ளென்றுய்த்தனன். (௪௨)

உய்த்தகாலையினொருதன்வாளினா, லெய்த்தவன்மைசேர்யாளிமாமுகன்
பத்துநூறெனப்பட்டசென்னியுங், கொத்தொடேவிழக்குறைத்திட்டானரோ. ()

யாளிமுகன்வதைப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௪எ.

# வீரவாகுமீட்சிப்படலம்.



இன்னபான்மையால்யாளிமாமுகன், றன்னையட்டபின்றன்கைவாளினைப்
பொன்னுலாவுறைபுகுத்திச்சென்றனன், மின்னுசெஞ்சுடர்மேனிவீரனே. (க)

இந்திரத்திருவிலங்கைநீங்கியே, யந்திரைக்கடலழுவம்வாவியே
கந்தமாதனங்கவின்றவேலைசேர், செந்திமாநகர்சென்றுபுக்கனன். (உ)

புக்ககாலையிற்பொருவிலாற்றலான், மிக்கசேவகன்மேவல்காணுறாத
தொக்கபாரிடஞ்சோமற்காணுறு, மைக்கருங்கடன்மானவார்த்தவே. (ங)

பாரிடத்தொகைபரிக்கும்ன்னவர், சேரவந்துதஞ்செங்கைகூப்பியே
வீரவாகுவைமெய்யுறத்தழீஇ, யார்வமெய்தினரன்புகூறினர். (ச)

தழுவுவோர்தமைத்தானும்புல்லியே, யிழிஞர்தம்பதிக்கேகும்வெம்பவ
மொழிவதாயினனுமைக்கண்டேயென, முழுவலன்பினன்முகமன்கூறினன். (ரு)

விலக்கில்வன்மைகொள்வீரவாகுவை, யிலக்கத்தெண்மருமெதிர்ந்துமற்றவன்
மலர்க்கருங்கழல்வணங்கிக்கைதொழ, வலக்கணீங்குமாறனையர்ப்புல்லினன. (சா)

அமைவில்பாரிடத்தனிகவேந்தருந், தமர்களாயினோர்தாமுஞ்சூழ்வர
விமலனாகியேவீற்றிருந்திடுங், குமரநாயகன்கோயின்மேயினன். (எ)

விண்டுவானுளோர்விரிஞ்சன்மாதவர், கொண்டனூர்பவன்குழுமிப்பாங்குற
வண்டர்நாயகனமருந்தன்மையைக், கண்டுமுந்துகண்களிப்பின்மேயினன். (அ)

உள்ளமென்புடனுருகத்தூயநீர், வெள்ளங்கண்ணுறவிதிர்ப்புமேவரப்
பொள்ளெனப்புரம்பொடிப்பச்சூரடும், வள்ளல்சேவடிவணங்கினனரோ. (கூ)

அணங்குசால்வுறுமந்தண்சேவடி, வணங்கிமும்முறைமகிழ்ச்சியன்பினை
யிணங்கவஞ்சலித்தேத்திநிற்றலுங், குணங்கண்மேற்படுங்குமரன்கூறுவான். (க0)

சுரரைவாட்டுறுஞ்சூரன்முன்புபோய், விரைவினம்மொழிவிளம்பமற்றவ
னுரைசெய்திட்டதுமொல்லைமீண்டது, மரபினிவவிடைவருகதியாவென்றான். ()

வீரன்கூறுவான்விமலநின்மொழி, சூரன்முன்புபோய்ச்சொல்லவிண்ணுளோ
ராரிருஞ்சிறையதனைவீடலே, காரியம்மெனக்கருத்திற்கொண்டிலன். (கஉ)

கெடலருஞ்சுரர்கிளையைவெஞ்சிறை, விடுகிலேனெனவெகுண்டுகூறினா
னடிகளன்னதாலாண்டுநீங்கியே, கடிதுவந்தனன்கருமமீதென்றான். (கங)

என்றகாலையின்யாண்டுமாகியே, நின்றுமுற்றெருங்குணர்ந்தநீர்மையா
னுன்றன்செய்கையுளொன்றுஞ்சொற்றிலை, நன்றுமற்றதுநவிறியாவென்றான். ()

தொடக்கமுற்றுவாழ்சூரன்மாநக, ரடுத்தகாலையினகன்றவேலையிற்
றடுத்துளோரைநின்சரணவன்மையாற், படுத்துவந்தனன்பான்மையீதென்றான்.()

அருந்திறற்புயனனையசெப்பலு, மிருந்தகந்தவேளிகலினோர்களாவ்
வருந்தினுய்கொலோமன்றவென்றுதன், றிருந்துபோருள்செய்தன்மேயினன். ()

அங்கவ்வெல்லையினுயிரம்பெயர்ச், செங்கண்மாயவன்றிசைமுகத்தவன்
மங்குன்மேலவன்வதனநோக்கியே, யெங்களையகனினையகூறுவான். (கள)

தேவரைச்செயுஞ்சிறைவிடுத்துநீ, மேவுநன்கெனுவெய்யசூரனுக்
கேவுதூதைவிட்டியம்புவித்தனம், பாவியன்னதுபயனென்றுன்னலான். (௧௮)

வீதலேயவன்விதியதாதலிற், றீதில்விண்ணவர்சிறைவிடோமென
வோதினுனவனுயர்வுநீக்குவான், போதுநாளியாமெனப்புகன்றனன். (௧௯)

ஆறுமாமுகத்தையனிவ்வகை, கூறக்கேட்டுளோர்கொடியசூர்மிசைச்
சேறுமென்றசொற்றெளிவினந்துயர், மாறிற்றென்றனர்மகிழ்ச்சியெய்தினர். (௨௦)

ஆனவத்துணையாடன்மொய்ம்பினன், ஞானவப்பதிச்சயந்தனுற்றது
மேனைச்செய்கையுமெடுத்துக்கூறியே, வானவர்க்கிறைமனத்தைத்தேற்றினன். ()

சீருலாமகேந்திரபுரத்தினும், வீரவாகுமீண்டதுவிளம்பினு
மாரனுர்க்கடலலைப்பவாண்டுறுஞ், சூரனுற்றதும்பிறவுஞ்சொல்லுவாம். (௨௨)

வீரவாகுமீட்சிப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௧௧௧.

# சூரனகர்புரிபடலம்.

ஊகவான்படையுலப்பவச்சிர, வாகுமாண்டதும்வாகைமொய்ம்பினு
னேகுந்தன்மையுமேவற்றூதுவர், சோகமோடுபோய்ச்சூர்முன்கூறினர். (௧)

ஈரைஞ்சென்னிசேரிளையகான்முளை, வீரஞ்சிந்தியேவிளிந்தவாற்றினைச்
சூரன்கேட்டலுந்துளங்கித்துன்பெனும், வாரியுள்ளுறமயங்கிவீழ்ந்தனன். (௨)

வேறு.

கண்ணிடைநெடும்புனல்காலமைந்தன்மே, லுண்ணிகழன்புசென்றுயிரையீர்ந்திடத், துண்ணெனவுயிர்ப்பெனும்புகையுஞ்சுற்றிட, வெண்ணருஞ்செல்லல்கொண்டிரங்கியேங்கினன். (௩)

ஏங்கினன்புலம்பலுமினையவெய்யசூர், பாங்கமர்தமர்களும்பரிசனத்தருந்
தீங்குசெயரக்கருந்தெரிவைமார்களு, நீங்கறவழுதனர்நெடுங்கணீருக. (௪)

பழிதவிர்கற்புடைப்பதுமைதன்மக,னொழிவுறுதன்மையையோர்ந்துமாமலர்க்,குழ
லவிழ்ந்தலமரக்கொங்கைமேற்புடைத்,தழுதனள்வீழ்ந்தனண்மறிக்குமங்கையாள்

தொல்லியலிழுக்கியசூரனென்பவன், புல்லியபின்முறைப்புணர்வின்மாதருஞ்
சில்லியற்கூந்தலுழ்சேடிமார்களு, மெல்லவருந்தழீஇரங்கன்மேயினர். (௬)

களமெழுமிசையொலிகடிநல்யாழொலி, துளையொலிவயிரொலிதூரியத்தொலி
யளமருமொழியொலியடங்கியப்பெரு, வளநகர்புலம்பொலிமயங்கிற்றென்பவே.()

அன்னதுபோழ்தினிலறத்தைக்காய்தரு, துன்னெறிமந்திரிசூரபன்மனு
மன்னவன்முன்னுறவந்துகைதொழு,தின்னனகேண்மெனவிசைத்தன்மேயினன்.

மெய்ப்புவியண்டங்கள்பரித்தமேன்மையை, யொப்பருந்திருவினையுலப்பிலாயுளை
செப்பருந்திறலினைசிறந்தசீர்த்தியை, யிப்பரிசழுங்குதலியற்கையாகுமோ. (௯)

தெண்டிரைநேமிவான்செறிந்துகொள்ளினு, மண்டமதழியினுமனைத்துமாயினும்
விண்டிடலின்றிவாழ்வீரநீமனங், கொண்டிடுதிண்மையுங்குன்றற்பாலதோ. (௧௦)

ஏவருவியத்தருமிறைவநீயிவ, ணோவெனவரற்றியேயுயங்குற்றுயெனின்
மூவருநகைப்பர்கண்முன்னமேவல்செய், தேவருநகைப்பர்கள்புகழுந்தேயுமால். ()

பூதர்தம்படையலபுராரிகல்கிய, காதலனையலகழறவிட்டதோர்
தூதுவன்செய்தபுன்றொழிலுக்காற்றலை, பேதுறலாகுமோபெருமைக்கீறிலாய். ()

தந்தையர்துஞ்சினுந்தம்முன்பின்னவர், மைந்தர்கடுஞ்சினுமற்றுஞ்சார்ந்தவர், தந்தொகைதுஞ்சினுஞ்சயத்தின்மேலையோர், சிந்தைகொள்வன்மையிற்சிறிதுந்தேயுமோ. (கங)

மேதகுபெருந்திறல்வீரர்தம்மையு, மாதருமவெல்வரான்மாயுமூழ்வரி
னாதலினின்மகற்காயுள்குன்றலிற், றாதனுமட்டனனாகிதோன்றினன். (கச)

வெவ்வியவொன்னலர்வினையும்வன்மையுங், கைவருநெல்லியங்கனியினுடியே
செய்வகைதேற்றினஞ்செய்கலாதிவ,ணைவதுமாண்மையினலத்திற்காகுமோ.(கரு)

வரங்களுமதுகையும்வரமபின்றெய்தியே, யுரங்கிளர்சூரனென்றொருபேர்பெற்றநீ
தரங்கமதடைவதுந்தலைமைக்கேற்பதோ, விரங்கலையிரங்கலையெனறுதேற்றினன்.

மேற்றிகழறதினைவெகுளுநாமத்தான், றேற்றலுமவுணாகோன்றெளிவுபெற்றெழீஇ, யாற்றருந்துயரினையடக்கித்தன்பணிக், கூற்றியவுழையரைநோக்கிக்கூறுவான். (கஎ)

சேயுயிர்வெளவியேசிறந்தவிங்கர், மாய்வதுபுணாத்திடுவெவியதூதுவன்
போயதுதெரிந்திரோபுகலக்கேட்டிரோ,நீயிர்கள்வாய்மையைநிகழ்த்துமென்னவே.

துப்புடனிவவழிதூதிற்சென்றுளா, னிப்புரமகன்றனனிலங்கைநோக்குறு
வப்புறமேகினனதனைக்கண்டன, மெய்ப்பரிசிஃதெனவிளம்பினரரோ. (கக)

வேறு.

அம்மொழிவினவலோடுமவுணர்கோன்றன்பானின்ற
கம்மியர்தம்மைநோக்கிக்கடிதுபோயகிலநல்கிச்
செம்மலர்மிசையேவைகுந்திசைமுகதொருவன்றன்னை
யிம்மெனக்கொணர்திரென்னவனையவரிசைக்கலுற்றார். (உ0)

ஈங்கிதுகேட்டிமன்னவினையமூதண்டநல்குந்
தேங்கமழ்பதுமத்தண்ணறேவர்கோனுதியான
பாங்கினரோடுமேவிப்படையொடுமபுவியில்வந்த
காங்கெயன்றன்கணுற்றானென்பராற்கண்டோரென்றார். (உக)

தொழுவர்களினையமாற்றஞ்சொற்றலுஞ்சூரன்கேளா
விழுமிதுவிழுமிதென்னுவெய்துயிர்ப்பெய்திச்சீறி
யழலெழநகைத்துமற்றையண்டத்தினிருந்துநல்குஞ்
செழுமலரயனைப்பற்றிச்செல்லுமின்வல்லையென்றான். (உஉ)

கொற்றவனினையமாற்றங்கூறலுமுழையர்கேளா
விற்றிதுசெய்துமென்னுவிசைவுகொண்டொல்லையேகி
மற்றையண்டத்திற்சென்றுவானவர்முதுவன்றன்னைப்
பற்றினர்கொணர்ந்தார்தங்கோன்பணித்திடுபரிசுகூறி. (உரு)

பரிசனர்பலருமீண்டிப்பாரபுகழ்சூரனென்னு
மரசன்முற்கொணர்ந்துவேறோரண்டதகினயனையுய்ப்ப
வரிசையாலவனைநோக்கிமாணழிவுற்றமற்றித்
திருநகரதனைதொன்மைபோலவேசெய்தியென்றான். (உச)

சூரன்மற்றிதனைச்செப்பச்சொற்பணிதலைக்கொண்டைய
வோரிறையொடுங்குமுன்னருனதுதொன்னகரமாற்ற
வேருறமுன்னமேபோலியற்றுவன்யானேயென்னுப்
பேருலகுதவுகின்றபெற்றியைநினைந்துசெய்வான். (௨௫)

பொன்மதின்மாடவீதிபொலன்மணிச்சிகரம்வேர
மன்மதன்விழைவுஞ்சோலைமண்டபம்வாவிபொய்கை
சென்மலியரங்கமன்றந்தெற்றியேமுதலவெல்லாந்
தொன்மைபோலாகத்தன்கைத்தொழின்முறைபடைத்தான்மன்னே. ()

இவ்வகைநகரமுற்றுமெழில்பெறப்படைத்தபின்றை
மைவரைமேனிமன்னன்மாபெருங்கோயிறன்னைச்
செவ்விதின்முதுமைபோலச்சிறப்பினுற்றிருத்தல்செய்தா
னைவகையிருபான்கொண்டவல்லியங்கமலத்தண்ணல். (௨௭)

கொன்பெருநகருமந்தண்கோயிலும்படைத்தலோடு
மன்பெருந்தகையசூரன்மற்றவன்செய்கைநோக்கி
யன்புசெய்துவகையாகியவுணர்கள்யாரும்போற்ற
முன்புபோலரிமானேற்றுமுழுமணித்தவிசினுற்றான். (௨௮)

உற்றனனுகப்பின்னரோதிமத்திறையைநோக்கி
மற்றுநின்னண்டஞ்சென்றுவைகுதிநல்கியென்னுச்
சொற்றனனவன்முன்னென்றுண்ணெனவிடைபெற்றேகிப்
பெற்றதன்னண்டஞ்சென்றுபிறங்குதன்னுலகம்புக்கான். (௨௯)

சூரனகர்புரிபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௧௮.

# சூரனமைச்சியற்படலம்.



அந்தநல்லமையந்தன்னினவுணாகோனைவல்போற்றி
முந்துசெல்லொற்றராணோர்முரிநீர்க்கடலைவாவிச்
செந்தியிற்சென்றுகந்தன்சேனையும்பிறவுந்தோந்து
வந்தனர்விரைவினங்கண்மன்னனைவணங்கிச்சொல்வார். (௧)

ஏற்றவெம்பூதவெள்ளமிராயிரம்படையின்வேந்தர்
நூற்றுடனெண்மர்பின்னுநுவலருஞ்சிறப்பின்மிக்கோர்
மேற்றிகழிலக்கத்தொன்பான்வீரர்மற்றிளையரோடுந்
தோற்றமில்பரமன்மைந்தன்றொடுகடலுலகின்வந்தான். (௨)

* சரதமீதவுணர்கோவேதாரகவீரன்றன்னைக்
கரையறுமாயைபோற்றுங்காமருபிறங்கறன்னை
யிருபிளவாகவேலாலெறிந்தனனீறுசெய்து
திரைபொருமளக்கர்வேலைச்செந்திமாநகரினுற்றான். (௩)

விலங்கியகதிர்வேலண்ணல்விரைந்திவண்மேவுமாற்று
னுலங்கிளர்மொய்ம்பிற்றூதனொருவனைவிடுத்தானன்னு
னிலங்கையையழித்துவந்தான்யாளிமாமுகவன்றன்னை
வலங்கையின்வாளாற்செற்றுவாரிதிகடந்துபோனுன். (௪)

செங்கதிரயில்வேன்மைந்தன்றெண்டிரைப்புணரிவாவிப்
பொங்குவெங்கணங்களோடும்போர்ப்படைவீரரோடு
மிங்குவந்தாடல்செய்வானெண்ணினனிருந்தானீது
சங்கையென்றுன்னல்வாய்மைதருவனவுணர்தியென்றார். (௫)

ஒற்றர்சொல்வினவிமன்னனொருதனியிளவறன்னை
யற்றமில்கேள்விசான்றவமைச்சரைமைந்தர்தம்மைச்
சுற்றமொடமைந்ததானைத்தொல்பெருந்தலைமையோரை
மற்றொருகணத்தின்முன்னர்மரபொடுகொணருவித்தான். (௬)

வேறு.

ஆங்கவர்யாவருமவுணர்மன்னவன், பூங்கழல்கைதொழுஉப்புடையின்வைகலுந்
தீங்கனல்சுடுவதோர்சீற்றமுள்ளெழ, வீங்கியவுயிர்ப்பினன்விளம்பன்மேயினான்.()

போற்றலராகியபுலவர்யாரையு, மாற்றருஞ்சிறையில்யான்வைத்தபான்மையைத்
தேறறியமகபதிசென்றுசென்னிமே, லாற்றினைவைத்திடுமமலற்கோதினான். (௮)

கண்ணுதலுடையதோர்கடவுள்வல்லையோ,ரண்ணலங்குமரனையளித்துமைந்தநீ,வி
ண்ணவர்சிறையினைவீட்டிச்செலகெனத,துண்ணெனநம்மிசைத்தூண்டினானரோ.

வாய்த்திடுகயிலைமால்வரையைவைகலுங், காத்திடுநந்திதன்கணத்துவீரரு
மீத்தகுபூதரும்விரவமாலய, னேத்திடவரன்மகனிமபரெயதினான். (௧௦)

பாரிடையுற்றுளான்பாணிகொண்டதோர், கூருடைவேலினாற்கொடியகுன்றொடு
தாரகவிளவலைதடிந்துபின்னுற, வாரிதியகன்கரைவந்துவைகினான். (௧௧)

அன்னதோராறுமுகனுங்கோர்தூதனை, யென்னிடைவிடுத்தலுமேகிமற்றவன், மைந்நிறநெடுங்கடல்வரைப்பிற்பாய்ந்தொராய்ப், பொன்னவிரிலங்கைமாபுரத்தை வீட்டினான். (௧௨)

இலங்கையங்காவலுமிகப்புற்றினனதோர், பொலங்கெழுதிருநகர்நடுவட்புக் குலாய், நலங்கிளரென்னவைக்களத்தினண்ணினான், கலங்கலனிலறயதுமாயைக் கற்பினான். (௧௩)

நண்ணினனெதிருறநவையில்வீரர்போல், விண்ணவர்பாங்கராச்சிலவிளம்பி யென், கண்முனஞ்சிலருயிர்களைந்துவனமையா, லெண்ணலனபின்னுறவெழுந்து போயினான். (௧௪)

போயவனிந்நகர்பொடித்துச்சிந்தியா, னேயினவேயினபடைஞர்யாரையு
மாயுறுவித்தனன்மற்றுமென்னிளஞ், சேயுயிர்கொண்டனன்செருக்குநீங்கலான்.()

அழிந்ததித்திருநகரளப்பிலானைகள், கழிந்தனசெறிந்ததுகளேபரத்தொகை
கிழிந்ததுபாரகஙகெழீஇயசோரியா, லொழிந்ததென்றுணையுமுயாவுந்தீர்ந்ததால்.()

ஓற்றெனவந்தவவொருவன்றன்னையும, பற்றிவெஞ்சிறையிடைப்படுத்தி னேனலேன், செற்றிலனூறதேயெனினுஞ்செய்திலே, னெற்றினிவசையுரைககீ றுகூறுகேன். (௧௭)

இம்பரினிவையெலாமிழைதத்தூதுவ, னமபதியிகந்துபோயிலங்கைநண்ணிய
மொய்மபுடையாளிமாமுகவற்சாடியே, யம்புதிகடந்தனனவனியெய்தினான். ()

கார்பொருமிடற்றவன்காதன்மாமகன், வாரிதிகடந்திவண்வந்துநம்மொடும்
போர்பொரநினைகுவானபோலுமிவவெலாஞ்,சாரணர்மொழிந்தனாசரதமாகுமால்

நெற்றியிலணிகமாய்நின்றபூதரைச்,செற்றிகல்வீரரைச்செகுத்துச்சேயினை,வெற்றி
கொண்டேனையர்தமையும்வீட்டியே, மறனொருவிகலைமுன்வரவல்லேனியான். ()

சூரனென்றொருபெயர்படைத்ததொல்லையேன், பாரிடர்தம்மொடும்பாலன் றன்னொடும், போரிணையிழைத்தடல்புரிந்துவெல்லினும், வீரமதன்றெனுவறிதுமே வினேன். (௨௧)

துய்த்திடுந்திருவினில்வலியிற்சூழ்ச்சியி,லெத்துணைப்பெரியர்தாமெனினுமே லையோர், கைத்தொருவினைசெயக்கருதிற்றம்முடை, மெய்த்துணையோரைமுன்வி னவிச்செய்வரால். (௨௨)

ஆதலின்வினவினன்யானுமாற்றுத, லீதெனவுரைததிராலென்றுமன்னவ
னோதினனன்னதையுணர்ந்துகைதொழூஉ, மேதியமபெயரினனிவைவிளம்பினன்

மேலுயர்மாயைகள்விளைக்கும்வெற்பினை,மாலினைவென்றநின்வலியதம்பியை, யேலவொர்கணத்தின்முன்னெறிந்தவீரனைப், பாலனென்றுரைப்பதுமுணர்வின் பாலதோ. (௨௪)

மேதகுதாரகவீரன்றனையை, யாதிபர்தம்முடனட்டதீரரை
யேதுமோர்வலியிலாவெளியரென்பதும,பூதரென்றிகழ்வதும்புலமைப்பாலவோ

மீதெழுதிரைக்கடல்விரைவிற்பாய்ந்தும, மூதெயில்வளநகர்முடித்துநின்னுடைக்
காதலனுயிரையுங்கவர்ந்தகள்வனைத்,தூதனென்றுரைப்பதுமறிஞர்சூழ்ச்சியோ.()

கற்றையஞ்சிறையுடைக்கலுழனூர்தரு, கொற்றவன்றிசைமுகனமரர்கோமகன்
மற்றொருவடிவமாய்வந்ததேயலா, லொற்றுவனிலைமைவேறுணரற்பாலதோ. ()

உன்றனியிளவலுமொருநின்னோங்கலும், பொன்றியகாலையேபுராரிமைந்தன்மேற்
சென்றிலையல்லதுனசேனைதூணடியும, வென்றிலைதாழ்ததிவண்வறிதுமேவினாய்.

தீயழல்வறியதேயெனினுஞ்சீரியோ, ரேயிதுசிறிதெனவெள்ளற்பாலரோ
வாயதனாற்றலையடக்கலாரெனின், மாயிரும்புவியெலாமிறையினமாய்க்குமால். ()

மாற்றலர்சூழ்ச்சியதெனினுமாறதாய், வீற்றொருநிலைமையதெனினுமேவுமுன்,னே
ற்றெதிர்காபபரேயெனனினன்னவாக்,காறறருமிடுக்கண்வந்தடைதற்பாலதோ.()

துறந்திடாவளர்ந்தனைத்துய்த்துச்செய்வகை, மறந்தனமாகியேவன்மையாளரை
யெறிநதவர்தமையிகழ்ந்திங்ஙனவாழ்துமேற், சிறந்தவர்யாமலாலேலவர்சீரியோய்.()

முன்னமக்குமரன்மேன்முனிந்துசேறியே,லுன்னகர்க்கேகுமோவொற்றுமற்றுநீ
யனனதுபுரிகிலையாடனமைந்தனோ,டிந்நகரழிந்ததென்றிரஙகறபாலையோ. (௩௨)

மொய்யுடைநின்மகன்முடிந்ததனமையு, மையநின்றிருநகரழிவதானதுஞ்
செய்யுறுநிலைமைகடெரிந்துசெய்திடா, மையலின்கீழ்மையால்வந்தவாகுமால். ()

கழிந்திடுபிழையினைக்கருதிச்சாலவுள், ளழிந்திடலியற்கையன்றறிஞர்க்காத லா, லொழிந்தனபோகவொன்றுரைப்பன்கேண்மியா, விழிந்ததென்றுன்னலையி மைப்பிற்செய்திநீ. (௩௪)

ஆயதுபிறவலையவுணாதம்மொடு, மேயினபடையொடும்விரைந்துகண்ணுதற்
சேயினைவளைந்தமர்செய்யப்போதியா, னீயினித்தாழ்க்கலைநெருநல்போலவே. ()

எனறிவைமேதியனிசைப்பக்கேட்டலு, நன்றிதுவாமெனநவினறுகையெறிந்
தொன்றியமுறுவலுமுதிப்பநல்லறங், கொன்றிடுதுர்க்குணனினையகூறுவான். ()

வன்றிறலுவணன்மேல்வந்தமாயன்மே, னின்றிடுமமரர்மேனேர்ந்துபோர்செயச்
சென்றிலையினையராற்றிறலகொணடேகினை, யின்றினிப்பாலனமேலேகலாகுமோ.

இறுதியிலாயுளுமிலக்குமாழியு, மறுவிலாவெறுக்கையும்வலியும்வீரமும்
பிறவுளதிறங்களுந்தவத்திற்பெற்றனை, சிறுவனோடேயமர்செய்தற்கேகொலாம். ()

மேதகுபசிப்பிணியலைப்பவெம்பலிக், காதல்கொண்டலமருங்கணங்கடம்மை யுக், தூதுவன்றன்னையுந்தொடர்ந்துபோர்செயப், போதியோவமரரைப்புறங்கண் டேற்றுளாய். (௩௯)

இன்றுநின்பெரும்படைக்கிறைவர்யாரையுஞ், சென்றிடவிடுக்குதிசிறிதுபோ ழ்தினிற், குன்றெறிபகைஞனைக்கூளிதம்மொடும, வென்றிவண்மீள்குவர்வினைய மீதென்றான். (௪௦)

கருதிடுதுர்க்குணகயவனின்னன, வுரைதருமுடிவினிலொழிகவிங்கெனுக்
கருமணியாழியங்கையமைத்தரோ,தருமவெம்பகையுடையமைச்சன்சாற்றுவான்.

குலம்படுநவமணிகுயின்றுபொன்புனை,யலம்படைகொண்டுபுன்முதிரையாக்கததா
ற், புலம்படக்கிறுவபோலும்வீரநீ, சிலயபடிமைந்தனோடாடல்செய்வதே. (௪௨)

மேலுயர்கண்ணுதல்விமலனன்றெனி, னலவ * னனறெனியனுமன்றெனிற்
காலனுமன்றெனிற்காவல்வீரநீ, பாலனோடமாசெயிறபயனுண்டாகுமோ. (௪௩)

மன்னிளங்குதலைவாய்மதலைமீதினு,மினனினியமாசெயவிறததியெனனினு,மன்ன
வனினதுபோராற்றல்காணபனேல்,வென்னிடுமெதிர்ந்துபோாவிளைக்கவலலனோ

நேரலர்தங்களைநேர்ந்துளாரெனப், பேரிகலாற்றியேபெரிதுமாய்வதும
பூரியர்கடனலாற்புலமைக்கேறபதோ, சீரியாகடனவைதெரிநதுசெய்வதே. (௪௫)

எரிமுகனிரணியனெனுமுன்மைந்தரி, லொருவனுக்காற்றலரிலக்கததொன்பது
பொருதிறல்வயவரும்பூதர்யாவரு, மரனருள்புரிதருமறுமுகததனும். (௪௬)

கீள்கொடுகங்கொடு † கிள்ளுமொன்றினை, வாள்கொடுதடியுமோவன்மைசானற
தோ,ராள்கொடுமுடிததிடுமவரைவென்றிட, நீள்கொடுமரங்கொடுநீயுஞ்சேறியோ.

மாணிமைகூடுறுமகவுதன்னொடு, மேணறுசாரதரினங்கடம்மொடும்
பூணுதிசெருவெனும்புகற்சிகேட்பரே, ஞணுவூரகமரெலாநகுவர்தேவரும். (௪௮)

பொற்றையைமுடித்தனன்பொருவிறம்பியைச்,செற்றனனெனறிளஞ்சிறுவ ன்றன்னையும், வெற்றிகொள்புதல்வனைவீட்டிறுனெனு, வொறறையுமதித்தனை தொனமையுன்னலாய். (௪௯)

ஆறணிசெஞ்சடையண்ணறநதிடும், பேறுடைவேலினைப்பிள்ளையுய்ததனு
மாறுளபடையினுன்மாற்றலாமையா, லீறதுவாயினனிளவருரகன். (௫௦)

குறுமுனிதொல்லைநாட்கூறும்வாய்மையா, லிறுதியையடைந்ததாங்கிருந்தமால்வ ரை, யறிகிலையீதெலாமாற்றல்கூடுமோ, சிறுவனசெய்கையேசிந்தைகோடியால். ()

எச்ச ‡ மொடழிவுறுவிரதஞ்சாலிகை, கைச்சிலைபெற்றிலன்கருதிநீயவை
யச்சொடுபுரிந்திலையதனிற்றுதனல், வசிரவாகுவாமகனுந்துஞ்சினான். (௫௨)

பலவினிமொழிவதெனபடியிருனவத், தலைவரிலொருவனைவிளித்துத்தானை யோ, டிலையயின்முருகன்மேலேவுவாயெனி, னலைவுசெய்தொல்லையினடல்பெற் றேகுவான். (௫௩)

* ஆலிலையிற்றுயின்றமைபற்றி, விட்டுணுவை ஆலவனெனறார்.
† கீள்கொடுகஙகொடு - என்பதற்குக் கிழிக்கின்ற வளைந்தநகததால் எனப் பொருள்கொள்க. ‡ எசசம - யாகம்.

அன்னதுசெய்கெனவறத்தைச்சீறுவான்,சொன்னதோர்சிறுதியின்முறுவறோன் றிடக், கன்னிகர்மொய்ம்புடைக்காலசித்தெனுங், கொன்னவில்வேலினுனிலை யகூறுவான். (௫௪)

செந்தியினிருந்திடுஞ்சிறுவன்சாரதர், தந்தொகைதன்னொடுமீண்டுசாருமே
லெந்தையொர்சிலவுரையேவலல்லது, மந்திரம்வேண்டுமோமற்றிதற்குமே. (௫௫)

வயந்தனைதயலைவாசவன்றனைச்,சயந்தனைப்பிறர்தமைச்சமரின்வென்றநா,ளியை ந்தெமைவினவலையின்றோர்பாலற்கா,வியன்பெருமந்திரம்வேண்டிற்றுங்கொலோ

அண்டர்களொடுங்கினரரக்கரஞ்சின, ரெண்டிசைக்கிழவருமேவலாற்றுவர்
மண்டமரவுணரின்வலியர்பூதராங், கண்டனமின்றியாங்கலியின்வண்ணமே. (௫௭)

பணிக்குதிதமியனைப்பரமன்மைந்தனைக், கணத்தொகைவீரரைக்காலபாசத் தாற், பிணித்திவண்வருகுவனென்றுபேசலுந், துணுக்கெனச்சண்டனென்றொரு வன்சொல்லுவான். (௫௮)

கழிப்சிறோயடக்கவலும்பூதரு, மழலையம்பிள்ளையுமற்றவற்குறு
தொழில்புரிசிலவருஞ்சூழ்ச்சிப்பாலரோ, வழகிதுமந்திரமவுணர்க்காற்றலே. (௫௯)

கொல்லுவனபூதரைக்குமரன்றன்னையும், வெல்லுவன்பிறரையும்விளிவுசெய் வனுன், மல்லலந்தோளுடைமன்னர்மன்னவுன், சொல்லதின்றென்னவித்துணை யுந்தாழ்த்துளேன். (௬௦)

ஏவுதிதமியனையிமைப்பிற்சென்றியான், மூவர்கள்காப்பினுமுரணிற்றாக்கியே
தூவுறுசாரதத்தொகுதிதன்னொடு, மேவலன்றனையிவண்வென்றுமீள்வனால். ()

எனவிவைசண்டனுங்கிசைததவெல்லையி,னனலியென்றுரைத்திடுமவுணர்கா வலன், சினமொடுமுறுவலுஞ்சிறிதுதோன்றிட, வினையமொடிம்மொழிவிளம்பல் செய்குவான். (௬௨)

தெம்முனைமரபிலோர்சிறுவனென்னினும், வெம்மையொடேற்குமேல்வெகுண்டு
மேற்செலா,தெம்மொடுமந்திரதிருப்பரேயெனி,னம்மவோசூரருக்கழகிதாற்றலே

என்றிதுமொழிதலுமெரியுங்கண்ணின், னொன்றியமுறுவலனுயிர்க்குநாசியன்
கனறியமனதினன்கறித்துமெல்லிதழ், தின்றிடுமெயிற்றினன்சிங்கன்கூறுவான்.

வெந்தொழின்மறவரைவிளிததன்மையு, மந்திரமிருந்ததுமனங்கொள்சூழ்ச்சியு
மிந்திரனுதவிசெய்யிளையன்வன்மையைச், சிந்திடவேகொலாநினைந்தசெய்கையே.

இருநிலவண்டமேலிருந்துளோரெலா, மருவலராகியேவருகவந்திடி,னொருதமியே ன்பொருதுலையச்செய்வனாற், றெரியலைபோலுநின்னடியன்றிண்மையே. (௬௬)

வன்மையையுரைப்பதுமரபன்றுலெலனைச், சென்மெனவிடுக்குதிசேனையோடுபோ யுன்முனிவுற்றிடுமொன்னலாரையட்,டின்மையதாக்கியேவருவனீண்டென்றான்.

இன்னவைபோல்வனவியல்பினேனைய, துன்னெறியமைச்சருஞ்சூழ்ச்சித தொல்படை, மன்னருமிசைததலும்வயங்குசெங்கதி, ரொன்னலன்கையமைத் துரைத்தன்மேயினன். (௬௮)

சென்றிடுமுனிவரர்தியங்கமாயைசெய், குன்றுடனிளவலைக்குமரன்கொன் றிடு, மன்றெனைவிடுத்திலையழுதொன்றோர்ந்திலை, யின்றிதுவினவுவதென்னை யெந்தைநீ. (௬௯)

உள்ளுறுகரவினனொருவனும்பரா, னௌ்ளருமொற்றுவந்தீண்டுபோர்செயின்
முள்ளெயிறின்னமுமுற்றுந்தோனறிலாப், பிள்ளையைவிடுக்குமோபெரியைசாலநீ.

இழித்தகுதூதனுவிடர்ப்பட்டாயெனும், பழித்திறம்பூண்டனைபாலனுவிமை
யொழித்தனைநகரமுமொருங்குசீரற, வழித்தனைநீயுனதறிவிலாமையால். (எக)

பொருளலதொன்றினைப்பொருளெனக்கொடு,வெருவுதல்செய்வதும்வினைய
மோர்கிலா, தொருசெயல்விரைந்துசெய்துயங்கிவாழ்தலும், பெரியவர்கடமையோ
பேதைத்தன்மையே. (எஉ)

பொற்றையொடிளவலைப்பொன்றவீட்டினேன், கொற்றமும்பூதர்தங்குழாத்தி
னாற்றலு, மொற்றுவனிலைமையுமுணரிற்சென்றியான், பற்றிமுன்னுய்க்குவன்பி
ணித்துப்பாசத்தால். (எங)

ஆயிரத்தெட்டெனுமண்டத்துக்கெலா, நாயகமுதல்வகீநம்பனல்கிய
சேயமர்குறித்தெழல்சீரிதன்றெனை,யேயினைவெற்றிகொண்டிருத்தியெம்பிரான்.()

ஆண்டெனைவிடுத்தியேலமரதாற்றிட, மூண்டிடுமெவர்தொகைமுருக்கித்தேவரா
யீண்டுறுவோரையுமிமைப்பில்வென்றபின், மீண்டிடுவேனெனவிளம்பினனரோ.

இரவியம்பகையவனினையசிற்சில, வுரைதருமிறுதியினுலைவுறுததோர்
முரணுறுதாதைதன்முகத்தைநோக்கியே,குரைகழலிரணியன்கூறன்மேயினன். ()

வேறு.

வள்ளற்றன்மைசேர்வயப்பெருஞ்சூரனேர்மழலைப்
பிள்ளைப்போர்வலிக்கிரங்கினனெனுமொழிபிறக்கி
னுள்ளத்தேதகினைநினைக்கினும்வெருவுமொன்னலரு
மெள்ளற்கேதுவாம்விடுத்தியான்மந்திரமினியே. (எஎ)

மைதிகழ்ந்திடுமிடற்றவன்மதலைமாநிலத்தி
னெய்தினனமர்க்கென்றலுமென்றனைவிளித்து
வெய்தெனப்பொரவிடுத்திலைவெறுத்தியோவினையேன்
செய்திடுந்தவறுண்டுகொலுனக்கொருசிறிது. (எஅ)

பானல்போலொளிர்மிடற்றினன்பாலன்மேற்பசிநோய்க்
கூனைவேட்டுழல்பூதர்மேலொழிந்துளார்தம்மேன்
மானவெஞ்சமர்க்கெம்முனேன்சேறலும்வசையே
சேனையோடியானேகுவன்செருத்தொழில்புரிய. (எகூ)

வெற்றிப்பேரமராற்றியேமேவலர்தொகையைச்
செற்றுத்தேவர்கள்யாரையுந்தடிந்துசெல்குவனு
விற்றைக்கங்குலினென்றனையேவுதியெனவு
மற்றைத்தம்பியாமெரிமுகனினையனவகுப்பான். (அ0)

இணையிலாவண்டமாயிரத்தெட்டினுக்கிறைநீ
துணையதாயொருவீரகேசரியுளன்சுதராய்க்
கணிதமில்லவர்யாமுளங்கரிபரிகடுந்தே
ரணிகொடானவப்படையுளவலகிலாதனவே. (அக)

அழிவில்பாகுளதேருளசிலையுளவஃதான்
றொழிவிலாதமரம்புபெய்தூணியுமுளவா
விழிவிறெய்வதப்படைகண்முற்றும்முளவிறைமைத்
தொழினடாத்துறுபரிதியுமொன்றுண்டுதொல்லோய். (அஉ)

அண்டமாயிரத்தெட்டையுங்கன்னலொன்றதனிற்
கண்டுமீடருமிந்திரஞாலமுங்கவனங்
கொண்டதோர்தனிமடங்கலுமுனக்குளகுறிக்கின்
விண்டுமாலுறுமாயைகள்பலவுளமேலோய். (அ௩)

இன்னபான்மைசேர்வெறுக்கைபெற்றீறிலாதுறையு
மன்னர்மன்னநிற்போன்றுளார்யாவரேமலையக்
கன்னிபாலகன்றாதுவன்சிறுதொழில்கருத்தி
னுன்னியுன்னியேயிரங்கவுந்தருவதோவுனக்கே. (அ௪)

குழந்தைவெண்பிறைமிலைச்சினோன்மதலையைக்குறுத்தரீ
ளிழிந்தபூதரைப்பிறர்தமைவென்றிடவெமரில்
விழைந்தமானவரொருவரைவிடுப்பதேயன்றி
யழிந்திரங்கியேவினவுமோவிதுகொலுன்னறிவே. (அ௫)

மூளும்வெஞ்சமர்புரிந்தவென்னிளவல்பன்முடியும்
வாளினாலடுமொற்றனைமற்றுளார்தம்மைக்
கேளொடுந்தடிந்தல்லதுகேடில்சீர்நகர்க்கு
மீள்கலேனெனப்பகர்ந்தனன்வெய்யசூளுரையே. (அ௬)

கரந்தைசூடுவான்குமரனைப்பொருதல்காதலியா
விருந்தவீரர்களளப்பிலராயினுமிப்போர்
விரைந்துநீயெனக்குதவுதியேகுவன்மேனாட்
பொருந்துபாதலத்தரக்கர்மேற்சென்றதேபோல. (அ௭)

வலியதோர்சிலையீறிலாக்கவசம்வான்படைக
ளுலகுதந்தவனளித்திடமுன்புபெற்றுடையேன்
குலமடங்கவாளரக்கரைததடிந்திசைகொண்டேன்
மெலியனன்றியானறுமுகன்மேலெனைவிடுத்தி. (அ௮)

எனனுமாற்றங்களெரிமுகமுடையவனிசைப்ப
வன்னவன்றனைவிலக்கியேகரதலமமைத்துச்
சென்னியாயிரம்பெற்றுளசிங்கமாமுகத்தோன்
மன்னர்மன்னனைநோக்கியேவகுத்துரைசெய்வான. (அ௯)

மந்திரத்தருந்தானையந்தலைவருமகாருந்
தந்தமக்கியல்வன்மையேசாற்றியதல்லா
லிந்திரப்பெருந்திருவுறுமுன்றனக்கியன்ற
புந்திசொற்றிலரிமமொழிகேளெனப்புகல்வான். (௯0)

வேறு.

பெற்றிடுதிருவினிற்பிறந்தவெஞ்சினங், கற்றவருணர்வையுங்கடக்குமன்னது
முற்றுறுகின்றதன்முன்னமன்பினோ, ருற்றனகூறியேயுணர்த்தல்வேண்டுமால். ()

மன்னவர்செவியழன்மடுத்ததாமென, நன்னெறிதருவதோர்நடுவுநீதியைச்,சொன்
னவரலமச்சர்கடுணைவர்மேலையோ,ரொன்னலர்விழைந்தவாறுரைக்கின்றார்களே.

முற்றுறவருவதுமுதலு * மன்னதாற், பெற்றிடுபயன்களும்பிறவுந்தூக்கியே, தெற்
றெனவுணர்ந்துபின்பலவுஞ்செய்வரேற், குற்றமொன்றவர்வயிற்குறுகவல்லதோ.

---

* முதலல் - தொடங்கல்.

மால்வருதொட்ர்பினால்வனத்துச்செல்லுமீன், கோல்வருமுனைவினைக்குறித் துவவ்வியே, பால்வருபுணர்ப்பினிற்படுதல்போலநீ, மேல்வருகின்றதைவினவல் செய்கிலாய். (கூச)

இந்திரனாதியாமிறைவர்தங்களை, யந்தரத்தமரரையலைத்ததீயவர்
முந்துறுதிருவொடுமுடிந்ததல்லதை, யுய்ந்துளரிவரெனவுரைக்கவல்லமோ. (கூரு)

தேவர்கள்யாரையுந்திரைகொள்வேலையின், மேவருமீன்றொகைவிரைவிற்ற ம்மென, வேவினையினிதுகொலினையசெய்கைதம், மாவியில்விருப்பிலாரன்றியார் செய்வார். (கூசு)

அறைகழல்வாசவறகலக்கணுற்றியே, யிறையினையழித்தனையிருந்தமாநகர்
நிறைதருவளனெலாநீக்குவித்தனை, சிறையிடையுய்த்தனைதேவர்யாரையும். (கூஎ)

அத்தகுதேவராலயங்களுக், கித்துணையலக்கண்வந்தெய்திற்றிங்கிது
மெய்த்திறமாமெனவிரைந்துட்கொள்ளலை,பித்தரின்மயங்கினைபேதையாயினாய். ()

பொன்னகரழித்தநாட்புகுந்ததேவரை, யின்னமும்விட்டிலையிரக்கநீங்கினா
யன்னதற்கல்லவோவாறுமாமுக, னுன்னுடனபோர்செயவுற்றதன்மையே. (கூகூ)

வேறு.

பேறுதந்திடுபிஞ்ஞகன்பெருந்திருவுடனீரா
நூறுதன்னுடனெட்டுகமிருமெனநுவன்றான
கூறுகின்றதோர்காலமுங்குறுகியததனைத்
தேறுகின்றிலைவிதிவலியாவரேதீர்ந்தார். (க00)

எத்திறத்தருநுங்களைவெல்கிலரெமது
சத்திவென்றிடுமென்றனன்கண்ணுதற்றலைவ
னத்திறத்தினாலல்லவோவறுமுகக்குமர
னுய்த்தசெய்யவேலுண்டதுதாரகனுயிரை. (க0க)

பேதைவானவர்தங்களைச்சிறையிடைப்பிணித்தா
யாதலாலுனக்கானதென்றுன்பமேயல்லா
லேதுமோர்பயனில்லதோசிறுதொழிலியற்றி
வேதனைப்படுகின்றதுமேலவர்கடனோ. (க0உ)

குரவரைச்சிறுபாலரைமாதரைக்குறைதீர்
விரதநற்றொழில்பூண்டுளோர்தம்மைமேலவரை
யருமறைத்தொழிலாளரையொறுத்தனரன்றோ
நிரயமுற்றவுஞ்சென்றுசென்றலமருநெறியோர். (க0ங)

அமரர்தம்பெருஞ்சிறையினைநீக்குதியாயிற்
குமரநாயகனீண்டுபோராற்றிடக்குறியா
னமதுகுற்றமுஞ்சிந்தையிற்கொள்வலனாளை
யிமையொடுங்குமுன்கயிலையின்மீண்டிடுமெந்தாய். (க0ச)

சிட்டராகியேயமாதருமிமையவர்சிறையை
விட்டிடாதுநீயிருத்தியேன்மேவலர்புரங்கள
சுட்டகண்ணுதல்குமரனங்குலமெலாந்தொலைய
வட்டுநின்னையுமுடிதகிடுஞ்சரதமென்றறைந்தான. (க0ரு)

தடுத்துமற்றிவையுரைத்தலும்வெய்யசூர்தடக்கை
புடைத்துவெய்துயிர்த்தரப்பியேகசைகிளப்பொடிப்பக்
கடித்துமெல்லிதழதுக்கிமெய்பொறித்திடக்கனன்று
முடித்தனித்தலைதுளக்கியேயின்னனமொழிவான். (௧0௬)

ஏவற்றொண்டுசெய்தின்னமுங்கரந்தவிந்திரற்குந்
தேவர்க்குஞ்சிறுபாலற்குஞ்சிவனுறைகயிலைக்
காவற்பூதர்க்குமஞ்சினைகருத்தழிந்தனையோ
மூவர்க்கும்வெலற்கரியதோர்மொய்ம்புகொண்டுடையோய். (௧0௭)

எல்லைநாள்வரையிழைத்ததுமெம்பெருஞ்சத்தி
வெல்லுநுங்களையென்றதுங்கண்ணுதல்விமலன்
சொலயான்முன்புகேட்டிலன்வஞ்சமுஞ்சூழ்வும்
வல்லைவல்லைகொலெம்பிநீபுதிதொன்றுவகுத்தாய். (௧0௮)

நூற்றின்மேலுமோரெட்டுகநுவலருந்திருவின்
வீற்றிருந்தரசியற்றுதிரென்னினுமேனா
ளாற்றினைச்சடைவைத்தவன்கொடுத்திடுமெழியாப்
பேற்றையாவரேவிலக்குவாரதுபிழைபடுமோ. (௧0௯)

ஆதிநாயகனெம்பெருஞ்சத்தியேயல்லா
லேதிலார்வெலாரென்னினுஞ்சத்தியுமிறையும்
பேதமோவரங்கொடுத்தவனடுமென்கைபிழையே
யோதலாவதோர்வழக்கமேயுண்மையதன்றால். (௧௧0)

பழுதுறாதநம்போலவேவேள்வியைப்பயிலா
தழிவிலாவரம்பெற்றிலன்றாரகனதனா
லொழிவதாயினன்வச்சிரவாகுவுமுணர்வில்
குழவியாதலின்மாய்ந்தனனீதுகொல்குறையே. (௧௧௧)

அண்டமாயிரத்தெட்டையுந்தனியரசாட்சி
கொண்டிவைகினனகுலத்தொடுமமராதங்குழுவைத்
தொண்டுகொண்டனன்யாவர்வந்தெதிர்க்கினுந்தொலையே
னுண்டுகொல்லிவ்வெனக்குநேராகவேயொருவர். (௧௧௨)

தவமுயன்றுழலமரரினரக்கர்கடம்மி
னவுணர்தங்களினுயிரத்தெட்டெனுமண்டம்
புவனமுற்றவுமொருதனியாழியாற்புரந்தே
யெவரெனக்குநேராகவேயழிவிலாதிருந்தார். (௧௧௩)

மாலயன்முதலாகியமுதுவர்கள்வரம்பில்
காலமாகயானமரரைச்சிறைசெயக்கண்டுஞ்
சாலவெனதனக்கஞ்சியேயிருந்தனர்தனியோர்
பாலனோகொலாமழிவிலாவென்னுயிர்படுப்பான். (௧௧௪)

வேறுபாடுறாவச்சிரப்படிவமுமிடனு
மீறிலாததோராயுளும்பெற்றிடுமென்னை
யூறுதான்செயக்கூடுமோதொருவர்க்குமென்றான்
மாறுபோர்செய்துபாலனோவெனையடவல்லான். (௧௧௫)

எண்ணிலாததோர்பாலகனெனைவெவ்வெனன்கை
விண்ணிலாதவன்றன்னையோர்கனியெனவெஃகிக்
கண்ணிலாதவன்காட்டிடக்கையிலாதவன்போ
யுண்ணிலாதபேராசையாற்பற்றுமாறொக்கும். (௧௧௬)

என்றுமற்றிவைசூரபன்மாவிசைத்திடலுந்
துன்றுபஃறலைச்சீயமாமுகமுடைத்துணைவ
னன்றுநன்றெனவினவியேயின்னமுநாணிங்
கொன்றுகூறுவன்முனியலைகேட்டியென்றுரைப்பான். (௧௧௭)

வாலிதாமதிச்சடிலமும்பவளமால்வரையே
போலுமேனியுமுக்கணுநாற்பெரும்புயமு
நீலமாமணிக்கண்டமுங்கொண்டுநின்றனனான்
மூலகாரணமில்லதோர்பராபரமுதல்வன். (௧௧௮)

தன்னைநேரிலாப்பரம்பொருடனியுருக்கொண்ட
தென்னகாரணமென்றியேலைந்தொழிலியற்றி
முன்னையாருயிர்ப்பாசங்கண்முழுவதுமகற்றிப்
பின்னைவீடுபேறருளுவானினைந்தபேரருளே. (௧௧௯)

அப்பரனறனையுன்னியேயளவைதீர்கால
மெய்ப்பெருந்தவமியற்றினையதுகண்டுவெளிப்பட்
டொப்பிலாவரமுதவியேயாங்கதற்கொழிவுஞ்
செப்பிவைத்தனன்றேர்ந்திலைபோலுமத்திறனே. (௧௨௦)

பெறலருந்திருவுடையநீயறத்தினைப்பேணி
முறைபுரிந்திடாதாற்றலாலமரரைமுனிந்து
சிறையில்வைத்தனையதுகண்டுநின்வலிசிந்தி
யிறுதிசெய்திடவுன்னினன்யாவர்க்குமீசன். (௧௨௧)

வரமளித்தயாமழிப்பதுமுறையன்றுவரததாற்
பெருமைபெற்றுளசூரனையடுவதுபிறாக்கு
மரிதெனப்பரனுன்னியேதன்னுருவாகு
மொருமகற்கொடுமுடித்துமென்றுன்னினானுளததில். (௧௨௨)

செந்நிறத்திருமேனியுந்திருமுகமாறு
மன்னதற்கிருதொகையுடைத்தோள்களுமாக
முன்னவர்க்குமுன்னாகியபராபரமுதல்வன்
றன்னுதற்கணாலொருதனிக்குமரனைததந்தான். (௧௨௩)

மானுடத்தரின்விலங்கினிற்புட்களின்மற்று
மூனமுற்றுழல்யாக்கையிற்பிறந்துளாரொப்ப
நீநினைக்கலைபரஞ்சுடர்நெற்றியந்தலத்தே
தானுதித்தனன்மறைகளுங்கடந்ததோர்தலைவன். (௧௨௪)

சீலமில்லவர்க்குணரவொணாதசிற்பரனைப்
பாலனென்றனையவனிடத்திற்பலபொருளு
மேலைநாள்வந்துதோன்றியசிறியதோர்வித்தி
னாலம்யாவையுமொடுங்கியேயவதரித்ததுபோல். (௧௨௫)

அருவுமாகுவனுருவமுமாகுவனருவு
முருவுமில்லதோர்தன்மையுமாகுவனூழின்
கரும * மாகுவனிமித்தமுமாகுவன்கண்டாய்
பரமனுடலையாவரேபகர்ந்திடற்பாலார். (௧௨௬)

வேதக்காட்சிக்குமுபநிடத்துச்சியில்விரித்த
போதக்காட்சிக்குங்காணலன்புதியரிற்புதியன்
மூதக்கார்க்குமூதக்கவன்முடிவிற்குமுடிவா
யாதிக்காதியா † யுயிர்க்குயிராய்நின்றவமலன். (௧௨௭)

ஞானந்தானுருவாகியநாயகனியல்பை
யானுநீயுமாயிசைத்துமென்றாலஃதெளிதோ
மோனந்தீர்கலாமுனிவருநேற்றிலர்முழுதுந்
தானுங்காண்கிலனின்னமுந்தன்பெருந்தலைமை. (௧௨௮)

தத்தமாறறங்கணிறுவியசமயிகள்பலருங்
கததுபுன்சொலைவினவினரவன்செயல்காணா
சுததவாதுளமுதலியதந்திரத்தொகுதி
யுய்த்துணர்ந்திடுநீரரேயொருசிறிதுணர்வார். (௧௨௯)

கருவிமெய்ப்புலன்காட்டுவோன்காண்பவன்காட்சிப்
பொருளெனப்படுநான்மையுமைவகைப்பொறியு
மிருதிறத்தியல்வினைகளுங்காலமுமிடனு
மரபின்முற்றுறுபயனுமாய்நின்றனன்வள்ளல். (௧௩௦)

ஞாலமுள்ளதோர்பரம்பொருளுமெனப்புகலு
மாலுமவேதனுமாயையாமவரம்பினுட்பட்டார
மூலமாகியதத்துவமுழுவதுங்கடந்து
மேலுயாந்திடுதனிமுதலவனன்றிவேறார். (௧௩௧)

தூயபார்முதலாகவேகுடிலை ‡ யின்றுணையு
மேயவண்டமுமுயிர்களும்வியன்பொருள்பலவு
மாயுநிறைனனல்லனுமாயினனவன்றன்
மாயையாவரேகடந்தனாமறைகளுமயங்கும். (௧௩௨)

இன்னதன்மைசேர்முதலவனைச்சிறுவனென்றிகழ்ந்து
பன்னுகின்றனையவுணர்தங்கிளையெலாமபடுத்து
நின்னையுந்தடிந்திடுவனேற்ரிமைப்பினிரப்புந்
தன்னருட்டிறங்காட்டுவான்வந்தனன்சமாமேல். (௧௩௩)

* கருமம் - செயப்படுபொருள்.

† புதியரிற்புதியன் மூதக்காரக்குமூதக்கவன முடிவிற்குமுடிவாய் ஆதிக்காதியாய் என்பதற்கு - தனக்குப்பின்றோன்றிய யாக்கையையுடையார் எல்லாரும் மூப்பவுந் தான் நிலைபெற்ற விளமையையுடையனுதலின் எல்லார்க்கும் புதியன் - எல்லார்யாக்கைக்கும் முன்னே தனதிச்சையாற் கொள்ளப்பட்ட திருமேனியையுடையனுதலின் எல்லார்க்குந் தான் பழையன் - உலகத்திற்குப் பின்னும் - அதற்கு முன்னுமாய் எனப் பொருள்கொள்க.

‡ குடிலை - சுத்தமாயை.

அற்றமில்வகையாயிரத்தெட்டெனுமண்டம்
பெற்றனம்மெனவியந்தனைதத்துவபேத
முற்றுணர்ந்திலைதரணியோவளப்பிலவுளகாண்
மற்றையண்டங்கள்கேட்டியேன்மருளுதிமன்னே. (க௩௪)

குடிலையீறதாவாரியேமுதலதாக்குழுமி
யுடையவண்டங்களலகிலவென்பரொன்றொன்றி
னடைதலுற்றிடுபுவனத்தின்பெருமையாரறிந்தார்
முடிவுறாததோர்பொருளினைமுடிவுகூறவற்றோ. (க௩௫)

அன்னவாகியவண்டங்களனந்தகோடியையுந்
தன்னதாணையாலோரிமைப்பொழுதினிற்றரவும்
பின்னர்மாற்றவும்வல்லதோராதியம்பிரான்கா
ணுன்னொடேபொருமாடலாற்செந்திவந்துற்றான். (க௩௬)

வச்சிரத்தனியாக்கைபெற்றனமெனமதித்தா
யிச்சிரத்தையைவிடுமதியிருவினைக்கீடா
வச்செடுத்திடுமுயிர்கண்மாய்ந்திடுமெனவறிஞா
நிச்சயித்தனர்முடிவுறாதிருத்திகொனீயே. (க௩௭)

பெருமைபெற்றிடுவானத்தினிலத்திடைப்பிறந்தோ
ரிருமைபெற்றிடுகாயமுமிறந்திடுந்திண்ணம்
பருமிதத்துநின்வச்சிரயாக்கையும்பாரி
னுரிமைபெற்றுளதாதலானழிவின்றியுறுமோ. (க௩௮)

அழிவினமெய்வரம்பெற்றனமென்றனையதற்கு
மொழிதரும்பொருள்கேண்மதிமுச்சகந்தன்னுட்
கெழியமன்னுயிர்போற்சிலவைகலிற்கெடாது
கழிபெரும்பகலிருந்திடும்பான்மையேகண்டாய். (க௩௯)

அச்சுதன்னயனமரராகியபெயரவர்க்கு
நிச்சயம்படுமுகமனேயானபோனினது
வச்சிரத்தனியாக்கையுமழிவிலாவரமு
முச்சகந்தொழப்பல்லுகமிருததலாய்முடியும். (க௪௰)

வான்செய்தேவரைநீயலைக்கின்றதைமதியா
யூன்செய்கின்றபல்லுயிருக்குமுயிரதாமொருவன்
றான்செய்கின்றதொல்வரத்தினைத்தான்றவிர்த்திடுமே
லெனசெய்தாயெனவினவியேநிறுவுவாரெவரே. (க௪௧)

கெடுதலில்லதோர்வளனொடுநீயுநின்கிளையும்
படுதலின்றியேவாழ்தியென்றினனபகர்ந்தே
னிடுதல்கொணடிடுசிறையிடைத்தேவரையின்னே
விடுதல்செய்குதியென்றனனறிஞரின்மிக்கான். (க௪௨)

இன்னபான்மையான்மடங்கலம்பெருமுகத்திளவல்
சொன்னவாசகம்வினவியேமணிமுடிதுளக்கிக்
கன்னமூடுசெங்கனல்செறிததாலெனக்கனன்று
முன்னையாகியோன்பின்னருஞ்சிற்சிலமொழிவான். (க௪௩)

காற்றிற்றள்ளுண்டுநெருப்பினிற்சுடுண்டுகங்கை
யாற்றிற்றாக்குண்டுசரவணம்புக்கலையுண்டு
வேற்றுப்பேர்முலையுண்டறுதேவியரோடு
நேற்றைப்பாலனையோபரம்பொருளெனநினைந்தாய். (௧௪௪)

பிரமமாகியவொருபொருளுயிரெனப்பேர்பெற்
றுருவமெண்ணிலகொண்டுதன்மாயையாலுலப்பில்
கருமபேதங்களாற்றிடும்பல்புனற்கடத்து
ளிரவிதன்னுருத்தனித்தனிகாட்டியவியல்பின். (௧௪௫)

கடந்தகர்ந்துழியவற்றிடைவெளிககனத்தோ
டடைந்தவாறுபோல்யாக்கையின்பேதகமனைத்து
முடிந்தகாலையிற்றொன்மைபோலபேதமாமொழிக்குந்
தொடர்ந்தசிந்தைக்குநாடொணாதமர்பெருஞ்சோதி. (௧௪௬)

பிரமமேயிவரல்லவரிவரெனப்பேதித்
திருமையாகவேகொள்ளலையாக்கையேவேறு
பரமமாகியவுயிரெலாமொன்றுபல்பணியும்
பொருளதாகியேயொருமையாய்முடிந்தவாபோல. (௧௪௭)

விறலும்வன்மையுமில்லவர்தாழ்வர்மேதக்க
நெறியரோங்குவரீதுலகத்திடைநிகழ்ச்சி
யிறுதியில்லதோர்பெரியன்யானறுமுகனென்போன்
சிறியனாதலினவனையான்வெல்குவன்றிண்ணம். (௧௪௮)

தொகைமைசான்றநங்குரவர்பல்லோருயிர்தொலைத்த
பகைஞராதலினமரரைச்சிறையிடைப்படுத்தேன்
மிகைசெய்தார்களைநாடியேவெந்தொறுத்திடுத
றகைமையேயெனமனுமுறைநூல்களுஞ்சாற்றும். (௧௪௯)

மாகராயுளோர்காப்பினைவிடுகிலன்மற்றைப்
பாகசாதனன்றன்னையுமருஞ்சிறைப்படுப்ப
னேகநாயகனெய்தினுமெதிர்ந்துபோர்புரிவ
னாகையாலினியிச்சிறுமொழிகளையயர்த்தி. (௧௫௰)

உரைப்பதென்னினியொருவயிற்றென்னுடனுதித்துப்
பெருக்கமுற்றனைநங்குலப்பகைஞரைப்பெரிது
நெருக்கலின்றியேயவர்கள்பாற்பட்டனைநீயே
யிருக்கமற்றொருதெவவரும்வேண்டுமோவெனக்கே. (௧௫௧)

பத்துக்கொண்டநூறுடையதோர்சென்னியும்பலவாங்
கொத்துக்கொண்டமர்தோள்களுங்கரங்களின்குழுவு
மெத்துக்காற்றினைவன்மையும்வீரமுமிழந்தாய்
பித்துக்கொண்டவர்தம்மினும்பேதைமைபிடித்தாய். (௧௫௨)

வேறு.

தானவர்வழிமுறைதன்னைவிட்டனை, வானவர்போன்றனைவன்மைசிந்தினை
மேனிகழ்திட்பமும்விறலுமாண்டனை, மோனமொடருந்தவமுயலப்போதிநீ. ()

மறந்தனையிழந்தனைமானநீங்கினை, சிறந்திடுமவுணர்தஞ்சீர்த்திமாற்றிடப்
பிறந்தனையீண்டொருபயனும்பெற்றிலை, யிறந்தனைபோலுநீயிருந்துளாய்கொலோ.

மந்திரியாதியான்மற்றிதற்குநீ, சிந்தையில்வெருக்கொளிற்றிசைமுகத்தர்போ
லைந்தியலங்கமொன்றங்கைபற்றுதி, வெந்திறலேயெனப்படையும்வீசியே. (௧௫௫)

இளைத்திடுகள்ளியின்கிளைகளாமென, வளர்த்தனைபலதலைவரம்பில்கைத்தல
மொளித்தனைசுமந்தனைநெடிதுகாலமா, விளைத்தனைவலியிலாயாதுசெய்திநீ. (௧௫௬)

பண்டுணர்வில்லதோபருவமாதலிற், சண்டனைவருணனைத்தலையினிட்டனை
யண்டரையலைத்தனையறிவுகூடலிற், பெண்டிரினடுங்கினைபேடிபோலுநீ. (௧௫௭)

பன்னெடுந்தலையுடைப்பாலனாகுமுன், வன்மையுமாடலும்வந்துபார்த்திட
வின்னமும்வந்திலுள்வருந்தியீன்றதா,யன்னைதன்குறைகொலோவருவமானதே.()

பகையெனவொன்றுறிற்பதைபதைத்தெழீஇச், சிகையுடைவாலுளைச்சீயஞ்சீறியே, தகுவிறல்கொள்ளுமாலவற்றின்றன்மையாய், மிகுதலைபெற்றதும்வீண்கொலெம்பிநீ. (௧௫௯)

பூதரைத்தலைவரைப்புராரிமைந்தனை, யேதிலர்யாரையும்யான்வென்றேகுவ
னீதளர்வெய்திடனினதுமாநகா, போதுதியெனறனன்புலனில்புந்தியான். (௧௬௦)

என்றிவையவுணர்கோனிசைததகாலையி, னன்றிவனுணர்வெனநகைத்துக்கண்டொறுந், துன்றியபேரழல்சொரியவெஞ்சினத், தோன்றியதன்னுளத்தினையவுன்னுவான். (௧௬௧)

உறுதியையுரைத்தனனுணர்விலாதவன், வறிதெனையிகழ்ந்தனன்வருவதோர்கில
னிறுமவகைநாடினன்யாதொர்புந்தியை,யறிவிலர்க்குரைப்பவரவரிற்பேதையோர்

உய்த்தனர்தேன்மழையுதவிப்போற்றினுங், கைதிடறவிருமோகாஞ்சிரங்கனி
யத்தகவல்லவோவறிவிலாதவன், சித்தமதுணர்வகைதெருட்டுகின்றதே. (௧௬௩)

தொலைக்கருந்திருவுடைச்சூரன்புந்தியைக், கலக்கினுமுய்வகைகருதுகின்றில,னல
க்கணுற்றிருந்துநாமிரங்கியாவதென், விலக்கரும்விதியையாம்வெல்லவல்லமோ.

ஆவதுவிதியெனினனைத்துமாயிடும், போவதுவிதியெனினவையும்போகுமாற்
றேவருக்காயினுந்தீர்க்கத்தக்கதோ, வேவருமறியொணாவீசற்கல்லதே. (௧௬௫)

நீண்டசெஞ்சடைமுடிநிமலனீந்தநாண், மாண்டதுமாய்ந்திடுமெல்லைவந்ததா, லீண்
டுளார்யாவருமிறையுந்துஞ்சுமாற்,பூண்டிடுமமரர்கோன்றவமும்பொய்க்குமோ. ()

இறப்பதுசரதமேலிறைவனென்னுரை, வெறுத்தனனிகழுமேல்வேண்டியின்னும்யான், மறுத்தெதிர்மொழியலன்மன்னவென்பிழை, பொறுத்தியென்றின்னுரைபுகல்வதல்லதே. (௧௬௭)

மன்னவர்மன்னவன்வள்ளல்வேலினு, வின்னினியிறந்திடுமிதுவுநோக்கியே
பின்னுமிங்கிருந்திடல்பிழையதாகுமான், முன்னுறமுடிவதேமுறையதாமெனா. ()

சிந்தனைசெய்திடுசிங்கமாமுகன், றந்தையைநிகர்வருதம்முன்றொழா
வந்தனைசெய்தனன்மன்னசீறிடேல்,புந்தியிலேன்பிழைபொறுத்தல்வேண்டுமால்.

சிறியவரோருபிழைசெய்யின்மேலவர்,பொறையொடுபின்னரும்போற்றலல்லதை
யிறையதும்வெகுள்வரோயானுஞ்செய்பிழை, யறிவனீயன்றியேயாரதாற்றுவார்.

பொறுத்தனைகோடியென்புன்மையுள்ளமேற், செறுத்தெனையிகழ்ந்திடல்செருவிற்சென்றியான், மறுத்தெதிர்மலைந்திடுமாற்றலார்தமை, யொறுத்திடுகின்றனனதனையோர்திநீ. (௧௭௧)

செருவினுக்கேகுவன்செறுநர்தம்மிசைத், தருதியால்விடையெனத்தம்பிகேட்டலும், பெரிதுளமகிழ்ந்தனன்பிறங்குகாதலால், வருதியென்றவன்றனைமார்பிற்புல்லினான். (௧௭௨)

பையரவளித்திடும்பாதலத்தினில், வையகவரைப்பினிற்றிசையின்வான்களிற்
செய்யவண்டங்களிற்செய்யும்வென்றியு, ஐயநிற்கேதுகொலரியதானதே. (௧௭௩)

நீக்கமில்கேள்வியாய்நீமுன்சொற்றன, தூக்குறினென்மனத்துணிவுந்திட்பமு
மூக்கமுமுணரவேயொன்னலாரெனு, மாக்களையவேதோர்மடங்கலல்லையோ. ()

சென்றனர்மாற்றலரென்கைதேர்தியேற், கொன்றபினல்லதுகுப்பிட்டோடிட
வென்றபினல்லதுவெகுளிதீர்தியோ, வுன்றனதாற்றலையுணர்கிலேன்கொலோ. ()

இற்றைநாணின்னகரேகியாயிடை, யுற்றிடுபடையெலாமொருங்குகொண்டுநீ
கொற்றமொடிருக்குதிகுமரனீண்டுறின், மற்றுனைவிளிக்குவன்வருதியாலென்றான்

ஒல்லெனமுருகவேளுனதுமாநகர், செல்லினுமேகலைசெருவுக்கன்னது, சொல்லி
னைவிடுதியோர்தூதன்றன்னையான், வல்லையினமர்செயவருகின்றேனென்றான்.

என்றலுமவுணருக்கிறைவனீங்கிது, நன்றெனவிடையதுநல்கத்தாழ்ந்துபோய்த்
தன்றிருமாநகர்சார்ந்துவைகினான், வன்றிறலுடையதோர்மடங்கற்பேரினான். ()

ஆனதோர்பொழுதினிலரசனுண்டுறை, தானையந்தலைவரைத்தனயர்தங்களை
யேனையர்யாரையுமேகச்செய்துதன், மாநகரிந்திரவளத்தின்வைகினான். (௯௭௧)

அந்தமில்வளனுடையவுணர்காவலன், மந்திரமிருந்ததுவகுத்துக்கூறினு
மிந்திரன்முதலினோர்யாருமேத்திடச், செந்தியினமர்ந்தவன்செய்கைசெப்புவாம். ()

சூரனமைச்சியற்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧,௧௭௮.

---

மகேந்திரகாண்டமுற்றுப்பெற்றது.

ஆ காண்டம் மூன்றுக்குத் திருவிருத்தம் - ௪,௮௧0.

கச்சியப்பசிவாசாரியர்திருவடிவாழ்க.

---